# பெரியபுராணத்தில் உருக்காட்சி



டாக்டர். இரத்தின. கிருட்டினமூர்த்தி

25-3

# பெரியபுராணத்தில் உருக்காட்சி.

டாக்டர். இரத்தின கிருட்டிணமூர்த்தி.
எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.,
முன்னாள் தலைவர்,
தமிழ்த்துறை மற்றும் உயராய்வு மையம்,
அருள்மிகு பழனியாண்டவர் கலை பண்பாட்டுக் கல்லூரி,
பழனி.

தாயகம் வெளியீடு
15 - ஆலைத் தெரு,
சண்முகபுரம்,
பழனி - 624 602,
திண்டுக்கல் அண்ணா மாவட்டம்.
1993.

நூல் பெயர் : பெரியபுராணத்தில் உருக்காட்சி.

ஆசிரியர் : டாக்டர். இரத்தின கிருட்டிணமூர்த்தி.

பதிப்பகம் : தாயகம் வெளியீடு.

மொழி : தமிழ்

வெளியீடு நாள் : டிசம்பர் ' 1993

விலை : ரூ. 95 / -

அச்சகம் : சண்முகா பிரஸ் ஜாப் பிராஞ்சு,
163, முதல் அக்ரஹாரம், சேலம் - 1.
Phone : 68421.

ஓவியர் : பா. இராசாமணி.

பொருள் : இலக்கியம்.

தமிழ் நாடு அரசு நிதியுதவி திட்டத்தின் கீழ் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் வாயிலாக இந்நூல் நிதியுதவி பெற்றுள்ளது.



சேக்கிழார்



எனது பெற்றோர்

தெய்வத்திரு . டாக்டர் . பொன் . இரத்தினசபாபதி,

தெய்வத்திருமதி . சுந்தரகுசாம்பிகை

ஆகியோர் திருவடிகளில் எனது அன்புக் காணிக்கையாக
இந்நூலைப் பணிவுடன் படைக்கிறேன் .

— நூல் ஆசிரியர் .

## உள்ளடக்கம்

முருகா

# அணிந்துரை



எல்லாப் புராணங்களிலும் உயர்ந்தது பெரியபுராணம் பக்தித்தேன் ஊற்றெடுப்பது. தெய்வ நலம் கனிந்தது. இதன் மகிமை அளவிடற்கரியது. அருள்மயமானது. இந்த அரிய பெரிய நூலை ஆய்ந்து பெரிய புராண உருக்காட்சி என்ற நூலை அன்பர் இரத்தின கிருட்டிணமூர்த்தியவர்கள் தமிழுலகுக்குத் தருகின்றார். இது மிகச்சிறந்த பணி.

நேரிசை வெண்பா

பூவார் பெரிய புராண உருக்காட்சி

சேவூர் சிவனார் திருவருளால் - நாவூரும்

அமிழ்தாய் அளித்தனனால் ஆர்கிருஷ்ணமூர்த்தி

தமிழ்போல் வாழ்க தழைத்து .

அன்பன்,

( ஒப்பம் ) கிருபானந்தவாரி

27 - 1 - 88 .

# அணிந்துரை

பேராசிரியர் . டாக்டர். தா.வே.வீராசாமி எம்.ஏ.,பி.எச்.டி.,
முன்னாள் பேராசிரியர் - தலைவர்,
தொகுப்பியல் துறை,
பெருஞ்சொல்லகராதி முதன்மை பதிப்பாசிரியர்,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

தமிழ் இலக்கிய வானில் காப்பியங்கள் பேரொளி வீசி நிற்கும் பெருஞ்சிறப்புடையன. அவற்றில் சேக்கிழார் இயற்றிய பெரியபுராணம் தனக்கென ஒரு தனியிடம் பெற்றுத் திகழ்கிறது. பன்னிரு திருமுறைகளில் இறுதியில் அமைந்துள்ள இந்நூல் தனி அடியார் தொகை அடியார் ஆகியோரின் அன்பு முடியாகப் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பொலிவுற்றுக் காப்பிய வளம் பெருக்கெடுத்தோடும் புதுநெறி காட்டும் முதல் நூலாக விளங்குகிறது.

ஆய்வுலகில் சங்கநூல்களில் தோன்றிய ஆய்வாளர்களும் இக்கால இலக்கியம் பற்றி ஆய்வோரும் எண்ணிக்கையில் பலருள்ளனர். இடைக்காலத் தமிழிலக்கியங்களில் - குறிப்பாகச் சமய இலக்கியங்களை ஆய்வோர் வெகுசிலரே. அவர்களிலும் பெரியபுராணம் பற்றி ஆராய்ந்தவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். அத்தகைய துறையில் சிறப்பாகத் தமக்கென ஒரு துறையைத் தேர்ந்தெடுத்து அத்துறையின் ஆழத்தையும், அகலத்தையும் மூழ்கிக்கண்டு, சொற்செல்வத்தையும் பொருட்செல்வத்தையும் திரட்டி, காப்பியத்தில் உருக்காட்சி பற்றி மேனாட்டார் கொண்ட கொள்கைகளையும் ஆய்வு முறைககளையும் நுனிந்தறிந்து, அவற்றைத் தமிழ்க்காப்பிய நெறிகளின் பழமையோடு இணைத்துச் சிறந்த ஆய்வுப்படைப்பை அளித்துள்ள பேராசிரியர் கிருட்டிணமூர்த்தி பாராட்டிற்குரியவராவர்.

ஆங்கில ஆட்சியில் மூகிழ்த்த கல்விக்களம் கல்லூரி, பல்கலைக்கழகம் என்பனவற்றில் வளர்ந்து வரும் ஆய்வுக்களம் என்பன பெரும்பாலும் ஆங்கில வானை நோக்கிச் சிறகடித்துச் செல்லும் முயற்சி, காலத்தின் விளைவு. நாட்டு விடுதலை இயக்கமும் விடுதலைபேறும் நம்மவரிடையே தேசியக் கண்ணொளி வீச்சைப் பரப்பியது மட்டுமன்றிப் பெரியபுராணத்தைத் தமிழ்த்தேசியக் காப்பியமாகக் காண முதுபெரும் ஆய்வாளர்களாம் தெபொமீனாட்சி சுந்தரனார், அ. ச. ஞானசம்பந்தன் போன்றோர் முன்னின்றனர். அடியார் வாழ்வை மக்கள் வாய்மொழியில் பரப்பி வந்ததைச் சேக்கிழார் செந்தமிழ்ப்புதுமைக் காப்பியமாக

படைத்தளிக்க இந்த நூற்றாண்டுப் பெருமக்கள் பதிப்பித்தும் உரையெழுதியும் வந்தது புதிய நோக்கில் ஆராயத் துணை ஆயிற்று என்பது உண்மை

வரலாற்று நோக்கில் பல்லவர் வரலாற்றையும் சோழர் வரலாற்றையும் கண்டறிந்த போக்கில் பெரிய புராணப் பொது ஆய்வுக்கும் காப்பியப் பார்வையில் வகைமை ஆய்வுக்கும் மொழியியலில் இலக்கண ஆய்வுக்கும் வழிவகுத்த பெரியபுராணம் இலக்கியக்கள ஆய்வில் ஒரு பகுதியாக உருக்காட்சி பற்றி ஆராயவும் இடம் அளித்துள்ளது.

தமிழ்ப்பல்கலைக்கழக முதல் துணைவேந்தர் வ.அய். சுப்ரமணியம் திட்டமிடவும், மதுரை காமராசர் பல்கலைக்கழகம் செயல்படுத்தவும் உருவான ஆய்வாளர் பயிற்சிப் பட்டறையில் புதுப்புதுப் பார்வையில் தமிழ் ஆய்வு, கிளைவிட்டுத் தளிர்த்தது. இலக்கிய மணத்தைச் சுர்ந்து நுகர்ந்து படைப்பாளரின் திறனை அறிய இலக்கியத்தை ஆய்க்கருவியாகக் கொண்டு மதிப்பிடும் முயற்சி பூத்தது. அத்தகைய புதுமை மலராகப் பூத்த ஆய்வேடுதான் பெரியபுராணத்தில் உருக்காட்சி. இச்சூழலில் கம்பராமாயணத்தில் உருக்காட்சியும் மற்றொரு வகையில் இவ் ஆய்வுப் பட்டறையின் பின் விளைவாகும். எனவே, ' இருபதாம் நூற்றாண்டின்' பிற்பகுதியில் தமிழாய்வு தனக்குரிய பரப்புநிலையிலிருந்து இக்கால நிலைக்கேற்ற ஆழ்நிலை முயற்சியில் ஈடுபட்டுள்ளது என்பதை அறிவிக்கும், நல்மணியாக இப்பெரிய புராணத்தில் உருக்காட்சி விளங்குகிறது.

உருக்காட்சி என்ற கலைச்சொல் வளர்ந்த வளர்ச்சியே தனி வரலாறு ஆகும். ஓவியம், உருக்காட்சி, காட்சி உருவகம், உருவக்காட்சி, கருத்தியல் வடிவம், படிமம், புலனுணர்வுச் சொற்காட்சி போன்ற பல்வேறு சொல்லும் தொடரும் இலக்கிய ஆய்வுலகில் அடிவைத்த புதுக்கருத்தின் வருகை வேகத்தை உணர்த்தும். அவற்றில் உருக்காட்சி என்ற தொடரை ஆய்வாளர் தேர்ந்தெடுத்த பாங்கு தனிச்சிறப்புடையது.

கோட்பாடு என்ற அளவில் தொல்காப்பியம் முதல் பல தமிழிலக்கணங்களின் கருத்தொளியை முதலில் பெறுகிறது இவ்வாய்வு. அதன்பின் அரிஸ்டாட்டில், தாந்தே, எலியட், கரே, லூயிதில்லியார்டு, ஸ்பர்ஜன் ஆகியோரின் துணைமையை நாடுகிறது. அதன் விளைவு ஆய்வின் விரிந்தநோக்கு எல்லையற்ற கருத்துலகை எட்ட முனைகிறது.

பெரியபுராணத்தில் அமைந்துள்ள காட்சிப்புல உருக்காட்சி முதல் பல்வகைப் புல உருக்காட்சிகள், புலன்மாற்று உருக்காட்சி, மனவுணர்வு உருக்காட்சி எனப் பகுத்துக் கொண்டு அவை அமையும் களங்களை விளக்கும்போது, காப்பியத்தில் புதுநலம் காணும் திறம் மேம்பட்டு நிற்கிறது. உவமை, உருவகம், உள்ளுறை, இறைச்சி, பல்வகை அணிகள்

போன்றவற்றின் துணையால் தமிழகத் திணை மணம் கமழ்கிறது. குறியீடுகள் பற்றி மேனாட்டார் கொண்ட கருத்து விளக்கம் பலவாறு விரிந்து செல்வதையும் தன்னகப்படுத்தி நிற்கிறது. மேலும், அவற்றின் பின்துணையால் புதுமை, செறிவு, கிளர்ச்சியூட்டு மாற்றல் பற்றி அறிய வழிசெய்கிறது. இந்நிலையில் மேனாட்டு ஆய்வு வளர்ச்சியையும் நம்மவர் ஆய்வு வளரும் நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இத்தகைய ஆய்வுகள் வெளிவரவேண்டியதை வலியுறுத்தும் இவ்ஆய்வு நூல்

தமிழில் இலக்கிய-இலக்கண ஆய்வுகள் மேற்கொண்ட காலம் மாறி ஒப்பாய்வு நெறி கிளைத்தது. கம்பனையும் மில்டனையும் பாரதியையும் ஷெல்லியையும் ஒப்பிடும் போக்கு வளர்ந்தது. அப்பரப்பாய்வின் வளர்நிலையாக இவ் ஆய்வில் சேக்கிழாரும், இளங்கோவடிகளும் ஒப்பாய்வுக்கு உரியவர் ஆகின்றனர். தமிழில் தோன்றிய முதல் காப்பியத்தை எடுத்துக்கொள்வதால் சேக்கிழார் கையாண்ட உருக்காட்சியின் தனிச்சிறப்பை உணரமுடிகிறது. சான்றாகப், பசு-கன்று உருக்காட்சியைக் காட்டும்போது தொடர் உருக்காட்சியாக ஆளப்படுவதைக் கூறும்போது காப்பியநிலை சமய வளர்ச்சியில் எத்தகைய வளர்ச்சி பெற்றுள்ளது என்பதை அறிய முடிகிறது. சுந்தரர், சம்பந்தர் ஆகியோர் கன்றாகவும் இறைவன் பசுவாகவும் அமைந்த காட்சி அழகிய இலக்கிய ஓவியமாகும். கண்ணப்பரைக் காட்டும்போது அவர் பசுவாகவும் இறைவன் கன்றாகவும் மாறும் மாற்றமோ எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாய் உள்ளது. இப்படி எண்ணற்ற இலக்கியக் கூறுகளின் உருக்காட்சித் திறத்தால் சேக்கிழார் படைத்த செல்வத்தைத் துய்த்திட வழிவகுக்கிறது இவ்ஆய்வு.

உருக்காட்சிக் களத்தைச் சேக்கிழார், இலக்கியத்தில் விரிவாகவும், விளக்கமாகவும் தெளிவாகவும், நுட்பமாகவும் காட்டும்போது படைப்புத் திறனோடு பக்திமணம் கலந்து, புதிய இன்பம் கூட்டி, இறைநெறிக்கு வளமூட்டும் நெறி நன்கு வலுப்பெறுகிறது என்பதை வருங்காலம் ஏற்றுக்கொள்ளும்.

காப்பியப்படைப்பில் பெரியபுராணம் தனிச்சிறப்புப் பெறுவதை உருக்காட்சிபற்றி ஆய்ந்த அறிஞர் கிருட்டிணமூர்த்தியின் உழைப்பு 'மலையினும் மாணப் பெரிது '. இதனால் பெரியபுராண ஆய்வுக்கு மேலும் புதிய ஆற்றல் பிறக்கும் என்பதில் ஐயமில்லை.

தமிழாய்வுலகு, பெரியபுராண ஆய்வுலகு, இவ் ஆய்வையும் இவ்ஆய்வாளரின் சீரிய உழைப்பையும் போற்றும்.

தாராபுரம் — தா. வே. வீராசாமி

31-12-93

# முன்னுரை

உலகெலாம் உணர்ந்தோ தற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

சைவசமயத் திருத்தொண்டர்கள் ஆற்றிய அருஞ்செயல்களையும் இறைவனின் பேரருள்பாங்கினையும் பாடு பொருளாகக் கொண்ட பெரியபுராணம் பக்திநலம் சான்ற காப்பியமாகும். திருத்தொண்டர் மாக்கதை, திருத்தொண்டர் புராணம் என அழைக்கப்பெறும் இக்காப்பியத்தின் ஆசிரியர் சேக்கிழார்தம் படைப்பாற்றல், ஆட்பண்பு, மையவுணர்வாகப் பக்திச்சுவை இப் படைப்பில் விளங்கும் பாங்கு, ஆகியவற்றினைக் காண்பதற்கு அவர் ஆளும் உருக்காட்சி அமைப்பு துணைபுரிகிறது என்ற கருத்தினை அடியாகக் கொண்டு செய்யப்பெற்ற ஆய்வு முயற்சியின் விளைவே இந்நூல். பெரியபுராணத்தைப் பொறுத்தவரை இம்முயற்சி முன்னோடி ஆய்வாகும். ஆங்கில நாடகாசிரியர் சேக்ஸ்பியர் ஆண்டுள்ள உருக்காட்சித் திறன் எடுத்தியம்பும் கரோலின் ஸ்பர்ஜன் எழுதிய "சேக்ஸ்பியரின் உருக்காட்சி. அது நமக்குத் தெரிவிப்பதென்ன" என்ற நூல் எனது ஆய்வுக்கு உந்தாக்கம் அளித்தது.

இலங்கை நல்லூர் ஆறுமுக நாவலர் குசனத்துடன் கூடிய பெரியபுராணப் பதிப்பு, குறிப்புரை மற்றும் அருஞ்சொற்களுக்குரிய விளக்கவுரை கொண்டு விளங்கும் திருவிகபதிப்பு, ஆய்வுரைகள், சரிதக்குறிப்புகள், விளக்கவுரைகள், வமகாதேவ முதலியார் பெரியபுராண ஆராய்ச்சி என்ற முதல் ஆய்வு நூல், பண்டிதமணி மு கதிரேசச் செட்டியார் உரைநடைக் கோவை, தெபொமீயின் 'அன்புமுடி' அ. ச. ஞா. வின் 'தேசிய இலக்கியம்' முஅருணாசலம் "சேக்கிழார்" ஆகியவை ஆய்வுக்குப் பெரிதும் துணைநின்றன.

புலனுணர்வுகளாலும் மனவுணர்ச்சியாலும் ஆன கற்பனை ஓவியங்களாகவும் அல்லது அனுபவங்களாகவும் உள்ள உவமைகளும் உருவகங்களும் பெரியபுராணத்தில் உருக்காட்சிகளாகக் கருதத்தக்க வகையில் ஆளப்பட்டுள்ளன. இவ்வுருக்காட்சிகளைத் தொகுத்தும் பின்பு வகுத்தும் காணும் பகுப்பாய்வு முறை இவ் ஆய்வின் அணுகுமுறையாக உள்ளது.

எனது பிஎச்டி ஆய்வேட்டில் உள்ள "சேக்கிழார் இளங்கோ உருக் காட்சி ஒப்பாய்வு" என்ற இயல் தனி நூலாக வெளிவரவுள்ளது. சேக்கிழாரின் உருக்காட்சிக் கோட்பாட்டின் தனிச்சிறப்பை அறிதற்கு இவ்வொப்பாய்வு உதவியது. உருக்காட்சிக் கோட்பாட்டினைப் பற்றிய " உருக்காட்சி தன்மையும்வகையும்" என்ற இயலும், பெரியபுராணத்திலுள்ள உருக்காட்சிகள் முழுவதையும் காண்பதற்கு உரியவகையில் அமைந்துள்ள இயலும் நூலாக வெளியிடற்குரியன.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தார் எனது ஆய்வேட்டினை பகுதிகளாகவோ, முழுமையாகவோ அச்சிட்டு நூலாக வெளியிடுதற்கு இசைவளித்தமைக்கு நன்றி தெரிவித்துக்கொள்வது என் முதற்கடமை பெரியபுராணத்தில் உருக்காட்சி என்ற தலைப்பில் பிஎச்டி பட்டத்திற்கென ஆய்வு மேற்கொள்வதற்கு இசைவு வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தரும் எனது பேராசிரியருமான முன்னாள் டாக்டர் முவ. அவர்களை நினைக்கும் பொழுது நெஞ்சம் நெகிழ்கிறது. ஆய்வு நெறிமுறைகளைக் காட்டியுதவிய மூதறிஞர் குழு (Doctoral Committee) பேராசிரியர் பெருந்தகை அமுப, டாக்டர் சுபஅண்ணாமலை ஆகியோருக்கு எனது நன்றி என்றும் உரியது. நெறியாளராக டாக்டர் சுப. அண்ணாமலை எனக்கு அளித்த பேருதவிக்கு என்றும் கடமைப்பட்டுள்ளேன். ஆய்வுக்கு ஊக்கம் அளித்த எனது கல்லூரி முன்னாள் முதல்வர்கள், அன்பார்ந்த பேராசிரியர்கள், நூலகர்கள் ஆகியோரை நன்றியுடன் நினைவு கூர்வது எனது கடமையாகும். எட்டாண்டுகள் நடத்தப்பெற்ற பெரியபுராண வகுப்பில் கலந்து கொண்டு பெரியபுராண ஆய்வுக்கு வாய்ப்பளித்த பழனி தமிழ்

இலக்கிய மன்றத்தாருக்கும், குறிப்பாகத் திருவாசகச் செல்வர் திரு நாகநாட்டுராயன், தமிழ்ப்பெரும்புலவர் பேராசிரியர் டாக்டர் அமா.பரிமணம் ஆகியோருக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மதுரை காமசராசர் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் எஸ்கிருஷ்ணசாமி அவர்கள் அளித்த ஊக்கம் என்றும் நினைத்துப் போற்றற்குரியது. ஆய்வேட்டினை விரைவில் நூலாக வெளியிடுமாறு என்னை மிகவும் தூண்டிய அன்னாரை மறத்தலும் கூடுமோ ? மதுரை காமராசர் பல்கலைக்கழக ஆங்கிலத் துறை மற்றும் ஒப்பிலக்கியத்துறை முன்னாள் தலைவர் டாக்டர் வைசச்சிதானந்தன் ஆய்வுக் காலத்தில் ஊக்கம் அளித்து உதவினார்கள். அன்னாரை நன்றியுடன் போற்றி மகிழ்கிறேன்.

எனது ஆய்வேட்டினைக் கண்டு, மகிழ்ந்து வியந்து, பாராட்டி அணிந்துரை வழங்கியருளிய அருள்மொழியரசு திருமுருக கிருபானந்த வாரியர் சுவாமிகளின் திருவடிகளை நன்றியுணர்வோடு வணங்குகிறேன். ஆய்வுநூலின் மதிப்பீடாகவே விளங்கும் அணிந்துரையை அன்புடன் வழங்கிய தமிழறிஞர் டாக்டர். தா.வே. வீராசாமி அவர்களுக்கு உளங்கனிந்த நன்றியைத் தெரிவிப்பது என் கடமையாகும்.

எனது விண்ணப்பத்தை ஏற்று இந்நூல் வெளியிடப் பெறுவதற்கான நிதியுதவி வழங்குதற்கு அன்புடன் பரிந்துரை செய்த தமிழ்வளர்ச்சி இயக்கத்தின் முன்னாள் இயக்குநர் திருகுசிவஞானம் அவர்கட்கும், தமிழ்வளர்ச்சி இயக்குநர் (பொறுப்பு) திரு ஆர். பன்னீர் செல்வம், துணை இயக்குநர் திரு பெரியாண்டவன் ஆகிய பெருமக்களுக்கும் நன்றி தெரிவித்தல் எனது கடமையாகும். தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் நிதியுதவி பெற்று இந்நூல். வெளியிடப்படுகிறது என்பதை இவண் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்புடன் அமைவதற்குப் பெருங்காரணமாயிருந்த சேலம் சண்முகா பிரஸ் ஜாப் பிராஞ்சு அச்சகத்தாருக்கும், அதன் உரிமையாளர் திரு.ஆர்.பழனிச்சாமி அவர்கட்கும் எனது பாராட்டும் நன்றியும் என்றும்

உரியவாகும். நூல் முகப்பட்டையில் அமைந்துள்ள எழிலார் ஓவியத்தை வரைந்தளித்த ஓவியக்கலைஞர் திரு பா. இராசாமணி அவர்கட்கு எனது பாராட்டுடன் கூடிய நன்றி என்றும் உரியது .

இந்நூல் வெளியிடும் பணியில் பல்லாற்றானும் முன்னின்று உதவிய எனது மைத்துனர்/மாப்பிள்ளை திரு.அ.துரைராசு, மாப்பிள்ளை திருகுகண்ணன் எனது வாழ்க்கைத் துணை திருமதி.அம்பிகா, எனது மகன்கள் கி. இராமரத்தினம், இர. கி. கந்தக்குமார், மகள் இரேவதி ஆகியோருக்கும் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

" காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது "

இர . கிருட்டிணமூர்த்தி.

'தாயகம்'
15 . ஆலைத் தெரு
சண்முகபுரம்,
பழனி 624 602
திண்டுக்கல் அண்ணாமாவட்டம்

சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்தில் ஆளப் பட்டுள்ள உருக்காட்சியின் திறனை எடுத்துக் கூறும் முயற்சியை இந் நூலில் காணலாம். தமிழ் இலக்கிய வரலாற்றில் பன்னிரண்டாம் நூற் றாண்டைச் சேர்ந்தது பெரியபுராணம். தொண்டைநாட்டுக் குன்றத்தூர், சேக்கிழார் பிறந்த பதி. சோழமன்னன் அநபாயனின் அமைச்சராக இவர் பணிபுரிந்தார். மன்னன் வேண்டுகோளை ஏற்றுச் சைவ உலகம் போற்றும் பன்னிரு திருமுறைகளுள் பன்னிரண்டாம் திருமுறை என்று போற்றப்படும் பெரியபுராணத்தை இவர் படைத்தார். திருத்தொண்டர் புராணம் என்பது இந்நூற்கு ஆசிரியர் இட்ட பெயர். பெரிய புராணம் என்று மக்களால் தொன்றுதொட்டு வழங்கப் பெறுகிறது இந்நூல். சைவசமயக் குரவர் நால்வருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருத் தொண்டத் தொகை, நம்பியாண்டார் நம்பி பாடிய திருத் தொண்டர் திருவந்தாதி ஆகியவை முறையே பெரியபுராணத்தின் தொகை, வகை நூல்களாக உள்ளன. அளவிலாத பெருமையுடைய வராகிய அளவிலா அடியார் புகழை அளவிலா ஆசையின் தூண்டலால் சேக்கிழார் இந்நூலைப் படைத்தார். தொண்டர்சீர் பரவுதல் என்பதைத் தம் நூற்பொருள் எனக் கொண்டார். பக்தியுணர்வுடன் வாழ்ந்த சிவனடியார்களின் இறைவழிபாடு, தொண்டு ஆகியவை இந்நூலில் விளக்கப் படுகின்றன. சிவபெருமானிடத்தும், சிவனடியார்களிடத்தும் அளவுகடந்த அன்புடையவராக வாழ்ந்த தம் உள்ளிட்ட அறுபத்து மூன்று தனியடியார்களையும் ஒன்பது தொகையடியார்களையும் பற்றிச் சுந்தரமூர்த்தி நாயனார் திருத தொண்டத் தொகையைப் பாடினார். இந்நூல்வழி நின்று நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியும், சேக்கிழாரின் பெரியபுராணமும் சிவனடி யார்களைப் பற்றித் தெரிவிக்கின்றன.

அடியார்தம் வாழ்க்கைச் செய்தி பாடுபொருளாக அமைந்துவிட்டதால் பெரியபுராணத்தின் மையவுணர்வு பக்தியாக உள்ளது. படைப்பு முழுவதும் இவ்வுணர்வே ஊடுருவி நிற்கிறது எனினும் அமையும்.

இரண்டு காண்டங்களாகவும், பதின்மூன்று சருக்கங்களாகவும், புராணங்களாகவும் இந்நூலின் அமைப்பு விளங்குகிறது.

பெரியபுராணத்தில் உருக்காட்சி என்னும் இவ்ஆய்வின் வாயிலாகச் சேக்கிழார் இயல்புக் கூறுகள், உருக்காட்சி உத்தியை அவர் ஆளும் திறம் ஆகியவை பற்றிக் கண்டுணரலாம். சேக்கிழாரின் ஆட்பண்பு, மனவியல்பு, உணர்ச்சி யியல்பு, கற்பனைத்திறன், புலமைச்சிறப்பு, இயற்கையியல் ஈடுபாடு, கூர்த்த நோக்கு, அன்றாட வாழ்வியல் பொருள்கள் பற்றிய அவரது ஆர்வம், விருப்பு வெறுப்பு, நம்பிக்கை ஆகியவற்றையும், அவ் ஆசிரியர் தமது பெரியபுராணம் என்னும் இலக்கியப்படைப்பின் பாடு பொருளை விளக்கியும், அழகுபடுத்தியும், உயர்வுபடுத்தியும் காட்டு தற்குத் தமது ஒன்றிய புலனுணர்ச்சி அறிவுத்திறனால் உருக் காட்சி உத்தியை ஆளும் பாங்கினையும் கண்டுகாட்டும் நோக்கத் தைக் கொண்டுள்ளது இவ் வாய்வுநூல்.

## ஆய்வு நோக்கமும் அணுகுமுறையும் :

பெரிய புராணத்தில் உருக்காட்சி என்னும் இவ்ஆய்வின் வாயிலாகச் சேக்கிழார் தம் இயல்புக் கூறுகளைப் பற்றியும், உருக்காட்சி உத்தியை ஆளும் அவர்தம் திறம் பற்றியும், காணும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. சேக்கிழார்தம் ஆட் பண்பு, மனவியல்பு, உணர்ச்சியியல்பு, கற்பனைத்திறன், புலமைசசிறப்பு, இயற்கையியல் ஈடுபாடு, கூர்த்தநோக்கு, அன்றாட வாழ்க்கைக்குரிய பொருட்களைப் பற்றிய அவரது ஆர்வம்,விருப்பு, வெறுப்பு, நம்பிக்கை ஆகியவற்றையும், தமது படைப்பாகிய பெரிய புராணத்தின் பாடுபொருளை விளக்கியும். அழகு படுத்தியும், உயர்வு படுத்தியும் காட்டுதற்கு அவர் தமது ஒன்றிய புலலுணர்ச்சி அறிவுத்திறத்தினால் உருக்காட்சி உத்தியை ஆளும் பாங்கினையும் கண்டுணர்ந்து காட்டுவது இவ்ஆய்வின் நோக்கமாகும்.

பெரியபுராணப் படைப்பின் வளர்ச்சியுடன் உருக்காட்சி இணைந்து அதன் முழுக்கூறுகளுள் ஒன்றாக அமைந்துள்ளது ; பாடுபொருளுக்கேற்ற புறவடிவம் பொருத்தமுற அமைதற்கு உதவுகிறது ; படைப்பின் தொனி அமைப்பி (Tone Setter) ஆகவும், பகைப்புலம் (Background) ஆகவும் இடம்பெறுகிறது ;

படைப்பின் முருகியற் சுவைக்குக் காரணமாகிறது ; படைப்பின் தலைமைச் சுவையாகப் பக்திச்சுவை விளங்குதற்கு உதவுகிறது ; என்பனபோன்ற கருத்துக்களை இவ்வாய்வு முயற்சியில் கண்டுணரலாம். சேக்கிழார் பெரியபுராணப் படைப்பில் ஆளும் உருக்காட்சிகளைத் தொகுத்தும், பின்பு வகுத்தும் காணும் பகுப் பாய்வு முறை இவ்வாய்வின் அணுகுமுறையாகும்.

உருக்காட்சிக்குரிய பொருள்களை இயற்கை, அன்றாட வாழ்க்கை என்பனவற்றினின்றும் ஆசிரியர் எடுத்தாள்கிறார். தாம் தமது மனத்தளவில் அநுபவித்து உணர்ந்தவற்றையும், கற்றறிந்த தத்துவக் கருத்துகளையும், தத்துவ கருத்துக்களின் வடிவங்களாக விளங்கும் பழங்கதைச் செய்திகளையும் உருக்காட்சிகளாகத் தம் படைப்பில் அவர் ஆள்வது காணத்தக்கது.

பெரிய புராணத்தில் உள்ள உருக்காட்சித் தன்மையுடன் கூடிய மரபுவழிப்பட்ட உவமை, உருவகம், வருணணை, உள்ளுறை, இறைச்சி என்ற இயல்பின, தற் குறிப்பேற்றம், இலக்கணை, புலன்மாற்று உருக்காட்சி, பழங்கதை உருக்காட்சி, சந்தம், அடைமொழி, முரணணி ஆகியவை ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## உருக்காட்சி கோட்பாடு :

"உருக்காட்சி என்ற சொல் உளநூலுக்கும் இலக்கிய வியலுக்கும் பொதுவானது. முன்னையதொன்றை நினைவிற் கொண்டு வரும் மன உருவகமே உளவியலில் வருவது. இந்திய நாட்டைப் பற்றி அறிவன, கேள்விப்படுவன, உணர்வன எல்லாம் சேர்த்து இந்தியாவைப்பற்றி ஓர் உருவை (Image) அமெரிக்கர் மனத்தில் தோற்றுவிக்கின்றது. இலக்கியத்தில் உருக்காட்சி என்பது ஐம்புல அனுபவமாகும். காட்சி, கேள்வி, முகர்தல், உற்றறிதல், நுகர்தல் என்ற ஐம்புல உணர்வுக்கும் உறுவன அனைத்தும் உருக் காட்சியாகும். கண்ணாற் கண்டதுபோல், காதால் கேட்டது போல், மூக்கால் முகர்ந்ததுபோல், நாவாற் சுவைப்பது போல், உற்று அறிந்தது போல், சொற்சித்திரங்களாய்த் தீட்டினால் அங்கு ஒரு காட்சி உருவாகும். வெறும் உவமையும், உருவகமும் மட்டும் உருக் காட்சியாகிவிடா. ஓர் அடைமொழிகூட உருக்காட்சியை விளைவிக்கலாம். 'சொந்தார்ப் பைங்கிளி' என்றால் செம்மை,

பசுமை ஆகிய அடைமொழிகள் முரண்பட அமைந்து கிளிக்காட்சியை உருவாக்கி விடுகின்றன. ஒருகோடிட்டுக் காட்டியே பொருள் இதுவென உணர்த்திடும் கைவல்ல ஓவியன்போல இவர்கள் உருக்காட்சியைப் படைக்கின்றார்கள். தட்வெப்ப நிலைகளை உணர்கிற உரு. இயக்கமுணர்த்தும் உருக்காட்சி (Thermal and kinesthetic) என இவ்வாறு பற்பல உட்பிரிவுகள் கூறுவர். ஐம்புல உருக்களோடு மனவுரு ஒன்றுகூட்டி ஆறு உருக்கள் அமையும் என்பதே அடிப்படையாகும் " என்று தமிழண்ணல் உருக்காட்சிக் கோட்பாடு பற்றி விளக்குகின்றார்.

ஓர் இலக்கியப் படைப்பு என்பது உள்ளடக்கம் (content) உணர்த்துமுறை (Technique) உருவம் (Form) என்ற அமைப்புடன் விளங்குகிறது. உள்ளடக்கம் உள்ளமாகவும் உணர்த்துமுறை உயிராகவும் உருவம் உடலாகவும் கருதப்படுகின்றன. இலக்கியப் படைப்பின் உயிரெனக் கருதப்படும் உணர்த்துமுறை பல உத்திகளைப் கொண்டுள்ளது. அவ்வுத்திகளுள் ஒன்றாக உருக்காட்சி கருதப்படுகிறது. உலகில் பல்வேறு மொழிகள் உள்ளன. அம்மொழிகளால் இலக்கியப் படைப்புகள் இயற்றப்படுகின்றன. மொழிவகையால் உலகில் உள்ள இலக்கியங்கள் வேறுபட்டிருப்பினும் உணர்த்து முறை அவற்றின் பொதுப்பண்பாக இருக்கிறது. தொன்றுதொட்டு இலக்கியப் படைப்பாளிகள் உருக்காட்சிக் கோட்பாட்டை ஆண்டு வருகின்றனர். இந்நூற்றாண்டில் தனித்த ஒரு நோக்கில் இவ்வுத்தி பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இலக்கியப் படைப்பின் இயக்கத்தைப் புலப்படுத்தும் அமைப்பு முறையாக உருக்காட்சி உள்ளது எனலாம்.

"உருக்காட்சி ஒரு சிறு சொல்லோவியமாக நின்று கவிஞனுடைய கருத்தை விளக்கவும், அழகுபடுத்தவும், உயர்வு படுத்தவும் வருகிறது. அது ஒரு வருணனையாக அல்லது கருத்தாக வந்து ஒப்புமையாகக் கூறுப்படுகிறது, உணரப்படுகிறது. உணர்ச்சிகளாலும், எண்ணத் தொடர்புகளாலும் ஆசிரியரின் செய்தியை முழுநிலையில் அவர் எப்படித் தருகிறாரோ அல்லது உணர்ந்தாரோ அப்படித் தருகிறது." என்று அறிஞர் கரோலின் ஸ்பர்ஜன் உருக்காட்சிக் கோட்பாடு பற்றி விளக்குகிறார். கருத்துக்கு ஒரு தரத்தையும், தக்க சூழலையும் படைத்தளிக்கிறது எனவும்,

உணர்ச்சியைத் தெரிவிக்கிறது எனவும் தெளிவான, சரியான வருணனையால் கூட ஆற்றமுடியாத அளவிற்கு உதவுகிறது எனவும் உருக்காட்சியின் திறம் பற்றி அவர் குறிப்பிடுகிறார். "உருக்காட்சி என்பது எல்லாவகை உவமையையும், உவமையின் செறிந்த நிலையான உருவகத்தையும் குறிக்கிறது. காட்சிப்புலச்சார்புதான் (visual) உருக்காட்சி ஆகும் என்று எண்ணாமல், பிற புலனுணர்வுகளாலும், உருவகமாகவும், ஒப்புமை கருதி மொழியப்பெறில், அதுவும் உருக்காட்சியே எனக் கருதுதல் பொருந்தும்" எனவும் அவர் இயம்புகிறார்.

பெரியபுராணப் படைப்பில், பெரும்பாலும் புலனுணர்வுகளாலும் மனவுணர்ச்சியாலும் ஆன கற்பனை ஓவியமாக அல்லது அனுபவமாக உள்ள உவமைகள், உருவகங்கள், உருக்காட்சி எனக் கொள்வதற்கு ஏற்றவகையில் உள்ளன எனலாம். அவை இவ்வாய்வில் இடம் பெற்றுள்ளன.

"கற்பனையே உவமை, உருவம் முதலிய அணிகலன்களாக விரிகிறது. தொல்காப்பியர் உவமஇயலிலும், தண்டி, அலங்கார சரித்திரத்திலும் ஆராய்ந்தன எல்லாம் கவிஞரின் உணர்த்துமுறைகளையே, உவம உருவகங்களையே. இன்றைய திறனாய்வாளர் படிமம் (Imagery) என்கின்றனர். இதனுள் உள்ளுறை, இறைச்சி ஆகிய செறிந்த உவமங்களும் அடங்கும்" என்று ஆய்வறிஞர் அறவாணன் குறிப்பது உருக்காட்சிக் கோட்பாட்டை அறிதற்கு உதவுகிறது.

தொல்காப்பியர் குறிக்கும் உள்ளுறை, இறைச்சி என்ற உத்திகளோடு ஒப்பவைத்து எண்ணுதற்கேற்ற வகையில் சேக்கிழார் குறிப்புப் பொருள்தரும் பாடற்பகுதிகளைப் பெரியபுராணப் படைப்பில் அமைத்துள்ளார். அவை எதிர்நோக்கு உருக்காட்சி எனவும் குறியீட்டு உருக்காட்சி (Symbolic Image) எனவும் கருதத்தக்கவாறு உள்ளமை காணத்தக்கது.

## உருக்காட்சி என்ற தொடர் ஆட்சி :

இவ்வாய்வேட்டில் Imagery என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஈடாக உருக்காட்சி என்ற தமிழ்த்தொடர் ஆளப்பட்டுள்ளது. ஓவியம்,மனக்கன் காணும் காட்சி,

உருவகநிலை, உருவகத்தொகுதிகள், உருக்காட்சி, படிமம், கருத்தியல் வடிவம், படிமப்பிரயோகம், புலனுணர்வு சொற்காட்சி என்பன, Imagery என்பதைக் குறிக்கும் வகையில் தமிழறிஞர்களால் ஆளப் பட்டுள்ளன. இவற்றை யார்யார் எத்தகைய நோக்கில் எங்கெங்குக் கூறியுள்ளனர் என்பதைக் கால வரிசையில் காணும் முயற்சி பொருந்தமுடையது எனலாம்.

**ஓவியம் :**

"கபிலர் ஓவியம் " என்ற நூலின் (1961) ஆசிரியர் மார்க்க பந்து சர்மா ஆவார். கபிலர் படைப்பாகிய குறிஞ்சிப பாட்டைப் பற்றிய இத்திறனாய்வு நூலில் தொல்காப்பியர் விளக்கும் உள்ளுறை, இறைச்சி, என்பன மேனாட்டார் குறிப்பிடும் ஓவியங்களே என ஆய்ந்து கூறியுள்ளார். இவ்வாசிரியர், "ஓவியங்களைப் பெரிதும் போற்றிக் கையாண்ட சேக்ஸ்பியர் ஓவியங் களைக் கொண்டு அவற்றை அமைத்திருக்கும் முறைக்கும் கபிலர் அமைத்துக் காட்டியிருக்கும் முறைக்கும் வேறுபாடு காணப் படுகின்றது. சேக்ஸ்பியர் ஓவியங்களைக் கொத்துக்கொத்தாகத் தோன்றும் படி அமைத்துள்ளார். கபிலர் அவற்றை மாலைபோல் விளங்கும்படி அமைத்துள்ளார். சேக்ஸ்பியர் அமைப்பு இயற் கையை சூழ்ந்திருக்கின்றது, கபிலர் அமைப்பு கைவல்லான் இயற் கையைப் பயன்படுத்திக் கொள்ளுவதனை நினைவூட்டுகின்றது. இளங்கோவடிகள் கபிலர் அமைப்பு முறையைக் கையாண்டு அதனைச் சிறந்து விளங்க வைத்துள்ளார். கபிலர் ஓவியங்களைத் தெரிந்து கொள்ளுவது சிலம்பின் ஓவியங்களைச் சுவைக்க உதவும் என்ற காரணத்தால், இந்நூல் முதலில் வெளிவருகின்றது" என்று இவர் குறிப்பிடுவது Imagery என்ற இலக்கிய உத்தி நோக்கில் திறனாய்வு மேற்கொண்ட முயற்சியைத் தெரிவிக்கிறது.

"ஒரு சொல்லோ, சொற்றொடரோ அல்லது உவமையோ விளக்க வந்ததனோடு அதற்குத் தொடர்புடைய பிற செய்தி களையும் புலப்படுத்தும் ஆற்றல் உடையதாயின் அது ஓவியம் எனப்படும். அது கட்புலனாகக் கூடிய ஒரு வரி வடிவத்தை அல்லது சித்திரத்தை நம் மனத்தே தோற்றுவிப்பதாக இருத்தல் வேண்டும் என்ற வரையறையில்லை. எம்புலனைக் கூறும் பெற்றியு டையதேனும் அதனை ஓவியம் என்று ஏற்றுக்கொள்ளலாம். மேனாட்டார் இவ்வோவியங்களை இருவகைகளாகப் பிரித்து

வழங்குகின்றனர். ஆசிரியன் கருதியிருந்த ஒரு பொருளினை மட்டும் புலப்படுத்தும் ஓவியங்கள் குறியீட்டு ஓவியங்கள் (Symbolic Imagery) என வழங்கப்பெறும். பிறவற்றை, பொருட்செறிவு மிக்கவற்றை, பல பொருள்களைப் பயக்கும் ஆற்றலுடையவற்றை ஓவியம் என்ற பொதுப் பெயராலேயே வழங்குவர்." Imagery என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாக "ஓவியம்" என்ற தமிழ்ச்சொல் ஆளப்பட்டுள்ளது.

"சிலம்பின் பூக்கள்" என்னும் நூலில் *(1962)*" இக்காப்பியம் ஒரு தேன்கூடு. ஓவியங்களை தேன் கூட்டினைக் கசக்காமல் தேனை வடித்தெடுத்துக் கொள்வதுகோல் அவை அமைந்துள்ள இடத்தைச் சிதைக்காமல் இவ்வோவியங்களின் உட்பொருளை நாம் உணர்ந்துகொள்ள முயலவேண்டும்" என்று கூறுவது சிலப்பதிகாரத்தில் ஆளப்பட்டுள்ள ஓவியங்கள் பற்றி அறியும் அவரது ஆர்வத்தைக் காட்டுகிறது.

" சிலம்பின் கொடிகள்" என்னும் நூலிலும்*(1963)* " ஓவியம் " என்ற சொல்லை Imagery என்பதற்கு இணையாக அவர் ஆள்கிறார்.

## ஓவியப்படைப்பு :

"சிலம்பின் கொடிகள் "என்ற நூலில் Imagery என்பதற்கு ஈடாக மார்க்கபந்து சர்மா ஓவியப்படைப்பு என்ற தமிழ்த் தொடரை ஆள்கிறார் ".[8]

## மனக்கண் காணும் காட்சி :

எல். ஆபர்கிராம்பி, "சிறந்த கவிதையின் கருத்து "( The Idea of Great Poetry) என்ற தம் நூலில் குறிப்பிடும் கருத்தினை ஆய்வறிஞர் மு.வரதராசன் அவர்கள், "இலக்கியத் திறன்" என்ற தம் நூலில் *(1965)* Imagery என்பதற்கு ஈடாக மனக்கண் காணும் காட்சி என்ற தொடரை ஆள்கிறார்".[9]

## உருவக நிலை :

பேராசிரியர்கள் ரெனிவெல்லுக்கும் ஆஸ்டின் வாரனும் ஆங்கிலத்தில் படைத்துள்ள "இலக்கியக் கொள்கை "

(Theory of Literature) என்ற நூலை செல்வி.எல்.குளோறியா சந்திரமதி தமிழில் மொழிபெயர்த்து எழுதியுள்ளார். செல்வி.எல்.குளோறியா சந்திரமதி Images என்பதற்கு ஈடாக "உருவக நிலை" என்ற தொடரை ஆள்கிறார்.[10]

## உருவகத் தொகுதிகள் :

திருக்குறள் ஆராய்ச்சி, திருக்குறள் அணிநலன் என்னும் தம் நூலில் Images என்பதற்கு இணையாக உருவத் தொகுதிகள் என்ற தொடரை அறிஞர் இ.சுந்தரமூர்த்தி ஆள்கிறார். "கவிஞன் தான் கண்ட காட்சிகளை வருணிப்பது கவிதையாகாது. அவன் அவற்றை உணர்ந்த வகையில் எடுத்துரைப்பதிலேயே கற்பனை வெளிப்படுகிறது. அவன் சில அடைமொழிகளையும் உருவத்தொகுதிகளையும் (Images) பயன்படுத்துவதன் மூலம் கற்பனைக்கு வடிவம் கொடுத்துவிடுகிறான்" என்று இவர் குறிப்பிடுகிறார்.[11]

## உருக்காட்சி, காட்சி உருவகம், உருவகக்காட்சி :

"இலக்கிய உத்திகள் பலவற்றையும் உலக நோக்கில் ஆராய நிறைய வாய்ப்பிருக்கிறது. நடை, உவமை, உருவகம், சொல்லாட்சி புற அணிகலன் போன்றவற்றின் ஆய்வுக்கு ஒப்பிலக்கியமுறை பெரிதும் பயன்படும். சிறப்பாக இன்று உருக்காட்சி அல்லது காட்சி உருவகம் (Imagery) படிமக் காட்சி அல்லது படிமம் (Symbol) ; பழம் மரபுக்கதை (Myth) போல்வன உலக இலக்கியங்கட்கு எல்லாம் பொதுப்பண்புகள் எனச் சிறப்பாகக் குறிக்கத்தக்கன. தமிழ் இலக்கியத்தில் இம்மூவகை ஆய்வுக்கும் மிகுதியாக வாய்ப்புகள் உள" என்கிறார் பேராசிரியர் தமிழண்ணல்.[12] Imagery என்பதை உருக்காட்சி, காட்சி உருவகம் என்ற தொடர்களால் இவர் குறிப்பிடுகிறார். "ஒப்பிலக்கிய அறிமுகம்" என்ற இவரது நூலில் *(1973)* இத் தொடர்கள் வருகின்றன.

"சங்க இலக்கிய ஒப்பீடு" என்ற தம் நூலிலும் இப்பேராசிரியர் "உருக்காட்சி" என்ற தொடரை ஆள்வது இவ்வியலின் முற்பகுதியில் தரப்பட்டுள்ள மேற்கோளில் காணலாம். உருக்காட்சி என்ற தொடர் பொருட்செறிவும், தெளிவும்

உடையதாக உள்ளது. "ஐம்புல உணர்வுகளால் அறிவனவற்றைக் கவிதையில், கற்பனை உருவமாகக் காண்பதுதான் "உருக்காட்சி" ஆகிறது [13] என்று குறிப்பது இத்தொடர் ஆளப்படும் வழக்கின் பொருத்தத்தைத் தெரிவிக்கிறது.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்கள் மன்ற ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவையில் (1973) திருத்தக்க தேவரின் படிமக்காட்சிப் படைப்பு என்ற தம் கட்டுரையில் இவர் Imagery என்பதற்கு ஈடாக "உருவகக்காட்சி" என்ற தொடரை ஆள்கிறார். அதே கட்டுரையில் உருக்காட்சி என்ற தொடரையும் ஆள்கிறார்.14

"செந்தமிழ்ச் செல்வி" திங்கள் வெளியீட்டில் (அக்டோபர் '73) தமிழண்ணல் அனிச்ச அடி நாடகம் பற்றிய தம் திறனாய்வுக் கட்டுரையில் உருக்காட்சி என்ற தொடரை ஆள்கிறார்.[15]

## கருத்தியல் வடிவம் :

"திருக்குறளின் கற்பனைத் திறனும் நாடக நலனும்" (1973) என்ற தம் நூலில் ஆய்வறிஞர் க. த. திருநாவுக்கரசு கற்பனையை விளக்கும் பொழுது "கற்பனையில் மூலக்கூறுகளாக உள்ளவற்றை நாம் கருத்தியல் வடிவம் (Images) என்று சுட்டுகிறோம்; அவை எந்த உணர்த்து முறைகளிலிருந்தும் - புலன்களிலிருந்தும் தோன்றலாம்" என்று குறிப்பிடுகிறார். மேலும் அவர் கருத்தியல் வடிவங்கள் அறுவகைப்படும் என்று குறிப்பிட்டு மிகத் தெளிவான கருத்தியல் வடிவத்திலிருந்து கவிதையின் சிறப்புமிக்க கற்பனை ஆற்றல் தோன்றுகிறது என்கிறார். Poetic image என்பதைக் கவிதைக் கருத்தியல் வடிவம் என்று தமிழ்ப்படுத்துகின்றார்.

## படிமம், படிமப்பிரயோகம் :

தமிழ் இலக்கிய விமர்சனம் (1974) என்ற நூலில் அறிஞர் சி.சு.செல்லப்பா படிமம் என்ற சொல்லை Imagery என்பதற்கு ஈடாக ஆள்கிறார்.17

"உயிர் உள்ளம் உடல்" என்னும் தம் நூலில் (1976) அறிஞர் க. ப. அறவாணன் படிமம் என்ற சொல்லையும்[18]

படிமப்பிரயோகம் என்ற தொடரையும் [19] Imagery என்ற சொல்லுக்கு ஈடாகக் குறிக்கிறார். இவ்விரண்டும் வடசொற்கள். தற்பவமாக உள்ளன.

## புலனுணர்வு சொற்காட்சி :

"கம்பனின் இலக்கிய உத்திகள்"(1982) என்ற நூலில் அறிஞர் ச. வே. சுப்பிரமணியன் Imagery என்பதைப் புலனுணர்வு சொற்காட்சி என்று குறிக்கின்றார். "சொற்களால் வடிக்கப்படும் ஓவியமும் இயைபு பற்றி இங்கு நினைக்கத்தக்கது. புலனுணர்வுக்கு வாய்ப்பாகக் காட்சிப்படுத்தல் பற்றி இது வருணனையிலும் ஒருபடி மேல் செல்கிறது. இப்புலனுணர்வு சொற்காட்சி (Imagery) இலக்கியத்தை இயல்புப்படுத்துவதுடன் உணர்வு நெருக்கமும் அளிக்கிறது. நிகழ்வினை நேரடியாக உணரும் பாங்கு கற்போனுக்கு இதன் வாயிலாக அமைகின்றது 20என்று அவர் குறிப்பிடும் விளக்கத்தில் சுருங்கிய வடிவமாகப் புலனுணர்வைத் தருகின்ற சொல்லினால் உண்டான காட்சி என்று பொருள்கொள்ளும்படி உள்ளன. நீண்ட தொடராக உள்ளது. இதுவரை Imagery என்பதைக் குறிக்க தமிழறிஞர்கள் பலவகைச் சொற்களை சொற்றொடர்களை ஆள்வது பற்றிக் காட்டப்பட்டது. ஓவியம், ஓவியப்படைப்பு, என்பன சொல்லோவியம் என்பதைக் குறிப்பினும் கட்புலனால் ஓவியத்தை மட்டும் காட்டுவதாக அமைந்துள்ளன. மனக்கண் காணும் காட்சி என்பதுவும் இவ்வாறே காட்சிப்புலனைப் பற்றியதொன்றாகவே தோன்றுகிறது. உருவகநிலை என்பது உவமையின் செறிந்த நிலையான உருவக அணியைக் குறிப்பதுபோலத் தோற்றமளிக்கிறது.

உருவகத் தொகுதிகள் என்ற தொடரும் உருவகங்களின் கூட்டத்தைக் குறிப்பதுபோல் உள்ளது. கருத்தியல் வடிவம் என்ற தொடரில் வரும் வடிவம்என்பது காட்சிப்புலனுக்குரியதாகவே விளங்குகிறது. படிமம், படிமப்பிரயோகம் என்பன தற்பொழுது பெரும்பாலும் குறியீட்டு உத்தியைக் (Symbol) குறிப்பனவாக உள்ளன. தமிழண்ணல் ஆளும் உருக்காட்சி என்ற தொடர் ஐம்புலவுணர்வுடனும் மனவுணர்வுடனும் தொடர்புடையதாக உள்ளது. உள்ளத்தில் உருவாதல், அநுபவமாகக் காட்சிப்படுதல் என்று எண்ணித் தெளிவதற் கேற்ற வகையில் இத்தொடர் உள்ளது.

எளிதில் பொருள் உணர்த்தும் வகையிலும், ஆள்வதற்கேற்றவாறும் உள்ளது. உருக்காட்சி என்ற தமிழ்ச்சொல்லை Imagery என்பதற்கு ஈடாக ஆள்வது பொருத்தமாகத் தெரிகிறது.

இலக்கியப் படைப்பாளியின் உள்ளக்கிடக்கையைக் காட்டுவதாகவும், அவனது ஐம்புல உணர்வுகளைப் பற்றிய சிறப்பின் சான்றாகவும் விளங்கி, அவனது படைப்பின் உயிர்ப்பொருளாகவும், படைப்பாளியின் புலமைச்சிறப்பு, பல்துறை அறிவுக்கூர்மை ஆகியவற்றைக் காட்டுவதாகவும், ஒரு முழுமை உணர்வை வழங்கும் இயல்பினதாகவும், பிரித்தற்கியலாத வகையில் படைப்புடன் இணைந்திருக்கும் உறுப்பாகவும், அழகு, மரபு என்ற பாங்கில் ஆளப் பெ[illegible]ாகவும் விளங்கும் உருக்காட்சி உணர்த்துமுறை உத்திகளுள் சிறந்த ஒன்றாகத் திகழ்கின்றது.

படைப்பொன்றின் தலைமை உணர்வை மைய நோக்கமாகக் கொண்டு இயங்கி அப்படைப்பின் தனிச்சிறப்பைக் காட்டவல்லதாகவும், படைப்பாளியின் கற்பனையின் மனவியலை (Psychology of Imagination) வெளிப்படுத்தும் திறனுடையதாகவும் அவனது ஆட்பண்பின் சான்றாகவும் அது விளங்குகிறது எனலாம்.

<u>**உந்தூக்கம் :**</u>

திருமதி . எஃப்.இ. கரோலின் ஸ்பர்ஜன் எழுதியுள்ள "சேக்ஸ்பியரின் உருக்காட்சி அது தெரிவிப்பதென்ன " (Shakespeare's Imagery and what it tells us) எனும் நூல் இவ்ஆய்விற்கு உந்தூக்கம் தந்தது. இந்த அறிஞர்தம் பகுப்பாய்வு முறை ஏற்றபெற்றி இவ்ஆய்வில் பின்பற்றப்பட்டுள்ளது. இந்நூலில் பிறபடைப்பாளிகளின் உருக்காட்சியுடன் சேக்ஸ்பியரின் உருக்காட்சியினை ஒப்பிட்டு ஆய்வு செய்துள்ள இவர், சேக்ஸ்பியரின் புலனுணர்வுச் சிறப்பு (Sense) சிந்தனை, எண்ணக்கோவை, ஆட்பண்பு என்பனவற்றை நூலின் முதற்பகுதியில் ஆய்கின்றார். இரண்டாம் பகுதியில் சேக்ஸ்பியரின்

வரலாற்றியல், இன்பியல், காதலியல், துன்பியல், நாடகப் படைப்புகளில் ஊடுருவிச் செல்லும் தலைமை உருக்காட்சிப் போக்குகள் பற்றி ஆய்வு செய்கின்றார்.

அகச்சான்று :

சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம் மூன்றாம் பதிப்பு , *1970* ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. சைவசித்தாந்த மகா சமா ஜத்தினரால் இந்நூல் வெளியிடப்பெற்றுள்ளது.

சி.கே. சுப்பிரமணிய முதலியார் எழுதிய உரையுடன் விளங்கும் திருத்தொண்டர் புராணம் ஏழுபகுதிகள் ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்டன. திரு.வி. கல்யாணசுந்தர முதலியார் அருஞ்சொற்பொருள் தரும் உரையுடன் கூடிய பெரியபுராணம் என்னும் நூலும் சூசனத்துடன் கூடிய ஆறுமுகநாவலர்தம் பெரியபுராணப் பதிப்பும், ஆலாலசுந்தரம்பிள்ளை அவர்கள் பெரியபுராணப் பதிப்பும், ஆய்வுக்கு உதவின.

புறச்சான்று :

திருமதி. கரோலின் எஃப்.இ.ஸ்பர்ஜன் (Caroline F.E.Spurgeon) எழுதிய 'சேக்ஸ்பியர் உருக்காட்சி அது நமக்குத் தெரிவிப்பதென்ன?'(Shakespeare's Imagery and What it tells us) சி.டேலூயி எழுதிய "கவிதையியல் உருக்காட்சி" (C.Day Lewis, The Poetic Image).கிளமென் உல்ஃப்காங்கு (Clemen H. Wolf Gang) எழுதிய 'சேக்ஸ்பியர் உருக்காட்சியின் வளர்ச்சி" (The Development of Shakespeare's Imagery), பி.கரே எழுதிய "கவிதை நயப்பு" (P.Gurrey, The Appreciation of Poetry), ஆசிரியர்கள் ரெனிவெல்லாக், ஆஸ்டின் வாரன் எழுதிய இலக்கியக்கொள்கை (Rene Wellek and Austin Warren, Theory of Literature), டாக்டர் சுப. அண்ணாமலை எழுதிய "இராமலிங்க அடிகளார் வாழ்வும் கோட்பாடும் (The Life and Tecahings of St.Ramalingar) டாக்டர் தமிழண்ணல் எழுதிய "சங்க இலக்கிய ஒப்பீடு" ஆகிய நூல்கள் இவ்வாய்வுக்குப் புறச்சான்றுகளாக உதவின.

## ஐம்புல உருக்காட்சி

ஒரு படைப்பாளியின் புலன்களின் இயல்பு, சிறப்புச்கூறுகள் பற்றி, அவனது படைப்பின் வழியில்நின்று செய்யப்பெறும் பகுப்பாய்வுக்கு அவனது காட்சிப்புலம், கேள்விப்புலம், நுகர்வுப்புலம், முகர்வுப்புலம், ஊற்றுப்புலம் ஆகியவற்றை இயன்றவரையில் தனித்தனியாகக் கண்டு திட்டமிடுதல் பயன்தரும். எனவே பெரியபுராணப் படைப்பில் சேக்கிழார் படைத்துள்ளீ ஐம்புலத்திற்கும் உரிய உருக்காட்சிகள் பற்றிய ஆய்வு முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. சேக்கிழார் ஆளும் புலன்மாற்று உருக்காட்சி பற்றிய ஆய்வும் இடம் பெற்றுள்ளது.

### காட்சிப்புல உருக்காட்சி :

(I) இயற்கை (அ) வான் - வானியல் கோள்கள்:

காட்சிப்புலம் என்பது அனைத்தையும் தழுவிய ஒன்றாகும். வாழ்வின் பெரும்பகுதி காட்சிப்புலம் என்ற வாயில் வழியாகக் கவிஞனைச் சென்றடைகிறது எனலாம். பெரிய புராணத்தில் இவ்வுருக்காட்சி சிறப்பிடம் பெற்றுள்ளது எனலாம். இயற்கை என்ற பிரிவில் இடம்பெறுவனவாகிய ஞாயிறு, நிலவு, மேகம், வெள்ளம், அருவி, ஆறு , கடல், விலங்கு, பறவை என்பனவும், அன்றாட வாழ்க்கை என்ற பிரிவில் இடம் பெறும் மக்கள், அணிகள், படைக்கருவிகள், சமயத்தொடர்புள்ள விளக்கு, திருநீறு என்பனவும் காட்சிப்புல உருக்காட்சிகளாக உள்ளன.

### ஞாயிறு உருக்காட்சி :

தமிழ் இலக்கியத்தில் தொன்றுதொட்டு ஞாயிறு உருக்காட்சி இடம் பெற்று வருகிறது. சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாம் பாடிய இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் நன்னன்சேய் நன்னன் என்பானின் பெருமையை,

"ஞாயிறு அன்ன அவன்வசையில் சிறப்பும்" என்கிறார்.
*1 பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார்,*

"முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்

பன்மீன் நடுவண் திங்கள் போலவும்

பூத்த சுற்றமொடு பொலிந்து......"

என வாழ்த்துகின்றார். சைவத்திருமுறையில் எட்டாந் திருமுறை என்னும் திருவாசகத்தைப்பாடிய மணிவாசகர் இறைவரைப் போற்றும் வகையில்,

"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்

தெழுகின்ற ஞாயிறே போன்று

நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்...."

என்று பாடுகின்றார்.[3] சங்கப்புலவர்கள் மன்னனைப்போற்றும் ஆர்வம் உடையவராய் ஞாயிற்றை உருக்காட்சியாக ஆள்கின்றனர். சமயவுணர்வினராகிய மணிவாசகர் இறைவரை ஞாயிறு உருக்காட்சியால் அன்புணர்ச்சியுடன் பரவுகின்றார். இவர்கட்குப்பின் வந்த சேக்கிழார் சைவசமயக் குரவர்களை இவ்வுருக்காட்சியால் சிறப்பிப்பதில் ஆர்வம் காட்டுகிறார். பொருத்தமும் புதுமைநயமும் உடையதாக ஞாயிறு உருக்காட்சி பெரியபுராணப்படைப்பில் உள்ளது.

## திருத்தொண்டர் புராணம் - ஞாயிறு :

மக்கள் மனத்துள் இருக்கும் ஆணவமாகிய இருளைக் போக்கவல்லதாகிய மெய்யுணர்வென்னும் ஒளியைத் திருத்தொண்டர் புராணம் தரவல்லது என்ற கருத்தை விளக்கும் வகையில் ஞாயிறு உருக்காட்சியைச் சேக்கிழார் ஆள்கிறார். " மக்களின் சிந்தையுள் சார்ந்துள்ள இருளை ஏனைப்புறவிருளைப் போக்கும் செங்கதிரவன் போல் திருத்தொண்டர் புராணம் நீக்கவல்லது" என்கிறார் ஆசிரியர். மெய்யுணர்வு பெற்ற அடியார்களைப் பற்றிய இப்புராணம் ஆணவ இருளை நீக்க வல்லது என்பது கருத்து.

பொருத்தமும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

## நாயனார் - ஞாயிறு :

## சுந்தரர் - ஆயிர ஞாயிறு :

இறைவர் ஆணைக்கிணங்கக் கயிலையிலிருந்து பூவுலகிற்கு வந்த சுந்தரர் மீண்டும் கயிலைக்குத் திரும்பிச் சென்றமை கூறப்படுகிறது . உபமன்னிய முனிவரும் அவருடைய சீடர்களும் வானில் ஒரு பேரொளியைக் காண்கின்றனர். ஆயிரம் ஞாயிற்றிலிருந்து பொங்கும் பேரொளியாக அது விளங்கியமை கண்டு வியந்தவராய் அவருடைய சீடர்கள் உபமன்னிய முனிவரிடம் அப்பேரொளியின் செய்தி பற்றித் தமக்குக் கூறவேண்டுகின்றனர். சிவபெருமான் திருவடியைச் சிந்தித்துப் போற்றியவராய், அம்முனிவர் "இறைவரருளால் தென்திசைக்கு வந்த நாவலர்கோன் ஆகிய சுந்தரர் கயிலைக்குத் திரும்புகிறார் " என்று கூறினார். சுந்தரரின் வடிவம் ஆயிரம் ஞாயிற்றின் பேரொளியாக இருந்தது. 5 சுந்தரரின் திருமேனியின் பேரொளி துங்கமாதவருடைய கண்ணொளிகட்கு அடங்காத ஆயிரம் ஞாயிறு போன்று ஒளி பரப்பியது. "சடவொளியையும் சித்தின் ஒளியையும் பிரகாசிக்கச் செய்ய வல்ல அருளொளியே சுந்தரமூர்த்திகளுடைய திருமேனியினொளி என்று அறிவுறுத்தியவாறாம்" என்பது ஆலாவசுந்தரம்பிள்ளை கருத்து. [6]

## கதிர்போல மலர்தல் - மருள் நீக்கியார் பிறத்தல் :

திருநாவுக்கரசு பிறந்தமையைப் போற்றும் சேக்கிழார், "உலகில் உண்டாகும் இருளை நீக்கி, ஒளிதரும் கதிரவனைப்போல மருள் நீக்கியார் அவதரித்தார்" என்று குறிப்பிடுகிறார். [7] எல்லையற்ற கலைத்துறைகள் தழைப்பதற்கும், அருந்தவத்தோர் நெறி வாழ்வதற்கும் தடையாயிருந்த சமணம், புத்தம் போன்ற சமயங்களால் ஏற்பட்ட இருளை நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல மருள் நீக்கியார் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றிருந்த நாவரசர் பிறந்தருளினார் என்பது ஆசிரியர் கருத்து.

கதிர் என்னும் காட்சிப்புல உருக்காட்சியுடன் (Visual Image) மலரும் என்னும் வினைச்சொல் உருக்காட்சி (verbal Image) இணைந்து வந்தமை நினைத்தற்குரியது.

"மாதினியார் திருவயிற்றில் மன்னிய சீர்ப்புகழனார் காதலனார் உதித்ததன்பின்" என்று சேக்கிழார் அடுத்தபடியாகக் கூறுகிறார். "உதித்ததன்பின்" என்ற தொடரில் வினைச்சொல் உருக்காட்சி உள்ளது. தமிழகத்தில் சைவ சமயத்தையும், கலைகளையும் விளக்கமுறச் செய்யும் பெருந்தொண்டு ஆற்றவிருக்கிறார் நாவரசர் என்ற கருத்தை முன்னதாகவே விளக்குகிற வகையில் ஞாயிறு உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. எனவே இதனை எதிர்நோக்கு உருக்காட்சியாகக் (Anticipatory image) கருதலாம்.

நாவரசர் காஞ்சிநகருக்கு வருகிறார் என்ற செய்தியைக் கேட்ட மக்கள் மகிழ்ச்சியுற்றனர். முகம் மலர்ந்தனர். இதனை ஆசிரியர்,

"காலையில் மலரும் கமலமலர்கள் போல் காஞ்சிவாணர்
முகமெல்லாம் மிகுதியும் மலர்ந்து மகிச்சியுற்றனர்"

என்கிறார்.[9]

கதிரவன் வரவுக்கு முன் அவன் ஒளி எங்கும் பரவும். அப்பொழுது கமலங்கள் மலரும். இது இயற்கை நிகழ்ச்சி. இதனை உருக்காட்சியாகப் படைத்து நாவரசரின் வருகைச் சிறப்பைக் குறிப்பிடுகிறார் சேக்கிழார். நாவரசரிடம் மக்கள் கொண்டுள்ள அன்பின் திறம் மலர் உருக்காட்சியுடன் இணைந்து விளங்கும் ஞாயிறு உருக்காட்சியால் குறிக்கப்படுகிறது. நாவரசரிடம் ஆசிரியர் கொண்டுள்ள பக்தியை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## சம்பந்தர் - சேமஉதயப்பரிதி:

"சேமஉதயப்பரிதி போலத் திகழ்பிரான்" எனச் சேக்கிழார் சம்பந்தரை அன்புணர்வுடன் போற்றுகின்றார்.[10] "இளஞ் சூரியனது செம்மை, அதற்கண் உயிர்ப்பு அதிகம் " என்பர் திரு.வி. கல்யாணசுந்தரம் முதலியார்.[11] சேமயஉயதப்பரிதி என்றும் திகழ்வது போல் சம்பந்தரும் நிலைபெற்றுத் திகழ்கிறார். அவரைக் குருவெனக் கொண்டு அருளாளர்கள் தோன்றினர்,

தோன்றுகின்றனர். மேலும் தோன்றுவர் என்ற உட்குறிப்புடன் ஞாயிறு உருக்காட்சி அமைந்துள்ளது. ஞாயிறு இருளை நீக்குவதுபோல் சம்பந்தர் பரசமய இருளை நீக்க வந்தமை ஆசிரியரால் குறிப்பாகக் காட்டப்படுகிறது. சேமம் என்பது பாதுகாப்பு என்ற பொருளுடையது. சைவசமயத்தைக் காத்தற்கு வந்த சம்பந்தரைச் சேமய உதயப்பரிதி எனப் பொருத்தமுறவும் எண்ணக்கோவையுடனும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

## சம்பந்தர் - பரிதி ஆயிரகோடி:

"ஆயிரம் சுருதிகளையும், அவற்றிற்கு அங்கமான பழம்பெருங் கலைகளையும் எடுத்து இயம்பி அவற்றிற்கு விளக்கம் தரவல்ல சம்பந்தப் பெருமானை, ஆயிரம் கோடிப்பரிதியின் பேரொளி விரிந்தாற் போன்ற பரஞ்சோதியாகிய அருள்பெற்ற தகுதிப்பாட்டினை மனத்துட்கொண்டு வியந்து, தங்கள் முன்னே நடமாடும் தியானப் பொருளாகவே அவரை எண்ணி, வல்ல மறைகளையெல்லாம் கேட்டுணர்ந்து தங்கட்குண்டான ஐயங்களை யெல்லாம் கலைமறையோர் நீக்கிக் கொண்டு வாழ்ந்தார்கள்" என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார்.[12] 'பரிதி ஆயிரகோடி விரிந்தாலென்ன' என்ற தொடர் குறிப்பிடும் ஒளியின் பெருநிலை, படிப்பவர் மனத்துள் வியப்பினை உண்டாக்க வல்லது. அளவிறந்த ஞாயிறுகள் ஒருங்கே விரிந்தாற்போல என்பது இறைவர் பேரருளால் சம்பந்தப் பெற்ற ஞானத்தைச் சிறப்பிக்கும் உருக்காட்சியாக வந்துள்ளது. சைவசமயத்தில் ஞானசம்பந்த ருக்குரிய சிறந்த இடம் இவ்வுருக்காட்சியால் காட்டப் படுகிறது. புத்தம் புதிய தன்மை (Freshness) செறிவு (Intensity) கிளர்ச்சியூட்டும் ஆற்றல் –(Evocative power) பொருத்தம் (Congruity) ஆகியவை இவ்வுருக்காட்சியில் அமைந்துள்ளன எனலாம். ஞானசம் பந்தரைப்பற்றிச் சேக்கிழார் கொண்டுள்ள பெருமதிப்புணர்வை இதனால் அறியமுடிகிறது. ஞானசம்பந்தர்பால் ஆசிரியர் வைத்திருக்கும் அன்புணர்வு இத்தகைய கற்பனைக்குக் காரணம் எனலாம்.

## சமணர் சூழ்ந்த சம்பந்தர் - கருமுகில் சூழ்ந்த கதிரவன் :

மதுரைக்கு எழுந்தருளிய சம்பந்தரைச் சமணர் சூழ்ந்தனர். வாதினால் அவரை வெல்லக்கருதித் தங்கள் நூல்களை

எடுத்தோதி உரக்கப் பேசினர். இக்காட்சியைத் தம் மனத்துட் கொண்ட ஆசிரியர், "காலையில் எழுகின்ற கதிரவனைக் கருமுகில்கள் சூழ்ந்துள்ளது போல, பீலிகளைத் தம் கையில் கொண்டுள்ள சமணர்கள் சம்பந்தரைச் சூழ்ந்துகொண்டார்கள்" என்றும், "தம்மால் இயன்ற அளவு வாதினால் அவரை வெல்ல எண்ணித்தமது நூல்களை எல்லாம் எடுத்துக்கூறித் தலை திமிர்ப்பக் குரைத்தார்கள் " என்றும் கூறுகிறார். [13] " குரைத்தார்கள்" என்ற தொடரில் உள்ள வினைச் சொல் உருக்காட்சி (Verbal image) நாய் என்னும் விலங்கை நினைக்கச் செய்கிறது. " சூரியனைப் பார்த்து நாய் குலைப்பது போல" என்பது பழமொழி. நாயின் குரைப்பு பயனற்றது. அதுபோல சமணரின் வாதமும், சம்பந்தர் என்னும் ஞாயிற்றின் முன்பு பயனற்றது என்ற குறிப்புடன் இச்சொல் ஆளப்பெற்றுள்ளது எனலாம். சமணர்கள் சம்பந்தரைச் சூழ்ந்தது கருமேகங்கள் கதிரவனைச் சூழ்ந்ததுபோல் இருந்தது என்கிறார் ஆசிரியர். கருமேகங்கள் நிலைத்து நிற்பன அல்ல. அகன்றுவிடக்கூடியன. அதுபோலச்சமணர்கள் சம்பந்தரின் பேரொளிக்கு முன் நிற்கும் ஆற்றலற்றுப் போனார்கள் என்பதும் அவர் கருத்தாகலாம்.

மேகவுருக்காட்சி, வினைச்சொல் உருக்காட்சி, விலங்கு உருக்காட்சி கேள்விப்புலன் உருக்காட்சி, நிலவுஉருக்காட்சி ஆகியவற்றுடன் இணைந்து ஞாயிறு உருக்காட்சி ஆசிரியரால் பொருத்தமும், ஆழமும் உள்ள வகையில் ஆளப்பெற்றுள்ளது. சமணர்களிடம் சேக்கிழார் கொண்டுள்ள வெறுப்பையும் இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## தற்குறிப்பேற்றமாக ஞாயிறு உருக்காட்சி :

காவியங்களில் ஞாயிற்றின் எழுச்சியும், மறைவும் தற்குறிப்பேற்ற அணியில் பாடப்பெறுவது மரபு. கவிஞன் தன் குறிப்பைப் படிப்பவர்க்கு உணர்த்த இவ்வணி மிகுதியும் உதவும். ஞாயிறு எழுவதும், மறைவதும் இயற்கை. கவிஞன் அதன் எழுச்சியிலும், மறைவிலும் காரணம் கற்பித்துக் கூறுகிறான். சேக்கிழாரின் ஞாயிறு உருக்காட்சியில் இவ்வுத்தி இடம் பெறுகின்றது.

## கதிரவன் - காமுறுமனத்தான்:

"சுந்தரர் திருமணக்கோலத்தைக் காணவேண்டும் என்ற பேரார்வத்துடன் உள்ளவன் போல் கதிரவன் உதயம் செய்தான்"[14] என்கிறார் சேக்கிழார். சுந்தரரின் தோற்றப்பொலிவு சிறப்புமிக்கது என்று ஞாயிறு உருக்காட்சியால் ஆசிரியர் விளக்குகிறார்.

## ஏம்பரித்தேரோன் :

பரவையாரை அடைய விரும்பும் சுந்தரரிடம் தற்பொழுது. "நீ விரும்பும் பெண்ணைக் கடலைக் கடைந்து காட்டுவேன்" என்பதுபோல் மேற்குக் கடலில் கதிரவன் புகுந்தான் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார்[5]

## பன்னெடுங்கரங்கள் கூப்பிய பகலவன் :

திருக்காளத்தி மலையில் கண்ணப்பநாயனார் குடுமித்தேவருக்குத் திருத்தொண்டு செய்து வருகிறார். இனிய ஊனமுதைப் பேரார்வத்துடன் இறைவருக்குப் படைக்கிறார். தன்னுணர்வற்றவராய் முழுக்க முழுக்க இறைவருக்குத் துணையாக இருப்பதிலேயே கருத்துடையவராய் இருக்கிறார். திருக்காளத்தி மலையினார்க்கு இன்னமும் நல்லூன் ஊட்டவேண்டும் என்ற விருப்பமுடன் வேட்டையாடுகிறார். அவருடைய பேரார்வத்தைக் கண்டு கதிரவன் தன்னுடைய கரங்களால் கூப்பித் தொழுது மலையில் தாழ்கிறான். கடமையின் வடிவமாக விளங்கிவரும் கதிரவன் கண்ணப்பநாயனாரைத் தன் பன்னெடுங்கரங்களால் கூப்பித்தொழுகிறான் என்று சேக்கிழார் நவில்வது கண்ணப்ப நாயனாரின் திருத்தொண்டின் சிறப்பைத் தெரிவிக்கிறது. படிப்பவர் மனத்தில் கண்ணப்பநாயனார் தொண்டின் மீது மரியாதை உணர்வு தோன்றும் வகையில் ஞாயிறு உருக்காட்சி ஆளப்பெற்றமை கண்டுரைத்தக்கது.

## தொண்டருக்குத் தொண்டன்:

கண்ணப்பநாயனாரின் திருத்தொண்டைக் கண்டு தொழுகின்ற கதிரவன் அடுத்து அவருடைய திருத்தொண்டில் தானும் பங்குகொள்கிறான் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

கண்ணப்ப நாயனார் காட்டில் விலங்குளை வேட்டையாடுகிறார். குடுமித்தேவருக்கு ஊனமுது படைப்பது அவர் வழக்கமாகிவிட்டது. வழிபாடாகிவிட்டது. மொய்த்திருக்கும் இருளைத் தன் ஒளியால் விழுங்கும் கதிரவன் கண்ணப்பநாயனாரின் விலங்கு வேட்டைக்கு உதவுகிறான். விலங்குகளை வளைப்பது வேட்டையின் முதற்செயலாகும். காட்டைக் கலைத்தல் என்று வேட்டையாடுவோர் இச்செயலைக் குறிப்பர். இருட்டு என்னும் கருந்திரை விலங்குகளை மூடிமறைத்து உள்ளது. வேட்டையாடும் கண்ணப்பநாயனாருக்கு விலங்குகள் தெரியமாட்டா என்று கருதி கதிரவன் அந்தக் கருந்திரையைத் தன் ஒளிக்கரங்களால் விலக்கிவிடுகிறான். அத்துடன் அமையாமல் தன் நீண்ட கரங்களால் கண்ணப்பநாயனாருக்கு "அதோ! அதோ!" என்று விலங்குகளைச் சுட்டிக்காட்டுகிறான். ஒரு கடமை வீரனுக்கு மற்றொரு கடமை வீரன் உதவுகின்ற காட்சியைச் சேக்கிழார் இவ்வாறு படைக்கிறார். கண்ணப்பநாயனாரின் திருத்தொண்டின் ஏற்றம் இவ்வாறு ஞாயிறு உருக்காட்சியால் விளக்கமுறுகிறது. [17]. தொண்டு செய்வோருக்குத் துணைநிற்க வேண்டும் என்ற கருத்தை விளக்கும் வகையில் ஞாயிறு உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.

## மூர்த்திநாயனார், வடுகக்கருநாட மன்னன் - செங்கதிர், மாலைப்பொழுது:

மூர்த்திநாயனார் புராணத்தில் பாண்டிய நாட்டை ஆண்ட வடுகக்கருநாடர் மன்னனைப் பற்றி ஆசிரியர் குறிப்பிடுகிறார். சமணசமயத்தைப் போற்றிய அம்மன்னனால் சைவசமயம் சீர்கேடடைந்தது. " அத்தகையவன் மாண்டபொழுது அவனுடைய மனைவியர், மக்கள், சுற்றத்தார் அழுதுபுலம்பினர். அவனைப்போன்ற மாலைப்பொழுதும் புலர்வுற்றது. செங்கதிர் எழுச்சிதான் இதற்குக் காரணம்" என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 18 செங்கதிர் என்பது மூர்த்திநாரயனாரைக் குறிக்கிறது. கொடியோனாகிய வடுகக்கருநாடர் மன்னன், இருட்டு உருக்காட்சியால் (Dark image) குறிக்கப்படுகிறான்.

## வெய்யவன் வீழ்ந்தான்:

"திருஞானசம்பந்தரும், அவருடைய அன்பர்களும் பகல் முழுதும் நடந்தமையால் களைப்புற்றனர். அவர்கள் நிலையைக் கண்ட கதிரவன் அஞ்சினான். தன்னுடைய வெம்மையான கைகள்தாம் அவர்கட்கு இத்துன்பத்தைத் தந்தன என்று அறிந்து வருந்தினான். மேலும் அவர்கட்குத் துன்பம் தரக்கூடாது என்று எண்ணி மேலைக்கடற்குச் சென்று வீழ்ந்தான். தன் ஆயிரம் கை-களையும் இழுத்து, மடக்கி, மறைத்துக்கொண்டான்" என்று சேக்கிழார் தற்குறிப்பேற்றமாகக் குறிப்பிடுகின்றார்.[19] திருச் தொண்டு புரிபவருக்குத் துணைநிற்க இயலாமற் போனாலும் பரவாயில்லை, அவர்கட்குத் துன்பம் தருவது கூடாது என்ற கருத்தை ஞாயிறு உருக்காட்சி தெரிவிக்கிறது.

## காதல் செய்பவன்:

"சீத முத்தினால் ஆன சிவிகையில் போத ஞானம் நிறைந்த சம்பந்தரை ஏற்றிடக் காதல் செய்பவனைப்போல் கருங் கடலின்மேல் கதிரவன் தேரில் வந்தான்" என்கிறார் ஆசிரியர்.[20] கதிரவன் எழுச்சி இவ்வாறு, ஆசிரியருக்குத் தோன்றுகிறது. சம்பந்தரின் எழுச்சியினால் பல்லோர் மகிழ்ச்சியடைந்த நிகழ்ச்சி ஞாயிறு உருக்காட்சியால் காட்டப்படுகிறது.

## திசைகளின் பேரணிகலன்கள்:

"திருஞானசம்பந்தரின் திருமணநாளன்று திசைகள் தங்களுடைய இருள் என்னும் மாசினைக் கழுவி நீக்குதற்கு நீராடின. பின்பு செங்கதிரோனின் சுடர்க்கதிர்களைப் பேரணிகலன்களாக அணிந்துகொண்டன. "இப்படிக் கற்பனை செய்கிறது சேக்கிழார் நெஞ்சம். திசைகளெங்கும் ஞாயிற்றின் பேரொளி பரவியிருப்பதை இவ்வாறு வருணிக்கிறார் ஆசிரியர். ஞாயிறு உருக்காட்சி இவ்வருணனையில் அமைந்துள்ளது.[21]

## ஏனாதிநாதர், அதிசூரன் - கதிரோன், கால்சாயும் மதி:

ஏனாதிநாதநாயனாரின் வில்லாண்மை, செல்வவளம், புகழ் ஆகியவற்றைக் காணப்பொறாமல் அழுக்காறுடையவனாய் அதிசூரன் என்பான் அவரை வஞ்சனையால் வீழ்த்த எண்ணினான்.

அவனுடைய இவ்விழிந்த மனநிலையைச் சேக்கிழார், "ஏனாதி நாதரை எதிர்க்கும் அதிசூரன், கதிரோன் எழுவதால் தன் ஒளி மழுங்கித் தோன்றுகின்ற காலைநேரத்து நிலவுபோல் இருந்தான்" என்று குறிப்பிடுகிறார். எழும் ஞாயிறு, சாயும் நிலவு என்னும் இரு உருக்காட்சிகளும் இணைந்து வந்து முறையே ஏனாதிநாதரின் சிறப்பினையும் அதிசூரனின் இழிநிலையையும் உணர்த்து கின்றன.[22] ஞாயிறு உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாகச் சேக்கிழார் திருத்தொண்டர்களின் சிறப்பைக் காட்டுகிறார். தற்குறிப்பேற்றமாக ஒன்பது இடங்களில் வந்துள்ள ஞாயிறு உருக்காட்சி புதுமைப்பொலிவுடனும் கற்பனைத் திறனுடனும் விளங்குகின்றன. சேக்கிழார் திருத்தொண்டர்கள்பால் கொண்டுள்ள பக்தியுணர்வின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. அவரது கற்பனையின் மனைவியலை இவ் வுருக்காட்சி காட்டுகிறது. திருத்தொண்டில் சேக்கிழாருக்கு உள்ள ஈடுபாட்டைத் தற்குறிப்பேற்றமாக அமைந்துள்ள உருக்காட்சிகள் தெரிவிக்கின்றன. ஆசிரியர்தம் புலனுணர்வுச் சிறப்பைக் காட்டுவதாக ஞாயிறு உருக்காட்சி அமைந்துள்ளமை காணத்தக்கது.

## நிலவு உருக்காட்சி:

தமிழ் இலக்கியத்தில் தொன்றுதொட்டுப் புலவர்களால் நிலவு உருக்காட்சி ஆளப்பெற்று வருகிறது. சங்கநூற்கள், காவியங்கள், பிரபந்தங்கள், தற்காலக் கவிதைகள் ஆகியவற்றில் இவ்வுருக்காட்சி சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. கவிஞர்தம் கற்பனைத்திறனைக் காட்டுவதாக இது திகழ்கிறது. அவர்தம் இயற்கையியல் ஈடுபாட்டின் வெளிப்பாடாகவும் இது விளங்கு கிறது.

சேக்கிழார் நிலவின் ஒளியைக் கண்டு மகிழ்வதில் ஆர்வம் மிக்கவர் என்பதை இவ்வுருக்காட்சி ஆய்வில் காணலாம். தம்மால் மிகுதியும் மதிக்கப்பெறும் நாயன்மார்களை இவ்வுருக்காட்சியினால் போற்றுவதில் மிகுந்த விருப்பு உடைய வராக அவர் விளங்கும் பாங்கினை இவ்வாய்வில் காண முடிகிறது. நிலவை இயங்கும் உருக்காட்சியாகப் படைப்பதில் அவருக்குள்ள ஆர்வத்தை இவ்ஆய்வில் கண்டுணரலாம்.

நாயனார்தம் பிறப்பு, வளர்ச்சி, தோற்றம், பெண்களின் முகம், நெற்றி, இளமை, பிரிவாற்றாமை, இறைவர்முறுவல், சடைமுடி, திருவடி, முத்துவெண்குடை, இறைவர் திருநீற்றுப் பொட்டு, சங்குவெண்தோடு, ஏனக்கோடு, வெண்துகில், சங்குப் பூச்சிகளின் தொகுதி, ஆசிரியர் தலைமைச்சிறப்பு, மணற்பரப்பு ஆகியவை நிலவு உருக்காட்சியால் வருணிக்கப்படுகின்றன.

## சிவன் திருமுடிக்கண்ணி - நிலவு:

சிவபெருமான் சூடும் கண்ணியாகப் பல இடங்களில் இது குறிக்கப்படுகிறது.[23] புராணத்தில் கூறப்பெறும் சில நிகழ்ச்சிகளுக்கேற்ப உணர்ச்சியைக் குறிப்பாகக் காட்டுதற்கும் இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.

## கண்ணப்பநாயனார், தத்தை - பான்மதி. உவரி:

கானவர் குலத்தில் கண்ணப்பநாயனார் பிறந்தார். இவர் இயற்பெயர் திண்ணன் என்பதாகும். குறவர் தலைவன் நாகனுக்கும், தத்தைக்கும் இவர் மகனாகப் பிறந்தார். தத்தையின் நிறம் கருமை. அவள் பெற்றெடுத்த மகவு நிலவுபோல இருந்தது. தத்தையையும் அவள்பெற்ற குழந்தை திண்ணனையும் மனக்கண்ணில் காணும் ஆசிரியர் கடலில் மீது எழும் வெண்மதியை நினைக்கிறார். "உவரி பான்மதியை பெற்றாற்போலத் தத்தை திண்ணனைப் பெற்றாள்" [24] என்கிறார். திண்ணனின் பிறப்பைக் கடலுருக்காட்சியுடன் இணைந்த நிலவு உருக்காட்சியாகப் படைக்கிறார் ஆசிரியர். திண்ணன் கண்ணப்பநாயனர்ர் என்று போற்றத்தக்க உயர்நிலையை அடைந்து உலகத்திற்கு அன்பாகிய தண்ணொளியைப் பரப்பிட உள்ளார் என்ற கருத்தை முன்னதாகக் குறிக்கும் எதிர்நோக்கு உருக்காட்சியாக நிலவு உருக்காட்சி இங்கு ஆளப்பட்டுள்ளது.

## கண்ணப்பநாயனார் - கலைவளர்திங்கள்:

விற்கலை முதல் மற்றைப் படைக்கலப் பயிற்சி பெற்றுப் பதினாறாண்டு நிரம்பிய கட்டிளங்காளையாக விளங்கும் கண்ணப்பநாயனரின் வளர்ச்சியைக் கலைகளுடன் வளரும் திங்களாகக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். நிலவின் கலைகள்

வளர்வதும் தேய்வதுமாக இருக்கும். ஆனால் கண்ணப்பநாயனார் என்னும் நிலவின் கதிர்கள் வளர்ந்துகொண்டே இருக்கும் என்பதைக் "கலைவளர் திங்கள்" என்ற தொடரில் ஆசிரியர் குறிப்பாகப் புலப்படுத்துகின்றார்.[25]

## நாவரசர் - மறுவொழித்த இளம்பிறை:

நாவரசர் பிறந்து வளர்ந்தமையை நிலவு உருக் காட்சியால் சேக்கிழார் வருணிக்கிறார்.

"செழுமையான கலைகளின் வகைகள் எல்லாம் முன்னைய தொடர்பினால் எளிதில் பயின்று முதிர்ச்சியுடைய அறிவு வெளித்தோன்றும் தன்மையால் மைந்தனார் மறுவை நீக்கிய இளம்பிறையைப் போல வளர்கின்றார் ஆயினார்" என்பது சேக்கிழார் வருணனை.[26]

"மறுவொழித்த இளம்பிறைபோல் - பிறைபோல் என்று வாளாகூறின் மதிக்குள்ள கறையும் குறையும் கூட உடன் எண்ண வருமாதலின், இங்கு உவமிக்கப்படும் பிறை மறுவொழித்தபிறை என்றார், இல்பொருளுவமை. மறு என்று பொதுப்படக் கூறியதனால், வளர்ந்தபின் தேய்தலாகிய மறுவும் முயற்கறை யினுடன் கொள்ள நின்றது. வளர்ந்தார் என்னாது வளர்கின்றார் என்ற குறிப்புமது. வானத்தின் மிசையின்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை, நீளிருள் நீக்கவந்த கலைச்செழுந்திங்கள் போலும் என்பனவும் இங்கு நினைவுகூர்தற்பாலன" என்பர் சி. கே. சுப்பிரமணிய முதலியார்.[27]

"மறுவொழித்த இளம்பிறை" என்பது மருள் நீக்கியார் என்ற இளமைப் பெயருடைய நாவரசர் சமணசமயத்திலிருந்து விடுபட்டுச் சைவநெறிக்குத் திரும்பிய செயலைக் குறிப்பாகக் காட்டுகின்றது. சமணசமயத்தில் சேர்ந்தமை நாவரசர் வாழ்வில் ஏற்பட்ட கறையும் குறையுமாகும் என்பதாக அவரைப் பற்றிய புராணத்தில் கூறப்படுகிறது. அதனைத் தமக்கையார் உதவியாலும், ஆண்டவன் திருவருளாலும் ஒழித்தனர் என்ற உட்குறிப்புடையதாக "மறுவொழித்த இளம்பிறை" என்றதொடர் விளங்குகின்றது. வானத்து நிலவு கறையுடன் உள்ளது. வளர்வதும் தேய்வதும் அதன்

இயல்பு. நாவரசராகிய நிலவு கறையின்றி விளங்குவது, என்றும் வளர்வது, என்ற கருத்து நினைத்தற்குரியது.

## சம்பந்தர், நாவரசர் - இரண்டு நிலவின் கடல்கள்:

திருஞானசம்பந்தரும், அவருடன் வரும் தொண்டர்களும், திருநாவுக்கரசரும் அவருடன் வரும் தொண்டர்களும், சந்திக்கின்ற காட்சியைச் சேக்கிழார் கடல் உருக் காட்சியுடன் இணைந்த நிலவு உருக்காட்சியால் விளக்குகின்றார். [28] "இருநிலவின் கடல்கள் ஒன்றாகி இணைந்தன போல இருதிறத்துத் தொண்டர் கூட்டங்களும் இணைந்தன" என்று கூறும் ஆசிரியரின் கற்பனை, நாயனார்களும், அவர்தம் தொண்டர்களும், இணைந் திருக்கும் காட்சியின் மாண்பைப் படிப்ப மனக்கண்முன் கொணர்கிறது. நாயனார்கள் நிலவுகளாகவும், தொண்டர்கள் கடல் களாகவும் குறிக்கப்படுகின்றனர். நிலவு நாயனார்களின் புகழ், தலைமை ஆகியவற்றையும், கடல்கள் தொண்டர்களின் மிகுதிப் பாட்டையும், ஆரவாரத்தையும், மகிழ்ச்சியையும் தெரிவிக்கின்றன.

நிலவு உருக்காட்சி புதுமைப்பொலிவுடனும், பொருத்தமாகவும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலுடனும், முருகியற்சுவையுடனும் ஆளப்பெற்றுள்ளது.

## சம்பந்தர் - கலைவளர்மதி:

சம்பந்தர் "கலை வளர்மதி" என்று அழைக்கப்படுவர். 29 "புகலிவாழ் அந்தணர்கள் சம்பந்தரைப் போற்றுகின்றனர். புண்ணிய முதலாகிய அவர் புனைமணி அரைஞாணோடு கண்ணிறை கதிராகவும், கலைகள் மேன்மேலும் வளர்ந்து கொண்டேயிருக்கின்ற மதியாகவும், பண்களின் கதியாகவும் வெளிப்போந்தனர் என்கின்றனர்". " அரைஞாணோடு போதும் கலைவளர்மதி" என்று ஞானஅமுதை உண்ட நாயனாரின் இளமை நலக் காட்சியை வருணிக்கிறார். சைவப்பயிர் தழைக்கச் சம்பந்தர் திருவவதாரம் எடுத்தமையும், கலைகள் வளர்வதற்கு அவர் காரணமாய் இருந்தமையும், அவர் தண்ணளியும் இவ்வுருக் காட்சியால் விளக்கமுறுகின்றன.

சம்பந்தர் - நிறைமதிப்பிள்ளை:

"திருஞானசம்பந்தர் அரத்துறை ஈசனைத் தொழுவதற்கு விரைந்து சென்றார். மறையனைத்தும் ஒரு வடிவம் கொண்டு வந்தாற் போன்று கலைகள் அனைத்தும் நிறைந்த முழுமதி என்னும் பிள்ளை நிலவுலகத்திற்கு வந்துள்ளதுபோல் சம்பந்தர் வந்துள்ளார்" என்கிறார் சேக்கிழார். [30] இளமையாக இருக்கும் சம்பந்தருக்கு உவமையாக வரும் முழுமதியையும் பிள்ளையாகவே குறிப்பிடுகிறார். "நீள் விசும்பில் விளங்கும் மதியே ஞானசம்பந்தப் பிள்ளையாக நிலத்திற்கு வந்துள்ளது' என்கிறார்.

குழந்தை உருக்காட்சியுடன் இணைந்து, சம்பந்தரின் இளமைப்பொலிவை நிலவு உருக்காட்சி உணர்த்துகிறது.

"ஞானத்தின் திருவுரு", "நான்மறையின் தனித்துணை", " செஞ்சடையார் சீர்தொடுக்கும் கானத்தின் எழுபிறப்பு" என்று ஆசிரியரால் போற்றப்பெறும் சம்பந்தர், " மண்ணில்வளர் மதிக்கொழுந்து" என்று குறிக்கப்படுகிறார். இயற்கையில் வளர்வன என்ற பகுதியில் இடம்பெறும் " கொழுந்து" உருக்காட்சியுடன் இணைந்து நிலவு உருக்காட்சி வந்துள்ளது. வானத்தில் விளங்கும் நிலவு மண்ணில் வளர்கின்ற கொழுந்தாகக் கூறப்படுகிறது. சம்பந்தரின் இளமையைக் குறித்து முன்பு, நிறைமதிப்பிள்ளை" என்ற ஆசிரியர் ஈண்டு "வளர்மதிக்கொழுந்து" என்கின்றார்.

ஞானம் என்னும் நுண்பொருள் சம்பந்தர் திருவடிவு தாங்கி வந்துள்ளது. வேதத்தின் துணையும் கானத்தின் எழுபிறப்பும் சம்பந்தராகவே வந்துள்ளன. வானத்தில் நிகழும் ஒளிநிலவு வையத்திற்குச் சம்பந்தர் வடிவில் வளர்மதிக் கொழுந்தாக வந்துள்ளது. [31] இவ்வுருக்காட்சி ஞானசம்பந்தர்மீது சேக்கிழார் கொண்டுள்ள பக்தி உணர்வின் வெளிப்பாடாக உள்ளது.

சம்பந்தர் - கலைச்செழுந்திங்கள்:

பாண்டிநாட்டுத் தேவி மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் ஆகிய இருவர்தம் வேண்டுகோட்கிணங்க ஞானசம்பந்தர் மதுரை வந்தார். ஆசிரியர், "நீளிருள் நீங்க வந்த கலைச்செழுந்திங்கள் போலும் கவுணியர்" என்று மதுரைக்கு வந்த சம்பந்தரைப் போற்றுகின்றார். "நீளிருள்" என்பது சமண

சமயத்தினரால் பாண்டியநாட்டில் சைவசமயத்தாருக்கு உண்டான துன்பநிலையைக் குறிப்பிடுகிறது. இருள் உருக்காட்சியுடன் இணைந்த நிலவு உருக்காட்சி இங்கு ஆளப்பெற்றுள்ளது.[32]

## சம்பந்தர், மாதவர் - மதி, வெண்முகிற்குழாம்:

ஞானசம்பந்தர் வலஞ்சுழி என்னும் திருத்தலத்துக்கு வருகைபுரிந்தார். அவ்வூரில் வாழ்ந்த மாதவத்திற் சிறந்த அன்பர்கள் அவரை வரவேற்றனர். சிவிகையிலிருந்து சம்பந்தர் இறங்கி அவர்கள் எதிரே சென்று சேர்ந்தார். "மதியைக் கதிர்செய் வெண்முகிற்குழாம் புடைசூழ்ந்தெனக் கலந்தார்" என்று, இக்காட்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஆசி ர்.[33] வெண்முகிற்குழாம்போல் வலஞ்சுழி அன்பர்கள் வில ்கள். மதிபோல் சம்பந்தர் விளங்கினார். முகிலின் வெண ையொளி மதியினால் ஆயிற்று எனலாம். திருநீற்றொளி திகழும் மேனியராய் அவ்வன்பர்கள் இருந்தனர். அவர்கள் தோற்றத்தை வெண்முகிலாகக் காண்கிறார் ஆசிரியர். "கதிர்செய் வெண்முகில்" என்பதற்கு, "மின்னொளி விடும் வெள்ளி மேகக்கூட்டம்" என்று பொருள் கூறுகிறார் திரு. வி. கல்யாணசுந்தரனார். வெண்முகிலுடன் கூடிய நிலவு உருக்காட்சி ஆசிரியரால் ஆளப்பெற்றது.[34] ஆசிரியர்தம் இயற்கையியல் ஈடுபாட்டின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. மாதவம் செய்யும் அன்பர்களிடமும், சம்பந்தரிடமும், அவர் கொண்டிருக்கும் ஆர்வத்தைத் தெரிவிக்கிறது.

## அதிசூரன் - கர்ல்சாயும் காலைமதி:

ஏனாதிநாதரின் வருவாய், புகழ், வீரம், இவற்றைக் கண்டு அழுக்காறுற்ற அதிசூரன் என்னும் தற்பெருமை மிக்கவன் அவரைப் பகைக்கிறான். ஆட்களை அழைத்துக்கொண்டு வந்து அவரிடம் மோத எண்ணுகிறான். "கதிரோன் எழுவதால் தன் ஒளியை இழக்கும் காலைநேரத்து மதிபோல அதிசூரன் பகைத்து நின்றான்" என்று நவில்கிறார் ஆசிரியர்.[35] காலைப்பொழுதில் கதிரவன் எழுதுவதும், அதன் விளைவால் நிலவு தன் ஒளியை இழந்து நிற்பதும், ஏனாதிநாதரின் எழுச்சியையும், அதனால் மனமழிந்து பொறாத அதிசூரனின் இழிநிலையையும், தெள்ளிதின் உணர்த்துகின்றன. நிலவு உருக்காட்சி பொருத்தமுடன் ஆளப் பெற்றுள்ளது.

"ஒண்சுடர் ஞாயிற்றின் விளக்கத்தான் ஒளிசாம்பும்
நண்பகல் மதியம்போல் நலம்சாய்ந்த அணியாட்கு"

என நல்லந்துவனார் குறிப்பது ஈண்டு நினைத்தற் குரியது.[35அ]

## பரவையார் - மதிபூத்த விரைக்கொடி:

சுந்தரரும், பரவையாரும் சந்திக்கின்றனர். ஒருவரையொருவர் நேரில் காண்கின்றனர். பரவையாரின் எழில்மிகு தோற்றத்தைக் கண்டு வியந்து நிற்கிறார் சுந்தரர்.

"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்என் றதிசயித்தார்"[36]

என்பது சுந்தரர் மொழியாக வரும் சேக்கிழார் பாடல்.

மதியாகிய மலர் பூத்திருக்கும் மணங்கமழ்கொடிபோலத் தோன்றுகிறார் பரவையார். அவர் முகம் மதிபோன்றுள்ளது. வில், குவளை, பவளமலர் ஆகியவற்றுடன் இணைந்துள்ள மதிமுகம் மலர்ந்திருக்கும் கொடிபோன்று திகழ்கின்றார் பரவையார் என்று நினைக்கிறார் சுந்தரர். வில் என்பது புருவத்தையும், குவளை என்பது விழியையும், பவளமலர் என்பது வாயையும் குறிக்கும்.

கற்பகத்தின் பூங்கொம்பு, காமன்தன் பெருவாழ்வு ஆகிய இரதி, என்பன உயர் புலனுணர்ச்சி உருக்காட்சிகளாக (Higher Sensuous Images) உள்ளன. பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியம், அற்புதம், சிவனருள் என்பனவாகிய இயற்கை கடந்த இறையுணர்வார்ந்த நுண்பொருட்கள் பரவையாரின் வடிவில் தோன்றினவோ என்று வியப்படைகின்றார். உயர்புலனுணர்ச்சி உருக்காட்சிகளும், இறையுணர்வார்ந்த நுண்பொருட்களும், அடுத்தடுத்து வந்து பரவையாரின் அழகைச் சிறப்பிப்பது புதுமைப்பொலிவுடன் உள்ளது. கற்பகம், காமன், இரதி என்னும் உயர் உலகப்பொருள் உருக்காட்சிகள், புண்ணியத்தின் புண்ணியம், சிவனருள், அற்புதம் என்னும் கருத்துருக்காட்சிகள், வில் என்னும் படை உருக்காட்சி, சுமந்த என்ற சொல்லில் தோன்றும் பளு உருக்காட்சி, பவளமலர், மதிபூத்த என்பனவற்றில் எழும் மலர்

உருக்காட்சி, விரை என்னும் முகர்வுப்புல உருக்காட்சி புயல் என்னும் மேக உருக்காட்சி ஆகிய அனைத்தும் அடுத்தடுத்து வந்து பரவையாரின் இளமைநலத் தோற்றத்தைப் படிப்பவர் மனத்துள் எழச்செய்கின்றன. இவ்வுருக்காட்சிகளுடன் நிலவு உருக்காட்சி இணைந்து விளங்குகிறது. சேக்கிழார்தம் கற்பனைத் திறனையும் பல்துறை அறிவையும் இவ்வுருக்காட்சிகளால் அறியலாம். காமஉணர்வைக் குறிக்கும் இப்பகுதியைக் கடவுள் உணர்வுடன் கூடிய ஒன்றாகச் சேக்கிழார் படைப்பதற்கு உயர் உலகப்பொருள் உருக்காட்சிகளும், கருத்துருக்காட்சிகளும் துணைபுரிகின்றன. பக்தி உணர்வை நோக்கியதாக உருக்காட்சிகளை அமைக்கும் தனித்திறன் உடையவராகச் சேக்கிழார் விளங்குவதை இங்குக் காணலாம்.

## கருவூர் மகளிர்முகம் - சிலமதி தெருவில் சூழல்:

எறிபத்திநாயனார் என்பார் வாழ்ந்த கருவூர் நகர் பற்றிச் சேக்கிழார், "தேவர்கள் தாம் மகிழ்ந்து சூழும் இந்திரப்பட்டணமும் தாழும்படியாக அந்நகரிலே பெரிய மதில்கள் மேகங்களால் சூழப்பெற்றிருக்கும். மாளிகைகளின் வரிசைகள் ஆகாயத்தில் ஓங்கி விளங்கும். தூயமணிகள் வாயில்களிலே சூழ்ந்துள்ளன. சோலைகளில் மலர்களின் வாசம் மிகுந்திருக்கும். கூந்தலில் தேன் பொருந்திய மலர்களைச் சூழ அணிந்த மதிபோன்ற முகத்தினை உடைய சில பெண்கள் தெருவிலே சூழ்வர்" என்கிறார்.[37] கருவூர் நகரின்கண் வாழும் மகளிர்தம் முகப்பொலிவு நிலவு உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகிறது. வைகறையில் புனல் மூழ்கி, வாயைத்துணியால் கட்டிக்கொண்டு, பூஞ்சோலைக்குள் நுழைந்து, கையினால் தெரிந்து, நல்ல கமழ்முகை அலரும் பொழுதில் கருவூர் ஆனிலை இறைவருக்குரிய திருப்பள்ளித்தாமத்தைக் கொய்து, தம்முடைய கோலப்பூங்குடையில் நிறைத்துக்கொண்டு, நெஞ்சினில் வாலிய நேசம்கொண்டு, மலர்க்கையில் தண்டுங்கொண்டு, ஆலயத்துக்குச் செல்வது சிவகாமியார் திருத்தொண்டு.

மங்கலவிழா மானவமியின் முதல்நாளில், பட்டவர்த்தனமாம் பண்பு பெற்ற வெங்களிறு நதித்துறையில் நீராடி களிப்புடன் திரும்புகிறது. பரிக்காரர் உடன் வருகின்றனர். சிவகாமியார் முன்னே சென்று கொண்டிருக்கின்றார். அவர் தோளில் ஒரு வலிய தண்டில் பூக்கூடை தொங்குகிறது. யானை அவரைப் பின்தொடர்ந்து, தேடிச்சென்று, அக்கூடையைப்

பிடித்துடன்பறித்துச் சிந்துகிறது. வண்ணமலர்கள் சிதறிக்கிடக்கின்றன. "சில மதி தெருவில் சூழும்" என்ற தொடர் இந்நிகழ்ச்சியைக் குறிக்கும் எதிர்நோக்கு உருக்காட்சியாக உள்ளது எனலாம்.

## பூம்பாவைமுகம் - வதனத்திங்கள்:

திருமயிலைப்பதியில் வாழ்ந்த பெருவணிகரான சிவநேசர்தம் செல்வி பூம்பாவையின் எழிலை, ஆசிரியர்," அவள் மண்ணிய மணிபோன்ற மேனி உடையவளாய் விளங்குகிறாள். அவளது கண்கள் இரண்டும் வதனமாகிய திங்களின் தண்ணளி விரிந்த சோதி வெள்ளத்தில் கயல்களைப் போல உலாவுகின்றன" 38 என்று வருணிக்கிறார்.

பூம்பாவையின் எழிலை விளக்கும் வகையில் மணியுருக்காட்சி (Gem Image) வெள்ளவுருக்காட்சி ( Flood Image) மீனுருக்காட்சி (Fish Image) ஆகியவற்றுடன் இணைந்த நிலவு உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.

பூம்பாவையின் முகப்பொலிவு, மேனியெழில் இவ்வுருக்காட்சிகளால் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன.

"திங்கள் போன்று விளங்கும் வதனம்" (முகம்) என்னாது, "வதனத்திங்கள்" என்று உருவகமாகக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். பூம்பாவையின் வதனத்தின் ஒளி திங்களின் ஒளிவெள்ளமாகக் கூறப்படுகிறது. வதனம் தண்மை ஒளி உடையது. "தண்ணளி விரிந்த சோதிவெள்ளம்" என்ற தொடர் திங்களின் திறன் கூறுகிறது. வெள்ள உருக்காட்சியுடனும், மீன் உருக்காட்சியுடனும், தண்மை உருக்காட்சியுடனும் (Cold Image) இணைந்து நின்று நிலவு உருக்காட்சி பூம்பாவையின் முகப்பொலிவைச் சிறப்பிக்கிறது. "சோதிவெள்ளம்" என்பது உருவகமாக உள்ளது, ஒளி உருக்காட்சியும் இதனுடன் இணைந்துள்ளது. முருகியற்கவையுடன் நிலவு உருக்காட்சி விளங்குகிறது.

## மகளிர்முகம் - துவள்பதாகை நுழைந்தனைய தூமதி:

"தவளம்போன்று வெண்ணிறம்கொண்டு விளங்கும் மாளிகைகளின் இறப்புக்களில் கட்டப்பெற்ற கொடிகள்

அசைகின்றன. தூய்மையான நிலவு அக்கொடிகளின் உள்ளே நுழைந்து தோன்றுகிறது. இக்காட்சி பவளவாய்ப் பெண்களின் முகத்தைக் கண்ட நிலவு அச்சமுற்று மறைவிடங்களைச் சேர்ந்து ஒளிவதைப் போன்றுள்ளது. [39]

தற்குறிப்பேற்றம் என்ற வகையில் இவ்வருணனை வந்துள்ளது. இதில் உள்ள நிலவு உருக்காட்சி மகளிர் முகப்பொலிவை விளக்க வந்தது. முருகியல் உணர்வை ஊட்டுகிறது இந்நிலவு உருக்காட்சி.

## இறைவர் சடைமுடி - தண்மதி முதிர்ந்து கதிர்சாய்வது:

பூவுலகில் தம்மைத் தடுத்தாட்கொள்ள வேண்டும் என்று இறைவரிடத்துக், கயிலையில், ஆலாலசுந்தரராயிருந்து அணுக்கத்தொண்டு புரிந்துவந்த சுந்தரர் வேண்டிக்கொண்டார். அதற்கிணங்க இறைவர் கிழவேதியர் வடிவில் திருநாவலூருக்கு வருகின்றார். அவருடைய முதுமை வடிவத்தைச் சொல்லோ வியமாகத் தருகிறார் சேக்கிழார். "குளிர்ச்சி பொருந்திய பிறைச்சந்திரன் பூரணச்சந்திரனாகி வெண்ணிலவு பொழிவது போன்ற வெண்ணரையை மேலே முடித்தது சழங்க அல்லது சம்பளிப்ப இறைவர் வருகிறார்" என்று கூறப்படுகிறது. ஈண்டுத் தண்மதி என்பது அரும்பிப் பூத்துக் காய்த்துக் கனிந்து பின் சாய்வதாகக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். [40]

இறைவரின் திருமுடியில் இலங்கும் நிலவு ஓர் கலையாய் இருந்தது. சுந்தரரிடம் வரும்பொழுது நிரம்பக் கலைகளைக் கொண்டு சடையை விடாது அதனுடன் இரண்டறக் கலந்து ஒளிவிட்டது. சடைமுடியில் ஓர் அணியாக இருந்த இளம்பிறை கலைகளையெல்லம் நிரம்பக்கொண்டு இறைவரின் சடையாகவே மாறிவிட்டது. வெண்ணரை பொலியும் சடைமுடி இப்படி ஆசிரியரால் திறம்படக் கூறப்படுகிறது. முருகியல் உணர்ச்சி தரும் வகையில் இவ்வுருக்காட்சி திகழ்கிறது.

இறைவரின் முதுமை வடிவத்தைப் படம்பிடித்துக் காட்டும் வகையில் நிலவு உருக்காட்சி புதுமைப்பொலிவுடன் ஆளப்பட்டுள்ளது.

## சம்பந்தரின் முத்துக்குடை - நிலவு:

இறைவரால் சம்பந்தருக்கு முத்தினால் அமைந்த குடை அளிக்கப்பெற்றது. அதனைச் சேக்கிழார். "திங்கள் நீர்மைச் செழுந்திரள் முத்தினால் துங்கவெண்குடை" என்று குறிப்பிடு கிறார்.[41] அவ்வெண்குடை வெண்மதிபோல் குளிரொளி" பரப்புவ தாகவும் குறிப்பிடுகிறார்.[42] பிறிதோரிடத்து, "முத்துச் சிவிகை மீது பிடிக்கப்பெறும் நித்தில வெண்குடை நிறைமதிபோல் நிழல்ஒளி செய்கிறது" என்று இயம்புகிறார். [43] சம்பந்தர் மதுரைக்கு எழுந்தருள்கிறார். இக்காட்சியை ஆசிரியர்,

"திருநிலவு மணிமுத்தின் சிவிகையின்மேற் சேவித்து
வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்றப்
பெருகொளிய திருநீற்றுத் தொண்டர்குழாம் பெருகிவர
அருள்பெருக வருஞானத் தமுதுண்டார் அணைகின்றார்"

என வருணிக்கின்றார். [44]

நிலவு உருக்காட்சி இயங்கு உருக்காட்சியாக (Dynamic Image) அமைந்துள்ளது. "தொலைவில் சம்பந்தர் முத்துச்சிவிகையில் அமர்ந்துகொண்டு, அதன்மேல் முத்துக்குடை நிழற்ற வருகின்ற காட்சி நிலவின் எழுச்சிபோல் தோன்றுகிறது. "நிலவின் ஒளியால் கடல்நீர் வெண்மைநிறம் பெறுவது இயல்பு, ஈண்டுகின்ற தொண்டர் குழாம் திருநீற்றுப் பொலிவுடன் விளங்குகிறது. சம்பந்தரின் எழுச்சியால் தொண்டர்கள் பெருகி எழுகின்றனர். சேக்கிழார் தம் காலத்துக்கு முன்பு மதுரையில் நடைபெற்ற சைவசமய வரலாற்றின்கண் சிறப்புப்பெற்ற இந்நிகழ்ச்சியை மனக்கண்ணில் கண்டு இவ்வாறு எழுதுகின்றார். சம்பந்தர்தும் திருத்தொண்டைப் பரவுவதில் அவருக்குள்ள ஆர்வத்தின் வெளியீடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

சம்பந்தரை நிலத்து நிலவாகவும், அவரைத் தாங்கிவரும் சிவிகையை ஒரு நிலவாகவும், அந்தச் சிவிகையின்மேல் நிழற்றும் வெண்கவிகையை ஒரு நிலவாகவும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இம்மூன்று நிலவும் ஒன்றாய் வந்ததால் தொண்டர்கள் கூட்டம் என்னும் கடல் பொங்கி வழிகிறது எனத் தெரிவிக்கிறார். திருநீற்றுத் தொண்டர்களின் தோற்றத்தை நிலவொளிபட்டுத் திகழும் கடல் அலைகளாகக் காண்கிறார் ஆசிரியர். புதுமைப்பொலிவும்,

ஆழமும், கிளர்ச்சியூட்டும் திறனும், முருகியற்சுவையும், உடையதாக நிலவு உருக்காட்சி விளங்குகிறது. திருநீற்றின் வெண்மையில், நிலவின் வெண்மை ஒளியில், நெஞ்சம் நெகிழும் தன்மை உடையவர் சேக்கிழார் என்பதை இவ்வுருக்காட்சியினால் அறியலாம். சம்பந்தரிடம் சேக்கிழார் கொண்டுள்ள பக்திஉணர்வை நிலவு உருக்காட்சி தெரிவிக்கிறது. தண்ணொளி பரப்பி உயிர்களைக் காத்திடும் நிலவுபோன்று சைவப்பயிர் தழைக்க வந்தவர் சம்பந்தர் என்ற செய்தியை எண்ணிப் போற்றி மகிழ்கின்றனர் ஆசிரியர் என்பது சம்பந்தரைக் குறித்துவரும் நிலவு உருக்காட்சியால் கண்டுணரப்பட்டது.

## சம்பந்தர் வெண்குடை - கடலின் மீதெழுந்து நிற்கும் கதிர்நிறை மதியம்:

திருஞானசம்பந்தர் மணப்பந்தருக்கு வருகின்ற காட்சியை ஆசிரியர் கடலுருக்காட்சியுடன் இணைந்த நிலவு உருக்காட்சியால் அழகுறக் கூறுகிறார்.[45] "பரவிய பெருங் குஞ்சங்களும், பிச்சங்களும், பசிய நிறமுடைய மயிற்பீலியால் அமைந்த கூட்டங்களும் நெருங்க, அலங்கரித்த சிவந்த பொன்தகட்டாலியன்ற வட்ட அமைப்புகளையுடைய அழகிய துணிகளாலமைந்த மேற்கட்டிகளும் நெருங்க, கடலின்மேல் வந்தெழுந்து நிற்கும் கலைகள் நிறைந்த சந்திரன் போல முத்து வட்டங்களின் வரிசைகளால் அலங்கரிக்கப்பட்ட முத்துக்குடை மேலே நிழல்செய்ய, பிள்ளையார் எழுந்தருளி வந்தார்" என்பது சேக்கிழார் வருணனை.[46] தொங்கல், பீலி, சதுக்கம் என்பனவற்றின் நெருங்கிய பரப்பைக் கடலாகவும், முத்துவெண்குடையை அவற்றிற்கெல்லாம் மேலெழுந்து தோன்றும் முழுமதியாகவும், ஆசிரியர் காண்கிறார். மாலைப்பொழுதில் கடலின்மேல் எழும் நிலவின் காட்சியைக்கண்டு சுவைத்திருக்கிறார் ஆசிரியர் எனலாம். உலக இருட்கடலிலிருந்து விடுபட்டு நிற்கும் நிலையினர் சம்பந்தர் என்பதைக் காட்டுவதுபோல் உள்ளது இக்காட்சி. கடலின் மேல் எழுகின்ற கதிர்நிறை மதியம் தண்ணொளியைப் பரப்புகிறது. கடலின் பிடியுள் அது நிற்பதில்லை. மேலெழுந்தே நிற்கிறது. கடலின் இருளை நீக்கவே முற்படுகிறது. உலக மக்களின் மனஇருளை நீக்கவந்த கவின்நிலவு சம்பந்தர். அவருக்கு மணம்

செய்விக்க முயல்கின்றனர் அன்பர்கள். ஆனால் அவர் இவ்வுலகில் இல்லறவாழ்வு நடத்த வந்தவரல்லர். பிறப்பற்ற பெருவாழ்வினை மக்கட்கு உணர்த்தவந்தவர். எனவே உலகப்பற்றுக்களில் இருந்து மேலெழுந்து நிற்கும் பான்மையுடையவர். வெண்குடை நிலவுபோல் தோன்றி இக்கருத்தினைக் குறிப்பதாகக் காட்டுகிறார் ஆசிரியர். வெறும் வருணனைப் பாங்கில் இப்பாடல் அமைந்திடவில்லை. "கவிஞன் தான் கண்டு உணர்ந்தவற்றைக் கூறுகிறான். அக்காட்சியுள் பொதிந்த உண்மையை வெளிப்படையாகக் கூறுவதை முக்கியமானதாக அவன் நினைப்பதில்லை. நாம் விரும்பும் முடிவுகளை அவன் கவிதையிலிருந்து பெறலாம். இம்முடிவுகள் அவனால் கூறப்படுவதில்லை" என்று சி. எம். பௌரா குறிப்பது ஈண்டு நினைக்கத்தக்கது. [47] நிலவு உருக்காட்சி செறிவும், ஆழமும் நிறைந்து விளங்குகிறது.

## சம்பந்தர் - பாற்கடல் வளர்மதி:

திருநீற்றொளியுடன் விளங்கும் சம்பந்தர் அரத்துறை ஈசன் தமக்களித்த முத்துச்சிவிகையின் மீது அமர்ந்து வந்தார். இக்காட்சி "பாற்கடலில் வளர்மதி உதித்ததுபோல் விளங்கியது" என்கிறார் சேக்கிழார். [48]

பாண்டியநாடும் அரசனும் சமணசமயம் புக்குச் சமயநெறியில் முறைபிறழ்ந்திருக்கும் பொழுது, சைவநெறியிலிருந்து சற்றும் பிறழாது இருந்த பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும். அமைச்சர் குலச்சிறையாரும், மதுரைக்கு வருகைபுரிந்த ஞானசம்பந்தரைக் கண்களிப்பக்கண்டு வரவேற்ற செய்தியைச் சேக்கிழார்,

"ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையின்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்"

என்று வருணிக்கிறார். [40] "மதிக்கொழுந்து" என்ற தொடரின்கண் நிலவு உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாகச் சம்பந்தரின் திருமேனியின் ஒளியும், மழவிளங்குழவிப் பருவத்தின் பொலிவும் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன.

"வையமகள் தனது மெய்யொளியின் நிழலைக், காணும் கண்ணாடியென்று கருதி வெண் மதியை நீண்ட தன் கரங்களாகிய மரநிரையால் அணைத்துக் கொள்வதாகக்" காண்கிறார் ஆசிரியர். 50 முருகியல் உணர்வினை ஊட்டும் உருக்காட்சியாக நிலவு உருக்காட்சி வந்துள்ளது.

## திருநீற்றுத்தனிப்பொட்டு - அந்தி இளம்பிறை:

"சிறுத்தொண்டரிடம் பைரவர் வடிவில் வந்த சிவபெருமானின் நெற்றியில் திகழும் திருநீற்றுப்பொட்டு, அவருடைய சடைமுடியில் செருகப்பெறும் பிறைமதியைப் பெருகிடும் சிறுமதியாக்கி இட்டதுபோல் தோன்றுகிறது. இறைவரது நெற்றியின் ஒளி விரிசுடர்ச் செம்பவள ஒளியாகத் திகழ்கிறது" 51 என்று வருணிக்கப்படுகிறது. சேக்கிழார் இந்நிலவு உருக்காட்சியில் முரணணியை (Antithesis) ஆள்கிறார்.

## சிகழியில் நுழையும் வெண் துகில் - முகில் நுழை மதியம்:

தடுத்தாட்கொண்ட புராணத்தில், சுந்தரருக்குத் திருமணக்கோலம் செய்யப்பெறும் நிகழ்ச்சி பற்றி ஆசிரியர் விவரிக்கிறார். அகில் விரைத்தூப மேய்ந்த அணிகொள் பாட்டாடையைச் சாத்தினர். கைவலான் ஒருவன் தன் முன்கையில் துகிலைச் சுற்றிக்கொண்டு சுந்தரரின் முடியில் இருந்த ஈரத்தைப் புலர்த்துவதற்காகத் தூயசெங்கை உகிர் நுதியை முறையில் போக்கி அவருடைய ஒளிர்நறுஞ் சிகழியை ஆர்த்தான்". 52 இக்காட்சியை மனக்கண்ணால் காணும்ஆசிரியர் முகிலினுள் நுழைகின்ற மதியை நினைக்கிறார். கைவலானின் கரத்திலுள்ள வெண்பட்டு வெண்ணிலவாகத் தோன்றுகிறது. சுந்தரரின் தலைமுடி முகிலாகத் தோன்றுகிறது.

சுந்தரரின் திருமுடியின் செறிவும், அழகும் ஆசிரியரால் இவ்வுருக் காட்சி மூலம் தெரிவிக்கப் படுகின்றன. ஓர் இயங்கு உருக் காட்சியாக (Dynamic image) நிலவு உருக்காட்சி விளங்குகிறது. முகிலினுள் மறைந்து செல்லும் மதியின் காட்சியில் மனத்தைச் செலுத்தியவர் சேக்கிழார் எனலாம். சுந்தரரின் திருமுடியின் கருமை

நிறம் படிப்பவர் கண்முன் தோற்றுவிக்கப் பெறுகிறது. முகில், மதி, துகில், திருமுடி என்பன முரணியல் சுவையூட்டுகின்றன. சுந்தரரின் கரிய திருமுடியில் நிலவுபோல் வெண்பட்டு உள்நுழைந்து வெளிவருகிறது. மணப்பந்தருக்குள் இறைவர் நுழையவிருக்கிறார் என்ற குறிப்பும் உடையதாக நிலவு உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது. வெண்பட்டினால் தலைமுடியில் இருக்கும் ஈரத்தைப் புலர்த்தும் செயல் ஓர் உட்பொருள் கொண்டது. இறைவர் ஆணையால் கயிலையிலிருந்து நிலவுலகிற்கு வந்தவர் சுந்தரர். தாம் பூவுலகின் இன்பத்தால் ஈர்க்கப்படும்பொழுது தம்மைத் தடுத்தாட்கொள்ளவேண்டும் என்று இறைவரை வேண்டிக் கொண்டார் சுந்தரர். அவ்வேண்டுகோளை நிறைவேற்றும் நோக்குடன் இறைவர் முதிய வேதியர் வடிவில், சுந்தரர் புத்தூர்ச் சடங்கவி மறையோன் மகளை மணக்க இருக்கும்பொழுது, திருநாவலூரில் நடைபெறும் திருமண விழாவிற்கு வருகிறார். சுந்தரர் தமக்கு அடிமை என்று வழக்காடி வெல்கிறார். சுந்தரர் தடுத்தாட்கொள்ளப்படுகிறார். அவர் மதிநிலை கெடாமல் இறைவரால் காக்கப்படுகிறார். நிலவுலகின் மீது அவர்கொண்டிருந்த ஆசையை நீக்குதற்கு இறைவர் அவரைத் தடுத்தாட்கொண்டார். இச்செய்தியை உட்குறிப்பாகக் கொண்டது "முகிலுள் மதி நுழைவது" என்ற உருக்காட்சி. ஈரம்புலர்த்துதல் என்பது மண்ணாசையை நீக்குதல் என்ற பொருளைக் குறிக்கும். இவ்வகையில் அழமுடைய ஒன்றாக நிலவு உருக்காட்சி திகழ்கிறது.

உலகியல் மயக்கில் இருக்கும் சுந்தரரைக் குறிப்பதாக முகிலும் இறைவர்தம் தடுத்தாட்கொள்ளும் கருணைத்திறனைக் குறிப்பதாக மதியும் வருகின்றன.

## தாமரை மலர்களின் நடுவிலிருக்கும் சங்குப்பூச்சிகள்

### தோற்றம் - ஊர்கோள்வளைத்த மாமதி:

"தளைத்தடம்பணைகள் எங்கும் பசுமையான பயிர்கள் வளர்ந்துள்ளன. அவற்றிற்கிடையே செந்தாமரை மலர்கள் தவிசுபோல் எழுந்துள்ளன. அவற்றின் நடுவே சூல்கொண்ட சங்குப்பூச்சிகள் உறங்குகின்றன. பசிய பயிர்கள் வானம் போலவும், செந்தாமரை மலர்கள் மதியைச் சூழ்ந்திருக்கும் பரிவேடம்

போலவும், அவற்றிடையில் உள்ள சங்குப்பூச்சிகள் முழுமதி போலவும், தோன்றுவதாகக்" குறிப்பிடுகிறார் சேக்கிழார். திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தில் மருதநிலவைப்பு இவ்வாறு வருணிக்கப்படுகிறது.[53]

ஊர்கோளுடன் விளங்கும் மதியினைக்கண்டு சுவைத்தவர் சேக்கிழார் என அறியமுடிகிறது. நிலத்தில் வாழும் சங்குப்பூச்சியை வானில் தோன்றும் நிலவாகக் காணும் கவியுள்ளத்தை இங்குக் காணமுடிகிறது. ஊர்கோளின் நிறம் செம்மை. சங்குப்பூச்சியின் நிறம் வெண்மை. சிவப்பு, வெண்மை இணைந்துள்ள காட்சியைக் காண்கிறார் ஆசிரியர். மேலும் பயிர்களின் பசுமைநிறமும் இங்குச் சுட்டப்படுகிறது. பசுமை, செம்மை, வெண்மை ஆகிய மூன்று நிறங்களின் இணைப்பு இங்குக் குறிக்கப்படுகிறது. முரணணி பொலிவுற்று விளங்குகிறது. சேக்கிழாரின் இயற்கையியல் ஈடுபாட்டின் வெளிப்பாடாக நிலவு உருக்காட்சி இங்கு விளங்குகிறது.

## பரவையார் இளமை - திங்கட்கதிரிளங்கொழுந்து:

"திங்கட்கதிரிளங்கொழுந்து" என்று திருவாரூரின்கண் பதியிலார் குலத்துள் தோன்றிய பரவையாரின் இளமைப்பருவத்தை வருணிக்கிறார் ஆசிரியர். இவ்வுருக்காட்சியுடன் பல்வேறு உருக்காட்சிகளை இணைத்து ஆள்கிறார். விலங்கு (மான்), மலர் (முகை), தேன், பவளம், கொடி, திங்கள், கொழுந்து, காமன்வில் ஆகிய உருக்காட்சிகள் அடுத்தடுத்துக் குறிக்கப்படுகின்றன. சேக்கிழாரால் குறிக்கப்பெறும் இவையனைத்தும் இடத்தால் இயல்பால் வேறுபாடு உடையவை எனினும், பரவையாரின் இளமையின் சிறப்பை விளக்கும் வகையில் ஒருமையுற்று விளங்குகின்றன. வேறுபாடுகட்கிடையே ஒருமைப்பாட்டைக் காணும் கவிஞர் திறத்தை இங்குக் காணலாம், இவை அடுத்தடுத்து வந்து பரவையார் என்ற பெண்ணடியாரின் இளமைத்தோற்றத்தின் பொலிவைப் படிப்பவர் நெஞ்சத்தில் பதியுமாறு செய்கின்றன. 'இளம்' என்ற சொல் இவ்வுருக்காட்சி அடுக்கில் தொடர்ந்து இடம்பெற்றுப் பரவையாரின் இளமையையும் மென்மையையும் உணர்த்துகிறது.

"திங்கட்கதிரிளங்கொழுந்து" என்ற தொடரிலுள்ள நிலவு உருக்காட்சி புதுமைநயத்துடன் விளங்குகிறது.[54]

## சிவந்தமதி:

"கடலில் கதிரவன் மறைந்தபின்பு இரவில் வெண்மதியம் தோன்றுகிறது. ஆனால் அது சோலைதோறும் நுழைந்து புறப்படும்பொழுது நெருங்கிய மலர்களிலே அணைந்தமையால், மதுவினால் தோயப்பெற்று, மகரந்தத்தூளில் அணைந்து, பயின்று, அந்திமாலையில் எழுகின்ற சிவந்த மதிபோல விளங்குகிறது" என்று குறிக்கப்படுகிறது.[55] சேக்கிழார்தம் கற்பனைத் திறனைக் காட்டுகிறது இவ்வுருக்காட்சி.

## மாணவர், ஆசிரியர், விண்மீன், நிலவு

திருச்சேய்ஞலூரில் அவதரித்த சண்டேசுரநாயனாரின் வரலாற்றைக் கூறும் ஆசிரியர், வேதங்கள் ஓதும் பயிற்சியைத் தரும் திருமடங்கள் அவ்வூரில் இருந்தமையைக் குறிப்பிடுகின்றார். "அம்மடங்களில் தாரகைக் கூட்டமும், நிறைமதியும் இணைந்து விளங்குவதுபோல் மாணவரும் ஆசிரியரும் விளங்கினர்" என்று சேக்கிழார் இயம்புகின்றார். அறிவொளி மிக்க சூழல் அம்மடங்களில் இருந்தமையைத் தாரகையுடன் இணைந்து வந்துள்ள நிலவு உருக்காட்சி சிறப்பிக்கிறது.[56]

## மணற்பரப்பு - செழுநிலவின் துகள்:

கலியநாயனார் புராணத்தில் திருவொற்றியூர் நகரத்துக் கடற்கரையிலுள்ள மணற்பரப்பைச் சேக்கிழார் வருணிக்கிறார். மாதவி, புன்னை, ஞாழல், சண்பகம், செருந்தி, கைதை ஆகிய மலர்களின் மணமே கடல்நீரின் மணமாகக் கமழ்கிறது. கடற்கரை மணற்பரப்பு செழுமையான ஒளியுடைய நிலவின் துகள்களைப் போன்று வெண்ணிறத்துடன் விளங்குகிறது. அத்தகைய மணற்பரப்பில் மலர்கள் முருகுயிர்க்கின்றன. காட்சிக்கினிய திருப்பரப்பாக மணற்பரப்பு விளங்குகிறது.

"செழுநிலவின் துகள்" என்பது பொருத்தமான உருக்காட்சியாக அமைந்து கடற்கரை மணற்பரப்பின் வெண்மை

நிறத்தைச் சிறப்பிக்கிறது. சேக்கிழாரின் இயற்கையியல் ஈடுபாடும், கற்பனைத்திறனும், இவ்வுருக்காட்சியால் அறியப்படுகின்றன.[57]

இப்பகுதியில், நிலவு உருக்காட்சிகளைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் ஆளும் திறன் கூறப்பட்டுள்ளது. நிலவின் பல்வேறு நிலைகளைக் கண்டுணர்ந்து அவற்றை உருக் காட்சிகளாகப் படைத்துப் பாடுபொருளை ஆசிரியர் விளக்குவது காணப்பட்டது. "பொருள்களின் அழகு, வண்ணம், வடிவம், சிறப்பு ஆகியவற்றைவிட அவற்றின் உயிரியக்கம் அவரைப் பெரிதும் கவர்கிறது. அவருக்கு உணர்ச்சியைத் தருகிறது. அவரை மிகுதியும் ஈர்க்கிறது" என்று கரோலின் ஸ்பர்ஜன் சேக்ஸ்பியரைப் பற்றிக் குறிப்பது,[58] சேக்கிழாருக்கும் பொருந்தும் என்பதை அவர் ஆளும் நிலவு உருக்காட்சியின் வாயிலாகக் காணலாம்.

தொன்றுதொட்டுத் தமிழ்க்கவிஞர்களால் ஆளப்பெறும் நிலவு உருக்காட்சியைக் கொண்டு சேக்கிழார் அடியார்களின் பிறப்பு, வளர்ச்சி, இயக்கம், அறிவு, இளமை ஆகியவற்றைச் சிறப்பிக்கின்றார். அவரது கற்பனைத்திறத்தை இவ்வுருக்காட்சியில் கண்டுணரலாம். இயற்கையியல் அறிவுமிக்கவர் ஆசிரியர் என்பதை அறியலாம். கடற்கரை வெண்மணல் பரப்பு, அரசர் வெண்கொற்றக்குடை, முத்துச்சிவிகை, முத்துக்குடை, திருநீற்றுப்பொட்டு, முகம்பார்க்கும் ஆடி, வெண்முகில், ஏனக்கோடு, சங்குப்பூச்சிகள் ஆகியவற்றின் வெண்மை நிறத்தைக் காணும்பொழுது ஆசிரியர் நினைவில், நிலவின் ஒளி தோன்றுகிறது எனலாம். பெருமைசான்ற சம்பந்தர், நாவரசர், கண்ணப்பநாயனார் போன்ற அடியாரை இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கும் சேக்கிழார், சிறிய உயிரான சங்குப்பூச்சியையும், ஏனக்கோடு, வெண் துகில், போன்ற பொருட்களையும், சிறப்பிக்கின்ற திறன் காணத்தக்கது.

பத்தியுணர்வுடன் விந்தையாக இணைக்கப்பெற்ற ஓர் உளநிகழ்வாக நிலவு உருக்காட்சி அமைந்துள்ளது. கிளர்ச்சியூட்டும் ஆற்றல் உடையதாக அது விளங்குகிறது. உணர்வின் எச்சமாகவும், வெளியீடாகவும், அமைந்து பயன் விளைக்கிறது. பத்தியுணர்வுடன் இணைந்த கற்பனை சேக்கிழார்தம் நிலவு உருக்காட்சியினது சாரத்தின் ஒருங்கிணைந்த முழுமைபெற்ற கருத்தாக உள்ளது என்பது கண்டுணரப்பட்டது.

### விண்மீன் உருக்காட்சி:

### பம்பை, தும்பை மலர்கள் - மஞ்சு, விண்மீன் கூட்டம்:

சிவபெருமான் பயிரவர் கோலத்துடன் வந்தமையைச் சேக்கிழார் சிறுத்தொண்டர் புராணத்தில் வருணிக்கின்றார். "அஞ்சனமஞ்சனம் செய்ததனைய அணியினர் பம்பையாகிய மஞ்சின் இடையிடையே தனித்தனியாக வைக்கப்பெற்ற தும்பை மலர்கள் வானமீன் பரப்பினைப்போல் தோன்றுகின்றன" என்கிறார். தும்பை மலர்களின் ஒளியும், வெண்மை நிறமும், விண்மீன் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன. இறைவரின் முடி, அஞ்சனத்தில் முழுக்காட்டப்பட்டதுபோல் மிகுந்த கருமைநிறத்துடன் விளங்குகிறது என்கிறார் ஆசிரியர். இறைவரின் இக்கரிய முடி வானமாகவும், அதில் சூட்டப்பட்டுள்ள தும்பை மலர்கள் விண்மீன்களாகவும் தோற்றமளிக்கின்றன. பொருத்தமும் நயமும் சான்ற உருக்காட்சியாக இது விளங்கிறது. [59]

இறைநலக்காட்சியில் இயற்கையியல் காட்சியைக் சேக்கிழார் காண்பது அவர்தம் கற்பனையின் உளவியற் பாங்கிற்குச் சான்றாகவுள்ளது. ஆசிரியர்தம் பக்தி உணர்வின் சிறப்பை இவ்வுருக்காட்சி வெளிப்படுத்துகிறது.

### மகளிர் கற்பு - வடமீன்:

கதிர்செய் வடமீன் போல் திண்ணிய கற்புடைய மகளிர் சீகாழித்தலத்தில் இருந்தனர் என்று குறிக்கப்படுகிறது. வடமீன் என்பது தன் இருப்பில் இருந்து என்றும் மாறாத தன்மையுடைது. அருந்ததி என்றும் இவ்விண்மீன் குறிக்கப்படும். [60]

### மறைச்சிறுவர்கள் - விண்மீன்:-

சண்டேசுரர் புராணத்துள் மறைபயிலும் சிறுவர்கள் விண்மீன் என்று குறிக்கப்படுகின்றனர். [61]

### வானிலை - மேகம்:

மேக உருக்காட்சி தொன்றுதொட்டு இலக்கியங்களில் இடம் பெற்று வருகிறது. மகளிர்தம் கூந்தலும், வள்ளல்களின்

கொடைப்பண்பும், இதனால் பெரும்பாலும் சிறப்பிக்கப்பெறும். பெரியபுராணத்தில் இவ்வுருக்காட்சி அடியாரையும், அடியார் மேனியையும், இறைவர் சடைமுடியையும், சமணரையும், அழுக்கு ஆடையையும், கொடைப்பண்பையும் சிறப்பிக்கிறது. விலங்கு, பறவை ஆகியவற்றையும் ஓமதூபப்புகை, ஓசை, குதிரைசேணம், கேடயம் ஆகியவற்றையும் இவ்வுருக்காட்சி விளக்குகிறது.

## திண்ணனார் - கார்மேகம்:

வேடர்பதி நாகன் தன் மகன் திண்ணனாரைத் தோள்களார எடுத்துக்கொண்ட நிகழ்ச்சியை, "கரியமலை கார்மேகத்தை ஏந்திக்கொண்டிருப்பது போல் உள்ளது" என்று சேக்கிழார் வருணிக்கிறார். [61] திண்ணனார் மேனிநலம் கார்மேக உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகிறது.

வேட்டைக்குப் புறப்பட்டுச்சென்ற திண்ணனாரை, "கார்மழை மேகம் என்ன ... எழுந்து போந்தார்" என்கிறார் சேக்கிழார். [62]

திருக்காளத்தியப்பர் அருகில் இருந்துகொண்டு காத்தலாகிய பணியைச் செய்த திண்ணனாரை, "கருமுகிலென்ன நின்ற கண்படா வில்லியார்" என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். [63] இவ்வகையில் இவ்வுருக்காட்சி தொடர் உருக்காட்சியாக வந்து திண்ணனார்தம் மேனிவண்ணத்தைப் படிப்பவர் மனத்துள் பதியச் செய்கின்றது. குறிஞ்சிநிலப் பகுதியில் வாழும் திண்ணனாரை அப்பகுதியில் தவழும் கார்மேகத்தைக்கொண்டு சிறப்பித்தது பொருத்தமுடையதாக உள்ளது. மலைப்பகுதியில் காணப்பெறும் கருமுகிலைக் கண்டு மகிழ்ந்தவர் ஆசிரியர் எனலாம்.

## சம்பந்தர் - முகில்:

சம்பந்தரைச் சீகாழியினர், "வள்ஞானப் பொறையணி முகிலே" 64 என்று போற்றுகின்றனர்.

"குறைவிலா ஞானக்கொண்டலார்" 65 என்றும் அவர் போற்றப்படுகின்றார். சம்பந்தரின் ஞானச்சிறப்பும் அருட்திறமும் தொடர் உருக்காட்சியாக வரும் மேக உருக்காட்சியால் விளக்கப்படுகின்றன. தம் இனிய பதிகங்களால் சைவசமயப்

பேருண்மைகளை நாட்டுமக்களுக்கு மழைபோலப் பொழிந்தவர் சம்பந்தர் என்ற குறிப்பு இவ்வுருக்காட்சியில் உள்ளது.

**ஆனிரை, சண்டீசர் - பைங்கூழ், வான்:**

"பைங்கூழ்க்கு வானே என்ன நிரைகாக்க வந்தார் தெய்வமறைச் சிறுவர்" [66] என்று சண்டீசர் போற்றப்படுகின்றார். மேக உருக்காட்சி சண்டீசரின் கருணைத்திறத்தைச் சிறப்பிக்கிறது. வாடிய பயிருக்கு மழை கிடைத்த காட்சி படிப்பவர் நினைவில் எழுகிறது.

**சம்பந்தர், மணப்பெண் - வெண்மேகம், மின்னல்:**

திருமண நிகழ்ச்சியின்பொழுது சம்பந்தரும், மணப்பெண்ணும் இணைந்திருந்த காட்சியை, "வெள்ளை மேகமோடிசையும் மின்னுக்கொடி" என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[67] வெண்மேகமும் மின்னலும் முறையே சம்பந்தரையும், அவர்தம் மணப்பெண்ணையும் சிறப்பிக்கும் உருக்காட்சிகளாக வந்துள்ளன.

**வெண்துகிற்கொடிகள் - வெண்ணிறக் குழுஉச்சுடர்க்கொண்டல்கள்:**

திருஞானசம்பந்தர் திருமணவிழாவன்று வெண்துகிற் கொடிகள் விசும்பில் நிறைந்திருந்தன. அவை வெண்ணிற மேகங்களைப் போன்று விளங்கின. 68

**கஞ்சுகம் - மஞ்சு:**

வைரவமூர்த்தியின் திருமேனியிலிருந்த கஞ்சுகத்தின் கருமைநிறத்தைக் குறிக்கும் ஆசிரியர், "அரையிருள் திரியும் மஞ்சு நீள்வது போலுமாமேனி" என்கிறார். 69 கஞ்சுகத்தின் கருமை நிறத்தைக் காட்டுகிறது மேக உருக்காட்சி.

**மறையவர் - வெண்முகிற்குழாம்:**

திருவலஞ்சுழியில் திருஞானசம்பந்தரை மறையவர்கள் வரவேற்றனர். அவரைச் சூழ்ந்து அவர்கள் நின்றமையை

"மதியைக்கதிர்செய் வெண்முகிற்குழாம் புடைசூழ்ந்தெனக் கலந்தார்" என ஆசிரியர் வருணிக்கிறார். [70] வெண்ணிற ஆடையும் வெண்ணீறும் அணிந்திருக்கும் மறையவர் கூட்டத்தின் அழகுத்தோற்றத்தை வெண்மேக உருக்காட்சி விளக்குகிறது. நிலவு உருக்காட்சியுடன் இணைந்த மேக உருக்காட்சியைச் சேக்கிழார் இங்கு ஆள்கிறார்.

## சமணர் - கருமுகில்:

மதுரையில் பீலிசேர் சமண்கையர் சம்பந்தரைச் சூழ்ந்திருந்தமையை, "காலை எழும் கதிரவனைப் புடைசூழும் கருமுகில் போல்" எனச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். [71] சமணர் கூட்டத்தின் தோற்றத்தைக் "கருமேக உருக்காட்சி" நினைக்கச் செய்கிறது. ஞாயிறு உருக்காட்சியுடன் இணைந்த கருமேக உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது. கதிரவனைக் கார்மேகம் மறைத்துவிடமுடியாது என்ற கருத்தை இவ்வுருக்காட்சி படிப்பவர் மனத்துள் உண்டாக்குகிறது. சம்பந்தரைச் சமணர் வெல்லமுடியாது என்ற உட்குறிப்பு உடையதாகவும் இது உள்ளது.

## அழுக்குக்கந்தை - கருமேகம்:

கருமேகம் என்று கூறத்தக்க அழுக்குடைய கந்தையுடன் இறைவர் எழுந்தருளினார் என்று திருக்குறிப்புத்தொண்டர் புராணத்துள் கூறப்படுகிறது. 72 ஆடையின் அழுக்கை இவ்வுருக்காட்சி நன்கு விளக்குகிறது. திருக்குறிப்புத்தொண்டருக்கு அருள்புரிய வந்த கோலம் குறியீட்டு உருக்காட்சி இணைந்த மேக உருக்காட்சியாக உள்ளது எனலாம். அழுக்கு ஆடை தொண்டர் இறைவர் திருவருள் பெறுதற்குக் காரணமாக இருந்த ஆடையாக விளங்குகிறது. இதனைக் குறிக்கும் வகையில் கருமேக உருக்காட்சியைச் சேக்கிழார் ஆள்கிறார்.

## மகளிர் கூந்தல் - புயல்:

"புயல்காட்டும் கூந்தல்" [73] "மஞ்சு தழைத்தென வளர்ந்த மலர்க்கூந்தல்" [74] என மேக உருக்காட்சி இருமுறை வந்து மானக்கஞ்சாறநாயனார் மகளின் கூந்தலின் வடிவைச் சிறப்பிக்கிறது. சிவபெருமான் வேண்டுகோட்கிணங்க இத்தகைய

சிறப்புடைய கூந்தல் நாயனாரால் அறிந்து தரப்படுகிறது. மேக உருக்காட்சி படிப்பவர் மனத்தில் நாயனார் தொண்டின் சிறப்பு, அவர் மகளின் கூந்தல் சிறப்பு ஆகிய இரண்டையும் ஒருங்கே நினைக்கச்செய்கிறது. "சீகாழியில் வாழும் மகளிர் கனைவானமுகில் போன்ற கூந்தலையுடையவர்" என்று குறிக்கப்படுகிறது.[75]

## இறைவர் நெடுஞ்சடை - காளமேகம்:

"இறைவர் தமது சிவந்த நீண்ட சடையினையே கருமேகச் சுருள்போல் ஆக்கிக்கொண்டார்" எனச் சிறுத்தொண்டர் புராணத்துள் கூறப்படுகிறது.[76]

## களையடி - கார்முகில்:

புகழ்ச்சோழர் புராணத்தில் யானைக்கூட்டங்களில் உள்ள யானைகளும் தம் இனம் என்று அவ்யானைகளைக் கூடுகின்ற மேகங்களும், வேறு பிரித்தறியப்படாத வகையில் விளங்கின என்று ஆசிரியர் குறிக்கின்றார்.[77]

## கைம்மா மதம் - பெய்ம்மா முகில்:

வடுகக்கருநாட மன்னன் இறந்தபின்னர் மதுரையை ஆள மன்னர் இல்லை. கண்கட்டிவிடப்பட்ட யானை யாரை நெருங்கிக் கைக்கொள்கிறதோ அவர் மன்னர் எனத் தேர்ந்தெடுக்கப் பெறவேண்டும் என அமைச்சர்கள் கருத்துத் தெரிவித்தனர். அதன்படி அனுப்பப்பட்ட யானையைச் சேக்கிழார் வருணிக்கிறார். "மேகத்திலிருந்து மழை பெய்வதுபோல அந்த யானையிடமிருந்து மதம் பாய்ந்தது" என்கிறார்.[78]

## நாவரசர் கண்ணீர் - மழை:

கண்கள் தண்டுளிமாரி பொழிய இறைவரை நாவரசர் வழிபட்டார் என்று குறிக்கப்படுகிறது.[79] "மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும் திருவடிவு" எனச் சேக்கிழார் நாவரசரின் தோற்றப்பொலிவினைக் குறிக்கின்றார்.[80] மறையவர்போல் நாவரசருடன் வந்த சிவபெருமான் திருப்பைஞ்ஞீலி என்ற திருத்தலத்தை அணுகும் பொழுது மறைந்து விட்டார். அப்பொழுது இறைவரின்

திருவருளை நினைந்து மழையெனக் கண்ணீர் பொழிந்தார் நாவரசர் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[81]

### கரும்பெரும்பாண்டில் ஈட்டம்- ஆலிய முகிலின் கூட்டம்:

திருநாட்டுச் சிறப்பு என்னும் பகுதியில் சேக்கிழார் சோழநாட்டின் மருதவளத்தின் சிறப்பை நயமுறக் கூறுகிறார். "மொய்வரை உலகம்போல முளரிநீர் மருதவைப்பு" விளங்கியது என்கிறார்.[82] வைக்கோல்போரின் முகட்டைத் தள்ளிச் சாய்த்துப் பகடுகள் போக்கும் கரும்பெரும்பாண்டில் ஈட்டம் அருவரைச் சிமயச்சாரலை வலங்கொண்டு ஆலியமுகிலின் கூட்டம் சூழும் காட்சியைவிடச் சிறப்பாக உள்ளது என்கிறார் சேக்கிழார்.[83]

### கரிக்கன்று, இனமேதி - கார்மேகம்:

திருமயிலாபுரியின் சிறப்பைக்கூறும் சேக்கிழார், "அவ்வூரின் கடற்கரைக் கானலில் பரந்த நிலம் முழுதும், அயல்நாடுகளிலிருந்து வந்த மரக்கலங்கள் இறக்கிய யானைக்கன்றுகளும், கடலில் படிந்து அணைகின்ற மேகங்களும், செழிப்புடைய எருமைக்கன்றுகளும் நிற ஒப்புமையினால் வேறு பிரித்தறிய முடியாதவாறு விளங்குகின்றன" என்று கூறுகிறார்.[84]

### மயில் - மஞ்சு:

"மாடங்களின்மேல் மயில்கள் ஆடுவது மலைகளில் தவழ்கின்ற மேகங்களைப் போன்று உள்ளது" என்று மயிலாப்பூரின் சிறப்பைக் கூறுகின்றார் ஆசிரியர்.[85] மயில்களின் நிறம், கூட்டத்தொகுதி இவ்வுருக்காட்சியால் விளக்கப்பட்டன.

### மன்னன் சேனை, நாயனார்தொண்டு - கானம், கார்:

"கார் பெறு கானம்போலக் கலித்தன கைகள் கூப்பி" என்று குங்குலியக்கலயநாயனார் திருப்பனந்தாளில் யாவரும் வணங்கும் வகையில் இறைவரை நேர்நிற்கச் செய்த அரிய செயலைக்கண்டு மகிழ்ந்த சேனையின் களிப்பைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[86] இறைவரை நேர்பெற நிறுத்துதற்குப் பலவகையிலும் முயன்று சோர்ந்த சேனைமக்கள் நாயனாரின் செயல்கண்டு மிகுதியும் மகிழ்ந்த செய்தி இவ்வுருக்காட்சியால் விளக்கிச்

கூறப்பட்டது. மேகம் மழை பொழியும்பொழுது சோலை மரங்களின் கிளைகள், இலைகள், தளிர்கள் அசைந்து ஏற்கும் செயலைக் "கைகள் கூப்பி" என்ற தொடர் நினைக்கச்செய்கிறது. குதிரைகளின் சேணங்கள்,[87] வீரர்களின் கேடயங்கள்,[88] வெண் துகிற்கொடிகள்,[89] ஓமதூபப்புகை,[90] ஆகியன இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகின்றன.

## பூ, பொற்சுண்ணம் - மேகம்:

காஞ்சி மாந்தரும் மகளிரும் சம்பந்தரை வரவேற்கும்பொழுது மலர்களையும், பொற்சுண்ணத்தையும், இரண்டு பக்கங்களிலும் வீசினர். இக்காட்சி புயல் பொழிந்தது போல விளங்கியது" என்கிறார் ஆசிரியர்.[91]

## சிறப்புலி நாயனார் நிதிமழைமாரி:

"சிறப்புலி நாயனார் தம்மிடம் வரும் சிவனடியாரை இனியசொற்கள் கூறி வரவேற்று, நல்லமுதமூட்டி, அவர்கள் விரும்பியவையெல்லாம் நல்கி, நீளும் இன்பத்துள் தங்கினார்" என்றும், "நிதிமழைமாரி போன்றார்," என்றும் சேக்கிழார் கூறுகின்றார்.[92] சிறப்புலியாரின் கொடைச்சிறப்பு இவ்வுருக் காட்சியால் குறிக்கப்படுகின்றது.

## கொடை - மேகம்:

கொடைப்பண்பைக் குறிக்கும் வகையில், மேகம், உவமையாகத் தமிழ்க்கவிஞர்களால் சங்க இலக்கியம் தொட்டு ஆளப்படுகிறது. கொடைப்பண்பைக் காட்டும் குறியீடு (Symbol) என்ற தன்மையையும் மேக உருக்காட்சி பெற்றுள்ளது.

"பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே"

எனப் பாரிவள்ளலைக் கபிலர் போற்றுகின்றார்.[93]

உலக நடையினை அறிந்து தம்மளவிற்கும் தம் வருவாயளவிற்கும் ஏற்பத் தக்கார்க்குத் தக்கன அறிந்து

கொடுத்தலாகிய ஒப்புரவறிதல் பற்றித் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

"தமக்கு நீரைத் தந்துதவும் மேகத்திடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்ய இயலும்? ஆதலால் அம்மேகத்தைப் போன்றவர் செய்யும் ஒப்புரவுகள் கைம்மாறு நோக்குவனவல்ல, " என்று ஒப்புரவறிதல் என்னும் அதிகாரத்தின் முதற்குறட்பாவில் திருவள்ளுவர் கூறுகின்றார். கைம்மாறு வேண்டாத கொடையை மேக உருக்காட்சி விளக்குகிறது.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு"

என்பது குறட்பா.[94] சேக்கிழார் இம்மரபைச் சார்ந்து சேரமான்பெருமாள் நாயனாரின் கொடைப்பண்பை மேக உருக்காட்சியால் சிறப்பிக்கின்றார்.

## சேரன் கொடைநிழல் - மேகம்:

"மேகத்தின் மிகுந்த கொடையின் நிழல் மேலேயும், அதன்கீழே கவிக்கும் வெண்கொற்றக்குடையின் நிழலுமாக அதன் கீழேயிருந்து ஆண்ட சேர அரசன், பின்பு உலக அரசாட்சியினைத் துறந்து தவத்தை மேற்கொண்டான்" என்று கூறப்படுகிறது.[95] பயன் கருதாமல் மழையைப் பெய்து அளிப்பது மேகம். அதுபோலச் சேரமன்னன் கொடை விளங்கியது என்பது கருத்து. அவனுடைய ஒப்புரவாண்மையை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. நுண்பொருளாகிய கொடை என்ற பண்பை உருவாகப் படைத்துப் பின் அதற்கு நிழல் இருப்பதாக ஆசிரியர் படைப்பது குறிப்பிடத்தக்கது.

## சேரன் கொடைக்கை - பருவமழை பொழியும்கார்:

"பருவமழை பொழியும் காரால் நிகர்க்க அரிய கொடைக்கையார்" என்று சேரமன்னன் போற்றப்படுகிறான்.[96] மேகம் குறிப்பிட்ட பரு வத்தில்தான் மழைபெய்துதவும். ஆனால் இம்மன்னனோ எப்பருவத்தும் கொடை தந்து உதவுகிறான். எனவே இவனுக்கு ஈடாகாது கார்மேகம் என்ற கருத்துடன் இப்பாராட்டு விளங்குகிறது. "செம்பொன்னை இரவலர்க்கு

மழையெனப் பொழிந்தான் இச்சேரர்பெருமான்" என்கிறார் ஆசிரியர்.[97]

### சேரன்செங்கை - பருவமழை:

"பருவமழைச்செங்கை" என்று சேரமான்பெருமாள் நாயனாரின் கை சிறப்பிக்கப்படுகிறது.[98]

கார்மேகம் உருக்காட்சி சேரமான்பெருமாள் நாயனார்தம் கொடைத்திறம் பற்றி விளக்கிட, தொடர் உருக்காட்சியாக (Iterative image) ஆளப்பெற்றுள்ளது.

### புகை, தூமம் - கருமுகில்:

கரும்பாலைப்புகை, அகிற்தூபம், வேள்விச்சாலைப்புகை, கருமுகில் ஆகிய அனைத்தும் ஒன்றாகத் தோன்றுகின்றன என்று திருநாட்டுச் சிறப்பில் ஆசிரியர் வருணிக்கிறார்.[99] சோழநாட்டின் வளம் இவ்வாறு குறிப்பிடப்படுகிறது. ஓமத்தூமப்புகை மேகம் போன்றிருந்தது எனக் குறிக்கப்படுகிறது.[100]

### இறைவர் கறைமிடறு - மேகம்:

"களம்கொண்ட மணிகண்டர்" என்று இறைவர் போற்றப்படுகின்றார்.[101] கொடை, உலகம் காத்தல் முதலிய பண்புகள் உடையது இறைவர் மணிகண்டம் என்பது குறிப்பு.

### மழை உருக்காட்சி:

பெரியபுராணப் படைப்பில் செயற்கரிய நிகழ்ச்சிகள் நடைபெற்று முடியும்பொழுது விண்ணிலிருந்து மலர்கள் மழையைப்போல் பொழியப்படுவதாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். செயற்கரிய செயல்களைச் செய்த பெருமக்களுக்குப் பாராட்டுத் தெரிவிக்கும் வகையில் மலர்மாரி பொழிதல் என்ற நிகழ்வு படைப்பில் இடம்பெறுகிறது.

மனுநீதிச்சோழன் கன்றினை இழந்து துயருறும் ஆவின் நிலைகண்டு இரங்கியதோடு அமையாது தனது செங்கோன்மையைக்

காக்கும் உறுதியுடன் தானே தன் புதல்வன் வீதிவிடங்கன்மீது தேரை ஊர்ந்தான். அப்பொழுது விண்ணிலிருந்து மலர்மாரி பொழிந்தது. அருமந்த புதல்வனைவிட அறம் பெரிது என்ற உணர்வுடையனாய் அம்மன்னன் விளங்கினான் என்பதைப் பாராட்டும் வகையில் மழை உருக்காட்சி அமைந்துள்ளது எனலாம்.[102] செயற்கரிய செய்த நாயனார்கள் இறைவருடைய திருவருள் பெறுகின்ற பாங்கினை மலர்மாரி பொழிதல் என்ற வகையில் பாராட்டும் நெறி, படைப்பின்கண் தொடர்ந்து பின்பற்றப்படுகிறது. "எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்" என்று திருநீலகண்டநாயனாரிடம் அவர் மனைவியார் ஆணையிட்டு விட்டார். இன்பத்துறையில் இளையராகிவிட்ட தம் கணவனாரிடம், திருநீலகண்டரின் மனைவியார் "எம்மை" என்றமையின், "மற்றை மாதரார் தம்மையும் மனத்தினும் தீண்டேன்" என்றார் நாயனார். இச்சபதத்திற்குப்பின் முதுமைப்பருவம் வரை திருநீலகண்ட நாயனாரும் அவர்தம் துணைவியாரும் அற்புறுபுணர்ச்சி இன்மை அயலறியாமை வாழ்ந்தார்கள்."[103] இறைவர் இத்தொண்டரை விளக்கம்காணும் நோக்குடன் அருட்சிவயோகியாக வந்தார். தமது திருவோட்டினை இவரிடம் கொடுத்துத் தாம் திரும்பிவந்து கேட்கும்வரை வைத்திருக்குமாறு கூறிச்சென்றார். பின்பு அத்திருவோட்டினை நாயனாரிடமிருந்து மறையச் செய்தார்.[104] இதனை நாயனார் அறிந்தாரில்லை. ஒருநாள் இறைவர் அவரிடம் வந்து திருவோட்டினைத் தருமாறு கேட்டார். எடுத்துவரச் சென்ற நாயனார் அவ்வோடு மறைந்த மாயத்தை அறியாமல் திகைத்தார். சிவயோகியிடம் நடந்த விபரத்தைக் கூறினார். தாம் வேறு பொன் ஓடு ஒன்று அவருக்குத் தருவதாகக் கூறியும் சிவயோகி வாங்க மறுத்தார். தாம் கொடுத்த ஓட்டையே கொடுக்குமாறு வற்புறுத்தினார்.[105] ஓடு காணாமற்போனது உண்மையாயின் தன்மகனைப் பற்றிக்கொண்டு குளத்தில் மூழ்கி உண்மை கூறுமாறு சிவயோகி நாயனாரிடம் செப்பினார்.[106] தமக்குப் புதல்வன் இல்லை என்றார் நாயனார். "உமது மனைவியைப் பற்றிக்கொண்டு மூழ்கிக் கூறுக" என்றார் சிவயோகி. "சபதம் காரணமாக நாங்கள் இருவரும் உடன் மூழ்க இசைவில்லை" என்றார் நாயனார்.[107] சிவயோகி இவ்வழக்கை, அந்தணர் சபைமுன் வைத்தார். அவர்தம் ஆணைக்கிணங்க நாயனாரும் அவர்தம் மனைவியாரும் மூங்கில் தண்டின் இருமுனையைப் பற்றிக்கொண்டு மூழ்க முனைந்தனர். அந்தணர் "மனைவியாரைத் தீண்டிக்கொண்டு

உடன் மூழ்கவேண்டும்" என்றனர். அப்பொழுது கூடாமையைப் பாரோர் கேட்பப் பண்டு தம் செய்கை சொல்லி மூழ்கினார் நாயனார். வாவியில் மூழ்கிப்பின் கரையேறும்போது நாயனாரும் அவர்தம் துணைவியாரும் மேவிய மூப்புநீங்கி விருப்புறும் இளமை பெற்றனர். தேவரும், முனிவர்களும் அவர்கள்மீது தெய்வப்பூவின் மாமழையைப் பொழிந்தன.[108]

நாயனாரின் செயற்கரிய செயலைப் பாராட்டும் வகையில் பூவின்மாமழை உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது.

இயற்பகை நாயனார், அமர்நீதி நாயனார், இறையருள் பெற்ற பொழுதும், இவ்வாறு மலர்மாரி பொழிந்தது.[109]

கண்ணப்பநாயனார் பிறந்தபொழுதும், திருக்காளத்தி அப்பரின் கண்ணிலிருந்து வழியும் குருதியைத் தடுத்து நிறுத்துவதற்கு அவர்தம் கண்ணை இடந்துஅப்பும் பொழுதும் இறைவர் அவரது கையைப் பிடித்துத் தடுக்கும்பொழுதும் மலர்மாரி பொழிந்தது.[110]

மானக்கஞ்சாற நாயனார் மாவிரதர் கோலத்தில் இறைவர் தம்மிடம் வந்து, திருமணக்கோலத்துடன் இருந்த தமது மகளின் நீண்ட அழகிய கூந்தலைப் பஞ்சவடிக்கென வேண்டும் பொழுது சற்றும் தயங்காது வாளால் அக்கூந்தலை அரிந்து தந்த ஞான்று மலர்மாரி பொழிந்தது.[111]

இதேபோன்று ஆனாயநாயனார் இறையருள் பெற்றபொழுது மலர்மாரி பொழிந்தது. வேற்றொலிகள் விரவாமல் அசைய எழும் குழல்நாதத்தில் அஞ்செழுத்தால் தம்மைப் பரவுகின்ற இசையை விரும்புகின்ற கூத்தனார் ஆகிய இறைவர், குழலிசைக்கின்ற நிலையிலேயே தம்மிடம் வந்தணையுமாறு ஆனாய நாயனாரிடம் கூறினார். அப்பொழுது விண்ணவர்கள் அவரைப் பாராட்டும் வகையில் மலர்மாரி பொழிந்தனர்.[112]

திருக்குறிப்புத்தொண்டர், கண்டேசுரர், நாவரசர், காரைக்காலம்மையார் அருள்பெற்றமையைப் போற்றும் வகையில் மலர்மாரி பொழிந்தமை குறிப்பிடத்தக்கது.[113]

திருஞானசம்பந்தர் பிறந்தபொழுதும், இறைவர்தம் ஆணைக்கிணங்க அன்னை சிவஞானத்தின்னமுதத்தை அவருக்கு ஊட்டிய ஞான்று அவர் திருப்பதிகம் பாடும்பொழுதும், இறைவர் வழங்கிய முத்துச்சிவிகையில் அவர் ஏறும்பொழுதும் மலர்மாரி பொழிந்ததாகச் சேக்கிழார் கூறிப்பிடுகிறார். [114] 'சதுரம்' என்னும் பதிகம்பாடி திருமறைக்காட்டில் இறைவர்தம் திருக்கோயிலின் மறைக்கதவை அடைத்தபொழுதும், மதுரைக்குப் புறப்பட்டபொழுதும், மதுரையம்பதியில் சமணருடன் புனல்வாதம் செய்தபொழுது வையையாற்றில் அஞ்செழுத்து எழுதப்பெற்ற தமது ஏட்டை இட்டபொழுதும், புத்தரை வாதத்தில் வென்றபொழுதும், தமது திருப்பதிகத்தால் மயிலைச் சிவநேசர் மகள் பூம்பாவையைக் குடத்திலிருந்து உயிர்பெற்று எழுமாறு செய்தபொழுதும், மணப்பந்தருக்கு அவர் வந்தபொழுதும் மலர்மாரி பொழிந்ததாகச் சேக்கிழார் ஆர்வத்துடன் குறிப்பிடுகிறார். 115 திருஞானசம்பந்தர்தம் வரலாற்றில் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சிகளின் பொழுது மலர்மாரி பொழிகின்றமை சைவ உலகில் அவருக்குள்ள தலைமைச்சிறப்பைக் காட்டுவதாக உள்ளது.

சுந்தரர் திருமுதுகுன்றத்தில் தமக்குக் கொடுத்த பொன்னை மணிமுத்தா நதியில் இட்டுப் பின் திருவாரூர் குளத்தில் பரவையார் உள்ளிட்ட அனைவரும் வியக்குமாறு எடுத்தபொழுதும், திருவொற்றியூருக்கு வந்தபொழுதும், சங்கிலியாரை மணம்செய்துகொண்ட பொழுதும் மலர்மாரி பொழிந்தது. இறைவர் தந்த சூலை நோயால் துன்புற்ற ஏயர்கோன் கலிக்காமநாயனார் இறைவரைப் பரவையாரிடம் தூது செல்லுமாறு செய்த சுந்தரர் தம்மிடம் வருவதை விரும்பாத காரணத்தால், உடைவாளால் தம்மைச் செற்றுக் குருதிசோரக் கிடந்தார். இந்நிலையில் நாயனாரைக் கண்ட சுந்தரர் தம்மை மாய்த்துக்கொள்ள, குற்றுடைவாளைப் பற்றினார். அப்பொழுது ஏயர்கோன் கலிக்காமநாயனார். "கேளிரேயாகிக் கெட்டேன்" என விரைந்தெழுந்து சுந்தரரைத் தடுத்து நிறுத்தினார். சுந்தரர் அந்நாயனாரை வணங்கினார். நாயனாரும் உடன் சுந்தரரை வணங்கினார். இந்த அதிசயமான நிகழ்ச்சியைக் கண்டு வானோர் பொற்றடமலரின்மாரி பொழிந்தனர். புவனமெல்லாம் இவ்விருவரையும் போற்றியது. [116]

பிறவியிலேயே கண்பார்வையின்றியிருந்த தண்டியடிகள் நாயனார் வாவியில் மூழ்கி எழுந்தபொழுது இறையருளால் கண்பார்வை பெற்றார். வியப்பைத் தரும் இந்நிகழ்ச்சி நடைபெற்றபொழுது மலர்மாரி பொழிந்தது.[117]

கருவூரின் வாயிலில் போரில் வெற்றிபெற்ற புகழ்ச்சோழர் முன்பு வீரர்கள் பகைவர்தம் கருந்தலைக் குவையைக் கொணர்ந்து வைத்தனர். அத்தலைகளுள் ஒன்றில் புன்சடை இருக்கக் கண்டார் சோழ அரசர். சைவப்பற்று மிக்க அவர் மனம் வருந்தித் திருநீற்றுக் கோலத்துடன் இருந்த சடைத்தலையைப் பொற்கலத்தில் ஏந்திக்கொண்டு வளர்க்கப்பெற்ற தீயை வலம்வந்து அஞ்செழுத்தை ஓதிப் பின் அதனிடை மகிழ்ந்து உள்புகுந்தார். அவ்வாறு அவர் தீயினுள் புக்க பொழுது மலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிந்தது.[118] புகழ்ச்சோழரின் சைவப்பற்றினைப் போற்றும் வகையில் மலர்மாரி உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது. இவ்வாறு அடியார்தம் அரியசெயலையும், சைவப்பேரார்வத்தையும் போற்றும் வகையில் மலர்மழை உருக்காட்சி ஆளப்பெறுகிறது.

இறையுணர்வு மீதூர்ந்த நிலையில் நாவரசர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய நாயன்மார்கள் காதலாகிக் கசிந்து கண்ணீர் சொரிந்தமையை மழை உருக்காட்சியால் சேக்கிழார் குறிப்பிடுகிறார். அவர்கள் மழைபோலக் கண்ணீர் சொரிந்தார்கள் என்பது ஆசிரியர் கருத்து.[119]

குங்குலியக்கலயநாயனார் திருச்சாய்க்காட்டு இறைவரைத் தம் அன்பின் திறத்தால் நேர்பெறச் செய்தமையைக் கண்டு அரசர் தம் படையும் களிறும் மகிழ்ந்தமையைக் குறிப்பிடும்பொழுது, "கார்பெறுகானம் போலக் களித்தன கைகள் கூப்பி" என்கிறார் ஆசிரியர். குங்குலியக்கலய நாயனார்தம் திருத்தொண்டு மழையாகக் குறிக்கப்படுகிறது.[120]

சண்டீசர் ஆனிரையைக் காத்த செயலைச் சேக்கிழார், "பைங்கூழ்க்கு வானே என்ன நிரைகாக்க வந்தார் தெய்வமறைச்சிறுவர்" என்கிறார். நாயனாரின் திருத்தொண்டு மழையாகக் கூறப்படுகிறது.[121]

சிறப்புலிநாயனாரின் ஈகைத்திறமும், சேரமான்பெருமாள் நாயனார்தம் கொடைத்திறமும், மழை உருக்காட்சியில் சிறப்பிக்கப்படுகின்றன.[122]

சேக்கிழார் மழையை உருக்காட்சியாகப் படைத்துப் படைப்பின் தொடக்கம் முதல் இறுதிவரை ஆங்காங்குப் பொருத்தமுற ஆள்கின்றார். நாயனார்தம் செயற்கரிய செயலைப் போற்றுவதில் அவருக்குள்ள ஆர்வத்தை இவ்வுருக்காட்சி காட்டுகிறது. மேலும். இறையருள் திறத்தினை விளக்கும் காட்சிப்புல உருக்காட்சியாக மழை உருக்காட்சி அமைந்துள்ளது எனலாம்.

## வானவில் உருக்காட்சி:

திருநாட்டுச் சிறப்பு என்னும் பகுதியில் சோழநாட்டின் நீர்வளம் நிலவளம் பற்றிச் சேக்கிழார் விவரித்துக் கூறுகிறார். பொய்கையின் கரையில் அன்னப்பறவைகள் ஆடுகின்றன. மேதிகள் வந்து அப்பொய்கையில் படிகின்றன. அப்பொழுது கன்னி வாளை மீன்கள் கரையில் இருக்கும் கமுகமரத்தின்மேல் பாய்கின்றன. அவ்வாறு விசும்பில் பாய்கின்ற அவ்வாளைமீன்களின் உடல்கள் கதிரவனின் ஒளிபட்டுப் பல வண்ணங்களுடன் ஒளிவிடுகின்றன. அவற்றின் வண்ணஒளி வானவில்லைப்போல் காட்சியளிக்கிறது.[123] சேக்கிழார் இவ்வாறு வருணிப்பது வாளைமீன்களின் செழிப்பை உணர்த்துகிறது. இவ்வருணனை வாளைமீன்களின் தோற்றத்தைப் படிப்பவர் கண்முன் கொணர்கிறது. சேக்கிழார்தம் இயற்கையியல் ஈடுபாட்டை வானவில் என்ற இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. அவரது கூர்த்த காட்சிப்புலனின் சான்றாக இது விளங்குகிறது.

தடுத்தாட்கொண்ட புராணம் என்ற பகுதியில் சுந்தரர்தம் திருமணக்கோலம் வருணிக்கப்படுகிறது. திருவாரூரில் பரவையாரை மணந்து மகிழ்வுடன் அவர் வாழும்பொழுது இறைவர் திருக்கோயிலுக்கு வழிபாடு செய்யச் சென்றார். அப்பொழுது அவர் கொண்டிருந்த அழகிய திருக்கோலத்தைச் சேக்கிழார் வருணிப்பது குறிப்பிடத்தக்கது. அந்தரத்தில் உள்ள அமரர்கள் போற்றும் வகையில் அணிகிளர் ஆடைகளை அவர் அணிந்திருந்தார். சந்தனத்தளறு தோய்ந்த குங்குமக் கலவை சாத்தப்பெற்றிருந்தார். சுந்தரச்சுழியமும், சுடர்மணிக் கலன்களும் அணிந்திருந்தார்.

இத்தகைய பல்வேறு ஒளிகளையுடைய அணிகலன்களுடன் அவர் காட்சியளித்தமையானது இந்திரத்திருவில் எனப்பெறும் வானவில்லை விடவும் எழில்பெற்று விளங்கியது. 124 சேக்கிழார் சுந்தரர்தம் அழகுத்தோற்றத்தை வருணிப்பதில் ஆர்வம் கொள்கிறார். அவர் மாட்டுச் சேக்கிழார் கொண்டுள்ள அன்பினை இவ்வருணனை காட்டுகிறது. வானவில் உருக்காட்சி சுந்தரர்தம் அழகிய தோற்றத்தைப் படிப்பவர் மனத்துள் பதியுமாறு செய்கின்றது. பொருத்தமும் நயமும் உடையதாக இஃது ஆளப்பெற்றுள்ளது.

திருஞானசம்பந்தர்தம் மெய்த்திருவாக்கெனும் அமுதத்திறத்தால் திருமயிலை சிவநேசர் மகள் பூம்பாவை உயிர்பெற்றெழுந்தாள். அவளது என்புசேர் குடம் உடைந்து எழுந்த அவள் பொற்றுதாமரைப் போதவிழ்ந்தெழுந்தனள் போன்றாள். அணியாகச் சுரும்புகள் மொய்த்த பனிமலர்களுடன் கூடிய கூந்தலின் ஆரஞ்சேர்ந்துள்ள அவள் நெற்றி, பூங்கொடியாகிய அவளுக்கு அழகின்மாரி பொழிந்திட வேண்டுமென, மேகத்தின்கீழ் இடப்பட்ட வளைந்த வானவில்லைப் போல வனப்புடன் விளங்கியது. பூம்பாவையின் நெற்றியின் பொலிவை வானவில் உருக்காட்சியால் இவ்வாறு நயமுறச் சேக்கிழார் குறிக்கின்றார். 125

வாளைமீன் வானில் தோன்றும் காட்சி, சுந்தரரின் அழகிய தோற்றம், பூம்பாவையின் எழிலார்ந்த நெற்றி வானவில் உருக்காட்சியால் பொருத்தமுறக் காட்சிப்படுத்தப்படுகின்றன.

### மின்னல் உருக்காட்சி:

### சிவனார்சடைமுடி - மின்னல்:

வானில் தோன்றும் மின்னல் இறைவர்தம் சடைமுடியின் ஒளிபொருந்திய அழகிய தோற்றத்தைச் சிறப்பிக்கும் உருக்காட்சியாக ஆளப்படுகிறது. மின்னல்கள் பலவற்றை ஒன்றாக நெறித்துச் சேர்த்துவைத்தாற்போல் இறைவர் சடைமுடி விளங்குவதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். 126 கண்முன் கணப்பொழுதில் தோன்றி மறையும் மின்னல் நெறித்துச் சேர்த்தற்குரிய பருப்பொருளாகக் காட்டப்படுவது புதுமைநயம் பயக்கிறது.

*சங்கிலியார் - மின்னல்:*

திருவொற்றியூரில் இறைவர் திருக்கோயிலின் பூந்திருமண்டபத்தின்கண் சுந்தரர் உட்புகுந்தார். முந்தைய வினையின் வலியால் அவர் சங்கிலியாரை அங்குக் காணநேர்ந்தது. மண்டபத்தின்கண் திரையிடப்பட்ட ஒரு பகுதியில் சங்கிலியார் திருமாலைதொடுக்கும் பணி செய்தார். உரிய காலங்களில் தாம் தொடுத்த மாலைகளைத் திரையை நீக்கிவிட்டு வெளியில் வந்து கொடுத்துவிட்டுப் பின் மின்னலைப்போல் அவர் மறைந்து சென்றமையைச் சுந்தரர் கண்டார். சங்கிலியார் மாலைதொடுக்கும் பணியினைத் தவிர வேறு எதிலும் ஈடுபாடு கொள்ளாம லிருந்தமையையும் கன்னிப்பருவத்தினராய் தாம் நாணம் மிகுதியும் உடையவராய்ப் பிறர் பார்வைக்குப் படாமல் இருப்பதில் கருத்தாக இருந்தமையையும் அவர் திரையை விலக்கிவிட்டு வெளிவந்து மாலையைக் கொடுத்துவிட்டு விரைவாக மின்னலைப்போல் திரும்பிய செயல் குறிக்கிறது. சேக்கிழார், ஆளும் மின்னல் உருக்காட்சி சங்கிலியாரின் தோற்றப்பொலிவையும் உடன் அவர் திரும்பிச்சென்ற விரைவையும் உணர்த்துவது நயமுடையதாக உள்ளது. [127]

*மடவார்கள் - மின்னல்:*

மாளிகைகளின்மேல் மடவார்கள் தோன்றுகின்ற காட்சி குலவரை மேல் மின்குலங்கள் தோன்றுவதுபோல உள்ளது என்கிறார் சேக்கிழார். [128]

பெண்களின் இடை, சம்பந்தரின் பொலங்கிணி, முருகநாயனார் அணிந்திருந்த புரிமுந்நூல், இறைவர்தம் கரத்தில் ஏந்தப்பெற்றிருக்கும் வெண்தலை ஓடு, தில்லைநகரின்கண் மாளிகைகளின் மீது உள்ள கொடிகள், ஆகியவை மின்னல் உருக்காட்சியால் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன. [129]

*நிலையாமை - மின்னல்:*

சமணர்தம் நெறியைச் சார்ந்திருந்த வடுகக்கருநாடர் மன்னன் வாணாள் முடிந்தது. இந்நிகழ்ச்சி சங்கரன் சார்பிலோர்க்கு மின்னாமென நீடிய மெய்ந்நிலையாமையை ஒத்திருந்தது.

வானத்தில் மின்னல் தோன்றி ஒளிதந்தவுடன்மறைந்து விடுகின்றது. சேக்கிழார் இந்த மின்னலை மன்னனின் வாழ்க்கை முடிந்த செய்தியைக் காட்சிப்படுத்தும் உருக்காட்சியாகப் பொருத்தமுற ஆள்கிறார். [130]

## பூம்பாவை - மின்னின் அங்குரம்:

அழகுத்தோற்றத்துடன் திகழும் பூம்பாவை என்ற நங்கையை மின்னின் அங்குரம் எனச் சேக்கிழார் குறிப்பது புதுமைநயம் சான்றதாகவும் அவளது எழிலின் முதன்மைப்பாட்டை உணர்த்துவதாகவும் உள்ளது. [131]

## சம்பந்தர் மணப்பெண் - மின்னுக்கொடி:

சம்பந்தருடன் மணப்பெண் இருந்த காட்சியைச் சேக்கிழார், "வெள்ளைமேகமோடிருக்கும் மின்னுக்கொடி" என்கிறார். [132] கருமேகத்திடையே மின்னல் தோன்றுவது பெரும்பாலும் காணத்தக்கது. ஆனால் வெண்மேகத்துடன் மின்னல் தோன்றுவது அரிதான காட்சியாகும். முத்துக்களாலான பல்வேறு அணிகலங்களால் ஒப்பனை செய்யப்பட்டுள்ள சம்பந்தரை வெண்மேகமாகவும், அவருடன் இருந்த மணப்பெண்ணை மின்னல்கொடியாகவும் சேக்கிழார் கற்பனைத்திறனுடன் பகர்வது புதுமைப்பொலிவுடன் விளங்குகிறது.

சங்கிலியார், தேவமகளிர், பூமாரி முதலியவை மின்னல் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன. [133] மின்னல் உருக்காட்சி சேக்கிழார்தம் காட்சிப்புலனின் சிறப்புச் சான்றாக உள்ளது. ஒளிதரும் மின்னலை உருக்காட்சியாக அமைத்துத் தம்மால் போற்றப்படும் இறைவர்தம் சடைமுடியின் அழகு, மகளிர் தோற்றம், நிலையாமை அகியவற்றைப் பொருத்தமுற அவர் விளக்குகிறார்.

## பொழுது உருக்காட்சி:

### பொருகரி, சினஅரி-இரவு, பகல்:

கரியமலை ஒன்று, வில்லுடன் வந்தாற்போல விளங்கிய திண்ணனார்தம் கன்னிவேட்டையில் அடுசரங்க்ளை விடுத்து

விலங்குகளை வீழ்த்தும்பொழுது பொருகின்ற யானைகளுடன் சினங்கொண்ட அரிகளும் சேர்ந்து வீழ்கின்ற காட்சி இரவுடன் பகல் அணைவதுபோன்று அவ்வனத்தில் தோன்றியது என்கிறார் சேக்கிழார். [134]

## கழை சொரிதரளம், அரவு உமிழ்ந்த மணி, சந்திரன் பரிதி கூடிய தலைஉவா ஆகியவற்றின் ஒளி:

திருக்காளத்தி மலையின் மூங்கில்கள் சொரிகின்ற தரளங்கள் குன்றுபோல் குவிந்துள்ளன. அந்தரளக்குன்றின் ஒளி கதிர்நிலவுபோல் ஒருபக்கம் உள்ளது. முழைகளில் உள்ள அரவுகள் உமிழ்ந்த சிவந்த மாணிக்கமாகிய மணிகள் விடும் ஒளி வெயில்போல் ஒருபக்கம் உள்ளது. வனத்தின்கண் ஒரேபொழுதில் நிலவும் வெயிலும் இணைந்து தோன்றும் காட்சி வானின்கண் சந்திரனும், பரிதியும் ஒரேநேரத்தில் தோன்றும் தலைஉவா நாளைப்போல் உள்ளது. இத்தகைய அம்மலைக்குச் செல்வது குழையணிநாதர் வெற்பைத் தலைஉவாவில் கும்பிடச் செல்வதை ஒக்கும். இவ்வாறு சேக்கிழார் திருக்காளத்திமலை ஒளிமயமாய் இருந்தமையைச் சொல்லோவியமாக்குகிறார். [135]

## மணிகளின் ஒளி - பகல்:

காடுகள் இருள்செறிந்திருக்கும் தன்மையன. எனினும் சேக்கிழார் திண்ணனார் வாழும் திருக்காளத்தி மலையிலுள்ள காட்டை ஒளிநிறைந்த ஒன்றாகக் குறிப்பதில் ஆர்வமுடையராய் விளங்குகிறார். அந்தக் காட்டில் பல்வேறு மணிகள் கான்ற விரிகதிர்ப்படலை பொங்கியது. மரகதம் ஒளிகொள் நீலமணிகளின் சோதியும் பரவியது. இவ்விருவகை ஒளிச்சுடருக்கு முன்னே நிற்கமுடியாமல் அச்சம்கொண்டு இரவில் இருள் புடைகள்தோறும் சென்று ஒதுங்கிக்கொண்டதைப் போல இருந்தது. [136] சேக்கிழார் வருணனை இவ்வாறு உள்ளது.

### ஒளி - பகல்:

தீபமாமரங்களின் ஒளி செந்தழலின் ஒளியைப்போல் எங்கும் பொங்குகின்றது. மந்திகள் முழைகளில் வைத்த மணிவிளக்கொளிகள் எங்கும் பரவுகின்றன. இவற்றிற்கும் மேலாக அம்மலையில் புலனைந்தையும் குற்றம் ஆறினையும் அடக்கித் தவம்புரியும் பெரியார்களாகிய முனிவர்தம் தோற்றத்தின் ஒளியும் சேர்ந்து கொள்கின்றது. இத்தகைய ஒளிகள் எல்லாம் ஒருங்குசேர்ந்து திருக்காளத்தி மலையில் இரவு என்பதையே இல்லாமற் செய்துவிட்டன.[137]

சேக்கிழார் குடுமித்தேவராம் இறைவர் வீற்றிருக்கும் திருக்காளத்திமலை ஒளிமயமான ஒன்று என்பதாகக் காட்டுகிறார். மேலும் குடுமித்தேவரின் திருநோக்குப்பட்டமையால், இன்புறுவேதகத்தினால் இரும்பானது பொன்போல் மாறியது போன்று திண்ணனார் எனும் வேடுவர் அன்பாகிய ஒளிப்பிழம்பாக விளங்கினார் என்பதை இவ்ஆசிரியர் காட்டுதற்கு முன்பு திருக்காளத்தி மலையினையே ஒளிமலையாகக் குறிப்பது பொருத்தமுற விளங்குகிறது. காடு என்றால் செறிந்த இருள் நினைவிற்கு வரும். ஆனால் சேக்கிழார் தம் கற்பனைத்திறன் கொண்டு அக்காட்டையும் ஒளிமிக்கதாகப் படைப்பது புதுமையும் ஆழமும் உடையதாக உள்ளது. பகல் என்ற பொழுதை உருக்காட்சியாகப் படைக்கும் அவர்திறம் சிறப்புடைத்து.

### திருநீற்றொளி - பகல்:

சைவசமயத்தார் விருப்புடன் அணியும் திருநீற்றின் வெண்மை ஒளியைச் சேக்கிழார் பகல் ஒளி எனக் குறிப்பிடுகிறார். பூம்புகலூரின்கண் வாழ்ந்த முருகநாயனார் என்ற சிவனடியார் இறைவர் விரிசடைமேல் அணியத்தக்க திரும்பள்ளித்தாமத்தை நாள்தோறும் பறித்துச் சாத்தும் திருத்தொண்டு செய்துவந்தார். அத்தகையோர் வாழ்ந்த திருப்புகலூரில் இருந்த மக்கள் அணிந்திருந்த திருநீற்றின் வெண்மையொளி எங்கணும் பரவுவதால் இரவென்பது இல்லாமல் போய்விட்டது. மலர்மீது அமர்ந்து தேனுண்ணும் வண்டுகள்கூடக் கண்பார்வைக்குத் தோன்றுகின்றன.

இவ்வாறு சேக்கிழார் திருப்புகலூர் திருநீற்றொளியால் நிறைந்திருந்தது எனச் சிறப்பிக்கின்றார். சைவசமயம் அவ்வூரில் உயர்ந்திருந்தமையைச் சேக்கிழார் இவ்வகையில் இயம்புகின்றார்.[138]

## அணிமணி - இளவெயில் சுடர்ப்படலை:

சோழநாட்டின்கண் உள்ள உறையூரில் அணிகளாலும் மணிகளாலும் உண்டாகும் இளவெயிலின் சுடர்ப்படலை இரவு என்பது நீங்குமாறு ஒளிவிடுகிறது எனச் சேக்கிழார் குறிப்பது நினைத்தற்குரியது.[139] திருக்காளத்திமலைக் காட்டில் இருள் நீங்கியமைக்குக் காரணம் கூறும் ஆசிரியர் உறையூர் நகரின்கண் இரவென்பது நீங்கியமைக்கு இவ்வாறு காரணம் தெரிவிப்பது நயமுடையதாக உள்ளது.

## அந்திச்செக்கர் உருக்காட்சி:

சைவசமய முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானின் மேனியைப் பொன்னார்மேனி எனவும்,[140] பவளமே திருவுடம்பு எனவும்,[141] அந்திபோல் உருவம்[142] எனவும் குறிப்பது மரபு.

"செக்கர்ஓத் திரவி நூறா
யிரத்திரள் ஒப்பாந் தில்லைச்
சொக்கர் ..."

என்று திருமாளிகைத்தேவர் குறிக்கின்றார்.[143] சிவன் என்ற சொல் செம்மை வடிவினன் எனப்பொருள்படும். "அந்திச்செவ்வான் வடிவானை" என்று சிவனைக் குறிப்பிடுகின்றார் நாவரசர்.

பெரியபுராணப் படைப்பில் சேக்கிழார் சிவபெருமானை, அந்நிவண்ணர், முக்கட்செக்கர்ச் சடைமவுலி வென்றிவிடையார், செக்கர்ச்சடையார், ஒளிர்கின்ற செக்கர் நிகர் சடைமுடியார், செக்கர் முடிச்சடையார், அந்திச்செக்கர் பெருகொளியார், அந்திவண்ணத்தொருவர் எனக் குறிப்பிடுகின்றார்.[145] அந்திச்செக்கர் என்னும் காட்சிப்புல உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாகச் சிவபெருமானின் வடிவைப் படிப்பவர் மனத்துள் பதியவைக்கின்றார் ஆசிரியர். எழிலார்ந்த

இயற்கைக் காட்சியாக உள்ள அந்திச் செக்கரைக் கண்டு மகிழ்ந்தவர் ஆசிரியர் எனலாம்.

திருத்தொண்ட நாயனார்தம் மெய்த்தன்மை அன்பினை நுகர்தற்கெனப் பயிரவர் வடிவுதாங்கிவந்த இறைவர் கஞ்சுகம் அணிந்திருந்த காட்சியினைச் சேக்கிழார்.

"செம்பரிதி கடலளித்த செக்கரொளி யினையந்திப்
பம்புமிருள் செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத்
தம்பழைய கரியுரிவை கொண்டுசமைத் ததுசாத்தும்
அம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தின் ஒளிவிளங்க"

என்று பாடுகின்றார். 146

இறைவர்தம் பவளமேனியை அந்திச்செக்கராகவும் அவரணிந்துள்ள கரியின் உரிவையினால் செய்யப்பெற்ற கஞ்சுகத்தை இருள்செறியும் பொழுதாகவும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அந்திச்செக்கரொளியினைச் செம்பரிதி கடலளித்ததாக ஆசிரியர் குறிப்பது நயம்சான்ற சொற்றொடராக உள்ளது. இறைவர்மேனி மீது கஞ்சுகம் அணியப்பெற்றிருந்த காட்சி அந்திச்செக்கர் ஒளியினை இருள்செறிபொழுது அணைந்து சூழ்வது போன்றுள்ளது என்கிறார் சேக்கிழார். சிவபெருமானின் தோற்றத்தைப் படிப்பவர் மனத்துள் எழச்செய்கின்ற பொருத்தமான ஒன்றாக அந்திச்செக்கர் உருக்காட்சி விளங்குகிறது.

## (ஆ) தீ உருக்காட்சி

சைவசமயத்தில் வேள்வி என்பது சிறந்த இடம்பெறுகிறது. தீயோம்புதல் வாயிலாக இறைவரை வழிபடுதல் என்ற மரபு சைவசமயத்தினர்தம் உயர்நெறியாக விளங்குகிறது. "ஆய்ந்தமெய்ப்பொருள் நீறென வளர்க்குமக் காப்பில், ஏய்ந்த மூன்றுதீ வளர்த்துளார் இருபிறப்பாளர், நீந்து நல்லறம் நீர்மையின் வளர்க்குமத் தீயை, வாய்ந்த கற்புடன் நான்கென வளர்ப்பார்கள் மடவார்" என்பது திருநீலநக்க நாயனார்தம் பதியாகிய சாத்தமங்கையைப் பற்றிய சிறப்பினைத் தெரிவிக்கும் செய்தியாகும். 1 ஆ சைவசமயத்தில் தோய்ந்திருந்த நெஞ்சினராகிய சேக்கிழார் வெள்வித் தீயைப் பெரிதும் போற்றுகின்றார். தீயின் உருவில் திகழ்கின்ற தம் இறைவரை எண்ணுவதில் ஆர்வம்

உடையராய் விளங்குகின்றார். "தீமேனியானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" [1] என்பர் மணிவாசகர். சைவ ஆகமநெறியில் திளைத்தவராகிய அவர் தீ தளிர்ப்பதையும், துள்ளுவதையும், அதன் பிழம்பு ஒளிர்வதையும் கண்டு திளைத்தவர் எனவும் கருதலாம். சைவ சமயத்தைப் பேணி வளர்த்த சோழமன்னர்தம் அமைச்சராக அவர் இருந்தமையால் வேள்விகள் பலவற்றைத் தாம் முன்னின்று நடத்திய அனுபவம் பெற்றிருந்ததார் எனலாம். அவ்வனுபவத்தின் வெளியீடாகத் தீ உருக்காட்சி உள்ளது எனலாம்.

## பங்கயமாம் பொங்கெரி:

திருஞானசம்பந்தர் புராணத்தில் சீகாழித்தலத்தின் பெருமையினை வருணிக்கும் சேக்கிழார்.

"பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரம்நீள் இலைகடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களுமா குதிவேட்குந் தகையவென மணந்துளதால்" [2]

என்கிறார். தாமரைமலர் இதழ்களின் ஒளியை வேள்விக் குண்டத்திலிருந்து பொங்கி எழும் தீச்சுடர்களாகக் காண்கிறது சேக்கிழார் நெஞ்சம். "அழனக்க பங்கயம்" 'நீரிடை நெருப்பு" எனச்சேக்கிழார் குறிப்பதும் குறிப்பிடத்தக்கவை. [3]

## சிவலிங்கம் - தழற்பிழம்பு:

"சாக்கிய நாயனாருக்குச் சிவனாரின் அருவுருவத் தோற்றத்தின் நிகழ் குறியாக விளங்கும் சிவலிங்கம் என்பது அயனும் அரியும் காண்பதற்கு நடுநின்ற தழற்பிழம்புபோல் தோன்றியது" [3அ] எனச் சேக்கிழார் குறிக்கின்றார்.

திருவாறை மேற்றளி என்ற பதியின்கண் திகழ்கின்ற இறைவரைச் "செந்தீயின் உருவாளன்" என்று குறிப்பது நினைத்தற்குரியது. [4]

## திண்ணானார் - பிழம்பு:

திருக்காளத்தியப்பர்தம் திருநோக்குப்பட்டபொழுது வேதகத்தால் இரும்பு பொன்னாக மாறியமை போன்று

திண்ணனார்தம் யாக்கைதன் பரிசும் வினையிரண்டும் சாரும் மலம் மூன்றும் நீங்கி அன்பின் பிழம்பாய் மாறிவிட்டார். பிழம்பு திண்ணனார்தம் உயர்நிலையைக் காட்டும் காட்சிப்புல உருக்காட்சியாகப் பொருத்தமுற விளங்குகிறது. [5]

## காந்தள் மலர் - எரி:

சிவந்த நிறத்துடன் திகழும் காந்தள் மலரைக் குறிக்கும் ஆசிரியர் அம்மலர் தன்னிடமிருந்து எரியை அவிழ்க்கிறது என்று புதுமைநயத்துடன் குறிப்பிடுகிறார். "எரி அவிழ் காந்தள்" என்பது அம்மலரை நினைவில் எழுப்புவதாக உள்ளது. [6]

## இறைவர்தம் சடைமுடி - எரி தளிர்த்தல்:

திருநீலகண்டரை விளக்கம் காண அருட்சிவயோகிகளாக வந்த இறைவர்தம் நீண்டசடையை வருணிக்கும் சேக்கிழார்.

"... எரிதளிர்த்தன்ன நீண்ட
மின்னொளிர் சடை ..."

என்கிறார். [7] தளிர்விட்டு நெருப்பு நீண்டு மின்னி, எழுகின்ற காட்சியைப்போல் இறைவர்தம் நீண்ட சடையின் தோற்றம் விளங்குகிறது.

## இறைவர் சினம் - எரி துள்ளல்:

பாதுகாத்து வைத்துத் தாம் வந்து கேட்கும்பொழுது தரவேண்டும் எனத் தம்மிடம் கூறித் தரப்பெற்ற கோவணத்தை, இறைவரிடம் திருப்பித் தரவியலாமல் துயருற்றார் அமர்நீதி நாயனார். 'வாணிபம் அழகிதே உமக்கு' என்று இறைவர் எரிதுள்ளினாற்போல் வெகுண்டார் எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். [8] எரி துள்ளித்துள்ளி எழுவதுபோன்று இறைவர் வெகுண்டார் என்பது கருத்து. எரியினது துள்ளலாகிய நிகழ்ச்சி இறைவர்தம் சீற்றத்தைப் பொருத்தமுற விளக்குகிறது. தீ வண்ணராகிய இறைவரின் சீற்றத்தைத் தீ உருக்காட்சி கொண்டு விளக்குவது நயமுடைது.

**மாவிரதர் வடிவம் - பொடிமூடுதழல்:**

மானக்கஞ்சாற நாயனார்தம் திருத்தொண்டின் சிறப்பை உலகுக்கு உணர்த்தும் நோக்குடன் இறைவர்.

"முண்ட நிறைநெற்றியின்மேல் முண்டித்த திருமுடியில்
கொண்டசிகை முச்சியின்கண் கோத்தணிந்த எற்புமணி
பண்டொருவன் உடல் அங்கம் பரித்தநாள் அதுகடைந்த
வெண்தரள மெனக்காதின் மிசையசையுங் குண்டலமும்" [9]

அணிந்தவராய், எலும்பின் ஒளிமணி கோத்தணிந்த தாழ்வடமும், பட்டிகையும், கேசவடப்பூணுநூலும், திருநீற்றுப் பொக்கணமும், தனிமணிகோத்தணிந்த ஒளிர் சூத்திரமும், அருமறை-நூற் கோவணத்தின் மேல் அசையும் திருவுடையும் உடையவராய், தம் திருவடியில் பஞ்சமுத்திரை திகழ்ந்திலங்க, [10]

"பொடிமூடு தழலெனனத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்"

வந்தார் [11] எனச் சேக்கிழார் குறிக்கின்றார்.

இறைவரது திருமேனி தழல்போன்றது எனவும், திருநீற்றின் பரப்பு அத்தழல் போன்ற மேனியை மூடுகின்ற வெண்பொடி எனவும் சேக் கிழார் குறிக்கின்றார்.

அமர்நீதி நாயனார்முன் இறைவர் வெகுண்டமை, "எரிதுள்ளல்" எனக் குறிக்கப்படுகிறது. மானக்கஞ்சாற நாயனார்முன் இறைவர் மாவிரதர் கோலத்தில் அமைதியுடன் வருகின்றமை. "பொடிமூடுதழல்" என இயம்பப்படுகிறது. சேக்கிழார் இவ்வாறு தீ உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாக இறைவர்தம் செயற்பாட்டு நிலையையும், அமைதி நிலையையும், காட்சிப்படுத்துவது பொருத்தமும், புதுமையும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும், ஆழமும் உடையதாக உள்ளது.

## (இ) நீர்

**வெள்ள உருக்காட்சி:**

சேக்கிழார் வெள்ள உருக்காட்சியைப் (Flood image) பெரியபுராணத்தில் ஆள்கின்றார். அடியார்களின் அன்புநிலை,

இன்பநிலை, இறைவர் அருள்நிலை, அடியார்களின் தொகுதி, மலர்களின் தொகுதி, சோதி, கொடிகளின் தொகுதி, ஞானம், பிறவி, குதிரை, யானைகளின் தொகுதி, அழகு ஆகியவற்றை விளக்கிக்காட்டும் வகையில் இவ்வுருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.

## சுந்தரர் இன்பம் - வெள்ளம்:

"திருவாரூர்ப் பூங்கோயிலில் வீற்றிருக்கும் புற்றிடங்கொண்ட புராதனராகிய சிவபெருமானை மண்ணில் வீழ்ந்திறைஞ்சினார் சுந்தரர். அன்பு பெருக உருகி, உள்ளம் அலைய அட்டாங்க பஞ்சாங்கமாக வணங்கினார். முடிவிலாக் காதல் முதிர்ந்து ஓங்கியது. புலன்களனைத்தும் ஒன்றியமையால் நாயகன் சேவடி எய்தப்பெற்றார். அதன் விளைவாக உண்டான இன்பவெள்ளத்தில் மூழ்கினார். பின்பு இன்னிசை வண்டமிழ் மாலை பாடினார். "இவ்வாறு, சுந்தரரின் இறையன்பினால் உண்டான இன்பநிலையை வெள்ள உருக்காட்சியால் குறிக்கிறார் ஆசிரியர். [1]

## திண்ணனார் அன்பு - வெள்ளக்கால்:

திருக்காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு நாள்தோறும் ஆகமம் விதித்துள்ளபடி வழிபாடு செய்யும் சிவகோசரியார் என்னும் மறையவரிடம் இறைவர் கனவில் தோன்றி கண்ணப்பநாயனார் தம்மாட்டுக் கொண்டுள்ள அன்பைப் பற்றிக் கூறுகின்றார். இராப்பகல் கண்விழித்து இறைவரைக் காக்கும் திண்ணனார் (கண்ணப்பநாயனார்) ஒருகையில் ஊனிறைச்சியும், ஒருகையில் வில்லும், தலையில் பூக்களும், வாயில் நீரும், கொண்டுவந்து பூசனை செய்வார். தாம் தம் தலையில் சுமந்துவந்த மலர்களைச் சாத்தும் பொருட்டுச் சிவகோசரியார் இட்ட பூவைத் தம் செருப்படியால் இறைவர் தலையிலிருந்து அகற்றுவார். இச்செருப்படியை இறைவர். "விருப்புறுமன்பெனும் வெள்ளக்கால் பெருகிற்றென வீழ்ந்த செருப்படி அவ்விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்" என்று சிவகோசரியாரிடம் குறிப்பிடுகிறார். நாயனாரின் அன்பு வெள்ள உருக்காட்சியால் குறிக்கப்படுகிறது. [2] குழந்தை உருக்காட்சி இணைந்துள்ள வெள்ள உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.

### குழலிசை - மடைதிறப்பு:

கொன்றை மரத்தைக் கண்ட ஆனாயர் அதனைச் சிவபெருமானாகவே எண்ணி உள்ளம் உருகினார். ஒன்றிய அவர் சிந்தையில் ஊறிய அன்பு வெள்ளமாயிற்று.[3] அதனைக் குழலொலியால் அமுத இசையாக்கினார்.[4] அன்பு வெள்ளத்தைக் குழலொலியால் அமுத இசையாக்கிய நிகழ்ச்சியை ஆசிரியர். "உடையவர் பால் மடை திறந்தார்" என்ற தொடரால் குறிப்பிடுகிறார். அன்பு, தேங்கியிருக்கும் வெள்ளமாகவும், குழல்துளைகள், மடைக்கண்ணாகவும், விரல்கொண்டு வாசித்தல் திறத்தலாகவும், சேக்கிழாரால் குறிப்பிடப்படுகின்றன. வெள்ள உருக்காட்சி, அணை, மடைதிறத்தல் ஆகிய உருக்காட்சிகளுடன் இணைந்து வந்துள்ளது. இதனால் நாயனாரின் அன்புமிகுதி, அதைத் தாங்கிக்கொள்ள இயலாத நிலை ஆகியவை குறிக்கப்படுகின்றன.

### பாண்டிமாதேவி, குலச்சிறையார் மகிழ்ச்சி -

### அணைகடந்த வெள்ளம்:

மதுரைக்கு வருகைபுரிந்த சம்பந்தர் சைவமடம் ஒன்றில் தங்கியிருந்தார். சமணர்கள், அம்மடத்திற்குத் தீ வைத்தனர். இதனையறிந்த சம்பந்தர் "சமணரிட்ட தீத்தழல் போய்ப் பையவே சென்று பாண்டியனுக்கு ஆகட்டும்" என்று பணித்தார். அத்தீ தென்னனை மேவி வெப்பு நோயாகி வருத்தியது. சமணர்கள் பாண்டியனைக் காத்திட முயன்று தோற்றனர். பாண்டிமாதேவியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் மன்னனிடம், "சம்பந்தர் இவ்வெப்பினைத் தீர்க்கலாயினர்" என்றனர். பாண்டியன் அவர் கருத்துக்கு இசைவு தெரிவித்தான். அப்பொழுது அவ்விருவர்க்கும் உண்டான மகிழ்ச்சியை " அணையை நூக்கிச் சென்ற நீர் வெள்ளம் போலும் காதல் வெள்ளத்தில் செல்வார்" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். மகிழ்ச்சியின் பெருக்கு இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகிறது.[5]

### மங்கையர்க்கரசி - பேரன்பின் வெள்ளம்:

மங்கையர்க்கரசியாரைப் "பேரன்பின் வெள்ளமனைய புகழ்மானியார்" என்று குறிக்கும் தொடர் அவ்வம்மையாரின்

திப்பெருக்கை விளக்குகிறது. அம்மையாரே பேரன்பின் ...ளமாகத் தோன்றுகிறார் என்று ஆசிரியர் கூறுவது சிற... ...ன்று, புதுமையானது.[6]

## சம... பள்ளத்தி... ...னல்:

திருக்காளத்திக்குச் சென்ற சம்பந்தர் இறைவரை வணங்கினார். கண்ணப்பநாயனாரின் மெய்ம்மை அன்பின் வடிவையும் அந்நாயனார் அன்பின் உள்ளே மன்னும் இறைவரையும், உடன்கண்டார், இவ்விருவரையும் கண்ட அவர் உள்ளத்தில் விருப்பம் மேலும் பொங்கி எழுந்தது. இறைவரை அங்குக் கும்பிட்டார். இங்குக் கண்ணப்பநாயனாரை வணங்கியபொழுது கும்பிட்ட பயன் கண்டார். "பொங்கிய அவ்வன்பு, பள்ளத்தில் இழிபுனல்போல் பரந்து சென்றது" என்கிறார் ஆசிரியர்.[7]

## சம்பந்தர் கோயிலுக்குள் செல்லல் - பள்ளநீர்ச்செலவு:

சம்பந்தர் திருமயிலையில் இறைவரை வணங்கத் திருக்கோயிலுக்கு மிகுந்த ஆர்வத்துடன் விரைவாகச் சென்ற பாங்கினைக் குறிக்கும் சேக்கிழார் "பள்ளநீர்ச் செலவெனப் பரமர் கோயிலின்கண் உள்ளெழுந்தருளினார்" என்கிறார். இவ்வுருக்காட்சியின் பொருத்தம் காணத்தக்கது.[8]

வெள்ளம் பெருக்கெடுத்துச் செல்வதையும் பள்ளத்தை நோக்கி அது விரைந்து செல்வதையும் நேரிற்கண்ட அனுபவம் உடைய ஆசிரியர் அன்பின் மிகுதிப்பாட்டை வெள்ளத்தின் பெருக்காகவும், விரைவாகவும் குறிப்பிடுகிறார். காவிரி பாயும் சோழநாட்டில் வெள்ளப்பெருக்கு பருவகாலங்களில் ஏற்படுவது இயல்பு. எனவே வெள்ளம் பற்றிய அனுபவ அறிவினர் சேக்கிழார் எனலாம்.

## சுந்தரர் கண்பொழி நீர் - வெள்ளம்:

திருவானைக்காவில் இறைவரைத் தொழும்பொழுது சுந்தரரின் மெய்முகிழ்த்தது. பக்திப்பெருக்கினால் கண்ணீர் பெருகியது. இதனைச் சேக்கிழார் "கண்பொழிநீர் வெள்ளம் பரப்ப விம்முவார்" என்ற தொடரால் விளக்குகிறார்.[8அ]

"கண்டவர் கண்கள் காதல்நீர் வெள்ளம் பொழிந என்ற தொடரில் சுந்தரரின் இறையன்பின் பெருக்கு காட்டப்படுகிறது. [9]

"தில்லைநடராசர் தம் கோலத்தைச் சுந்தரருக் நேர்காட்டி அருளினார். அதன் விளைவாய் கரை கடந்த அன் சுந்தரரின் என்பை உருக்கியது. இன்ப வெள்ளத்தில் திளைத்த அந்த நாயனார். " இவ்வாறு நாயனாரின் அன்பும், இன்பமு வெள்ள உருக்காட்சியால் விளக்கப்படுகின்றன. [9அ]

## சிறுத்தொண்டர் இறை... பள்ளமடை:

சிறுத்தொண்ட... நாயனாரின் இறையன்பை கூறுமிடத்து " கூற்றுதைத்த ...அன்பு பள்ளமடையாய் என்னு பயின்றுவரும் பண்புடையார்' என்று ஆசிரியர் குறிக்கின்றா "பள்ளமடை" என்பது நாயனாரின் அன்புவெள்ளத்தை குறிக்கிறது. [10] பள்ளமான மடைப்பகுதியில் நீர் எப்பொழுத தேங்கி நிறைந்திருப்பது போல் நாயனாரின் உள்ளத்தில் அன் நிறைந்திருக்கிறது. அந்த அன்புவெள்ளம் தொண்டு என்னும் மடை வழியாக இடையீடின்றி வழிந்தோடுகிறது. சிறுத்தொண்டரி இறையன்பை இப்படிக் காண்கிறார் ஆசிரியர். உழவுத்தொழிலை தம் வாழ்வாக உடைய வேளாளர் இனத்தில் பிறந்த சேக்கிழ பள்ளமடையை உருக்காட்சியாக ஆள்கின்ற பொருத்த காணத்தக்கது.

## ஆனாயர் குழலிசை - வெள்ளம்:

"ஆனாயநாயனாரின் குழலொலி, மதுரவொ வெள்ளமாகப் பெருக்கெடுத்து எங்கும் நிறைந்தது. பி தேவருலகத்துக் கற்பகத்தருவின் தேனுடன் கலந்தது. இவ்வா விண்ணும் மண்ணும் இசையால் ஒன்றாகும் தன்ம குறிக்கப்படுகிறது. எல்லாவுயிர்களின் செவிகளிலும் இன்னமு இசைவெள்ளம் வார்க்கப்படுகிறது." இவ்வாறு ஆனாயரி குழலிசையை வெள்ள உருக்காட்சியில் காட்டுவதுடன் அத இனிமையையும் பழங்கதை உருக்காட்சி (Myth image) புலன்மாற் உருக்காட்சி (Synaesthetic image) ஆகியவற்றுடன் இணைத்துக்

கூறுவது குறிப்பிடத்தக்கது. ஒரு வெள்ளம் இன்னொரு வெள்ளத்துடன் கலப்பதாகக் கூறப்படுவது காணத்தக்கது. ஆனாயர் குழலிசை யாண்டும் நீக்கமற பரவியமையும், அதன் இனிமையும் வெள்ள உருக்காட்சியால் விளக்கப்படுகின்றன. [11] ஆசிரியர் இசைக்கலை ஆர்வம் உடையவர் என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. இசையின்பத்தில் ஈடுபாடு மிக்கவர் என்பதையும் இவ்வுருக்காட்சியால் அறியலாம்.

## சுந்தரர் இன்பம் - அணையை விட்ட வெள்ளம்:

திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்தார் சுந்தரர். அவ்வூரை விட்டுச் செல்வதில்லை என்று சங்கிலியாருக்குத் தாமளித்த வாக்குறுதியை மீறினார். அதன் விளைவால் அவருடைய பார்வை போயிற்று. பின் இறைவரை மிகப் பணிந்து வேண்டிக்கொண்டமையால் பார்வையையும், அழகிய தம் மேனியையும், மீண்டும் பெற்றார். திருவாரூருக்கு வந்தார். சுந்தரர் சங்கிலியாரை மணந்துள்ளார் என்ற செய்தியறிந்த பரவையார் அவரை ஏற்க மறுத்தார். எனவே சுந்தரர் திருவாரூர் இறைவரைத் தம் பொருட்டுப் பரவையாரிடம் தூதுவராகச் செல்ல வேண்டினார். அவர் வேண்டுகோளை ஏற்று இறைவர் வேதியர் வடிவம் தாங்கிப் பரவையாரிடம் சென்று சுந்தரரை ஏற்கும்படி கூறினார். பரவையார் உடன்படவில்லை. இறைவரும் சுந்தரரிடம் திரும்பிவந்தார். ஆனால் பரவையாரின் இசைவுபெற்று வருகிறார் என ஆர்வத்துடன் அவரை எதிர்பார்த்துக்கொண்டிருந்த சுந்தரர் மிகுபேரின்பம் அடைந்தார். அந்நிலையை விளக்கும் சேக்கிழார் கீழ்வருமாறு கூறுகிறார். "அணையைவிட்ட உரவுநீர் வெள்ளம்போல அவருக்கு மகிழ்ச்சி பொங்கியது." சுந்தரரின் மகிழ்ச்சி நிலையைத் தெரிவிக்கும் பொருத்தமான உருக்காட்சியாக இது விளங்குகிறது. [12] அணையின் கதவுகள் திறக்கப்பட்டவுடன் தேங்கிக் கிடந்த நீர் மிகுந்த வேகமாகப் பொங்கிக்கொண்டு அணையிலிருந்து வெளிவருவதை நேரிற்கண்ட ஆசிரியர் இத்தகைய உருக்காட்சியை ஆள்கிறார். சுந்தரர் உணர்ச்சியைக் காட்சிப்படுத்துவதாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

## சுந்தரர், சேரமான்பெருமாள் இன்பநிலை - வெள்ளத்தில் அலைதல்:

சேரமான்பெருமாள் நாயனார் திருவாரூருக்கு வருகைபுரிந்து சுந்தரரைச் சந்தித்தார். இருவரும் ஒருவரையொருவர் ஆர்வத்துடன் தழுவிக்கொண்டனர். அவர்கள் இருவருக்கும் உண்டான இன்பநிலையை வெள்ள உருக்காட்சியால் விளக்குகிறார் சேக்கிழார். இன்பமாகிய வெள்ளத்தில் அகப்பட்ட அவ்விருவரும் நீந்திக்கொண்டே இருந்தனர். இவ்வெள்ளத்தினது ஈர்ப்பின் காரணமாகக் கரையேற முடியாமல் அலைந்துகொண்டே இருந்தனர். என்பெல்லாம் உருக உயிரொன்றி உடம்புமொன்றாம் எனத்தோன்றினர்.[13] வெள்ளத்தின் ஈர்ப்பாற்றலை, விஸ்ரவாற்றலைத் தாங்கமுடியாமல் தத்தளிப்பவர் நிலையை மனத்துட்கொண்டு இவ்வுருக்காட்சியைப் படைத்துள்ளார் ஆசிரியர். சைவசமயத் தொண்டர்கள் தம்முள் ஒருவர்மீது ஒருவர் கொண்டிருந்த அன்பின் மிகுதிப்பாட்டையும், அவ்வன்பின் பயனாகிய இன்பப்பெருக்கையும் ஆசிரியர் சிறப்பிப்பதில் ஆர்வம் உடையவராய் விளங்குவதை வெள்ள உருக்காட்சியால் அறியமுடிகிறது. தொண்டர்களிடையே நிலவிய அன்பின் திறத்தை ஆசிரியர் 'ஒருவர் ஒருவரிற் கலந்த உணர்வு' என்று குறிப்பிடுகின்றார். அந்தணாளர் பெருமானாகிய சுந்தரரும் அரசர்பெருமானாகிய சேரமான்பெருமாள் நாயனாரும் ஒருவரிடத்து ஒருவர் மிகுந்த அன்புகொண்டு விளங்கினர் என்பதையும், அத்தகைய அன்பின் விளைவாய்ப் பேரின்பம் பெற்றனர் என்பதையும் வெள்ள உருக்காட்சி சிறப்பித்துக் காட்டுகிறது. தொண்டர்களிடையே நிலவிய அன்பு நிலையும், அதன் பயனாகிய இன்பமும் சேக்கிழார் நெஞ்சத்தை நெகிழச்செய்தன எனலாம்.

## நாவரசர் ஆனந்தநிலை - வெள்ளத்தில் மூழ்குதல்:

திருநாவுக்கரசரைப் பல்லவமன்னன் மகேந்திரன் சமணரின் சொற்கேட்டு வெண்ணீற்றறையில் இட்டான். 14 ஆனால் அந்நீற்றறையோ அவருக்கு இறைவர் திருவடிநிழல் போன்று குளிர்ச்சி தந்தது. 15 நீற்றறையைச் சமணர்கள் திறந்து பார்த்தபோது அவர் இருந்த நிலையைக் குறிக்கும் சேக்கிழார், "ஆனந்த

வெள்ளத்தினிடை மூழ்கியிருந்தார்" என்று கூறுகிறார். [16] நாயனார் இறைவரின் திருவருளால் தமக்குண்டான ஆனந்தத்தில் தோய்ந்திருந்தமை இவ்வாறு கூறப்படுகிறது. வெள்ளத்தில் மூழ்கியவரின் தன்னுணர்வற்ற நிலை நினைத்தற்குரியது.

## நாவரசர் பெற்ற இறையருள் - பெருவெள்ளம்:

பரசமயமாகிய சமணசமயத்தில் சேர்ந்திருந்தார் நாவரசர். அவருடைய தமக்கையார் திலகவதியார் தம் தம்பி பிற சமயம் சேர்ந்ததை எண்ணி வருந்தினார். திருவதிகையில் இறைவரிடம், தம் தம்பி "அவநெறியான சமண சமயத்தில் வீழாமல் அருள்க" என வேண்டினார். [17] அவர் வேண்டுகோட்கிணங்க இறைவர் சூலை வேதனையை நாவரசருக்களித்தார். அதன் விளைவாக நாவரசர் மிகவும் துன்புற்றார். சமணர்கள் மந்திரத்தால் அவ்வேதனை நீங்கவில்லை. நாவரசர் தம் ஊட்டுவான் மூலம் தமக்கைக்குத் தம் வேதனையைத் தெரிவித்தார். திலகவதியார் தம் தம்பியிருக்கும் சமணர் இருப்பிற்கு வர மறுத்துவிட்டார். அதனைக்கேட்ட நாவரசர் தமக்கையாரிடம் செல்லத் துணிந்தார். சமணசமயச் சார்பை விட்டொழிந்தார். திலகவதியார் இருந்த திருமடத்தைச் சென்றணைந்தார். தமக்கையாரிடம் சூலையின் கொடுமையிலிருந்து தம்மைக் காத்திடுமாறு வேண்டி அவர் திருவடிகளில் வீழ்ந்தார். அம்மையார் இறைவரின் அருளை நினைத்தவராய்த் தம்பியைத் தம் கரத்தால் எடுத்தார். இறைவருக்குப் பணிசெய்யுமாறு தம்பிக்குப் பணிந்தார். அஞ்செழுத்தோதித் திருநீற்றை அவரிடம் கொடுத்தார். தமக்கையாரிடம் திருவதிகைத் திருக்கோயிலுக்குச் சென்று இறைவரை வழிபட்டார் நாவரசர். சூலைப்பிணி அவரைவிட்டு அகன்றது. இறைவரின் கருணையை எண்ணி உருகினார் நாவரசர். "ஆழ்ந்த குழியில் கிடந்து கரையேற முடியாமல் இருந்த நான் மேலே எழுவதற்கான வகையில் கருணைப் பெருவெள்ளத்தை அளித்தற்கு நான் தகுதியுடையனோ? என்று இறைவரை நோக்கி வினவினார் அவர். [18] ஈண்டு இறைவருடைய கருணை, குழியில் நிறைந்து பெருகிய வெள்ளமாகக் காட்டப்படுகிறது. குழி உருக்காட்சியுடன் இணைந்த வெள்ள உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது. திருநாவுக்கரசர் பரசமயத்தில் ஈடுபட்டமை குழி உருக்காட்சியால் விளக்கப்படுகிறது. [19]

## சம்பந்தர் கண்ட இறையருள் - வெள்ளம்:

திருமயிலையில் வாழ்ந்த சிவனடியாரும் பெருவணிகச் செல்வருமான சிவநேசரின் மகள் பூம்பாவை மலர் பறிக்கும்பொழுது விடஅரவு தீண்டப்பெற்று இறந்தார். சம்பந்தருக்குரியாள் என்று கருதி வளர்க்கப்பட்ட அவளுடைய எலும்பைக் குடத்திலிட்டு வைத்திருந்தார் சிவநேசர். திருமயிலைக்கு வருகைபுரிந்த சம்பந்தருக்குச் சிறந்த வரவேற்பு, மகிழ்ச்சியுடன் செய்தார் அவ்வணிகர். மாதவர் வாயிலாக அவருடைய மகள் இறந்துவிட்ட செய்தியையும் பானையில் அவள் எலும்பும் சாம்பலும் இடப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வரும் செய்தியையும் அறிந்தார் சம்பந்தர். காபாலிச்சரத்து இறைவரை வணங்கினார். என்பு நிறைந்த குடத்தைத் திருக்கோயில் வாசற்குக்கொண்டு வருமாறு சிவநேசரிடம் கூறினார். குடம் கொண்டுவரப்பட்டுக் கோயில் வாசலில் வைக்கப்பட்டது. விண்ணவரும் மண்ணவரும் வியக்க "மட்டிட்ட" எனத்தொடங்கும் பதிகம் பாடினார். பூம்பாவை அழகுப்பொலிவுடன் உயிர் பெற்றெழுந்தாள். அழகினுக்கணியாய் நின்றாள். 20 பிரம்மன் தான் படைத்த திலோத்தமையின் எழிலைத் தன் நான்கு முகங்களால் கண்டான். அவளைவிட அழகுமிக்கவளாக விளங்கும் பூம்பாவையைப் பதினாறாண்டுடைய சம்பந்தர் ஆயிரம் முகங்களால் இறைவருடைய கருணைவெள்ளமாகவே கண்டார். [21]

## திருவருட்கருணை - வெள்ளம்:

திருவாரூரில் இறைவர் சுந்தரர் வேண்டுகோட்கிணங்கப் பரவையாரிடம் தூதுசென்று அவர்தம் செற்றம் தணிவித்தார். இறைவர், 'சென்றணைநீ அச்சேயிழைபால்' எனச் சுந்தரரிடம் கூறினார். பரவையார்தம் மாளிகைக்குச் சுந்தரர் வந்தபொழுது, தம் பரிசனத்துடன் வரவேற்றார். சுந்தரரைக் கண்டபோது அவரது நெஞ்சத்தில் நிறைந்திருந்த காதல் வெள்ளம் கரைகாணாது சென்றது. நாணமும் அச்சமும் மிகக்கொண்டவராய் சுந்தரரை வணங்கினார் பரவையார். அவரது செங்கையைப் பற்றிக்கொண்டு மாளிகையுட் புகுந்தார் சுந்தரர். அவ்விருவரும் இன்புற்றிருந்த நிலையை.

"இருவருந் தம்பி ரானார் தாமிடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச்சிந்தை
மருவிய இன்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவருள் ஒருவர் மேவும் நிலைமையில் உயிர்ஒன் றானார்"

என்று சேக்கிழார் பாடுகின்றார்.[21அ]

"சுந்தரரும் பரவையாரும் ஒருவரையொருவர் பொருந்திய நிலையில் உயிர் ஒன்றானார்கள். இன்பவெள்ளத்தில் அழுந்திய புணர்ச்சியைப் பெற்றார்கள்" என்ற செய்தி அவர்தம் காதல் இன்பநிலையைக் காட்டுகின்றது. எனினும் அவ்விருவரும் இறைவர் தங்கட்குச் செய்த திருவருட் கருணையாகிய வெள்ளத்தின் திறத்தினை ஆர்வம் மீதூரப்போற்றிக்கொண்டு இன்பந்துய்த்தனர் என ஆசிரியர் குறிப்பது அக்காதல் இன்ப உணர்வையும் கடவுள் உணர்வாக அமைக்கின்றது எனலாம். வெள்ள உருக்காட்சி இறைவர்தம் திருவருட்கருணை, சுந்தரர் பரவையார் காதல் இன்ப உணர்வு என்ற இரண்டினையும் சிறப்பிக்கும் உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது. அகத்திணைப் பொருளாகிய காதல் உணர்வில் கடவுள் உணர்வை இணைக்கும் சேக்கிழார் திறன் அவரது உருக்காட்சிக் கோட்பாட்டிற்குத் தனிச்சிறப்பாக அமைகிறது.

சுந்தரரிடம் பரவையாருக்கிருந்த ஊடல் இறைவர் தூது சென்றமையால் தீர்ந்தது. இருவரும் கூடினார்கள். இறைவருடைய கருணையாகிய வெள்ளத்தின் பான்மையைப் போற்றி இன்புற்றனர்.[21ஆ]

## முத்துக்களின் ஒளித்தொகுதி சிவஞானம் -

## வெள்ளப்பெருக்கு:

சம்பந்தர் திருமண மேடையில் ஏறிய காட்சிபற்றி ஆசிரியர் விவரிக்கிறார். சம்பந்தர் மேனியில் அணியப்பெற்றுள்ள முத்து நல்லணிகள் குளிர்ந்த ஒளியினை வீசுவது எல்லாவற்றுக்கும் மேலே ஓங்கிய சிவஞானப் பெருக்கானது உள்ளே நிறைந்து மேல் எழுந்து பொழிவதுபோல உள்ளது என்கிறார்.[22] கற்பனைத் திறனும், புதுமையும், ஆழமும், கிளர்ச்சியூட்டும் திறனும் உடைய உருக்காட்சியாக இது விளங்குகிறது.

## பிறவி - வெள்ளம்:

திருஞானசம்பந்தருடன், அவர்தம் திருமணத்திற்கு வந்திருந்த அனைவரும் திருப்பெருமண நல்லூரில் இறைசோதியுட் புகுந்தனர். அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது சேக்கிழார் "பிறவியாகிய வெள்ளத்தில் எல்லை காணாது அழுந்தி உருவ மென்னும் துயரக்கூட்டில் உணர்வின்றி மயங்குபவர்கள்" [23] என்று கூறுகிறார். உருவம் என்பது உடம்பைக் குறிக்கும். "உடம்பு எனப்படும் துயரம் தரும் கூட்டில் மக்கள் அடைக்கப்பட்டுள்ளனர். பிறவி எனப்படும் வெள்ளத்தில் துயரக்கூட்டில் அடைக்கப்பட்டிருக்கும் மக்கள் எல்லை காணாது அழுந்திக் கிடக்கிறார்கள்" என்ற கருத்து ஆசிரியரால் கூறப்படுகிறது. கூடு என்ற உருக்காட்சியுடன் இணைந்த வெள்ள உருக்காட்சியை ஆசிரியர் ஆள்கிறார். பிறவி, உடம்பு பற்றிய தத்துவச் செய்திகள் இவ்வுருக்காட்சியால் நயமுறக் குறிப்பிடப்படுகின்றன. ஆசிரியரின் தத்துவ உணர்வின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. வெள்ளம், துயரக்கூடு என்பன மனிதப்பிறப்பின் துன்பத்தைக் காட்சிப்படுத்துகின்றன. படிப்பவர் மனத்தில் அச்சவுணர்வை எழுப்புகின்றன.

## கருச்சுற்று - வெள்ளச்சுற்று:

சுழித்துக்கொண்டு செல்லும் வெள்ளத்தை உருக்காட்சியாக ஆசிரியர் ஆள்கிறார். சம்பந்தர் திருச்சத்திமுற்றத்து இறைவரை ஆர்வமுறப் பணிந்தேத்தினார். இறைவரைப் பற்றிக் குறிப்பிடும் சேக்கிழார், "கருச்சுற்றிலடையாமல் கைதருவார்" என்று கூறுகிறார். பிறவிக்குக் காரணமாகும் கரு, வெள்ளத்தின் சுழற்சியாகக் கூறப்படுகிறது. அந்தச் சுழலில் சிக்குண்டவருக்குக் கைகொடுத்துக் காப்பாற்றுவார் இறைவர் என்பது இத்தொடருக்குப் பொருளாகும். சுழித்துக்கொண்டு செல்லும் வெள்ளத்தில் சிக்குண்ட ஒருவரைக் கைகொடுத்து மற்றொருவர் காப்பாற்றும் செயலின் நினைவுடன் வெள்ள உருக்காட்சி யடைக்கப்பட்டுள்ளது. [24]

பிறவியின் வேகம், மக்களின் துயர், இறைவரின் திருவருள் தன்மை என்பவை உருக்காட்சியால் விளக்கப்படுகின்றன. புதுமையும் பொருத்தமும் உள்ள உருக்காட்சியாக இது விளங்குகிறது. தத்துவ விளக்கமாக இவ்வுருக்காட்சி ஆளப்பெற்றமை காணத்தக்கது. ஆசிரியர்தம் இறையன்பும் தத்துவ உணர்வும் இவ்வுருக்காட்சியால் வெளிப்படுகின்றன. வெள்ளத்தின் இயக்கம் (Movement) ஆசிரியர் மனத்தினை ஈர்த்துள்ளது. பல்வேறு வகைகளில் வெள்ளத்தின் இயக்கம் கூறப்படுகிறது.

## அருவி உருக்காட்சி:

சுந்தரர், நாவரசர், சம்பந்தர் இறையன்பின் மாட்சியை விளக்குதற்கு அருவி உருக்காட்சி ஆளப்படுகிறது. வெள்ளம், மழை என்பவற்றுடன் இவ்வுருக்காட்சி இணைந்து வருகிறது. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குதல் இறையன்பர்கள் இயல்பு என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## தொண்டர் கண்ணீர் - அருவி:

தில்லைப்பதியின் சிறப்பைச் சேக்கிழார் வருணிக்கிறார். அவ்வூரில் மாமறைகள் முழங்குகின்றன. அதனருகில் அரம்பையர் ஆடரங்குகள் முழங்குகின்றன. மேகம் சூழ்ந்த வானத்தில் ஐந்து இசைக்கருவிகள் முழங்குகின்றன. மணமுள்ள மலர் மாலைகளில் வண்டுகள் முழங்குகின்றன. இத்தகைய சூழ்நிலையில் இருக்கும் தொண்டர்கள் நெஞ்சத்தில் அன்பு பொங்குகிறது. அதன் விளைவால் அவர்தம் கண்கள் அருவிபோல் கண்ணீர் பொழிகின்றன. அவர்கள் போற்றிசைக்கும் ஒலி எங்கும் முழங்குகிறது. இம்முழக்கங்களுடன் சேர்ந்து இறைவர் சடையில் திங்களுடன் இருக்கும் கங்கை முழங்குகிறது. தில்லைநகர்த் திருவீதி இத்தனை முழக்கங்களுடன் இருந்ததாம். தொண்டர்கள் பொழியும் கண்ணீரை அருவி என்கிறார் சேக்கிழார்[25] தில்லை நடராசப்பெருமானைக் கும்பிடப்பெற்ற பேற்றினை எண்ணி இன்புறும் சுந்தரர் கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் அருவிபோல் சொரிந்தது என்கிறார் சேக்கிழார். திருக்கச்சூர் இறைவரை வழிபடும்பொழுது அருவிபோல் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார்[26] சுந்தரர் எனவும் குறிக்கப்படுகிறது.

நாவரசர் கண்ணீர் மல்கியமை ஓரிடத்தில் இவ்வுருக்காட்சியால் கூறப்படுகிறது.[27] திருவீழிமிழலை இறைவரைத் தொழுது வழிபட்டபொழுது கலந்த அன்பு கரைந்துருக அவர் மெய்முழுதும் கண்ணீர் அருவியென விரவியது என்கிறார் சேக்கிழார்.

சம்பந்தர் கண்ணீர் மல்கியமை பதின்மூன்று இடங்களில் இவ்வுருக்காட்சியால் கூறப்படுகிறது.[28] "அருவிசொரி திருநயனம்" "அன்புநீடிய அருவிகள்பொழிய" "கண் அருவிசெய்ய" செங்கண் அருவிகள் பொழிய" "கண்ணருவி சொரிந்திழிய" "அருவிகள் வார்வுற" "மலர்க்கண்ணீர் அருவி" "செங்கண்நீர்தரும் அருவி" "மண்டியகண் அருவி நீர்பாய" "காதலினால் கண்ணருவி பாய்ந்தொழுக" "பம்புதுளிக்கண்ணருவி" "பங்கயக்கண் அருவி" "பரவிய கண்ணருவி" என்ற தொடர்கள் நினைத்தற்குரியவை. "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தம்மை நல்ல நெறிக்கு உய்ப்பது நாதன்நாமம் நமச்சிவாய " என்று சம்பந்தர் தேவாரத்தில் குறிப்பதை மனத்துட்கொண்டுசேக்கிழார் அருவி உருக்காட்சியைப் படைத்துள்ளார் எனக் கருதலாம்.[29]

## அடியார்மனம் - பொய்கை:

அமர்நீதிநாயனாரின் அன்பெனும் தூநெறியை உலகுக்குக் காட்டும் கருத்துடன் இறைவர் மறைக்குலப் பிரமசாரியின் வடிவில் வந்தார்.அவ்வாறு வந்த இறைவர் திருவடியை,

> "வஞ்ச வல்வினைக் கறுப்பறும் மனத்த டியார்கள்
> நெஞ்சில் நீங்கிடா அடிமலர்..."

என்று சேக்கிழார் வருணிக்கிறார். இறைவர் திருவடிமலர் எனப்படுவதால் அடியார்கள் நெஞ்சம் பொய்கையென்று உய்த்துணர வாய்ப்புள்ளது.[30]

## குருதி - மடு:

போர்க்களத்தில் குருதி மடுவினைப்போல் காட்சியளிக்கிறது என்று குருதியின் மிகுதிப்பாட்டை ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[31]

இறைவரை வழிபடும் அடியார்கட்கு உண்டாகின்ற இன்பநிலையை வெள்ள உருக்காட்சி விளக்குகிறது. "விருப்புறும் அன்பெனும் வெள்ளககால் பெருகிற்று" என்ற தொடரிலுள்ள வெள்ள உருக்காட்சி கண்ணப்பநாயனாரின் இறையன்புத் திறனைச் சிறப்பித்துக் காட்டுகிறது. இசையை வெள்ளமாகக் குறிப்பிடுகின்றார் சேக்கிழார். "பேரன்பின் வெள்ளமனைய புகழ்மானியார்" என்று மங்கையர்க்கரசியார் குறிக்கப்படுவது புதுமைநிறைந்ததாகவும் கிளர்ச்சியூட்டும் திறனுடையதாகவும் விளங்கும் வெள்ள உருக்காட்சியாக உள்ளது. அணைகடந்த வெள்ளம், பள்ளத்தில் இழிபுனல், பள்ளமடை, அணைவிட்ட வெள்ளம் என வெள்ளத்தின் பல்வேறு நிலைகளைப் பூம்புனல் நாடாகிய சோழநாட்டின் முதலமைச்சராயிருந்த சேக்கிழார் தாமே நேரில்கண்டு அனுபவித்திருக்கக்கூடும் என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கின்றது. வெள்ளத்தில் மூழ்குதல், அலைதல் போன்ற நிலைகள் இவ்வுருக்காட்சியாக வந்து நாயனார்தம் மகிழ்ச்சியின் மிகுதிப்பாட்டைத் தெரிவிக்கின்றன. பெரியபுராணத்தின் தலைமைச்சுவையாக விளங்கும் பக்திச்சுவையை மிகுவிக்கும் உருக்காட்சியாக இது விளங்குகிறது. வெள்ளத்தால் உண்டாகும் சீரழிவுகளைப் பற்றி விளக்கும் வகையில் வெள்ள உருக்காட்சி ஆளப்படுவதுண்டு. சேக்கிழார் இவ்வுருக்காட்சியால் திருத்தொண்டர்தம் அன்பு, இன்பம், இறைவர் அருள் ஆகியவற்றை விளக்குவது அவரது உருக்காட்சியின் உயர்தனிச் சிறப்பைக் காட்டுகிறது.. அவரது கற்பனையில் வெள்ளம் சிறந்த இடம்பெற்றுள்ளமையை இவ்வுருக்காட்சி எடுத்துக் காட்டுகிறது. வெறும் அலங்காரமாக வராமல் பாடுபொருளை விளக்குவதாகவும் அழகுபடுத்துவதாகவும், உயர்த்துவதாகவும் இவ்வுருக்காட்சி இயங்குகிறது எனலாம். பிறவியை வெள்ளமாகவும் உடம்பினை அதனுள் அழுந்தியுள்ள துயரக்கடாகவும் சேக்கிழார் குறிப்பது அவரது தத்துவ உணர்வைக் காட்டுகிறது.

வெள்ளத்தில் தோன்றும் சுழற்சியை உருக்காட்சியாகப் படைத்துக் கருச்சுற்றினை ஆசிரியர் விளக்கும் திறன் புதுமையும் ஆழமும் உடையதாக உள்ளது. கரு என்பதனுடன் சுற்று என்பதை இணைத்துக் கருச்சுற்று என்ற சொல்லைப் படைக்கும் ஆசிரியர் மனிதப்பிறவிக்குக் காரணமான கரு என்பது பற்றிய நினைவைப் பதியவைக்கிறார். பிறவியை வெள்ளமென்று கூறியவர் கருவினை

அவ்வெள்ளத்தில் தோன்றும் சுழற்சி எனக்குறிப்பது நினைத்தற்குரியது. கருச்சுற்றில் உயிர்கள் சிக்கித் தவிக்கின்றபொழுது இறைவர் ஒருவரால்தான் கைகொடுத்து அவற்றைக் காத்திட இயலும் என்பதில் ஆசிரியருக்குள்ள உறுதியையும் வெள்ள .உருக்காட்சி தெரிவிக்கிறது. பிறவியை ஆசிரியர் பெரிதும் வெறுக்கிறார் என்பதையும், அப்பிறவியிலிருந்து விடுபடுவதில் ஆர்வம் மிக்கவராய் உள்ளார் என்பதையும் உருக்காட்சி தெரிவிக்கிறது. வெள்ளத்தின் பெருக்கு, சுழற்சி என்பன ஆசிரியருக்கு மனிதப்பிறவி, கருச்சுற்று ஆகியன பற்றிய நினைவை எழுப்புகின்றன. வெள்ளத்தின் மிகுதிப்பாடு அடியார்தம் அன்பின் மிகுதிப்பாட்டை அவரது மனத்தின்கண் தோற்றுவிக்கிறது. வெள்ளம் செய்கின்ற தீயவிளைவுகள் பற்றிய சிந்தனை அவரிடம் இல்லாதிருப்பது நினைக்கத்தக்கது. இவ்வகையில் வெள்ள உருக்காட்சி பற்றிய ஆய்வு சேக்கிழாரது கற்பனையின் மனவியலைக் காட்டுவதாக உள்ளது எனலாம்.

## ஆற்றுருக்காட்சி:

பெரியபுராணத்தில் ஆற்றுருக்காட்சி ஆனப் பெற்றுள்ளமை இப்பகுதியில் கூறப்பட்டுள்ளது. தமிழகத்தில் பாயும் காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வையை, பொருநை, கெடிலம் போன்ற ஆறுகளும், வடபுலத்துப்பாயும் கங்கையாறும் இவ்வுருக்காட்சியில் இடம்பெற்றுள்ளன. சிவபெருமான் முடியில் உள்ள கங்கை ஆசிரியரின் நெஞ்சைக் கவர்ந்துள்ளமை ஆற்றுருக்காட்சி வாயிலாக அறியமுடிந்தது. அடியார்களின் இறையுணர்வு, இன்பம், இறைவர் திருவருள் இவ்வுருக்காட்சியால் விளக்கமுறுகின்றன. சேக்கிழாரின் இயற்கையியல் அறிவைப் புலப்படுத்துவதாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

தொண்டை நாட்டில் பாயும் பெண்ணையாறு, பொன்முகலி, பாலி, நிவா, கெடிலம், மணிமுத்தாறு, கம்பை, கானாறு: சோழநாட்டிலும், தொண்டைநாட்டிலும் பாயும் காவிரி, கொள்ளிடம், மண்ணியாறு; பாண்டி நாட்டில் பாயும் வையை, பொருநை, வடவெள்ளாறு ஆகியன இப்புராணத்தில் குறிப்பிடப்படுகின்றன.

ஆற்றுருக்காட்சி குறியீட்டு உருக்காட்சியாகவும் ஆளப்பட்டுள்ளது. ஆசிரியரின் கற்பனைத்திறனை ஆற்றுருக் காட்சியில் காணலாம்.

## கண்ணப்பநாயனார் திருவாய்நீர் - கங்கையின் புனிதம்:

"தண்மலர் அவங்கல் தாதை தாய்மனங் களிப்ப வந்து
புண்ணியக் கங்கை நீரில் புனிதமாம் திருவாய் நீரில்
உள்நனைந் தமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல்
வண்ணமென் பவளச்செவ்வாய் குதட்டியே வளரா நின்றார்"[34]

கங்கை புண்ணிய நதியாகப் போற்றப்படுகிறது. இதன் நீர் புனிதமானது. தன்னைச் சார்ந்தவற்றைப் புனிதமாக்குவது, இறைவருடைய சடையில் விளங்குவது. இத்தகைய, " கங்கையின் புனிதநீரினும் குழந்தையாயிருக்கும் திண்ணனாரின் திருவாய்நீர் புனிதமானது" என்கிறார் சேக்கிழார். "வண்ணமென் பூவளச் செவ்வாய்" எனத் திண்ணனார் திருவாய் குறிக்கப்படுகிறது. "அமுதம் ஊறும் திருவாய்" என்கிறார்.

குழவியாயிருக்கும் திண்ணனாரின் மழலையைச் சிறப்பிக்கும் வகையில், "கங்கையைவிடப் புனிதமான திருவாய்நீரில் நனைந்து அமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல்' என்று குறிப்பிடுகிறார். கானவர் தலைவரான பின்னர் திண்ணனார் கன்னிவேட்டையின் பொருட்டுக் காளத்தி மலைக்குச் செல்கிறார். அங்கு விளங்கும் குடுமித்தேவரைக் கண்டு உருகுகிறார். இவ்வுலகையே மறந்து திருத்தொண்டில் ஈடுபடுகிறார். அம்மலைப்பகுதியிலுள்ள பொன்முகலி ஆற்றுநீரைத் தம் வாயில் எடுத்துவந்து இறைவருக்கு மஞ்சமனமாட்டுகிறார். திண்ணனாரின் பின்னை வாழ்வில் நடைபெறவிருக்கும் இந்நிகழ்ச்சியைக் குறிக்கும் வகையில் திண்ணனானின் திருவாய் நீர் கங்கையினும் மேலானது என்று கூறப்படுகிறது. சிவகோசரியாரின் கனவில் தோன்றி, அவரிடம் இறைவர், "திண்ணனார் திருவாய்நீர் கங்கைநீரினும் சிறந்ததாக உள்ளது" என்று கூறுவது இவண் நினைத்தற்குரியது.

இறைவரிடம் பேரன்பு செலுத்தித் தம்மையே முற்றிலும் மறந்து அன்புவடிவமாகத் திகழ்ந்த திண்ணனாரின் திருவாய்நீர் இறைவருக்கு மஞ்சனநீராடும் பெருமை பெற்றது. வெள்ளமெனப் பெருகி ஓடிய கங்கையால் உலகம் அழிய இருந்தது. இறைவர் தம்

சடைமுடியில் அதனைத்தாங்கி உலகை உய்வித்தார் என்பர். அதன் சீற்றத்தை அடக்கினார் என்பர். திண்ணனாரின் திருவாய்நீர் இறைவர் திருவுள்ளத்தைக் குளிரச்செய்தது. கங்கைநீரின் இயல்பையும் திண்ணனாரின் திருவாய்நீரின் இயல்பையும் ஒப்பிட்டுக்காணும் வகையில் அமைந்துள்ள இவ்வாற்றுருக்காட்சி புதுமையுடையது. சைவசமய மக்களால் புனிதமானதாகப் போற்றப்பெறும் கங்கையைக் குறிப்பிட்டு அதைவிடத் திண்ணனாரின் திருவாய்நீர் புனிதமானது என்று சேக்கிழார் குறிப்பது அடியாரின் இறையுணர்வை உயர்த்திக்காட்டும் நோக்குடையது எனலாம். தொண்டர்சீர் பரவுவதில் சேக்கிழாருக்குள்ள ஆர்வத்தை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## மானக்கஞ்சாறநாயனார் பக்தி மேம்பாடு - கங்கை குதித்த சடை:

மானக்கஞ்சாறநாயனார் புராணத்துள் மூன்று இடங்களில் ஆற்றுருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.[33]

மாவிரதமுனிவடிவில் வந்த இறைவர் மானக்கஞ்சாறரிடம் திருமணக் கோலத்தில் இருந்த அவருடைய மகளின் கூந்தலைக்காட்டி, "இது பஞ்சவடிக்கு ஆகும்," என வேண்டுகிறார். நாயனார் மாவிரதமுனியின் திருவடியை வணங்குமாறு தம் மகளுக்குப் பணித்தார். அப்பொழுது நாயனார் "மஞ்சுதழைத்தென" வளர்ந்திருந்த கூந்தலைத்தம் சுரிகையால் அறுத்து முனிவரிடம் தருகிறார்.[34] வாங்குவார் போல் நின்ற முனிவர் மறைந்து விடுகிறார். பின்பு உமையம்மையுடன் விடையின்மேல் வந்து நாயனாருக்குக் காட்சிதருகிறார்.[35] "நாயனார் இறைவரைத் தொழுது எழுகிறார். மெய்மறந்து நிற்கிறார். அப்பொழுது இறைவர் திருச்சடையில் இருக்கும் திங்கள் அலைக்கழியுமாறு கங்கை குதிக்கிறது" என்கிறார் ஆசிரியர். நாயனாரின் பக்தியின் சிறப்பைக் கண்ட கங்கை குதித்து ஓடி மகிழ்வதாகச் சேக்கிழார் கற்பனை செய்கிறார். சிவபெருமானுக்கு வெறும் அடைமொழியாகக் கங்கை குறிக்கப்பெறவில்லை எனலாம். "சடைக்காடாகிய உலகில் மதிக்கொழுந்தாகிய நாயனார் மகிழ்ச்சிப்பெருக்கினால், சிவானந்தப் பெருக்கினால், நிலை தடுமாறி மெய் மறந்திருக்கும் நிலையில், கங்கையாகிய இறையருள்

குதித்தோடுகிறது" என்று நினைத்தற்கேற்ற வகையில் இத்தொடர் அமைந்துள்ளமை காண்டற்குரியது. குறியீட்டு உருக்காட்சியாக ஆற்று உருக்காட்சி விளங்குகிறது எனலாம்.[36]

## சம்பந்தர் ஆனந்தம் - கங்கைநீர்:

திருஞானசம்பந்தர் திருநலூர் எனும் பதியினை நண்ணியபொழுது மங்கல வினைபுரி மறைவலோரால் எதிர்கொளப் பெற்றார். நித்திலச்சிவிகையிலிருந்து இறங்கினார். அந்தணர் குழாம் முன்செலப் பின்செலும் பக்தரும் பரிசனங்களும் உடன்பரவிட அத்தர்தம் கோபுரத்தைத் தொழுது திருக்கோயிலுக்குள் நுழைந்து வலம்வந்து, ஆனந்தத்துடன் இறைவரைத் தொழுதார். இச்செய்தி ஆற்று உருக்காட்சியில் கூறப்படுகிறது. அது வருமாறு:

"வெள்ளிமால் வரைநேர் விரிசுடர் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரு பொழுதினில் பெருகுநீர்
வெள்ளஆ னந்தம்மெய் பொழியமேல்ஏறிநீர்
துள்ளுவார் சடையாரைத் தொழுதுமுன் பரவுவார்"

இறைவர் திருக்கோபுரத்தை வணங்கி உள்நுழைந்த சம்பந்தருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. உரோமபுளகம் ஏற்பட்ட நிலையில் அவரது மேனியெல்லாம் சிலிர்த்து வியர்த்திருக்கவேண்டும். இம்மெய்ப்பாட்டைப் 'பெருகுநீர் வெள்ள ஆனந்தம் மெய்பொழிய' என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். இத்தகைய வெள்ள ஆனந்தத்துடன் இறைவரை அணுகுகிறார் நாயனார். அப்பொழுது இறைவர் சடையில் கங்கைநீர் துள்ளி வழிகிறது. நாயனாரின் வெள்ள ஆனந்தமும் இறைவரின் அருள் வெள்ளமும் ஒன்றோடொன்று கலக்கும் பெருநிலையைக் குறிப்பாகக் காட்டுகிறார் சேக்கிழார். அடியாரின் அன்பில் விளைந்த இன்பவெள்ள ஆறும், இறைவரின் சடையில் இலங்கும் அருள்வெள்ள ஆறும் சங்கமமாகின்ற நிலையை இங்குக் காணமுடிகிறது. நாயனாரின் ஆனந்தம் பெருகுநீர் வெள்ளமாக உருவகிக்கப்படுகிறது. ஆனந்தம் என்னும் அகவுணர்ச்சியாகிய நுண்பொருள் பெருகுநீர் வெள்ளமாகிய பருப் பொருள் ஆகக் காட்டப்படுகிறது.[37]

### கெடிலம் செய் வழிபாடு:

பொன், மணி ஆகியவற்றின் திரள்கள். யானை வெண்கோடுகள், மின்னலைப்போல் ஒளிவிடும் வெண்முத்துக்கள், மலர்கள், சந்தனக்குறடுகள் ஆகியவற்றைத் தனது வன்மையான திரைக்கரங்களால் கொண்டுவந்து இறைவரிடம் தந்துவிட்டுத் தொழுகிறது கெடிலம்.[38] தம்மிடம் சேரும் உடைமைகள் அனைத்தையும் இறைவருக்கு உரியது என்னும் உணர்வுடன் அவரிடம் வழங்கிவிட்டுப் பற்றற்று இருத்தலே வழிபாடு என்பதை உணர்த்தும் வகையில் கெடிலத்தின் இச்செயல் விளங்குகிறது. மெய்யடியார்கள் இவ்வியல்பு உடையவர்கள் என்பதைப் பெரியபுராணம் சிறப்பாக எடுத்தியம்புகிறது. "வழிபடலால்" என்னும் வினைச்சொல் உருக்காட்சி (Verbal image) இக்குறிப்புடையது. பொதுவாக ஆற்றின் செயல் பிறர்க்குத் தன்மாட்டு உள்ள நீரை அளிப்பது ஆகும். இங்குத் தற்குறிப்பேற்ற அணியில் கெடிலத்தைப் பற்றிக் குறிக்கும் ஆசிரியர் அதனைக் கங்கைக்கு நிகரானது என்கிறார். கங்கை ஆற்றுருக்காட்சி கெடில ஆற்றின் சிறப்பை குறிக்க வந்துள்ளது.

### சம்பந்தரும் அடியார்களும் மதுரை வந்தமை - கன்னி நாட்டிடைக் கங்கை அணைதல்:

கங்கையாறு பாண்டிநாட்டை அணைந்தது என்று கூறும்படிச் சம்பந்தருடன் சைவத்தொண்டர்கள் மதுரைக்கு வந்தமை கூறப்படுகிறது. சம்பந்தர் காலத்தில் பாண்டிநாட்டில் சைவசமயம் தாழ்நிலையில் இருந்தது. எங்கும் அமண்மாசு செறிந்தடைந்திருந்தது. திருநீற்றின் வெண்மையும். உணர்வின் தூய்மையும் உடைய மெய்யன்பர்கள் சம்பந்தருடன் பாண்டிநாட்டில் வந்து நிறைந்திருந்த காட்சி கங்கையாற்றின் காட்சியாக சேக்கிழாருக்குத் தோன்றுகிறது. அமண் சமயத்தை மாசு என்கிறார் ஆசிரியர். அதைக் கழுவிப் போக்குவதற்கு, மங்கையர்க் கரசியார், அமைச்சர் குலச்சிறையார் வேண்டுகோட்கிணங்க, சம்பந்தரும் அவரைச்சார்ந்த சைவசமயத் தொண்டர்களும் பாண்டிநாட்டுக்கு வந்தனர். அவர்கள் வருகை கங்கையின் வருகையைப் போலத் தோன்றுகிறது என்கிறார் சேக்கிழார். மதுரையில் நுழையும் சம்பந்தர், அவருடன் வரும் தொண்டர்கள்

ஆகியோர் கங்கையே திரண்டுவந்தாற்போல் ஆசிரியருக்குத் தோன்றுகின்றனர். அமண் என்னும் மாசினை இவ்வெள்ளம் அடித்துச் சென்றுவிடும் என்ற உறுதி இதில் குறிக்கப்படுகிறது. 39 சமண அழுக்கைச் சைவவெள்ளம் அடித்துச் செல்வதாகக் காண்கிறார் ஆசிரியர். ஆற்றின் வெள்ளத்தால் உண்டாகும் தீய விளைவுகளைக் குறிப்பிடாமல் சேக்கிழார் அவ்வெள்ளத்தால் உண்டாகும் நல்லவிளைவைக் குறிப்பிடுவதில் ஆர்வம் காட்டுகிறார்.

சம்பந்தருடன் சைவ மெய்யடியார்கள் மதுரைக்கு வந்த சமயவரலாற்றுத் தொடர்புடைய நிகழ்ச்சியை ஆற்றுருக்காட்சி வாயிலாக ஆசிரியர் நயம்படக் கூறுகிறார். சம்பந்தர் ஆற்றிய திருத்தொண்டு இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகிறது. பாடு பொருளை உயர்த்திக் காட்டுகிறது.

## திருநாளைப்போவார் - கொள்ளிடம்:

தில்லைக்குத் தெற்கிலுள்ள ஆறு கொள்ளிடம். இது காவிரியின் வெள்ளத்தைக் குறைத்துச் சோழநாட்டைக் காக்கும் சிறப்புடையது. திருநாளைப் போவார் நாயனாரின் ஊரான ஆதனூர் இதன் கரையில் உள்ளது. இந்நாயனார் புராணத்தின் தொடக்கத்தில் கொள்ளிடம் குறிக்கப்படுகிறது. தம்மிடம் உள்ளவை அனைத்தும் ஆண்டவனுக்கே உரியவை என்ற இயல்பு மெய்யடியாரிடம் காணலாம். ஆசிரியர் சேக்கிழார் பக்தி உலகத்தில் தன்னலம் கிடையாது என்ற சீரிய கருத்தைப் பொதுவாக விளக்கும் வகையிலும், திருநாளைப்போவாரின் திருத்தொண்டைச் சிறப்பாக விளக்கும் வகையிலும், தற்குறிப்பேற்ற அணியில் கொள்ளிடத்தை வருணிக்கிறார். 'கொள்ளிடம் தனது திரைக்கரங்களால் முகந்து தருகின்ற பொன்னையும், மணிகளையும், இருகரைகளிலுமுள்ள தாமரைகள் கரம்நீட்டி ஏற்கின்றன என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். ஆறு திருநாளைப்போவாராகவும். தாமரைக்குத் தன் திரைக்கரத்தால் கொள்ளிடம் பொன்னையும். மணியையும். தருவது, அன்னாரின் திருத்தொண்டாகவும். அவ்யாற்றின் அகற்சி, நீட்சி. ஆழம், விரைவில் கடலொடு கலத்தல் என்பன அவருடைய இறையுணர்வின் இயல்புகளாகவும், குறிக்கப்படுகின்றன எனலாம். தமக்கென எதையும் வைத்துக்கொள்ளாமல் பிறர்க்கு வழங்கும் ஆற்றின் செயல் அடியாரின் தன்னலமற்ற பண்பை எடுத்துக் காட்டுகிறது.

நந்தனார் இறைவர் திருக்கோயிலின் தேவைக்குரிய பொருள்களான போர்வைத்தோல், விசிவார், வீணை, யாழ் முதலியவற்றுக்கான தந்திரிகள், கோரோசனை போன்றவற்றை நாளும் கொடுத்துவந்தார். இச்செயல் அவருடைய குடும்பத்தினர் தொன்றுதொட்டுச் செய்துவந்த திருத்தொண்டாக இருந்திருக்க வேண்டும். தொன்மையான இத்தொண்டினை எடுத்துக்காட்டும் வகையில் கொள்ளிடம் பொன்னையும் மணியையும் தாமரைக்குக் கொடுக்கும் செயல் குறிக்கப்படுவதால் இதனை ஓர் எதிர்நோக்கு உருக்காட்சியில் (Anticipatory Image) அமைந்த ஆற்று உருக்காட்சியாகக் கொள்ளலாம். ஆற்றின் செயல் தொண்டினைக் குறிக்கிறது. தாமரை மலர் இறைவராகவே கொள்ளத்தக்க வகையில் உள்ளது. பக்திநலத்தின் பாங்கினைக்காட்டும் செயலாக இது விளங்குகிறது.

கொள்ளிடம் பொன்னும் மணியும் கொணர்ந்து தாமரை மலர்கட்குத் தரும் செய்தி நாட்டின் நீர்வளத்தையும், நிலவளத்தையும் வெளிப்படையாகத் தெரிவிக்கிறது. [40]

## மறையோர், தொண்டர் வீதியில் செல்வது - பெருக்காறு:

உமையம்மையிடமிருந்து சம்பந்தர் சிவஞானம் என்ற அமுதைப்பெற்ற செய்தி,

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்"

என்று சேக்கிழாரால் கூறப்படுகிறது. [41]

பாலுண்டு நிற்கின்ற தம்முடைய தோற்றங்கண்டு வெகுண்ட தந்தையாராகிய சிவபாதவிருதயருக்குச் சம்பந்தர் செய்தி யனைத்தும் தெளிவுறக் கூறினார். தமக்கருள்செய்த இறைவரைப் புகழ்ந்து திருப்பதிகம் பாடினார். அமரர் பிரசமலர்மழை பொழிந்தார். சம்பந்தர் புண்ணியர் நண்ணிய பூமலிகோயினுள் புகுந்தார். அங்கு அணைந்தவர் அந்தணர் ஆகியோர் உரோம முகிழ்ப்பெய்தி "இப்படியோர் அற்புதம் (ஞானப்பாலுண்ட செயல்) எங்குளது!" என்று வியந்தனர். கோயிலிலிருந்து வெளிவந்தார்

சம்பந்தர். அந்தணர்கள் எதிர்கொண்டு அவரைப்போற்றினர். சிவபாத இருதயர் அவரைத் தம் தோளின்மேல் வைத்துக்கொண்டு வீதியில் சென்றார். மாமறையோர் கூட்டமும், திருத்தொண்டர் கூட்டமும் இருமருங்கும் சூழ்ந்து வந்தன. மகிழ்ச்சி மிகுதியால் தங்கள்மேல் இருந்த அறுவை, உத்தரியம் முதலியவற்றை அவர்கள் விசும்பில் எறிந்தனர். பெரும் ஆரவராம் செய்தனர். சீகாழி மக்களின் இந்த மகிழ்ச்சி நிலையை ஆற்று உருக்காட்சியில் விளக்குகின்றார் சேக்கிழார்.

"மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர்தம் மருங்குசூழ்ந்து
தாம் அறுவை உத்தரியம் தனிவிசும்பில் எறிந்தார்க்கும் தன்மை யாலே
பூமறுகு சிவானந்தப் பெருக்காறு போதஅதன் மீது பொங்கும்
காமர் நுரைக் குமிழிஎழுந் திழிவனபோல் விளங்குபெருங் காட்சித் தாக"

என்று சேக்கிழார் பாடுகிறார். [42]

மறையவரும் தொண்டரும் வீதியில் செல்வது சிவானந்தப் பெருக்காறு செல்வதுபோலத் தோன்றுகிறது. இறையருள் பெற்றுச் சம்பந்தர் சிவானந்த நிலை பெற்றார். அவரைச் சார்ந்த மக்களும் சிவானந்தம் கைவரப்பெற்றனர். அவர்கள் மகிழ்ச்சியினால் ஒன்றுகூடி ஆறு பெருகி வருதல்போல் திருவீதியில் சம்பந்தருடன் சென்றனர். அவர்கள் செல்வது சிவானந்தமே ஆறாகச்செல்வது போல் ஆசிரியருக்குத் தோன்றுகிறது. தங்கள் உத்திரியங்களை அவர்கள் மேலே எறிந்துசென்ற காட்சி ஆற்றின்மேல் நுரைக்குமிழி எழுந்து வழிவதுபோல் தோன்றுகிறது. பெருங்காட்சியாக இருக்கிறது இஃது என்கிறார் ஆசிரியர். மறையவர்கள், தொண்டர்கள் ஆரவாரம் செய்வது ஆற்றின் ஓசையைக் குறிக்கிறது. மக்கள் வெள்ளம் வீதியில் செல்வது ஆற்றின் செயலாகக் காண்பது மரபு. இங்குச் சேக்கிழார், மக்களும் அம்மக்களின் மனநிலையான சிவானந்தமும் ஆறாகச் செல்வதாகக் காண்பது புதுமைபெற்று இலங்குகிறது. சீகாழி வீதியில் மகிழ்ச்சியான மனத்தோடு சம்பந்தருடன் அடியார்களும் அந்தணர்களும் சென்ற காட்சியை ஆறாகக் காணும் ஆசிரியர், இவர்கள் சம்பந்தருடன் மதுரையினுள் புகுந்த காட்சியை ஆற்று வெள்ளமாகக் குறிப்பிடுகிறார். சைவசமய எழுச்சியைப் புதிய வெள்ளமாகச் சேக்கிழார் நினைக்கிறார் எனலாம். முருகியற்சுவை பயப்பதாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. இது சேக்கிழாருக்குச்

சம்பந்தரிடத்தும் அடியார்களிடத்தும் உள்ள ஆர்வமிகுதியைத் தெரிவிக்கிறது.

பிறவி - ஆறு:

மதுரையில் சமணருக்கும் சம்பந்தருக்குமிடையே நடைபெற்ற புனல் வாதத்தில் நமச்சிவாய மந்திரம் எழுதப்பெற்ற சம்பந்தரின் ஏடு வையையாற்றில் விடப்பட்டது. சமணர்கள் ஏடும் இடப்பட்டது. சம்பந்தரின் ஏடு ஆற்றை எதிர்த்துச் சென்றது. சமணர்கள் ஏடு ஆற்றுடன் சென்றது. இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடும் சேக்கிழார் அவரவர் வினைப்பயனாக வரும் பிறவியை ஆறாகக் கூறுகிறார். மாதவர் மனம் அப்பிறவியாற்றை எதிர்த்துச் செல்கின்றது என்று குறிப்பிடுகிறார். பிறவியின் நீட்சி ஆறாகக் கூறப்படுகிறது. வையையாறு பிறவி ஆகவும், சுந்தரரின் ஏடு அப்பிறவியை எதிர்த்துச் செல்லும் மாதவர் மனமாகவும் குறிக்கப்படுகின்றன. தத்துவ விளக்கமாக ஆற்று உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.[43]

திருவையாற்றில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வணங்கவேண்டி வந்த சேரமான்பெருமாள் நாயனாரும் சுந்தரரும் காவிரியின் தென்கரையில் இருந்தனர். அதனைக் கடந்துசென்று இறைவரைப் பணிவோம் என்றார் சேரமான்பெருமாள் நாயனார். இரண்டு கரைகளையும் பொருது வானத்திலெழுவது போல் காவிரியில் வெள்ளம் சென்றது. கப்பலோ ஓடமோ செல்லமுடியாதபடி நீர்ப்பெருக்கு சென்றது. திருநீறு விளங்கும் இறைவர் திருவடிகளைப் பணிந்து அன்பின் ஆற்றின் வழியாகச் செல்லும் உரிமையுடைய நம்பிகள் தரிக்கலாற்றாது இறைவரை விளித்துப் பாடினார். சேக்கிழார் சுந்தரரின் அன்பின் திறத்தை இங்கு ஆற்று உருக்காட்சியாக விளக்குகின்றார்.[44]

"நம்பிகள் செல்லும் வழியாக இவர் சேரும் ஆறு பௌதிகமாகிய இந்த ஆறன்று; இதனின் மேம்பட்டு, இதுவேயன்றி வேறு யாண்டும் செல்லும் சிவன்பால் அன்பாகிய ஆறு ஆகும்; அதனை வேறு எதுவும் குறுக்கிட்டுத் தடுக்க இயலாது என்பதாம். ஆறு நதி என்றும், வழி என்றும் இருபொருளும்பட வந்தது கவிநயம்" என்பர் சி. கே. சுப்பிரமணிய முதலியார்.[45]

பெரியபுராணத்தில் ஆற்று உருக்காட்சி அடியார்களின் இறையன்பின் திறத்தைச் சிறப்பித்துக் காட்டுகிறது. சேக்கிழாரின் இயற்கையியல் ஈடுபாட்டைத் தெரிவிக்கிறது. தற்குறிப்பேற்றமாக வரும் ஆற்று உருக்காட்சி சேக்கிழாரின் பக்தியுணர்வின் வெளிப்படாக உள்ளது. அடியார்களின் இன்பநிலையின் மிகுதிப்பாட்டை இவ்வுருக்காட்சி தெள்ளிதின் உணர்த்துகிறது. கங்கையாற்றின் புனிதமும் காவிரியாற்றின் சிறப்பும் இவ்வுருக்காட்சி வாயிலாக அறியத்தக்கன. அன்பு என்னும் நுண்பொருள் இவ்வுருக்காட்சியால் பருப்பொருளாகக் காட்டப்படுகிறது. குறியீட்டு உருக்காட்சியாகவும் இஃது ஆளப்பெற்றுள்ளது. "கூறவந்த பொருளின் விரிவான அரைநிழலொளியை அல்லது குறைநிழலைத் தன்னுடைய போக்கிலேயே கலைநுட்பத்துடன் காட்டாத கதையோ, ஓவியமோ அல்லது கவிதையோ பொருளற்றது. கலைப்படைப்பிலுள்ள ஒவ்வொரு பருப்பொருளின் பின்னணியில் எண்ணற்றதும் இனம்புரியாததுமான விவரங்களின் நிழலுருவம் குறியீட்டு வடிவில் (Symbollo) காட்டப்படுகிறது" என்று ஜேம்ஸ் கே. ஃபீபில்மேன் (James K. Felbleman) குறிப்பிடுகின்றார்.[46]

"மிகச் சிறப்பானதும், நுட்பமானதும், இனம் புரியாததுமான செய்திகளை நேர்மொழியாலோ வருணனையாலோ தெரிவிக்கவியலாது. சொற்களின் தொடர் நிலை உருக்காட்சிகள் அவற்றை வாசகருக்குக் குறிப்பாக உணர்த்துகின்றன" என்று எட்மண்ட் வில்சன் (Edmund Wilson) குறிப்பிடுகின்றார்.[47] பெரியபுராணத்தில் ஆளப்பெற்றுள்ள குறியீட்டு வகையினைச் சேர்ந்த ஆற்று உருக்காட்சிகள் இவ் ஆய்வறிஞர் கருத்துக்குச் சான்றாக விளங்குகின்றன எனலாம்.

தமிழகத்தின் நீர்வளத்திற்குப் பெரிதும் காரணமாக உள்ள ஆறுகளைப் பற்றிக் குறிப்பிடுவதில் சேக்கிழார் ஆர்வம் உடையவராய் விளங்குகிறார். காவிரியாற்றின் அழகு அவர் நெஞ்சத்தைக் கவர்ந்துள்ளது. கண்ணப்பநாயனாரின் இறையன்பின் திறம், சம்பந்தரின் இறைவழிபாட்டார்வம், சுந்தரரின் ஆனந்தம், சம்பந்தரும் சைவஅடியார்களும் மதுரையினுட் சென்ற காட்சி, சீகாழியில் சம்பந்தருடன் சென்ற அடியார்கள் ஆனந்தநிலை ஆகியவை ஆற்று உருக்காட்சியினால்

நயமுற நவிலப்படுகின்றன. சேக்கிழாரின் கற்பனைத் திறனுக்குச் சான்றாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. பக்தியுணர்வை மையநோக்காகக்கொண்டு இவ்வுருக்காட்சி இயங்குவது காணத்தக்கது.

## கடல் உருக்காட்சி:

இடையறாத இயக்கம், அளப்பருந்தன்மை, தன்னிலையிலிருந்து மாறாமை, நிலத்துவாழ் உயிரினங்கட்கு மழைதரும் நீர்மை, தன்னைநோக்கி வரும் ஆற்றுநீரைத் தனதாக்கிக்கொள்ளும் தன்மை ஆகிய சிறப்பு இயல்புகளைக் கடல் தன்மாட்டுக் கொண்டுள்ளது. இதனைப் புணரி, உவரி, ஆழி, முந்நீர், வேலை, வாரி, பரவை போன்ற தமிழ்ச்சொற்களால் குறிப்பிடுவர். சேக்கிழார் கடல் உருக்காட்சியைப் பல்வேறு வகையில் ஆண்டுள்ளார். இயற்கையில் அவருக்குள்ள ஈடுபாட்டை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. இன்பம், துன்பம், அன்பு, காதல், புலவி, பொழுது, புகழ் ஆகியவற்றைச் சேக்கிழார் கடல் உருக்காட்சியால் விளக்கிக் காட்டுகிறார். அவர்தம் கற்பனைத் திறனை இவ்வுருக்காட்சியால் அறியலாம். தமிழகத்தின் கிழக்கெல்லையாக வங்கக்கடல் உள்ளது. கடலைக் கண்டு மகிழ்ந்தவர் சேக்கிழார். அதன் அளப்பருந்தன்மை அவரை ஈர்த்துள்ளது.

## தொண்டர் பெருமை - கடல்:

திருத்தொண்டர்களின் பெருமை, தெரிந்து கொள்வதற்கு அருமையானது. ஈடு இணையில்லாதது. சொற்களால் அளந்து கூறுவதற்கு இயலாத ஒன்று. பெருகுகின்ற தெளிவான கடலுக்கு ஒப்பானது. எனவே அவர்தம் பெருமையை, தாம் கூற முற்படுவது கடலைத் தன் சிறுவாயால் பருக நினைக்கும் நாயின் செயலுக்கு ஒப்பானது என்று சேக்கிழார் உரைக்கின்றார். திருத்தொண்டரின் அளப்பரிய பெருமையை கடலுருக்காட்சியின் மூலமாக இவ்வாறு விளக்குகிறார். கடலின் அளப் பருந்தன்மையையும், தெளிவையும், நிலைபேற்றையும், மனத்துட்கொண்டு இவ்வுண்மையை உருக்காட்சியாக ஆசிரியர் ஆள்கிறார்.[48]

## உபமன்னியமுனியின் ஆனந்தம் - வாரி:

"இறைவர் அருளாணையால் சுந்தரர் ஆயிரஞாயிறு பொங்கு பேரொளியாகப் பூவுலகுக்கு வரும் காட்சியைக் கண்ட உபமன்னிய முனிவரின் மெய்யில் ஆனந்தவாரிவிரவியது" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். [49] முனிவரின் இன்பமிகுதியைக் கடல் உருக்காட்சி சிறப்பித்துக் காட்டுகிறது.

## நாவரசர், அன்பு - கடல்:

"நாவரசர் தில்லைத்திருக்கோயிலின்கண் வலம்வரும் பொழுது அலமரல் உற்றார். ஆர்வம் பொங்கிப் பெருகுகிறது. அவ் ஆர்வத்திலிருந்து அன்பு கடலென எழுந்தது" [50] நாவரசர்தம் இறையுணர்வின் திறம் இவ்வாறு கடல் உருக்காட்சியால் தெரிவிக்கப்படுகிறது.

## மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் கவலை - கடல்:

மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும், மன்னனும் மக்களும் சைவசமயத்தைக் கைவிட்டுச் சைவசமயத்தில் சேர்ந்தமை குறித்துப் பெரிதும் வருந்தினர். பாண்டியநாட்டில் மீண்டும் சைவசமயம் நிலைபெறுவதற்குச் சம்பந்தரின் பேராதரவை வேண்டினர். அவர்தம் வேண்டுகோட்கிணங்க, சம்பந்தர் திருமறைக்காட்டிலிருந்து புறப்பட்டு மதுரைக்கு வந்தார். அவர் வருகையால் அவ்விருவரும் மகிழ்ச்சியுற்றமையைக் கடல் உருக்காட்சியால் விளக்குகிறார் ஆசிரியர்.

மங்கையர்க்கரசி, குலச்சிறையார் ஆகியோருக்கு இருந்த கவலை கரையற்ற கடலைப்போன்றது என்றும், சம்பந்தரின் சரணகமலம் கவலைக்கடலில் தத்தளிப்பவர்க்குத் தென்பட்ட கரை போன்றது என்றும் குறிக்கின்றார் ஆசிரியர். கவலையின் எல்லையற்ற தன்மை கடல் உருக்காட்சியால் விளக்கப்பட்டது. கடலில் அலைகள் இடையறாமல் வீசிக்கொண்டிருப்பதுபோல் கவலையுடையோர் நெஞ்சில் எண்ண அலைகள் அடுக்கடுக்காகத் தோன்றிக்கொண்டே இருக்கும் என்ற கருத்தும் ஈண்டு நினைக்கத்தக்கது. [51]

"அழுந்தும் இடர்க்கடலிலிருந்து எங்களை எடுத்தருள வந்தீர்" என்று சம்பந்தரை இவ்விருவரும் போற்றுவது நினைக்கத்தக்கது.[52]

## பரவையார் புலவி - கடல்:

பரவையாரை மணம்புணர்ந்த சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்துகொண்டார். இதனைக் கேள்வியுற்ற பரவையார் மிகவும் வருந்தினார். தம்மிடம் வருவதற்கு முயன்ற சுந்தரரை ஏற்க மறுத்தார். அவருடைய அப்புலவியைக் கடலாகவே உருவகிக்கிறார் சேக்கிழார்.[53] புலவியால் மகளிர்க்கு உண்டாகும் துன்பம் கடல் உருக்காட்சியால் விளக்கப்படுகிறது.

## மாலைப்பொழுது - கடல்:

ஞாயிறு கிழவர் என்பாரின், மகள் சங்கிலியார் திருவொற்றியூர் கோயிலின் அருகில் கன்னிமாடத்தில் தங்கியிருந்து கோயில் திருப்பணியாகிய மாலைதொடுத்துத் தரும் பணியைச் செய்துவந்தார். அழகிய தோற்றம் உடைய அவரைக் கண்டு காதல் உற்றார் சுந்தரர். சங்கிலியாரைத் தமக்குத் தரவேண்டும் என்று இறைவரிடம் வேண்டினார். காதல் வருத்தம் தாங்கமுடியாத நிலையில் இருந்த சுந்தரர் மாலைப்பொழுதாகிய கடலை எவ்வாறு கடப்பது என்று வருந்தினார். இவ்வாறு அவர் மனநிலையைக் கடல் உருக்காட்சியால் கூறுகிறார் ஆசிரியர். 54

## பிறவி - கடல்:

திருநாவுக்கரசர் புராணத்தில் சேக்கிழார், "பிறவி"யைப் பற்றிக் குறிக்கும் பொழுது "வருபவக்கடல்" என்கிறார். பவம் என்ற வட சொல்லின் பொருள் பிறப்பு என்பதாகும். தொடர்ந்து வருவதால் ' வருபவம்" எனப்பட்டது. "பிறவியாகிய இப் பெருங்கடலைக் கடக்க வேண்டுமெனில் இறைவரின் திருவடியாகிய புணையைப்பெறவேண்டும்" என்பார் வள்ளுவர்.[55] பிறவியிலிருந்து விடுபட விரும்புவோர் சிவபெருமானைக் குறிக்கும் அஞ்செழுத்து மந்திரமாகிய "நமசிவாய" என்ற மொழியை இடையறாது நினைத்தல் வேண்டும் என்பது சைவசமயத்தினர் கொள்கை. நாயன்மார் இம் மந்திரத்தைத் தம் உயிராகப் போற்றினர். "நற்றவாஉனை நான்

மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்று சுந்தரர் கூறுகிறார்.[56] இம்மந்திரம் ஓதும் அன்பர் பிறவிக்கடலிலிருந்து விடுவிக்கப்பெறுபவர் என்பது சைவசமயத்தினர் கருத்து. பிறவியைத் தரவல்லதாகிய இருவினைகளையும் பாசம் என்றும், ஆணவம், கன்மம், மாயை என்ற மலம் மூன்றையும் கல்லென்றும், உயிர் இவற்றில் கட்டப்பட்டுப் பவக்கடலில் கிடக்கிறது என்றும் சேக்கிழார் தம் சைவசமயக் கருத்தைக் காட்சிப் பொருளாக்கிக் காட்டுகிறார். சமணசமயத் துறவிகளின் கருத்திற்கு இணங்கிய பல்லவ மன்னன் திருநாவுக்கரசரைக் கல்லின்மேல் வைத்துக் கயிற்றினால் கட்டிக் கடலில் தள்ளிவிடுமாறு ஆணையிடுகிறான். அவ்ஆணைக்கிணங்கக் கடலில் தள்ளப்பட்ட நாவரசர் அஞ்செழுத்தை இடையறாது எண்ணினார். அதன் பயனாக எவ்வித ஊறுமின்றிக் கடலிலிருந்து கரைக்கு வந்தார். அக்கல்லே அவருக்குப் புணையாயிற்று. இந்நிகழ்வைச் சேக்கிழார் கடலுருக்காட்சியால் விளக்குகிறார்.[57]

பிறவிக் கடல்களைக் கடக்க அன்பர்கட்கு இறைவர் தம் திருவடியாகிய புணையைத் தருகிறார் என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[58]

மதுரையில் சமணர்களை அனல், புனல் வாதங்களில் சம்பந்தர் வென்றார். சைவமென்னும் திருநெறி நடக்கலாயிற்று. இதன் விளைவாக மக்கள் பிறவிக்கடலிலிருந்து விடுபட்டனர் என்கிறார்.[59]

## மக்கள் - கடல்:

தடுத்தாட்கொண்ட புராணத்தில் சுந்தரரின் திருமணம் பற்றி ஆசிரியர் வருணிக்கிறார். யோகப்புரவிமேல் மாப்பிள்ளையாகிய சுந்தரர் அழைத்துவரப்படுகிறார். பல்வேறு இசைக்கருவிகள் ஏத்தொலி ஓதப்படுகின்றன. உயர்ந்த வாகனங்களில் உழையராவோர் அமர்ந்து செல்கின்றார். மங்கலகீதமும், நாதமும் உடைய மறையவர் கூட்டங்களுடன், தொங்கலும், விரையும் சூழ்ந்திட மைந்தர்களும் மகளிரும் அதிக எண்ணிக்கையில் வருகின்றனர். மங்கையர்கள் அணிந்துள்ள வளைகளின் தொகுதி, குழைகளின் மிகுதி, மணிகளின் வகை, நெருக்கமுற்றிருக்கும் மலர்சோலைகள் ஆகியவை நிறைந்திருப்பது

கருங்கடல் பொங்கி வருவது போல் இருக்கிறது என்கிறார் சேக்கிழார். கடல் உருக்காட்சி திருமணத்திற்கு வந்திருந்த ஆண், பெண்பாலாரின் மிகுதியையும், ஆரவாரத்தையும் அவர்கள் அணிகலன்களையும் விளக்கிக்காட்டுகிறது. சுந்தரர் திருமணத்தைக் கண்டு மகிழ அணிஅணியாய் மக்கள் திரண்டமையை இவ்வுருக்காட்சியினால் உணரமுடிகிறது.[60]

## சம்பந்தர், நாவரசர் தொண்டர்குழாம் - கடல்:

திருநாவுக்கரசர் திருவாரூர் சென்று இறைவரை வழிபட்டுத் திரும்புகலூருக்குத் தம் தொண்டர்களுடன் திரும்புகிறார். அப்பொழுது திருப்புகலூரில் இருந்து சம்பந்தர் தம் தொண்டர்களுடன் அவரை எதிர்கொண்டு வரவேற்கச் செல்கிறார். இரண்டு பக்கங்களிலும் திருநீற்றுத் தொண்டர்கள் திரண்டுவருகின்றனர். இக்காட்சியினைச் சேக்கிழார்,

> "இரண்டு நிலவின் கடல்கள் ஒன்றாகி அணைந்தன
> போல் இசைந்த அன்றே"

என்று குறிப்பிடுகின்றார்.[61] பகைமையுணர்ச்சியுடன் ஒன்றுடன் ஒன்று மோதுகின்ற இருபடைகளைக் "கிளர்கடல்கள் இரண்டென்ன இருபடையும் கிடைத்தனவால்" என்று புகழ்ச்சோழர் புராணத்துள் ஆசிரியர் குறித்தமை ஈண்டு நினைக்கத்தக்கது. இரண்டு நாயன்மார்களுடன் வரும் தொண்டர்கள் அன்பால் அணைகின்ற காட்சியையும் கடல் உருக்காட்சியினால் விளக்குவது ஈண்டுக் காண்டற்குரியது. திருநீற்றுத் தொண்டர்கள் அலையெனத் திரண்டுவரும் காட்சி இங்குக் குறிக்கப்படுகிறது. நிலவுகளைப்போல் நாயனார்கள் விளங்குகின்றனர். தொண்டர்குழாங்கள் கடல்கள் போல் இன்பத்தால் பொங்கித் திரள்கின்றனர். இணைகின்றனர். ஆரவாரம் செய்கின்றனர். கடலொலி உருக்காட்சி தொண்டர்களின் மகிழ்ச்சி நிலையையும் காட்டுவதாக வந்துள்ளது.

"நம்பியாரூரர் திருவொற்றியூருக்கு வருகிறார். சிவனடியார்கள் பரந்த கடல்போல் வந்து கூடுகின்றனர்" என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[62] அடியார்தம் எண்ணிக்கை மிகுதியையும் ஆரவாரத்தையும் காட்டுவதாக ஆசிரியர் கடலொலி உருக்காட்சியை ஆள்கிறார்.

சேக்கிழார், கண்ணப்பநாயனார் திருத்தொண்டின் சிறப்பை வலியுறுத்திக் கூறும் வகையில் கடல் உருக்காட்சியை ஆள்கிறார். இதற்கு முன்பு தொண்டர்களையும் மக்கள் கூட்டத்தையும் கடல் உருக்காட்சியால் கூறியமை காணப்பட்டது. தனிப்பட்ட தொண்டர் ஒருவரைக் கடலாகக் குறிப்பது நினைத்தற்குரியது.

திருக்காளத்தி மலையில் குடுமித்தேவருக்கு ஊனமுதம் படைத்து வழிபட்டு வருகின்றார் கண்ணப்பநாயனார். பகலும், இரவும் கண் துயிலாமல் இறைவருக்குக் காவல் புரிகின்றார். கண்ணிமைக்காமல் காவல் புரிகின்றார். கண்ணப்பநாயனாரின் இந்தகைய தொண்டின் திறத்தைக் கடலின் ஓயாத இயக்கத்திற்கு ஒப்பிடுகிறார் ஆசிரியர். கண்ணப்பநாயனாரின் மேனிவண்ணம், அவருடைய இடையறாத் திருத்தொண்டு ஆகிய இரண்டையும் மனத்திற்கொண்டு சேக்கிழார்,

"கருங்கடலென்ன நின்று கண் துயிலாத வீரர்"

என்று குறிப்பிடுகிறார். [63] புதுமைப்பொலிவுடனும், பொருத்தமுடனும், பொருட்சிறப்புடனும், கடல் உருக்காட்சி ஈண்டு ஆளப்பெற்றுள்ளது. "கடல் துயிலாமை அகப்பொருள்களில் விதந்து பேசப்படும். இங்கும் அன்பு மீதூர்தல் என்னும் அகப்பொருள் தன்மை பற்றியே துயிலாமை போந்ததும் காண்க" என்று விளக்குகிறார் சி. கே. சுப்பிரமணிய முதலியார். [64]

அம்மூவனார் என்ற சங்கப்புலவர் ஐங்குறுநூறு எனும் அகத்திணை இலக்கியத்தில் நெய்தல்திணை அமைந்த பாடல்களைப் பாடியுள்ளார். தொண்டிபத்து என்ற பகுதியில் கண் துயிலாமல் இருக்கின்ற தலைவன் தன் பாங்கனுக்குக் கூறுவதாகப் புலவர் ஒரு பாடலை அமைத்துள்ளார். அது வருமாறு"

"ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்கண்
உரவுக்கட லொலித்திரை போல
இரவி வானுந் துயிலறி யேனே"[65]

தலைவியின் மாட்டுத் தலைவன் கொண்டுள்ள காதலின் திறத்தைச் சிறப்பிக்கும் வகையில் கடல் அலையின் இயக்கம் உருக்காட்சியாக அம்மூவனாரால் ஆளப்பட்டுள்ளது. இதே உருக்காட்சியைக்கொண்டு இறைவருக்கும் நாயனாருக்கும் இடையே விளங்கும் அன்பின் திறத்தைச் சிறப்பிக்கின்றார் சேக்கிழார். சங்கஇலக்கிய மரபின்வழி நின்று தம் இலக்கியப் படைப்பை அமைப்பதில் சேக்கிழார் ஆர்வம் உடையவர் என்பதை இக்கடல் உருக்காட்சியால் அறியலாம். பெண் ஒருத்தியிடம் ஓர் இளைஞன் கொண்ட காதலைக் காட்டுகிறது, சங்கஇலக்கியக் கடல் உருக்காட்சி. இறைவரிடம் ஓர் அடியார் கொண்டுள்ள பக்தியைக் காட்டுகிறது சமயஇலக்கியமாகிய பெரியபுராணத்தில் ஆளப்பெறும் கடல் உருக்காட்சி.

கண்ணப்பநாயனாரை முதன்முதலில் படிப்பவர்க்கு அறிமுகப்படுத்தும் சேக்கிழார் " காளமேகம்" [66] என்றும், "கார்மழைமேகம்"[67] என்றும் குறிப்பிடுகிறார். அவருடைய அன்பை "வெள்ளக்கால்" [68] என்கிறார். கண் துயிலாமல் இறைவரைக் காத்து நின்ற அவரை "கருங்கடல" 69 என்கிறார். "கருமுகில் என்ன நின்றார்" எனவும் குறிப்பிடுகிறார். [70] மேகம் வெள்ளம்-கடல் என்ற உருக்காட்சிகளைத் தொகுத்துக் காணும்பொழுது கண்ணப்ப நாயனாரின் இறையன்பின் திறத்தின் வளர்ச்சிப் படிநிலைகளைக் கண்டுணரமுடிகிறது. இவ்வுருக்காட்சிகள் இப் புராணத்தில் தலைமை உணர்வாகிய பக்தி உணர்வைச் சார்ந்து இயங்குவது குறிப்பிடத்தக்கது.

## சம்பந்தர், நாவரசர் அருள் அன்பு - கடல்கள்:

திருத்தொண்டர் குழாங்கள் ஒன்றுடன் ஒன்று இணைவது பற்றிக் கடல்கள் இரண்டு கலப்பதாகக் கூறும் ஆசிரியர், சம்பந்தர், நாவரசர் ஆகிய இரு நாயன்மார்கள் ஒருவருடன் ஒருவர் இணைகின்ற காட்சியையும் கடல்களின் சங்கமமாகவே குறிப்பிடுகிறார். சீகாழித்தலத்தில் தோணியப்பரை வழிபடுதற்கு

இவ்விருவரும் இணைந்து செல்கின்ற காட்சி இவ்வாறு கூறப்படுகிறது. [71] இதுகுறித்துப் பண்டித மு. கதிரேசச்செட்டியார் தரும் விளக்கம் வருமாறு:

"திருஞானசம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் சீகாழியின் திருத்தோணியப்பரையும், அம்மையாரையும் தரிசிப்பான் செல்லுங்கால் அவ்விருவர்களும் ஒருங்குகூடிச் செல்லும் அழகிய காட்சியை நூலாசிரியராகிய சேக்கிழார் சுவாமிகள், தம் மனத்தின்கண், தியான முகமாக எழுதிப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தின்புற்று, அம் மகிழ்ச்சியின்பங்களை நம்மனோரும் சிறிது பெற்றுய்யுமாறு, தாந்துய்க்கும் இன்பம் பொங்கி வெளிப்படுதல்போல ஓரருமைப் பாசுரத்தை யருளியிருக்கின்றார்கள். அப்பாசுரத்தின் கருத்து, அந்நாயன்மார்களிருவர்களது ஒன்றுபட்ட தோற்றத்துக்கு ஒப்புக்கூறுவதேயாகும் அது வருமாறு:

" அருட்பெருகு தனிக்கடலு முலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமா மெனவு மோங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் ணிரெண்டெனவும் புவன முய்ய
இருட்கடுவுண் டவரருளு முலக மெல்லாம்
ஈன்றாடன் திருவருளு மெனவுங் கூடித்
தெருட்கலை ஞானக்கன்று மரசுஞ் சென்று
செஞ்சடைவா வைர்கோயில் சேர்ந்தா ரன்றே"

என்பதே.

இதன்கட் கூறப்பட்ட உவமைகளை அன்றி வேறு எத்துணை நீண்டு நினைப்பினும்'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை' யென்னும் உவம விக்கணத்துக்கு மாறுபாடின்றி ஈண்டுக் கூறத்தக்கது யாதுளது? என்னே இவ்வுவமைகளின் அருமை நயங்கள்! இங்ஙனங் கூறுதலன்றோ ஆன்ற அருட்கவிகளினியற்கை! இப்பாசுரத்தின் அரும்பொருள்களை முற்றக்கூறின் ஈண்டு விரியுமாதலின், இயைபுடைய முதலடியின் பொருளை மாத்திரஞ்சுருக்கிக் கூறுவேன். இதனிறுதியடியில்,

"தெருட்கலை ஞானக் கன்றும், அரசும்"

என்று கூறுவதால் நிரனிறையாகப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனங் கொள்ளுங்கால் அருட்பெருகு தனிக்கடல் திருஞானசம்பந்த சுவாமிகளும், அன்புசெறி கடல் திருநாவுக்கரசு சுவாமிகளுமாவார். இவ்விருவரிடத்தும் அருள் அன்பு என்னும் இருகுணங்களு முளவெனினும் அவற்றாலாம் பயனைநோக்கிச் சிறப்பாக ஆராயுங்கால் அப்பர் சுவாமிகள், சிவபிரானும், சிவனடி யார்களுமே தமக்குரியவர்களாகக் கொண்டு அன்பு செய்தமை யாலும், அடிமைநெறியில் (தாதமார்க்கத்தில்) வெளிப்பட நின்று ஒழுகியமையாலும், அந்நெறியில் ஒழுகுதற்குத் தலைவன் ஒருவனை மேற்கொண்டு அன்பு செய்தலே முக்கியமாதலாலும் அவர்களிடத்துள்ள அருட்குணத்திலும் அன்பேயாவர்க்கும் வெளிப்படக் காணப்படலான், அவர்களை அன்புக் கடலென்றும், திருஞானசம்பந்த சுவாமிகளிடத்து இவ் அன்புளதெனினும் அவர் மகன்மைநெறியில் (சற்புத்திர மார்க்கம்) வெளிப்பட ஒழுகியமையாலும், இறைவன் குணம் அருளேயாதலானும், சுவாமிகளிடத்து எல்லாவுயிர்கள் மேலும் இயல்பாக எழுங்கருணையே மேலிட்டிருந்தமையாலும். திருப்பெருமண நல்லூரில் தந்திருமணக்கோலத்தைத் தரிசிக்க வந்திருந்த தகுதியுடையார் தகுதியில்லாராகிய எல்லோரும் அக்காலத்திலேயே மலநீக்கமும் சிவப்பேறும் எய்திக் கொள்ளை கொள்ள விடுதலிக்கூற்றையும் பிடர் பிடித்துத் தள்ளித் தம் அருட்குணப் பயனைக் காட்டியமை யானும் அவர்களை அருட்கடலென்றும் திருவாய் மலர்ந்தருளினார் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள்.

ஈண்டு இன்புறத்தக்கதோர் இசைபென்னையெனின், அன்பினால் அருளுண்டாவது பற்றி அன்பு அப்பனும், அருள் பிள்ளையுமாகும். அம்முறையே அன்புக்கடலாகிய நாவரசரை அப்பரெனவும், அருட்கடலாகிய சம்பந்தரைப் பிள்ளையா-ரெனவும் பெரியார் பாராட்டி வழங்குதலேயாம். [72]

உருக்காட்சியைப் பொருத்தமுற ஆளும் திறன் மிக்கவர் சேக்கிழார் என்பதை இத்தமிழறிஞரின் நயவுரை விளக்கிக் காட்டுகிறது. நாயனார்களின் பண்பியலை விளக்கும் சிறந்த உத்தியாகக் கடல் உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.

## கண்ணப்பநாயனாரின் தாய் - கடல்:

மலைநாட்டு மன்னர்களின் மன்னன் நாகன் என்பானுக்கும், அவன் மனைவி தத்தை என்பாளுக்கும் பிறந்தவர் திண்ணனார். திண்ணனாரைத் தத்தை பெற்றெடுத்தமை குறித்துச் சேக்கிழார் வருணிக்கிறார்.

திண்ணனாரைப் பால்மதி எனவும், தத்தையைக் கடல் எனவும் சேக்கிழார் குறிக்கின்றார். "பால்மதியைக் கடல் ஈன்றெடுத்தாற்போல் தத்தை அவரை ஈன்றாள்" என்கிறார் ஆசிரியர். [73] சைவசமய வானில் பான்மதிபோல் திண்ணனார் திகழப்போகிறார் என்பதை நிலவு உருக்காட்சி தெரிவிக்கிறது. பான்மதியின் எழுச்சியால் கடல் பொங்குவது போலத் தத்தை திண்ணனாரைப் பெற்றமையால் இன்பம் அடைகிறாள் என்ற கருத்து இக்கடல் உருக்காட்சியால் உணர்த்தப் பெறுகிறது. உவர்க்கும் நீரைக் கொண்டுள்ள கடலில் உலகு போற்றும் நிலவு தோற்றுவதுபோல் தத்தையிடம் கண்ணப்பநாயனார் பிறந்தார் என்ற கருத்து நினைத்தற்குரியது.

## வணிகர் - கடல்அலை:

"மானவுணர்வு மிக்கவராகவும், தருமநெறியில் வாழ்பவராகவும், வாய்மைத்திறத்தில் குறையற்றவராகவும் திகழும் பெருவணிகர்களின் குடி சிறப்புடன் விளங்கும் கடற்கரைப் பட்டினமாகிய காரைக்காலில் கடலலைகள் வளைவான வடிவமுள்ள சங்குகளைச் சுமந்துகொண்டுவந்து மேலேறி மண்டுகழிக்கானல்மீது உலவுகின்றன. இவ் அலைகளால் பெருவளம் பெறுகிறது காரைக்கால்." [74] புனிதவதியார் பிறந்த பதியாகிய காரைக்காலைச் சேக்கிழார் இவ்வாறு வருணிக்கிறார். கடலலை, வளை, கழிக்கானல் என்பன காரைக்கால் அம்மையார் எனச் சைவவுலகத்தால் போற்றப்பெறும் புனிதவதியார்தம் வாழ்க்கை வரலாற்றின் சுருக்கமான வடிவத்தைக் குறிப்பிடும் குறியீட்டு உருக்காட்சிகளாக விளங்குகின்றன எனலாம். குறிப்பிட்ட சில நாயனார்களின் புராணங்களின் தொடக்கப்பகுதிகளில் அந்நாயனார்களின் வாழ்க்கை வரலாற்றைக் குறிப்பிட்டுக் காட்டும் வகையில் இயற்கை வருணனை என்ற வகையில், சுருக்கமான வடிவில் வரைந்துகாட்டும் உத்தியைச்

சேக்கிழார் உருக்காட்சி வகைகளில் ஒன்றாக ஆள்கிறார் எனலாம். "இறையுணர்வாகிய அலை அம்மையாராகிய வளையைத் தாங்கிக்கொண்டு வந்து, கயிலைமால் வரையாகிய கழிக்கானலின்மேல் ஏறிச்சென்றது" எனும் உட்குறிப்புடன் இவ்வருணனை விளங்குகிறது. அம்மையாரின் இடையறாத அன்பின் திறத்தை ஓயாத கடலலை உருக்காட்சி தெரிவிக்கிறது. ஆய்ந்தசீர் இரட்டைமாலை, அந்தாதி ஆகியவற்றைப் பாடி இறைவரைப் போற்றிய திறத்தை வளைஉருக்காட்சியால், அறியலாம். ஒலியெழுப்ப உதவும் வளை பொருத்தமான உருக்காட்சியாக விளங்குகிறது. கடற்கரை நகரில் வாழ்ந்த அம்மையார்தம் சிறப்பைக் கடலலை, வளை, கழிக்கானல் ஆகியவற்றைக்கொண்டே ஆசிரியர் உருக்காட்சிகளைப் படைத்து வருணிப்பது பொருத்தமும் முருகியற்சுவையும் உடையதாக உள்ளது. அம்மையாரது புராணத்தின் தொனியமைப்பியாகவும் (Tone setter) வளை, கழிக்கானல் உருக்காட்சிகளுடன் இணைந்த கடலலை உருக்காட்சி விளங்குகிறது.

எண்ணக்கோவையும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாகவும் இவ்வுருக்காட்சி உள்ளது.

## புரவித்திரள் - கடலலை:

"புரவித் திரள்கள் ஆயோகப்
பொலிவின் அசைவிற் போதுவன
அரவச் சேனைக் கடல்தரங்க
மடுத்து மேன்மேல் அடர்வனபோல்
விரவிப் பரந்து சென்றனவால்
மிசையும் அவலும் ஒன்றாக
நிரவிப் பரந்த நெடுஞ்சேனை
நேமி நெளியச் சென்றனவால்" 75

என்ற பாடலில் சேக்கிழார், " சேனைகளையடுத்துக் குதிரைகளின் கூட்டம் அழகுடன் அசைந்துபோகும் தோற்றம் கடலின் அலைகள் மேன்மேல் எழுந்து அடர்வதுபோல் விளங்கியது" என்கிறார். குதிரைகளின் இயக்கம் கடல் அலைகளைப் போல் இருந்தது என்பது பொருத்தமான உருக்காட்சி எனலாம். இப்பாடலின் சந்தம் குதிரைகளின் செலவை நினைக்கச்செய்கிறது.

கடலலை உருக்காட்சி கேள்விப்புல உருக்காட்சியுடன் இணைந்து வந்துள்ளது.

**துரங்க சாலைகள் - கடல்கள்:**

"ஒலிக்கின்ற மணிகளும் குதிரைகளின் கனைப்பும் ஓசையை எழுப்புகின்றன. நீண்ட வரிசையில் உள்ள குதிரைகள் புல்லை உண்கின்றன. அவற்றின் வாய் நீரினால் ஆகிய விலாழியாவது அலைவிளிம்பில் உள்ள நுரையைப்போல் விளங்குகிறது. அக்குதிரைகளின்மேல் உள்ள கவசங்கள் மலையின்மீது படியும் மேகங்களைப்போல் உள்ளன. இவ்வாறு விளங்குவதால் உறையூரில் இருக்கும் குதிரைச்சாலைகள் எல்லாம் தோண்டப்பட்ட கடல்களைப்போல் தோன்றுகின்றன" என்று கூறும் ஆசிரியர் கடல் உருக்காட்சியால் குதிரைச்சாலைகளின் சிறப்பைக் குறிப்பிடுகிறார்.[76]

தொண்டர்களின் புகழ், இன்பம், இறையன்பு, ஞானம் ஆகியவற்றையும் காதல், புலவி, துன்பம், பொய். மாயம், ஆசை ஆகியவற்றையும் கடல் உருக்காட்சியால் சேக்கிழார் விளக்கிக் காட்டுவது இவ்வாய்வினால் தெரியவந்தது. பிறவி, தவம் போன்ற தத்துவக் கருத்துக்களை இவ்வுருக்காட்சியால் அசிரியர் விளக்குகின்றார். குளம், ஆறு, கிடங்கு ஆகியவற்றின் அகலம், நீட்சி, ஆழம் போன்றவை இவ்வுருக்காட்சியால் விளக்கமுறுகின்றன. நகரம்,ஆவண வீதிகள், குதிரைச் சாலைகள், குதிரைகள் வரிசை இவ் வுருக்காட்சியால் சிறப்பித்துக் கூறப்படுகின்றன. தொண்டர்கள் கூட்டம், படை ஆகியவை இதனால் புதுமைப்பொலிவுடன் வருணிக்கப்படுகின்றன.

புதுமை, பொருத்தம், கிளர்ச்சியூட்டும் ஆற்றல், முருகியற்சுவை, குறியீட்டியல், எண்ணக்கோவை ஆகியவற்றுடன் கடல் உருக்காட்சி சேக்கிழாரால் ஆளப்பட்டுள்ளமை கண்டுணரப்பட்டது. புராணப்படைப்பின் தலைமையுணர்வாகிய பத்தியுணர்வை மிகுவிக்கும் திறனுடையதாக இவ்வுருக்காட்சி விளங்குவதை ஆய்வில் கண்டுணர முடிந்தது.

## (ஈ) நிலம்

### மலை, சுரங்கம் உருக்காட்சிகள்:

பெரியபுராணப் படைப்பில் மலை உருக்காட்சியைச் சேக்கிழார், திருக்கோயில்களில் எழுப்பப்பட்டுள்ள கோபுரங்களின் தோற்றப்பொலிவையும் உயர்ச்சியையும் சிறப்பித்துக் கூறவும், இறைவர் தம் திருக்காட்சியைப் போற்றவும், அவரது ஊர்தியின் வடிவை உணர்த்தவும், நாயனார்தம் தோற்றத்தைப் பாராட்டிக் கூறவும் ஆள்கிறார்.

மாளிகைகள், மதில்கள் இதனால் சிறப்பிக்கப் படுகின்றன. நெற்கதிர்களின் குவியல், வைக்கோற்போரின் உயர்ச்சி, நெற்பொலி, நெல்மணிகளைத் தம்மாட்டுக் கொண்டுள்ள குமரிக்கூடுகள், பெருநிதிக்குவைகள், மலர்க்குவியல்கள் முதலியவை மலை உருக்காட்சி வாயிலாகப் பொருத்தமுறக் காட்சிப்படுத்தப்படுகிறது. பிணக்குவியலை இதனால் காட்டு கின்றார்.

வேடுவர் தலைவன் நாகனின் தோற்றப்பொலிவு, ஆடவர் தோள்நலம் ஆகியவற்றை இவ்வுருக்காட்சியால் சேக்கிழார் சிறப்பிக்கின்றார். பரவையார்தம் மார்பு இதனால் சிறப்பிக்கப் படுகிறது.

யானையின் தோற்றத்தை இவ்வுருக்காட்சி தெள்ளிதின் காட்சிப்படுத்துகிறது.

இவ்வுருக்காட்சி மரபு வழிப்பட்ட ஒன்றாக இருப்பினும் புதுமைநலம் கனிய விளங்குகிறது என்பதற்கு இவ்வுருக்காட்சியால் சுந்தரர்தம் தவச்சிறப்புப் போற்றப்படும் இடம் சான்றாக அமைகிறது.

### கோபுரங்கள் - மலை:

தில்லையம்பதியின் திருக்கோயிலின் திருக்கோபுரம் ஏழுநிலைகளுடன் ஏரார்ந்த தோற்றத்துடன் விளங்குவதைச் சேக்கிழார்.

"நீடுவான் பணிய உயர்ந்த பொன்வரைபோல் நிலைஎழுகோபுரம்" [1] என்கிறார். வானம் தன்னைப் பணியுமாறு உயர்ந்தோங்கி நிற்கிறது தில்லைக்கோபுரம் என்பது நயமுடைந்து. சீகாழித் திருத்தலத் திருக்கோயில், "வெள்ளிமால்வரை" எனப்படுகிறது. [2] 'உயர்மேருக் குன்றனைய பேரம்பலம்" என்பது தில்லைக்கோயிலைக் குறிக்கிறது.. [3]

நெற்கதிர்களின் குவியல், வைக்கோற்போரின் உயர்ச்சி,
நெற்பொலி, நெல்மணிகளைக் கொண்டுள்ள குமரிக்கூடு

சோழநாட்டுவளத்தைச் சேக்கிழார் சிறப்பிக்கும் வகையில் மலை உருக்காட்சியை ஆள்வது குறிப்பிடத்தக்கது. மருதநிலமாகிய சோழநாடு மலையும் மலை சார்ந்த நிலமாகிய குறிஞ்சியைப் போல் தோன்றுவதாகச் சேக்கிழார் வருணிப்பது நயம்சான்றதாக உள்ளது.

"அரிதரு செந்நெற் சூட்டின் அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்
விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார்" 4

சோழநாட்டு மக்கள் தங்கள் நாட்டில் மலை என்பது இல்லையென்ற குறையைப் போக்குகின்ற வகையில் நெற்சூட்டினை அடுக்கியும், வைக்கோற்போரினை உயர்த்தியும், நெல்மணிகளை உயரமாகக் குவித்தும், நெல்லைச் சேமித்து வைக்கும் குமரிக்கூட்டை அமைத்தும் செயற்கை மலைகளைப் படைக்கின்றனர். "அடுக்கல் சேர்ப்பார்" "குன்று செய்வார்" " பொருப்புயர்ப்பார்" வெற்பு வைப்பார்" என்ற தொடர்களும், அத்தொடர்களில் மலைக்குரிய பல்வேறு பெயர்களும் புதுமைநயம் பயக்கின்றன. மருதத்தில் குறிஞ்சியின் காட்சியைப் படைக்கும் ஆசிரியர் கற்பனை நினைத்தற்குரியது. தொடர்ந்து இதே உருக்காட்சியின் சிந்தனையில் சேக்கிழார்.

"சாலியின் கற்றை சுற்ற தடவரைமுகடு சாய்த்துக்
காலிரும் பகடு போக்குங் கரும்பொருள் பாண்டில் ஈட்டம்
ஆலிய முகிலின் கூட்டம் அருவரைச் சிமயச் சாரல்
மேல்வலங் கொண்டு சூழும் காட்சியின் மிக்க தன்றே" [5]

என்று ஆர்வமுற வருணிக்கிறார். சோழநாட்டின் வளத்தைப் புகழ்ந்து பாடுவதில் ஆசிரியருக்குள்ள விருப்பின் வெளிப்பாடாக இவ்வருணனை உள்ளது. உயரம் மிக்க மலையாகிய இமயமலைச் சாரலில் கருமேகத்தின் கூட்டம் மேல் வலங்கொண்டு சூழ்கின்ற காட்சியைப்போல் வைக்கோற்போரின் முகட்டினைச் சாய்த்துத் தள்ளி அதன்மேல் எருமைகள் பூட்டிய பாண்டில்களின் கூட்டம் இயங்குவது தோற்றமளிக்கிறது. சோழநாட்டின்கண் கருமேகம் சூழும் இமயமலைச் சாரலைக்கொணர்ந்து காட்டும் கற்பனை சேக்கிழார்தம் படைப்புத் திறனுக்குச் சான்றாக அமைகிறது.

"நெற்குன்றங்கள் பொற்குன்றங்களாகவும், மற்ற தானியங்களின் குவைகள் நவமணிக்குன்றங்களாகவும் திகழ்வதால் முளரிநீர் மருதவைப்பாகிய சோழநாடு மொய்வரை உலகம் எனப்படும் குறிஞ்சிநிலம் போலக் காட்சியளிக்கிறது" என்று நாட்டுச்சிறப்பை இவ்வாறு கூறி மருதத்தில் மலையற்ற குறையைப் போக்கி நிறைவு கொள்கிறார் ஆசிரியர்.[6]

"பெண்ணைமாநதி பாய்ந்து வளம்பெருக்கும் திருமுனைப்பாடி வளநாட்டில் உள்ள நெற்கூடுகளையும் மாடங்களையும் மலைகளாகக் கருதி மயிற்குலமும் முகிற்குலமும் ஆங்கு மாறாட மருங்காடும்" என்று ஆசிரியர் பகர்வது கற்பனைச் சிறப்புடன் விளங்குகிறது.[7]

## இறைவர் விடை - மலை:

இயற்பகை நாயனாருக்கு இறைவர் திருக்காட்சி தந்தமையைக் குறிப்பிடும் சேக்கிழார்.

"பொன்திகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேல் பொலிந்த தென்னத்
தன்துணை யுடனே வானில் தலைவனை விடைமேற் கண்டார்"[8]

என்கிறார். பொன்குன்று இறைவரையும் வெள்ளிப்பொருப்பு அவர்தம் ஊர்தியாகிய விடையையும் குறிக்கின்றன.

## திண்ணனார் - நீலமலை:

### தோள்:

திண்ணனாரின் தோற்றத்தைச் சேக்கிழார், "மணிநீல மலையொன்று வந்ததென்ன" என்று குறிப்பது நயமுடைத்து. அவரது புயமிரண்டும் செல்வரை போல் விளங்கினவென்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்".[9]

"கருவரை ஒருதனுவோடு விசைகடுகியது போல் திண்ணனார் வேட்டையில் ஈடுபட்டார்" எனச் சேக்கிழார் குறிப்பது நினைத்தற்குரியது. [10]

"... மெய்ம்மையின் வேறு கொள்ளாச்
செவ்விய அன்பு தாங்கித் திருக்கையில் சிலையுந் தாங்கி
மைவ்வரை என்ன ஐயர் மருங்குநில் றகலா நின்றார்" [11]

எனச் சேக்கிழார் திருக்காளத்தியப்பரைக் காத்திடும் பணியில் உறுதியுடன் நின்றமையை மலைஉருக்காட்சியில் அழுத்தமுறக் கூறுவது நயமுடையத்து.

## சுந்தரர் தவம் - மேருமலை:

திருவொற்றியூர் இறைவர் சங்கிலியாரிடம், சுந்தரரைப் பற்றி 'மேருவரையின் மேம்பட்ட தவத்தான் என்பால் மிகுந்த அன்புடையான்" என்று நவின்றதாகச் சேக்கிழார் குறிப்பது சுந்தரர்தம் தவச்சிறப்பைக் காட்சிப்படுத்தும் மலைஉருக்காட்சியாக உள்ளது. தவம் என்னும் நுண்பொருள் மலை என்னும் பருப்பொருளால் காட்சிப்படுத்தப்படுவது காணத்தக்கது. [12]

இவ்வாறு மலை உருக்காட்சியைத் தம் படைப்பில் சேக்கிழார் செவ்விதின் ஆள்கின்றார்.

மருதவைப்பைக் குறிஞ்சியாகக் காட்டுவதற்கும், இறை-வரையும் அவர்தம் ஊர்தியாகிய விடையையும் சிறப்பித்தற்கும், நாயனார்தம் தோற்றத்தையும், தவமாண்பையும் படிப்பவர் மனத்துள் பதிப்பதற்கும் ஆளப்பெறும் மலைஉருக்காட்சி சேக்கிழார் கற்பனையின் மனவியலையும் படைப்பாற்றலையும் தெரிவிக்கிறது.

## குழி உருக்காட்சி:

எதிர்பாராத வகையில் மக்கள் நிலத்தில் உள்ள குழிகளில் வீழ்ந்து விடுவதுண்டு. பிறருடைய உதவியால் குழிகளிலிருந்து எழுவதுமுண்டு. ஆழமான சேறாக உள்ள குழியில் வீழ்ந்து மேலெழவியலாமல் மாள்வதுமுண்டு. சேக்கிழார் இத்தகைய குழியையும் உருக்காட்சியாகப் படைத்துத் திருநாவுக்கரசர் வாழ்வின் முற்பகுதியில் அதாவது இளமைப்பருவத்தில் சைவசமயத்தினரால் பரசமயமாகக் கருதப்பெறும் சமணசமயத்தைச் சார்ந்திருந்தமை பற்றியும் பின்னர் தமக்கையார் திலகவதியார் அருளால் மீண்டும் சைவமசயத்திற்குத் திரும்பி வந்தமை பற்றியும், படிப்பவர் மனத்துள் பதியுமாறு விளக்குவது பொருத்தமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக உள்ளது.

## பரசமயம் - குழி:

"அடியேன்பின் வந்தவனை ஈண்டுவினைப் பரசமயக்குழி நின்றும் எடுத்தாள வேண்டும்" என்று திலகவதியார் திருவதிகை இறைவரிடம் விண்ணப்பம் செய்தார். அவருடைய வேண்டுகோட்கிணங்க இறைவர் சூலை வேதனையைத் திருநாவுக்கரசருக்குத் தந்தார். வேதனையைத் தாங்கமுடியாத அவர் தம் தமக்கையாரிடம் வந்தார்". 'இந்த உடல் 'கொடுஞ்சூலைக் கிடைத்தடைந்தேன். இனிநான் மயங்காமல் உய்ந்து கரை ஏறு நெறி உரைத்தருளும்' என்று அவரிடம் வேண்டினார்.

> "கோளில்பர சமயநெறிக் குழியில்விழுந் தறியாது
> மூளுமருந் துயருழந்தீர் எழுந்திரீர்"

என மொழிந்தார் திலகவதியார். எழுந்து தொழுதுநின்ற தம்பியாரிடம், 'பரமருக்குப் பணிந்து பணிசெய்வீர்' என்றார் அவ் அம்மையார். அஞ்செழுத்தினை ஓதி அவர் அளித்த திருநீற்றை அணிந்துகொண்டார் நாவரசர். முதல்வன் கருணைக்கடலில் மூழ்கினார். இறைவருடைய கருணைப் பெருவெள்ளத்தில் பரசமயக் குழியிலிருந்து தாம் கரையேறியதாக நினைத்தார். சமணமாகிய ஆழ்குழியில் விழுந்து எழ அறியாமல் அவம்புரிந்தமையும் இறையருளால் அதிலிருந்து விடுபட்டமையும் எண்ணி மகிழ்ந்தார்" 13 எனச் சேக்கிழார் விவரிக்கும் பகுதியில் குழி

உருக்காட்சி தொடர் உருக்காட்சியாக வந்து சமணமாகிய பரசமயத்தைச் சைவ உலகினர் ஆழமான குழியாகக் கருதியமையை நினைவில் எழுப்புகிறது. குழி உருக்காட்சி இவ்வாறு ஆளப்படுவதன் வாயிலாகக் குறியீடு என்னும் நிலையை அடைகிறது எனலாம். குழியில் வீழ்ந்த நிலை அவல உணர்வையும் அதனின்றும் மீண்ட நிலை இன்பஉணர்வையும் எழுப்புவதாகக் காட்டப்படுகின்றன. குழியிலிருந்து மீள இறைவரருள் வெள்ளம் உதவுகின்றது என்ற கருத்து ஆழமான ஒன்றாக உள்ளது.

## இடுக்கண் குழி:

ஒரு வணிகன் திருமணம் புரிந்துகொள்ளும் நோக்குடன் தனது தமக்கை மகளை அவளது இசைவுடன் அழைத்துவந்தான். திருமருகல் என்னுந் திருத்தலத்து மடத்தில் தங்கி, இரவில் துயிலும்போது அரவு தீண்ட மாண்டான். அசைந்த மலர்க்கொடி போல்வாளாகிய அப்பெண் அரற்றினாள். இடுக்கண் ஆகிய குழியிலிருந்து தன்னை மேலெழச் செய்யுமாறு திருமருகல் பெருமானை வேண்டினாள். [14]

இச்செய்தியில் குழி உருக்காட்சி பொருத்தமுற ஆசிரியரால் ஆளப்பட்டுள்ளது.

## கருக்குழி:

"பத்தராய்ப் பணிவார்களாகிய அடியார்கள் பிறவியாகிய கருக்குழியில் விழமாட்டார்கள்" [15] என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அவர்கள் பிறவாப்பெருவாழ்வு இவ்வாறு விளக்கப்படுகிறது.

குழி உருக்காட்சி சேக்கிழார்தம் கற்பனைத்திறனின் சான்றாக விளங்குகிறது. அவரது சைவசமயப் பற்றையும் சமணத்தின்பால் அவர்கொண்டுள்ள வெறுப்பையும் தெரிவிக்கிறது. அவரது கற்பனையின் மனவியலைக் காட்டுவதாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது. ஆன்ம ஈடேற்றத்திற்குச் சைவநெறி உகந்தது என்பதில் அவருக்கு இருந்த அழுத்தமான உறுதியின்வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. இறையடியார்கள் பிறவித்துன்பம் அடையமாட்டார்க என்பதைக்

குறிப்பதில் அவருக்குள்ள ஆர்வத்தை இவ்வுருக்காட்சி ஆய்வில் அறியமுடிகிறது.

## (உ) நிலைத்திணை : வளர்வன

இயற்கையிலிருந்து உருக்காட்சிகள் சேக்கிழாரால் எடுத்தாளப்பட்டுள்ளன. வளர்வனவாகிய வித்து, முளை, பயிர், கொம்பு, தளிர், கொழுந்து, முகை, மலர், காய், கனி, மரம், வேர் என்பன உருக்காட்சிகளாகப் பெரியபுராணத்தில் இடம்பெறுகின்றன.

### வித்து உருக்காட்சி:

பயிர், செடி, கொடி, மரம் ஆகியவற்றின் தோற்றத்திற்கு முதலாக இருப்பது வித்தாகும். நிலத்தில் இடப்பட்ட வித்து முளைவிட்டு வளர்ந்து செடியாகவும் கொடியாகவும், மரமாகவும் உருவாகின்ற காட்சியை நந்தனார்தம் பத்தியுணர்வின் சிறப்பைப் பொருத்தமுற விளக்கும் வகையில் உருக்காட்சியாகப் படைக்கிறார் சேக்கிழார். "மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைத்த உணர்வோடும் வந்தார்" என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். [1]

மெய்ப்பரிவு என்பது திருவடிப்பற்றைக் குறிக்கும். மெய்ப்பரிவு என்ற வித்து நந்தனாரால் பிறவிகள் தோறும் வளர்க்கப்பட்டு வருகிறது என்கிறார் சேக்கிழார். இவ்வகையில் வித்து ஓர் உருக்காட்சியாக உள்ளது. நெல்வித்தை வயலில் விளைவிக்கும் நந்தனார், தம் நெஞ்சம் என்னும் வயலில் மெய்ப்பரிவு என்னும் வித்தைப் பிறவிகள்தோறும் விளைவித்து வருகிறார் என்பது கருத்து.

### முளை உருக்காட்சி:

### சம்பந்தர் வளர்ச்சி - அங்குரம்:

சம்பந்தரைச் சேக்கிழார், "செய்தவத்தின் அங்குரம் போல் வளர்ந்தார்" [2] என்றும், "புண்ணிய முதல்" [3] என்றும் குறிப்பிடுகின்றார். இளமைப்பருவத்தில் இருக்கும் சம்பந்தரைப் "புண்ணிய விளைவு போல்வார்" என்று குறிப்பிடுகின்றார். [4] புண்ணியம் என்ற கருத்துப்பொருள் "முதல்" "விளைவு"

என்பவற்றுடன் இணைந்து பருப்பொருள்போல் ஆளப்படுவது புதுமையும் ஆழமும் உடையதாக உள்ளது. புண்ணியம் என்பதன் தொடக்கமாகச் சம்பந்தர் விளங்குகின்றார் என்பது கருத்து. அந்தப் புண்ணியத்தின் விளைவாகவும் அவர் உள்ளார் என்கிறார் சேக்கிழார்.

## பாசப்பழி - முதல்:

இளையான்குடி மாறநாயனார் தம் இல்லத்திற்குத் தவமுனிவர் வடிவில் நள்ளிரவில் வந்த இறைவருக்கு விருந்துபடைக்க முற்படுகின்றார். வீட்டில் அவருக்கும் அவர் மனைவிக்கும் உணவில்லை. வறுமையினால் துன்புறும் நிலையில் உள்ளார்கள். பகற்பொழுதில் வயலில் விதைத்த நெல்லைக்கொண்டு வருமாறு மனைவியார் கூற அவ்வாறே நள்ளிரவிற் சென்று வயலிலிருந்து முளைத்திருக்கும் நெல்லைக் கொண்டுவருகின்றார். கறியமுது படைக்க நாயனார் குழிநிரம்பாத புன்செய்ப்பயிரைத் தடவிப்பறித்து வருகின்றார். அவர் புன்செய்ப்பயிரைப் பறித்த செயலைச் சேக்கிழார், "பாசப்பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தார்" என்கிறார் 5 விதை முளைவிட்டுப் பின் சிறிய இலைக-ளுடன் வளர்ச்சிபெற்ற பயிர் இங்கு "முதல்" என்று குறிக்கப்படுகிறது. "பாசப்பழி" என்ற கருத்துப்பொருள் "முதல்" என்பதுடன் இணைந்து பருப்பொருளாகக் குறிக்கப்படுகிறது.

## பூம்பாவை - மின்னின் அங்குரம்:

ஏழாண்டுப் பருவமுள்ள பூம்பாவையைத் "தளரும் மின்னின் அங்குரம்" 6 எனக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். மின்னல் என்பது விண்ணில் இருக்கும் மேகத்தில் தோன்றி மறையும் ஒளி, அதுவே முளைவிட்டு வந்தாற்போல் பூம்பாவை விளங்குகிறார் என்பது ஆசிரியரின் கற்பனைத் திறனைக் காட்டுகிறது. பூம்பாவையின் அழகைச் சிறப்பிக்கும் உருக்காட்சியாக "மின்னின் அங்குரம்" என்ற தொடர் வந்தள்ளது.

## பக்தி - முதல்:

" உலகில் நீடிய பக்தி என்ற முதல், அன்பாகிய நீரிலே பருத்து, மேல்எழுந்து, நம்பியாரூரது செம்பொன் போன்ற

மேனியைத் தனது வடிவமாகக் கொண்டது. பின்பு கடுமையான வெவ்விய வினைகள் என்னும் களையினைக் கடிந்து, அகற்றி, மேலோங்கி எழுந்து, ஞானக்கதிர்களாகிய கதிர்களைப் பரப்பி, அழிவிலாத சிவபோக மென்னும் விளைவு மேன்மெலும் முதிர்ச்சியும், செவ்வியும், பெற்று விளைந்தது" எனச் சுந்தரர்தம் பக்தி என்ற முதல் சிவபோகமாக விளைந்தமை குறித்துச் சேக்கிழார் குறிப்பிடுகிறார்.[7]

நெல்வித்து, நெற்பயிரின் வளர்ச்சி, முதிர்ச்சி, விளைவு ஆகியவற்றை உருக்காட்சியாகப் படைத்துச் சுந்தரரின் பக்திமாண்பையும், அதன் விளைவாக அவர்பெற்ற ஆன்ம வளர்ச்சியாகிய முத்திநிலையையும், சேக்கிழார் இவ்வாறு விளக்குகிறார். சோழநாட்டின் முதலமைச்சராக இருந்த சேக்கிழார் உழவுத்துறையை நேரிற்கண்டு அனுபவித்தவர் என்பதை இவ்வுருக்காட்சியால் அறியலாம். சேக்கிழாரின் சமய, தத்துவச் சிந்தனையைக் காட்டுவதாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது. பெரியபுராணத்தின் தலைமை உணர்வாகிய பக்திஉணர்வை விளக்குவதாக உள்ள இவ்வுருக்காட்சி புராணத்தின் இறுதியிலுள்ள வெள்ளானைச் சருக்கத்தில் பொருத்தமுற ஆளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

### பயிர் உருக்காட்சி:

தொண்டு - வான்பயிர்
சம்பந்தர் - பெருவேலி

மதுரையில் நடந்த அனல், புனல் ஆகிய வாதங்களில் சமணரை வென்றார் சம்பந்தர். பாண்டியநாட்டில் சமணசமயம் வீழ்ச்சியுற்றது. மீண்டும் சைவசமயம் எழுச்சியுற்றது. பரசமயங்களால் சைவசமயத்திருத்தொண்டு நலிவுறாவண்ணம் காத்தவர் சம்பந்தர். மதுரையிலிருந்து வெற்றியுடன் திரும்பிய சம்பந்தரைத் திருப்பூந்துருத்தி எனும் பதியில் நாவரசர் வரவேற்றார். மதுரையில் நடந்த நிகழ்ச்சிகளை நாவரசருக்குச் சம்பந்தர் கூறினார். மகிழ்ச்சியுற்ற நாவரசர்,

"வாழி திருத்தொண்டென்னும் வான்பயிர் தான் ஓங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீர்"[8]

என்று சம்பந்தரைத் தொழுதார். சைவசமயத் திருத்தொண்டு என்னும் பயிர் ஓங்கி வளர்வதற்குத் தடையிலாத வண்ணம் சம்பந்தர் வேலிபோல விளங்குவதாக நாவரசர் குறிப்பிடுகின்றார். வேளாளர் குலத்தில் பிறந்து வளர்ந்த நாவரசர் வாக்கில் "பயிர்", "வேலி" என்ற உருக்காட்சிகளைச் சேக்கிழார் பொருத்தமுற அமைத்துள்ளார்.

## கொடி உருக்காட்சி:

### பெண் - கொடி:

பெண்ணின் மென்மையையும் தோற்றத்தையும், இடையையும் சிறப்பிக்கும் வகையில் கொடி உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.[9]

### நாடு, நகர் - கொடி, மலர்:

"பொன்னிநாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போல் நன்மைசான்றது நாகப்பட்டிணத் திருநகரம்" என்று சேக்கிழார் குறிப்பது காணத்தக்கது.[10]

## கொம்பு உருக்காட்சி:

### பெண் - கொம்பு:

மலர்களுடன் விளங்கும் கொம்பினைச் சேக்கிழார் பெண்களின் அழகை உவமையாகவும் உருவகமாகவும் ஆள்கிறார்.[11]

### வெண்சுதை, மாளிகை, கட்டப்பட்டுள்ள கொடிகள், உடுக்கள் பகற்பொழுது, கொடி, தளிர், மலர்:

சீகாழியில் உள்ள வெண்சுதையால் அமைக்கப்பெற்ற மாளிகைகளின் நாசிகளின்மேல் பலநிறக் கொடிகள் கட்டப்பட்டுள்ளன. இந்நாசிகள் மேகமண்டலத்தைத் தொடும் அளவிற்கு உயர்ந்துள்ளன. இரவுப்பொழுதில் விண்மீன்கள் என்னும் புதிய மலர்கள் மலர்வதற்காகப் பகற்பொழுதில் பலநிறத்துடன் விசும்பில் தளிர்கள் தோன்றுவது போன்று வெண்சுதை மாளிகையின் நாசிகளில் கட்டப்பட்டுள்ள கொடிகள் காட்சி அளிக்கின்றன. கொடியில் மலர்கள் தோன்றுவதற்கு முன்பு

தளிர்கள் தோன்றவேண்டும் என்ற இயற்கை நினைத்தற்குரியது. கொடி, மலர் ஆகிய உருக்காட்சிகளுடன் இணைந்த தளிர் உருக்காட்சி மாளிகைகளின் மேல் பறக்கும் கொடிகளின் மிகுதிப்பாட்டையும், எண்ணங்களையும், அம்மாளிகைகளில் உயர்ச்சியையும் தெரிவிக்கிறது. தாவரநூற் கருத்துடன் இணைந்து இவ்வுருக்காட்சி வந்துள்ளது எனலாம்.[12] ஆசிரியர்தம் கற்பனைத்திறனை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## கொழுந்து உருக்காட்சி:

குவிந்த நிலையிலுள்ள தளிர் விரிந்து மிகவும் மென்மையான இலையாக அமையும்பொழுது அது கொழுந்து (opened young leaf) எனப்படுகிறது. இறைவர், இறைவி, சம்பந்தர், பரவையார், காரைக்காலம்மையார், கொல்லிமழவன் மகள், நம்பாண்டார், நம்பிமகள், மங்கையர்க்கரசியார் இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றனர்.[13] நாயனார்தம் தலைமைச் சிறப்பைக் குறிப்பதாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது.

தொண்டைநாட்டு வளத்தை வருணிக்கும்பொழுது, குறிஞ்சி, நெய்தல் ஆகிய இரண்டு திணைகளும் இணைந்திருக்கும் நிலையைத் திணைமயக்கம் என்ற மரபில் கூறுகின்றார். 'கோ-டுகொண் டெழும் திரைக்கடற் பவளமென்கொழுந்து மாடு மொய்வரைச் சந்தனச் சினைலமிசை வளரும்" என்பது சேக்கிழார் வாக்கு.[14] சிவனார் சடையில் அணியப்பெற்றிருக்கும் இளம் பிறையை " மதிக்கொழுந்து", "திங்கட்கொழுந்து", "வெண்மதியின் கொழுந்து" "அவிர்மதியக்கொழுந்து" என்கிறார் ஆசிரியர்.[15] "வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்து"[16] என்று சம்பந்தரை ஆசிரியர் குறிக்கின்றார்.

## முகை உருக்காட்சி:

பெண்களின் இளமை நலத்தை வருணிக்க இவ்வுருக்காட்சியை ஆசிரியர் ஆள்கிறார்.

## பெண்ணின் சிரிப்பு - முகை:

மானக்கஞ்சாறநாயனார் தம் மகளின் சிரிப்பை வருணிக்கும்பொழுது

"முறுவல் புறமலராத முகிழ் முத்த நகையென்னும் நறுமுகை" என்கிறார்.[17] "கோலவெண்முகையேர் முல்லை" கொண்டு காரென்னும் பருவநல்லாள் சிரிப்பதாகக் குறிப்பிடுகின்றார்.[18] வானமகளிர் கைவிரல்கள், "உற்பல மென்முகிழ்விரல்" எனவும், பூம்பாவையின் கைவிரல்கள், "முகிழ்விரல்" எனவும் குறிக்கப்படுகின்றன.[19]

## முலை - நனை:

மானக்கஞ்சாறநாயனார் மகளாரின் பருவப்பூரிப்பை வருணிக்கும் சேக்கிழார், " முலைநனைமுகஞ்செய் முதல்பருவம் நண்ணினள்" என்கிறார்.[20]

## கன்னிமை - முகை:

சங்கிலியாரின் கன்னிப்பருவத்தைச் சிறப்பிக்கும் வகையில், "சுரும்பேறாக் கொழுமென்முகை"[21] என்று பொருத்தமுடன் குறிப்பிடுவது நினைத்தற்குரியது.

## அறிவு - முகை:

"ஒருமைக்கண் தாம்கற்ற கல்வி யொருவற், கெழுமையும் ஏமாப்புடைத்து"[22] என்னும் கருத்திற்கிணங்க, சண்டீசரின் முன்னையறிவின் தொடர்ச்சியை முகை உருக்காட்சியால் சேக்கிழார் விளக்குகின்றார்.

"முந்தை அறிவின் தொடர்ச்சியினால்
முகைக்கு மலரின் வாசம்போல்
சிந்தை மலர உடன்மலரும்
செவ்வி உணர்வு சிறந்ததால்"[23]

என்பது சேக்கிழார் வாக்கு.

## மனம் - முகை:

நாவரசர் கலைபயின்ற சிறப்பை,

"பொருள் நீத்தம் கொளவீசிப் புலன்கொளுவ மனம் முகிழ்த்த
சுருள்நீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்கினார்"[24]

என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். கல்வி, கலை ஆகியவை பற்றிய சேக்கிழார் சிந்தனையை முகை உருக்காட்சி காட்டுகிறது. "சுரும்பேறாக் கொழுமென்முகை" என்ற தொடர் பெண்ணின் கன்னிமைப் பருவச் சிறப்பையும், அழகையும், அடக்கவுணர்வையும், மென்மைத்தன்மையையும் ஒரேநேரத்தில் படிப்பவர் மனத்துள் எழும்பும் திறம்சான்ற முகை உருக்காட்சியாக உள்ளது எனலாம். முருகியற்சுவையுடனும் இது விளங்குகிறது.

## உலகம், தலங்கள், கயிலை - கொடி, தளிர்கள், மலர்:

உலகிலுள்ள சிவத்தலங்களைத் தளிர்களெனவும், உலகைக் கொடியெனவும், கயிலைமலையை வெண்மலரெனவும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். [25] கொடி, தளிர், மலர் ஆகிய மூன்று உருக்காட்சிகளும் இணைந்து வருவது குறிப்பிடத்தக்கது.

"கொடிப்பூவாகிய ஒரு வெண்பூவை அடைய விரும்பியவன் அதனைப் பூக்கின்ற கொடியைச் சார்ந்து, அதைத் தழைத்துப், படரச்செய்து, காத்து. அதன்பின் முடிவில் எவ்வாறு பூவைப்பெறுவானோ அதுபோல, உயிர்கள் தாம் சேரவேண்டிய இடமாகிய திருக்கயிலையை அடையவேண்டுமானால், ஞாலத்தை நயந்து, அதன் தலங்களில் படர்ந்து, தரிசித்து, முடிவில் திருமலையை அடையல்லாம் என்பது கருத்து. " சேக்கிழார்தம் மேற்குறிப்பிட்ட வருணனைக்கு இவ்வாறு விளக்கம் தரப்படுகிறது. 26 சேக்கிழார்தம் கற்பனையில் பக்தியுணர்வு இணைந்திருக்கும் தன்மையினை இவ்வருணனையில் கண்டுணரலாம். உலகம் அனைத்தையும் ஒரு கொடியாகக் காண்கின்ற ஆசிரியர்தம் உள்ளக்கிடக்கையில் ஒருமைப்பாட்டுணர்வு இடம்பெற்றுள்ளது என்பது நினைத்தற்குரியது. காட்சிப்புல உருக்காட்சியாக வரும் இது கருத்தாழம் உடையதாகவும் பொருத்தமானதாகவும் உள்ளது.

## மலர் உருக்காட்சி:

இறைவர் திருவடி, இறைவியின் முகம், அடியார் தம் முகம். பெண்களின் முகம், மகிழ்ச்சி ஆகியவற்றை இவ்வுருக்காட்சி விளக்குகிறது. மக்கள்தம் முகம், கண், கை, கால் என்ற உறுப்புக்களைச் சிறப்பிக்க இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.

மக்கள்தம் மனநிலையைத் தெரிவிக்கும் வகையிலும் இவ்வுருக்காட்சியை ஆசிரியர் ஆள்கிறார்.

## முகம் - மலர்:

### உமைமுகம் - கமலமலர்:

உமையம்மையின் முகம்" கமலவதனம்" எனப்படுகிறது.[27]

### அடியார்முகம் - மலர்:

முருகநாயனார் புராணத்தில் தாமரை மலர்களுக்கும் அடியார்களுக்கும் இடையேயுள்ள ஒருமைப்பாடு கூறப்படுகிறது. வாவியில் வண்டுகள் பாடுகின்றன. அவற்றின் பாட்டைக் கேட்டு மலர்ந்த தாமரைகள் தேனைத் துளிக்கின்றன. இறைவரைப் போற்றும் திருப்பதிகங்களின் இசையமுதம் பெருக அதனைக் காதுகளாகிய வாயினால் உண்கின்ற தொண்டர்களின் முகங்களாகிய தாமரைகள் ஆனந்தக்கண்ணீரைச் சொரிகின்றன. மலர்கள் தேன் சொரிகின்ற செய்தி அடியார் முகங்களில் கண்ணீர் அரும்பும் செய்தியுடன் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. அடியார்தம் பக்திச் சிறப்பு மலர் உருக்காட்சியால் விளக்கப்படுவது காணத்தக்கது.[28] ஆசிரியரின் பக்தியுணர்வின் வெளிப்பாடாக விளங்குகிறது இவ்வுருக்காட்சி.

"திருநாவுக்கரசர் காஞ்சிக்கு வரும் செய்தியைக் கேட்ட அந்நகரத்து அடியார்கள் முகமெல்லாம் காலைப்பொழுதில் மலரும் கமலமலர்கள்போல் நன்கு மலர்ந்தன" என்று கூறப்படுகிறது. "காலைமலரும் கமலம்" என்ற தொடர் மலரின் ஒளி, எழில் ஆகியவற்றை விளக்குகிறது.[29] அடியார்கள் தலைமைசான்ற அடியாரிடம் கொண்டுள்ள அன்பின் மாட்சியை மலர் உருக்காட்சி தெரிவிக்கிறது.

### மன்னன் மனுவின்முகம் - எரியில் வீழ்ந்த கமலம்:

திருமலைச்சிறப்பு என்னும் பகுதியில் திருவாரூர் நகரைப் பற்றியும், அதனைத் தலைநகராகக்கொண்டு சோழநாட்டை ஆண்ட மன்னன் மனுவைப் பற்றியும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். "அறநெறி பிறழாமல் மனு ஆட்சி செய்தான். அவன் மைந்தன்

வீதிவிடங்கன் தேரில் உலாவரும்பொழுது, எதிர்பாராத வகையில் ஓர் ஆண்கன்று துள்ளிவந்து, தேரின் உருளையில் சிக்குண்டு, மாண்டது. அதனைக்கண்ட தாய்ப்பசு துயருற்றது." [30] "தளர்ச்சியுற்ற அப்பசு அரண்மனையில் கட்டப்பட்டிருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினால் புடைத்தது." [31] "பழிப்பறையின் முழக்கெனவும், பாவத்தின் ஒலியெனவும், திருமைந்தன் உயிர்கொள்ளவரும் கூற்றுவனின் ஊர்தியின் கழுத்தணி மணியொலியெனவும், மன்னவன் செவியில் புக்கது ஆராய்ச்சி மணியின் ஓசை." [32] "அமைச்சன் மூலம் செய்தியறிந்தான். [33] ஆவின் துயர் கேட்டு வருந்தினான்." [34] "எவ்வாறு அதன் துயரைத்தீர்ப்பது என அமைச்சர்களைக் கேட்டான்." [35] "அந்தணர் விதித்த முறைவழி நிறுத்தல் அறம்" என்றார்கள் அமைச்சர்கள். [36] மன்னன் அவர்கள் கருத்தை ஏற்கவில்லை. [37] தாங்கள் கூறியது "தொன்மையான நெறி என்றார்கள்" அமைச்சர்கள். [38] மெய்வண்ணம் தெரிந்துணர்ந்த மனுவென்னும் விறல் வேந்தன், "நீங்கள் பழுதுரைத்தீர்கள்" என்று செயிர்த்துரைத்தான். "அப்பொழுது அவன் முகம் எரியில் விழுந்த செவ்வண்ணக்கமலம் போல் புலர்ந்துவிட்டது." [39]

"மனுமன்னனின் முகம் தாமரைபோல் அழகியது" என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். மந்திரிகளின் கருத்தைக் கேட்டதும் அவன்முகம், "எரியிடைத் தோய்ந்த செவ்வண்ணக்கமலம்" போல வாடியிருந்ததாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். இத்தொடரிலுள்ள மலர் உருக்காட்சி மன்னன் மனநிலையை விளக்குகிறது. முரணியல் உருக்காட்சி (Contrasting Image) இங்கு ஆளப்பெற்றுள்ளமை காணத்தக்கது. இவ்வுருக்காட்சி மன்னனின் இயல்பான ஒளிமிக்க முகப்பொலிவை நினைக்கச் செய்வது காணத்தக்கது. முகத்தில் ஏற்படும் மாறுபாட்டை மலர் உருக்காட்சியால் ஆசிரியர் தெரிவிக்கிறார்.

## அரசி முகம், அமைச்சர் முகம் - மலர்:

பாண்டிநாட்டில் சைவநெறி தாழ்ச்சியுற்றுச் சமணசமயம் ஓங்கியிருந்தது. 40 பாண்டியனும் மக்களும் சமணசமயத்தைப் போற்றிவந்தனர். பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாகும் அமைச்சர் குலச்சிறையாரும் மன்னன் முன்பு புலப்படாவகை சைவநெறியில் நின்றனர். [41] தமிழ்நாட்டின்

இந்நிலையை எண்ணி வருந்திய அவர்கள் சைவச்செந்நெறி விளக்கும் திருஞானசம்பந்தர் பாண்டியநாட்டு எல்லையான திருமறைக்காட்டுக்கு வந்துள்ள செய்தியை அறிந்து மகிழ்ந்தனர். அவர்தம் மகிழ்ச்சி நிலையைச் சேக்கிழார் மலர் உருக்காட்சியில் விளக்குகிறார். "அவர்கள் இருவரும் காலைப்பொழுதில் மலர்ந்த செந்தாமரை மலர்களைப் போன்ற நகைமுகத்தினராயினர்" என்று குறிப்பிடுகின்றார். திருஞானசம்பந்தரிடம் அவர்கள் கொண்டிருந்த பேரன்பின் திறத்தை இவ்வுருக்காட்சி தெரிவிக்கின்றன எனலாம்.[42] 'சேம உதயப்பரிதி' என்று சேக்கிழார் சம்பந்தரின் பிறப்பைப் பற்றிக் குறித்த செய்தியையும், அவர் பாண்டிநாட்டு எல்லையான திருமறைக்காட்டிற்கு வந்த செய்தியை அறிந்து செந்தாமரை மலர்கள் போன்று மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும், நகைமுகத்தினராயினர் என்ற செய்தியையும், இணைத்துப் பார்க்கும்பொழுது மலர் உருக்காட்சியின் பொருத்தம், ஆழம், கிளர்ச்சியூட்டும் திறன் ஆகியவற்றை அறியலாம்.

### பெண்கள் முகம் - மலர்:

பெண்கள் முகம் இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கப்பட்டுள்ளன.[43]

### கண்கள் - மலர்:

சம்பந்தர், சுந்தரர், கழறிற்றறிவார், புகழ்ச்சோழர், தண்டியடிகள், பரவையார், சங்கிலியார், பாண்டிமாதேவியார், சேரநாட்டு மகளிர், அரம்பையர், கடைசியர் ஆகியோர் கண்களின் அழகை மலர் உருக்காட்சியால் குறிப்பிடுகிறார் ஆசிரியர்.

ஆடவரின் கண்கள் தாமரைமலர் உருக்காட்சியால் குறிக்கப்படுகின்றன. பெண்பாலாரின் கண்கள், காவி, நீலம், பானல் என்ற மலர் உருக்காட்சியால் குறிக்கப்படுகின்றன.

ஆடவர், பெண்டிர் ஆகியோர் கண்களின் தன்மை, அழகு, ஒளி ஆகியவற்றை இம்மலர் உருக்காட்சி விளக்குகிறது.[44]

## பல் - மலர்:

பெண்களின் பற்கள் மலர் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன.[45] பரவையாரின் பற்களின் எழிலை, "தாய முறுவல் பரவையார்", "முல்லைமுகை வெண்நகைப்பரவை" என்ற தொடர்களால் ஆசிரியர் குறிப்பிடுகிறார். முல்லை மலர் உருக்காட்சி, தொடர்உருக்காட்சியாக வந்து பரவையாரின் பற்களின் அழகைப் படிப்பவர் ...த்துள் பதியுமாறு செய்கிறது. திருமயிலாப்பூர்ச் சிவநேசரின் ...ர் பூம்பாவையைப் பற்றிக் குறிக்கும் ஆசிரியர் "முல்லை வெ... ...கை முகிழ்முலையார்" என்று கூறுகிறார். பூம்பாவையின் பற்க... ...எழில், மலர் உருக்காட்சியால் குறிக்கப்படுகிறது.

காரெனும் பருவத்தைப் பெண்ணாக உருவகித்துப் பாடும் சேக்கிழார் "கோலவெண் முகையேர் முல்லை கோபம் வாய் முறுவல் காட்ட" என்னும் தொடரின்கண் முல்லை மலர் உருக்காட்சியால் கார்ப்பருவப் பெண்ணையும், அவள் சிரிப்பையும் மனக்கண்ணில் நிறுத்துகிறார். ஆசிரியர்தம் கற்பனைத்திறனை இப்பாடலில் காணலா... ...வர்தம் கலையார்வத்தை இவ்வருணனை தெரிவிக்கிறது.

## வாய் - மலர்:

பெண்களின் வாய், மலர் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகிறது.[46]

## பவளமலர்:

பரவையாரின் வாயைப் பற்றிக் குறிக்கும்பொழுது "பவளமலர்", "இலவ இதழ்ச் செந்துணர்வாய்" என்று கூறுகிறார் சேக்கிழார். பரவையாரின் வாயின் சிவப்புநிறம், பொலிவு ஆகியவை பவளம், இலவஇதழ் ஆகிய மலர் உருக்காட்சியால் விளக்கமாகக் காட்டப்படுகின்றன.

"சூதாருத்துணை முலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு, சேதாம்பல் வாய் திறக்கும் திருவாரூர் வந்தணைந்தார்" என்று கழறிற்றறிவார், திருவாரூக்கு வருகைபுரிந்த செய்தியைச் சேக்கிழார் குறிக்கின்றார். "மகளிரின் வாய்க்குச் சேதாம்பல்

தோற்றுவிட்டன" என்று கூறுவது மலர் உருக்காட்சியாக அமைந்து பெண்களின் வாய் அழகையும், நிறத்தையும் விளக்குகிறது. மகளிர்வாயினைவிடத் தான் அழகுடையது என்று நிறுவுவதற்குச் சேதாம்பல் போரிட்டதாகவும், ஆனால் தோற்றுவிட்டதாகவும் குறிப்பது ஓர் உருக்காட்சியாக அமைந்து விளங்குகிறது.

## வயிறு, இதயம் - கமலமலர்:

சிவநேசரின் துணைவியார், பூம்பாவையைப் பெற்றளித்த செய்தியைக் "கரியவாங்குழல் மனைவியார் வயிறெனும் கமலத்து, உரிய பூமகள் என ஒரு பெண்கொடி உதித்தாள்" என ஆசிரியர் குறிக்கின்றார். மலரிலிருந்து ஒரு மலர்க்கொடி தோன்றியது என்பது புதுமைப்பொலிவுடன் உள்ளது. கொடியில் மலரைக் காண்பது என்ற இயல்பான கருத்தை மாற்றி, மலரில் கொடியைக் காண்பது என்ற ஓர் புதுமையைப் படைக்கிறார் ஆசிரியர்.

"மேதினியாகிய மங்கையின் இதயக்கமலம் போல் சிவனார் உறையும் ஆரூர் மலர்ந்தது" என்று ஆசிரியர் திருமலைச்சிறப்பு என்னும் பகுதியில் குறிப்பிடுகிறார்.[47]

## சண்டேசுரர் அறிவு - அரும்பு, மலர், மணம்:

"சண்டேசுர நாயனாருக்கு ஐந்தாண்டுகள் நிரம்பியது. ஆறங்கங்களுடன் கூடியனவாகிச் சந்தசுகளுடைய மறைகளுட்படத் தலைவராகிய சிவபெருமான் முன்னே மொழிந்தருளிய சிவாகமங்களிலே, முன்னைய அறிவானது, தொடர்ச்சியினாலே அரும்பாகி முதிரும் பூவில் வெளித்தோன்றும் மணம்போலச் சிந்தைமலர, அதன் உடனே மலர்கின்றதாகிய பக்குவமுள்ள உணர்ச்சி அவருக்குச் சிறக்க உண்டாயிற்று"[48] என்று சண்டேசுரருக்கு, ஆகமங்களை அறியும் செல்வி உணர்வு சிறந்தமையை ஆசிரியர் மலர் உருக்காட்சியால் விளக்குகிறார்.

இக்கருத்திற்கு விளக்கம் தரும் வகையில்,

"அரும்பினில் மறைந்து நின்ற மணமும் நிறமும் மென்மையும்
அரும்பு முற்றி மலர மலர நிறைவுற்று வெளிப்படத் தொடங்குவது
போல அறிவின் முன்னைத் தொடர்ச்சியும் வந்தது என்றபடி"

என்று சி. கே. சுப்பிரமணிய முதலியார் குறிப்பிடுகின்றார்.[49] முகர்வு, காட்சி, ஊற்றுப்புலன்களுக்குரிய உருக்காட்சிகளாவும் முகை, மலர் என்பன விளங்குகின்றன.

## மலர்விக்கும் கலை:

நாவரசர் கலைபயிலத் தொடங்கியமையை நவிலும் ஆசிரியர்,

"பொருள்நீத்தம் கொளவீசிப் புலன்கொளுவ மனம்முகிழ்த்த
சுருள்நீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்குவித்தார்:

என்று குறிப்பிடுகிறார்.[50] "மனம் மொட்டுப் போலிருப்பது, அறிவு விளக்கத்திற்கு அஃது அரும்பி மலர்தல்வேண்டும். அதனை அரும்பி மலரச்செய்வது கலை" என்று திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இதனை விளக்குகிறார்.[51]

கலையினால் மனிதமனம் விளக்கம் பெறுவதைச் சேக்கிழார் மலர் உருக்காட்சியால் இயம்புகிறார்.

## மலர்மாலை - மனமாலை:

திருமாலை தொடுத்தல், கட்டிய மாலையை அவிழ்த்தல் ஆகிய செயல்களுடன் கூடிய மலர் உருக்காட்சியைச் சேக்கிழார் ஆள்கிறார். திருவொற்றியூரில் இறைவருக்குத் திருமாலை தொடுத்துத் திருப்பணி செய்யும் சங்கிலியாரைக் கண்ட சுந்தரருக்கு, அவர்மீது மனம் சென்றது. அவரைத் தமக்குத் திருமணம் செய்துவைக்கவேண்டும் என்று இறைவரை வேண்டுகிறார். அப்பொழுது அவர் இறைவரிடம் " உமக்குத் திருமாலை தொடுத்துத்தரும் சங்கிலியார் எனது உள்ளமாகிய கட்டுடன் கூடிய மாலையை அவிழ்த்துவிட்டார்" என்கிறார். உள்ளம் கட்டுடைந்து சங்கிலியிற் சென்றமையை இவ்வாறு மலர் உருக்காட்சியில் சுந்தரர் கூறுவது புதுமையுடையதாக உள்ளது.[52] சங்கிலியார் பூமாலையைத் தொடுத்துக் கொண்டிருக்கிறார். அதேநேரத்தில் சுந்தரரின் மனமென்னும் மாலையைஅவிழ்க்கின்றார். ஒருவரே ஒரேநேரத்தில் முரண்பட்ட வகையில், ஒரு மாலையைத் தொடுத்தலும், மற்றொரு மாலையை அவிழ்த்தலுமாகிய செயல்களைச் செய்வதாகச் சேக்கிழார் கூறுகின்றார். மலர்

உருக்காட்சிக்குப் புதுமை சேர்க்கிறார் ஆசிரியர். கிளர்ச்சியூட்டும் திறனுடன் இது விளங்குகிறது. மாலையைத் தொடுத்தல், அவிழ்த்தல் என்னும் உடம்பின் செயல் உருக்காட்சிகளுடன் இணைந்த மலர் உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.

**உயிர் - மலர்:**

"என்னாருயிரும் எழில்மலரும் கூடப் பிணைக்கும் இவள் தன்னை இறைவரிடம் பெறுவேன்" என்று சுந்தரர் கூறுகிறார். இவள் என்பது சங்கிலியாரைக் குறிக்கிறது. "தம்முடைய உயிரையும், மலர்களையும் ஒன்றாகச் சேர்த்துக் கட்டுகிறாள்" என்று சுந்தரர் குறிப்பிடுகிறார். மலர்களுள் ஒன்றாகச் சுந்தரரின் உயிரும் சேர்த்துக் கட்டப்படுகிறது என்பது மலர் உருக்காட்சியுடன் திகழ்கிறது. சங்கிலியார் சுந்தரரைத் தம் வசத்தில் கட்டுப்படுத்திக் கொண்டமை இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகிறது. சுந்தரரின் உயிர் சங்கிலியிடம் மலர்போல் அகப்பட்டுக்கொண்டது என்பது கருத்து. 53

**சம்பந்தர் கை - மலர்:**

திருஞானசம்பந்தரின் கரங்களைச் சேக்கிழார் மலர் உருக்காட்சியினால் விளக்குவது குறிப்பிடத்தக்கது. 54 இவ்வுருக்காட்சி வாயிலாகச் சம்பந்தரின் கைகளின் அழகு, வடிவு, நிறம், மென்மை ஆகியவற்றைப் படிப்பவர் மனத்தில் பதியும்வண்ணம் ஆசிரியர் எடுத்துக்கூறுகிறார். தமக்குமுன் வாழ்ந்த இவ்வடியார்தம் தோற்றத்தைக் கற்பனையால் கண்டு வருணிக்கும் ஆசிரியர் திறம் நினைத்தற்குரியது.

நாவரசரும் சம்பந்தரும் சந்தித்துக் கொள்கின்றனர். நாவரசர் சம்பந்தரைப் பணிகின்றார். அவரைச் சம்பந்தர் தம் கரத்தால் மேலே தூக்கி எடுக்கின்றார். அதனை ஆசிரியர் "எழுதரிய மலர்க்கையால் எடுத்து" என்று உரைக்கின்றார்.

சம்பந்தரின் சப்பாணிப் பருவத்தைக் குறிக்கும்பொழுது, "தாமரைச் செங்கைகளால் சப்பாணி கொட்டினார்" என்று சேக்கிழார் கூறுகின்றார்.

குழந்தைகள் அழும்பொழுது கண்களைக் கைகளால் பிசைவது இயல்பு. சம்பந்தர் அழுகின்ற காட்சியைப் படைக்கும் சேக்கிழார் "கண்மலர்கள் நீர் ததும்பக் கைம்மலர்களால் பிசைந்து" என்ற தொடரால் குறிக்கின்றார். "கைம்மலர்கள்" என்பது மலர் உருக்காட்சியுடன் விளங்குகிறது. சம்பந்தரின் பிள்ளைப் பருவத்தைத் தம் கற்பனையில் நினைந்து உருகும் மனஇயல்பினர் ஆசிரியர் என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## சிவந்தகை - தாமரை அகவிதழ்:

அடுத்துச் 'செய்ய தாமரை அகவிதழிலும் மிகச் சிவந்தகை" என்று சம்பந்தரின் கரங்களின் சிவப்பு நிறத்தை மலர் உருக்காட்சியால் விளக்குகிறார் ஆசிரியர். தாமரை மலர் உருக்காட்சி இவ்வாறு அடுத்தடுத்து வந்து சம்பந்தரின் கரங்களின் எழிலைக் குறிக்கின்றது. எனவே இதனை ஒரு தொடர் உருக்காட்சி என்று குறிக்கலாம். "மலர்ச்செங்கை", "மலர்க்கை", "தாமரச்செங்கை" போன்ற மலர் உருக்காட்சிகள் ஆளப்பெற்றுள்ளன.

## பூம்பாவை கைகள் - காந்தள்மென்பூ, செச்சைமாலை:

சம்பந்தரால் திருமயிலைச் சிவநேசர் மகள் பூம்பாவை உயிர்பெற்று எழுந்தாள். இஃது இறையருளால் நடந்த வியப்புத்தரும் நிகழ்ச்சியாகும். சேக்கிழார் பூம்பாவையின் அழகைத் தலைமுதல் தலைமுதல் தாள்வரை என்ற வரிசையில் வருணிக்கின்றார். அவள் கைகளின் அழகை.

*"எரிஅவிழ் காந்தள் மென்பூத் தலைதொடுத் திசைய வைத்துத்*
*திரள்பெறச் சுருக்குஞ் செச்சை மாலையோ."*

என்று வியப்புடன் குறிப்பிடுகின்றார்.

கைகள் தோளினின்றும் விளைத்துத் திரட்சியிற் சுருங்கிவந்து இருபுறமும் தொங்கும் காட்சியை வருணிக்கின்றார் சேக்கிழார். "மேற்புறத்தில் பரிய செங்காந்தட்பூக்களை இசையக்கட்டிக் கீழே சிறிய வெட்சிப்பூக்களை இசைய அமைத்துக் கட்டிய மாலைபோலப் பூம்பாவையின் கைகள் விளங்கினவோ" எனக் கூறுகின்றார் ஆசிரியர். [55] முருகியற்சுவையுடன் திருவடியை நினைந்தவண்ணம் இருந்தார் சுந்தரர் என்பதை இம்மலர்

இவ்வுருக்காட்சி விளங்குகிறது. மலர்மாலையின் அழகில் ஆசிரியருக்குள்ள ஈடுபாட்டை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## கடைசியர் கரங்கள் - மலர்கள்:

திருநாட்டுச்சிறப்பு என்னும் பகுதியில் கடைசியர்களைப் பற்றிச் சேக்கிழார் வருணித்துக் கூறுகிறார்.

"செங்குவளை மலர்களைப் பறித்து அணிந்துகொண்ட கடைசியர்களுடைய கருங்குழல்மேல் வண்டுகள் சூழ்கின்றன. தங்கள் மலர்களைப்போன்ற கைகளால் அவற்றை அவர்கள் விரட்டுகிறார்கள். ஆனால் அவ்வண்டுகள் அவர்களுடைய கை-களையும் மலர்களெனக் கொண்டு, அவ்விடம் விட்டுச் செல்லவில்லை." இவ்வாறு மலர் உருக்காட்சி வாயிலாகக் கடைசியர்களின் கரங்களின் அழகை நயமுற ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[56]

இப்பகுதியில் மலர் உருக்காட்சி மூலம் சிவன், உமை, கொல்லிமழவன், அடியார்கள், நாயனார்கள் ஆகியோர் கரங்களின் தூய்மை, எழில், நிறம் ஆகியவை குறிக்கப்பட்டமை ஆராயப் பட்டது. சம்பந்தரின் எழில், மென்மை, நிறம் ஆகியவற்றைச் சேக்கிழார் தாமரைமலர் உருக்காட்சியைத் தொடர் உருக்காட்சியாக அமைத்துக்கொண்டு விளக்கியமை காணப் பட்டது.

## இறைவர் திருவடி - தாமரை:

சுந்தரர், அமர்நீதிநாயனார், நாவரசர், பெருமிழலைக்குறும்பர் ஆகியோர் இறைவர் திருவடியைப் போற்றியமையைக் குறிக்கும் தாமரைமலர் உருக்காட்சிப் பகுதிகள் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. "சுந்தரமூர்த்தி நாயனார் தம்முடைய சென்னியிலும் சிந்தையிலும் சிவபெருமானின் திருவடியாகிய தாமரை மலரை மலர்வித்துத் திருப்பதிகம் பாடினார்" என்று சேக்கிழார் குறிப்பது காணத்தக்கது.[57] இம்மலர் உருக்காட்சி சுந்தரரின் யோகநிலையை எடுத்துக்கூறுவதாக உள்ளது. அவருடைய சென்னியும் சிந்தையும் இறைவர் திருவடியை மலர்விக்கும் பொய்கைபோன்று இருந்தன என்பது குறிப்பாகக் கூறப்படுகிறது. இடையறாது இறைவர்

திருவடியை நினைந்தவண்ணம் இருந்தார் சுந்தரர் என்பதை இம்மலர் உருக்காட்சியால் விளக்குகிறார் ஆசிரியர். பொய்கை உருக்காட்சியுடன் இணைந்த மலர் உருக்காட்சி இவண் ஆளப்பட்டுள்ளது.

## அடியார்கள் மனத்தில் இறைவர் திருவடி - மலர்:

"வஞ்ச வல்வினைக் கறுப்பறும் மனத்தடி யார்கள்
நெஞ்சில் நீங்கிடா அடிமலர்"

என்று அமர்நீதிநாயனார் புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[58] இறைவர் திருவடி என்னும் மலர் அடியார்கள் நெஞ்சில் நீங்காமல் உள்ளது என்பது கருத்து. அடியார்களின் நெஞ்சமாகிய தோட்டத்தில் இறைவர் திருவடியாகிய மலர் பூத்த வண்ணம் உள்ளது என்பதை மலர் உருக்காட்சி உணர்த்துகிறது. அடியார்களின் மனத்தின் மேம்பாடு, இறையுணர்வு ஆகியவை இவ்வுருக்காட்சியால் குறிக்கப்படுகின்றன. கிளர்ச்சியூட்டும் திறனுடையதாக இம்மலர் உருக்காட்சி விளங்குகிறது. தோட்ட உருக்காட்சியுடன் மலர் உருக்காட்சி இணைந்து வந்துள்ளது.

"குளிர் கமலத்தடி நீடும் மனத்தன்பர்" என்று மானக்கஞ்சாறர் ஆசிரியரால் குறிக்கப்படுகின்றார்.[59] இறைவர் திருவடியின் தண்ணளி இவ்வாறு குறிக்கப்படுகிறது. "மானக்கஞ்சாறர் மனத்தில் குளிர்ச்சியுள்ள தாமரை போன்ற இறைவர் திருவடி நீண்டு வளர்கிறது" என்கிறார் ஆசிரியர்.

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய(து) உயர்வு"[60]

என்ற குறள் ஈண்டு நினைத்தற்குரியது. அன்பரின் தூய பத்தியின் ஆழத்திற்கேற்ப இறைவரின் திருவடி நீண்டு செல்கிறது. அதாவது பதிஞானம் பெருகுகிறது என்பது கருத்து. தாமரை மலர்களின் அடிப்பகுதி பொய்கையின் ஆழத்திற்கேற்ப நீடுவதை இம்மலர் உருக்காட்சி குறிக்கிறது. திருக்குறள் அறிவின் நீட்சியை மலர் உருக்காட்சியால் விளக்குகிறது. திருத்தொண்டர் புராணம் இறைவர் திருவடியாகிய திருவருளின் நீட்சியை மலர் உருக்காட்சியால் குறிப்பிடுகிறது. சேக்கிழாரின் இறையுணர்வு இதனால் வெளிப்படுதல் காணத்தக்கது. அடியார்தம் நெஞ்சம்

இறைவர் திருவடிமலர் பூத்திடும் பொய்கையெனவும், தோட்டம் எனவும் குறிக்கப்படுகிறது. 'குளிர் கமலத்தடி' என்றதொடர் ஊற்றுப்புலன் உருக்காட்சியுடன் (Tactile image) இணைந்த மலர் உருக்காட்சியாக விளங்குகிறது.

## சம்பந்தர் திருவடிகள் - மலர்:

சம்பந்தர் தம் திருவடிகளை, "பங்கயம் புரைதாள்", " கடிமலர் மென்சேவடிகள்", "தாதவிழ் செந்தாமரையின் அகவிதழ்போல் சீறடிகள்", 'பொன்னடிக்கமலங்கள், "புண்டரிகச்சேவடி" "சரணகமலம்", 'பொன்னடிக் கமலம்" என்று மலர் உருக்காட்சியால் ஆசிரியர் வருணிக்கிறார். [61] "தாதவிழ் செந்தாமரையின் அகவிதழ்போல் சீறடி" என்றதொடர் சம்பந்தரது திருவடிகளின் மென்மை, சிறியவடிவம், நிறம், ஆகியவற்றின் அழகை விளக்கும் மலர் உருக்காட்சியுடன் விளங்குகிறது. மேலும் தாமரை மலர், தொடர் உருக்காட்சியாக வந்து சம்பந்தரது திருவடிகளின் எழில்காட்சியைப் புராணம் படிப்பவர் மனத்துள் பதியச்செய்கிறது.

## திருவாரூர் - தாமரை:

"நிலமகளின் நெற்றித்திலகம் போன்று உள்ளது செம்பியர் வாழ்பதி" "மலர்மகளாகிய திருமகட்கு வண்தாமரை மலர்போல் எல்லையற்ற சிறப்புடன் விளங்குகிறது திருவாரூர்" [62] என்று ஆசிரியர் திருநகரச் சிறப்புப் பகுதியில் குறிக்கின்றார். மங்கலம், பொருள்வளம், அழகு ஆகியவற்றால் சிறந்து விளங்குகிறது திருவாரூர் என்பதை விளக்குகிறது தாமரை மலர் உருக்காட்சி. சோழர் நகர்களுள் தலைசிறந்து விளங்கிய திருவாரூர் ஆசிரியரின் இதயத்தைக் கவர்ந்த ஊர் எனலாம்.

## நாகை - கற்பகப்பூ:

அதிபத்தநாயனார் புராணத்தில் முதற்பாடலில் நாகப்பட்டிணம் என்னும் துறைமுக நகரை மலர் உருக்காட்சி மூலம் சிறப்பித்துக் கூறுகிறார் சேக்கிழார். 'பொன்னிநாடென்னும் கற்பப் பூங்கொடியில் பூத்த மலர்போல் நன்மை சான்றது நாகப்பட்டிணம்" என்று கூறுகின்றார். "கற்பகப்பூங்கொடி மலர்" [63] என்று பழங்கதை

உருக்காட்சியுடன் இணைந்த மலர் உருக்காட்சி வேண்டுவனவெல்லாம் தரவல்லதாக விளங்குகிறது நாகப்பட்டினம் என்ற கருத்தைத் தெரிவிக்கிறது.

மலர் உருக்காட்சி மூலம் திருவாரூர், நாகப்பட்டினம் ஆகிய சோழநாட்டுத் திருநகரங்கள் சேக்கிழாரால் சிறப்பித்துக் கூறுப்படுவது புதுமையாகவும் பொருத்தமாகவும் உள்ளது.

## நெருப்பு - தாமரை:

தில்லைவாழ் அந்தணர்கள், இறைவர் ஆணைக்கு இணங்க அமைத்த தீக்குழியில் மூழ்கி எழுந்தார் திருநாளைப் போவார் நாயனார். அவர் எழுந்த காட்சி சேக்கிழாரால் மலர் உருக்காட்சியால் வருணிக்கப்படுகிறது.

"செம்மலராகிய தாமரை மலரின்மேல் வந்து எழுந்து அந்தணராகிய பிரம்மாவைப்போல் அவர் தோன்றினார்" என்று சேக்கிழார் கூறுகிறார். கொழுந்து விட்டெரியும் நெருப்புக்கிடையில் நாயனார் தோன்றிய நிகழ்ச்சியை இவ்வாறு வருணிக்கிறார் ஆசிரியர். எரிகின்ற தீ, இதழ்விட்டுப் பிரிந்து மலர்கின்ற தாமரை போல் தோன்றுகின்றது. தீயின் நிறம், எழுச்சி ஆகியவை மலர்உருக்காட்சியால் விளக்கமுறுகின்றன. பழங்கதை உருக்காட்சியுடன் இணைந்து விளங்குகிறது இம்மலர் உருக்காட்சி.[64] கிளர்ச்சியூட்டும் ஆற்றலுடன் இவ்வுருக்காட்சி திகழ்கிறது. திருநாளைப்போவாரிடம் சேக்கிழார் கொண்டுள்ள ஈடுபாட்டின் வெளிப்பாடாக இது காணப்படுகிறது.

## குடம் - தாமரை:

சம்பந்தர் பாடிய திருப்பாட்டின் ஆற்றலால் மயிலாப்பூர்ச் சிவநேசரின் மகள் பூம்பாவை, தன் என்பு நிறைந்த மட்குடத்தில் இருந்து மேலெழுந்தாள். அவள் எழுந்தமையைக் "கோற்றொடிச் செங்கை தோற்றிடக்குடம் உடைந்தெழுவாள் போற்றுதாமரைப் போதவிழ்ந்தெழுந்தனள் போன்றாள்" என்று சேக்கிழார் பழங்கதை உருக்காட்சியுடன் இணைந்த மலர் உருக்காட்சியால் குறிக்கின்றார்.[65] என்பு நிறைந்த குடம் உடைவது தாமரை இதழ்விரிந்து மலர்வது போன்று உள்ளது என்கிறார்

ஆசிரியர். அவள் அம்மலரிலிருந்து எழுகின்ற திருமகள் போல விளங்குகிறாள்.

## கயிலை, அஞ்செழுத்து, சிவபெருமானின் கழுத்து,

## திருப்பதிகள் - மலர்:

கயிலைமலையை வெண்மலர் என்கிறார் ஆசிரியர்.[66] "அன்பை நாராகக்கொண்டு அஞ்செழுத்தாகிய மலரை நெஞ்சுதொடுக்க அவர் தொடுத்தார்" என்று சேக்கிழார் கூறுவது மலர் உருக்காட்சியுடன் விளங்குகிறது.[66அ] மலர் தொடுத்து இறைவருக்குத் தரும் திருத்தொண்டு புரிந்துவந்த சங்கிலியார் அஞ்செழுத்தினை இடையறாது நினைந்து ஓதிவந்த செயலை மலர் உருக்காட்சியால் ஆசிரியர் விளக்குவது பொருத்தமும் புதுமையும் உடையதாக உள்ளது. புறத்தில் சங்கிலியாரின் கைகள் மலர்களைத் தொடுத்து மாலையாக்குகின்றன. அகத்தில் அவர் நெஞ்சம் அன்பு எனும் நாரினால் அஞ்செழுத்து மலர்களைத் தொடுத்துக் கொண்டிருக்கிறது. திருவைந்தெழுத்து ஓதுதலாகிய அகச்செய்கையை தொடுத்தலாகிய அவரது புறச்செய்கையால் விளக்குகின்றார் சேக்கிழார். உடம்பின் செயல் ஓர் உருக்காட்சியாக அமைந்து இம்மலர் உருக்காட்சியுடன் இணைந்துள்ளது. மதிவளர்கின்ற சடைமுடியை உடையவரும், மன்றில் விளங்குபவருமான, சிவபெருமானைத் துதிசெய்யும் நாயன்மார்தம் தூய்மையான சொற்களாகிய மலர்களின் பொதிநலத்தைப் புனிதர் பேரவை என்னும் அடியார் திருக்கூட்டம் நுகர்கிறது. அத்திருக்கூட்டம் இவ்வுலகில் விளங்கி வெல்வதாக" என்று, சேக்கிழார் பாயிரத்தில் குறிக்கின்றார். நாயன்மார்தம் தூய சொற்களை மலர்கள் என்று ஆசிரியர் கூறுகின்றார்.[67] இறைவர் வீற்றிருக்கும் இடமாகிய கயிலைமலை, அவரை அடைதற்குத் துணைபுரிவதாகிய அஞ்செழுத்து, அவரது கறைமிடறு, அவரைப் போற்றுவதாகிய பதிகம் ஆகியவற்றை மலர் உருக்காட்சியால் ஆசிரியர் சிறப்பிப்பது மலர் அவரது நெஞ்சத்தைக் கவர்ந்தபொருள் என்பதைக் காட்டுகிறது.

## நீலகண்டம் - மலர்:

சிவபெருமானின் கறைமிடறு "மைம்மலர்", "பானல்மலர்" என்று குறிக்கப்படுகிறது.[68] சிவனாரின் சிவந்த மேனியில் நீலநிறத்துடன் கண்டம் இருக்கும் காட்சி நீலமலர் ஒன்று இருப்பதுபோல் தோன்றுகிறது. இறைவர் திருத்தோற்றத்தில் சேக்கிழாருக்குள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கும் வகையில் இவ்வுருக்காட்சி உள்ளது.

## பெண் - மலர்க்கொம்பு:

பெண் தோற்றத்தின் எழிலை வருணிக்கும் வகையில் கொம்பு, கொடி ஆகியவற்றுடன் இணைந்த மலர் உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.

பரவையாரைக் கண்டு வியந்த சுந்தரர் தம் மனத்துள், "கற்பகத்தின் பூங்கொம்போ...." என்று எண்ணி வியப்படைகிறார். 69 மலர்கள் நிறைந்த கற்பகத்தின் கொம்புபோலப் பரவையார் திகழ்கிறார் என்பதில் மலர்உருக்காட்சி பழங்கதை உருக்காட்சியுடன் இணைந்து விளங்குகிறது. பரவையாரின் எழில்மிகு தோற்றம் இவ்வுருக்காட்சியால் தெரிவிக்கப்படுகிறது.சம்பந்தரின் கரம் பற்றிய மணப்பெண்ணை, "நற்பெருந்தவத்தின் நீர்மை நலம் படைத்தெழுந்த தெய்வக்கற்பகப் பூங்கொம்பன்னார்" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[70]

## பெண் - மலர்க்கொடி:

"வணிகன் ஒருவன் தன் தாய்மாமன் மகளுடன் திருமருகல் என்னும் திருத்தலத்தின்கண் சிவபெருமான் திருக் கோயில்பக்கத்திலிருந்த மடமொன்றில், தங்கித் துயிலும்பொழுது அரவு ஒன்று அவனைத் தீண்டியது. அவன் உயிர் நீங்கியது. சாயல் இளம் கன்னியாகிய அப்பெண் நிலைதளர்ந்து சோர்ந்தாள். வாளரவு தீண்டவும் தான் தீண்டாமல் இருந்த அவள், மறுமாற்றம் மற்றொருவர் கொடுப்பாரின்றி ஆளரிபோன்ற அவனருகில் வீழ்ந்து, அசைந்த மலர்க்கொடி போன்றிருந்தாள்" என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அப்பெண்ணின் அவலநிலையை இவ்வாறு சொல்லோவியமாகப் படைக்கிறார். "அசைந்த மலர்க்கொடி" என்ற

தொடரில் உள்ள மலர் உருக்காட்சி அப்பெண்ணின் எழில்நலத்தை எடுத்துக்காட்டுகிறது. படிப்பவர் மனத்துள் இத்தகைய எழிலுடைய பெண்ணுக்கு இப்படி ஓர் அவலநிலை உண்டாயிற்று என்ற வருத்தத்தையும் ஏற்படுத்துகிறது. "இப்படியும் அப்படியும் நிலத்தில் வீழ்ந்து அவள் புரண்டு அழுது அரற்றுவது அசைந்த மலர்க்கொடி போன்று உள்ளது" என்று ஆசிரியர் கூறுவது பொருத்தமான உருக்காட்சியாக உள்ளது. [70அ] அவல உணர்ச்சியைத் தோற்றுவிக்கும் கிளர்ச்சியூட்டும் திறனுடையதாக உள்ளது.

"குலவுமலர்மென் கொடியனையார்" எனச் சங்கிலியார் குறிக்கப்பெறுவது கொடியுடன் இணைந்த மலர் உருக்காட்சியுடன் விளங்குகிறது. [71] திருமலர்மென்மாலை காலங்களுக்கேற்ப இறைவருக்குச் சாத்துதற்குத் தொடுத்துத்தரும் திருத்தொண்டு செய்துவந்த இவரைக் "குலவுமலர் மென்கொடியனையார்" என்பதன் பொருத்தம் நினைத்தற்குரியது. மலர்க்கொடி ஒன்று மலர்மாலை தொடுக்கின்றது என்ற காட்சியைப் படிப்பவர் மனத்துள் தோன்றுமாறு செய்கிறது இம்மலர் உருக்காட்சி. சங்கிலியாரின் எழில் நலத்தைச் சிறப்பித்துக்கூறும் வகையில் மலர், கொடி ஆகிய உருக்காட்சிகள் வந்துள்ளன.

## பெண் - பூமாலை:

"திருமயிலைச் சிவநேசர் மகள் பூம்பாவை பொழிலில் மலர் பறித்துக்கொண்டிருந்தபொழுது ஓர் முள்ளெயிற்றரவம் அவளுடைய விரலைத் தன் நான்கு தந்தங்களால் கவர்ந்து நஞ்சுகுத்தது. நீலவல்விடம் தொடர்ந்து எழுந்தது. பூம்பாவை மெல்லிய மலர்மாலை தீயிடைப்பட்டது போன்று உளம் மயங்கித் தரையில் வீழ்ந்தாள்" என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். "மென்பூமாலை" என்ற மலர் உருக்காட்சி பூம்பாவையின் எழில்மிகு தோற்றத்தை நினைக்கச் செய்கிறது. "தீயிடைப்பட்டது" என்பது அப்பூமாலை நிறம்கெட்டு வாடிக்கிடக்கும் நிலையைத் தெரிவிக்கிறது. மாலையின் முன்னைய சிறப்பான நிலையும், தீயிடைப்பட்டமையால் வாடிக்கிடக்கும் நிலையும், ஒரே நேரத்தில் நினைவில் எழுந்து அவலவுணர்ச்சியை மிகுவிக்கின்றன. "மென்பூமாலை தீயிடைப்பட்டது" என்னும் மலர் உருக்காட்சி பூம்பாவையின் அவலநிலையைப் பொருத்தமுற எடுத்துக்காட்டுகிறது. [72] கிளர்ச்சியூட்டும் திறனுடைய மலர் உருக்காட்சியாக இது அமைந்துள்ளது.

"தேனமர் கோதை" என்று பூம்பாவை மலர் உருக்காட்சியால் குறிக்கப்படுகின்றாள்.[73] பூம்பாவையைப் பூமாலையாகவே காண்கிறது சேக்கிழார் நெஞ்சம். பூமாலை தொடர் உருக்காட்சியாக வந்து பூம்பாவையின் எழில், மென்மை, ஒளிமிகு தோற்றம் ஆகியவற்றை விளக்குகிறது.

"கற்பகம் ஈன்ற செவ்வி காமரு பவளச் சோதி
பொற்றிரள் வயிரப் பத்திப் பூந்துணர் மலர்ந்த போலும்
நற்பதம் பொலிவு காட்ட ஞாலமும் விசும்பு மெல்லாம்
அற்புதம் எய்தத் தோன்றி அழகினுக் கணியாய் நின்றாள்"

என்று சேக்கிழார் பூம்பாவையின் அழகுத் தோற்றத்தைக் கற்பக மலர் உருக்காட்சியால் விவரிக்கின்றார்.[74] கற்பகம் என்னும் பழங்கதை உருக்காட்சி, பவளம், பொன், வயிரம் ஆகிய ஒளிப்பொருள் உருக்காட்சிகள்: பூந்துணர் என்னும் உருக்காட்சி ஆகியவை மலர் உருக்காட்சியுடன் இணைந்து, பூம்பாவையின் கால், விரல், நகம் ஆகியவற்றைச் சிறப்பித்துக்காட்ட வந்துள்ளன. மேலும் பூந்துணர் என்னும் மலர் உருக்காட்சி பூம்பாவையின் கால்களின் அழகு, மென்மை ஆகியவற்றை நினைக்கச் செய்கின்றன.

## பதிகம் - மலர்:

நாயனார் அருளிய சொல், பதிகம் என்பன மலர் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன.[75] பொருள் மணமும், இசைமணமும் பெற்று இனிமைதரும் பதிகம் மனவுணர்வுக்கும் கேள்விப்புலனுக்கும் உரிய ஒன்று எனினும் அதனை மலர் என்று காட்சிப்புலனுக்குரிய மலர்உருக்காட்சியால் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். வழிபடு பொருளாக மலர் இருப்பதால், அதனை வழிபாட்டை நோக்காகவுடைய பதிகத்தைப் பொருத்தமுற விளக்கும் காட்சிப்புல உருக்காட்சியாக ஆசிரியர் ஆள்கிறார் எனலாம்.

## பிறவி - மலர்:

"பூளைப்பூவாம் பிறவிப்பிணைப்பு" என்பது சேக்கிழார் மொழி.[76] நிலையாமையைப் "பூளைப்பூ" என்ற மலர் உருக்காட்சி பொருத்தமுற விளக்குகிறது. எண்ணக்கோவையும்

கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக இம்மலர் உருக்காட்சி உள்ளது. காட்சிக்குக் கொத்தாகத் தோன்றும் பூளைப்பூ காற்று மோதினால் உடன் உதிர்ந்துவிடும். நிலையற்ற அதன் தன்மையைப்போல் பிறவியின் தன்மையும் உள்ளது என்பதைக் கருத்திற்கொண்டு ஆசிரியர் பூளைப்பூவை உருக்காட்சியாகத் தேர்ந்தெடுத்தார் என்க.

இப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள உருக்காட்சிகள் காட்சிப்புலன்சார் உருக்காட்சிளாக உள்ளன. இயற்கையியல் ஈடுபாடு மிக்கவர் சேக்கிழார் என்பதை வித்து, முளை, பயிர், கொடி, கொம்பு, தளிர், கொம்பு, தளிர், கொழுந்து, முகை, மலர் ஆகிய உருக்காட்சிகள் தெரிவிக்கின்றன. தாமரை மலர் சேக்கிழார் மனத்தைக் கவர்ந்துள்ளது எனலாம். அதிக எண்ணிக்கையில் இம்மலர் உருக்காட்சியாக வருகிறது. சம்பந்தரிடம் ஆசிரியர் கொண்டுள்ள பக்தி உணர்வின் வெளிப்பாடாக மலர் உருக்காட்சி விளங்குகிறது. அமளி, தவிசு, தொட்டில், ஓமகுண்டத்தின் நெருப்பு என்பன மலர் உருக்காட்சியால் வருணிக்கப்படுகின்றன. இறைவரின் திருவடியாகிய மலர் அடியார்தம் மனமாகிய பொய்கையிலும் பூங்காவிலும் பூக்கின்றது என ஆசிரியர் வருணிப்பது பக்திச்சுவையுடன் கூடிய உருக்காட்சியாகத் திகழ்கிறது. ஆசிரியர்தம் கற்பனையில் பக்தியுணர்வு இணைந்திருக்கும் பாங்கினை இத்தகைய உருக்காட்சியால் அறியலாம். புதுமை, செறிவு, பொருத்தம், கிளர்ச்சியூட்டும் ஆற்றல் ஆகியவற்றுடன் விளங்கும் மலர் உருக்காட்சி படைப்பிற்கு முருகியற்சுவையைத் தருகிறது. சேக்கிழார்தம் கல்வி, கலை பற்றிய சிந்தனையை மலர் உருக்காட்சி காட்டுகிறது.

பெண்மையின் தூயஎழிலைப் போற்றும் பண்புடையவர் சேக்கிழார் என்பதை மலர் உருக்காட்சி தெரிவிக்கிறது. ஆனந்தம், அவலம் என்னும் சுவைகளைப் படைக்கும் திறனுடையதாக இவ்வுருக்காட்சி உள்ளது. சேக்கிழாரின் இறையுணர்வினைத் தெரிவிக்கும் சான்றாக மலர் உருக்காட்சி அமைந்துள்ளது. இவ்வுருக்காட்சி சேக்கிழராது கற்பனையின மனவியற் பாங்கை (The paychology of Sekkizar's imagination) எடுத்துக் காட்டுவதாக உள்ளது எனலாம். வித்து, பயிர், ஆகிய உருக்காட்சிகள் சேக்கிழாரது சமய, தத்துவச் சிந்தனையைக் காட்டுவனவாக

உள்ளன. சுந்தரரைப் பயிர் உருக்காட்சியால் விளக்குவது காணத்தக்கது. பெரியபுராணப்படைப்பின் தலைமை உணர்வாக விளங்கிய பக்தி உணர்வினை மிகுவிக்கும் திறனுடன் இவ்வுருக்காட்சி இயங்குவது காணப்பட்டது. படைப்பின் வளர்ச்சியுடன் இணைந்து அதன் முழுக்கூறுகளுள் ஒன்றாக இயற்கையில் வளர்வது என்ற உருக்காட்சி வகை அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. காய், கனி, மரம், வேர் என்பன உருக்காட்சிகளாகப் பொருத்தமுற ஆளப்பட்டுள்ளன. இவர் உருக்காட்சி சேக்கிழார் மனையறத்தின்பால் கொண்டுள்ள மதிப்பையும், பெண்ணின் பெருமையைப் போற்றுவதில் அவருக்குள்ள ஆர்வத்தையும் காட்டுவதாக உள்ளது. ஆழமும் பொருத்தமும் நிறைந்த உருக்காட்சியாக இது விளங்குகிறது.

மலர்த்தோட்டங்கள், சோலைகள் இவற்றைப் பேணிக்காத்தவர் ஆசிரியர் எனலாம். இறைவழிபாட்டில் மலர்களைப் பயன்படுத்தியவராக இருந்தமையால் அவற்றின் தன்மைகள் அவரது நெஞ்சத்தில் பதிந்துவிட்டன எனலாம். கலை, கல்வி என்னும் கோட்பாடுகள் பற்றி மலர் உருக்காட்சி கொண்டு அவர் விளக்கம் தருவது மலர்களிடம் அவருக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுகிறது.

**காய், கனி, மரம், வேர் உருக்காட்சிகள்:**

பெண்களின் தோற்றமும் கண்கள், வாய், தோள் ஆகியவையும் இவ்வுருக்காட்சிகளால் சிறப்பிக்கப்படுகின்றன. அடியாரும், வினையும், இல்லறமும் இவற்றால் விளக்கப்படுகின்றன. இவை மரபு வழிப்பட்டனவாக உள்ளமை குறிப்பிடத்தக்கது.

**பெண்களின் கண்கள் - இருகூறாக்கப்பட்ட**

**மாவடுவின் தோற்றம் :**

இரண்டு கூறாகப் பிளக்கப்பட்ட மாவடுவின் உட்புறத்தோற்றம் பெண்களின் கண்களை நினைக்குமாறு செய்யும். மாவடு என்ற உருக்காட்சி பொருத்தமான ஒன்றாக உள்ளது. தொண்டைநாட்டு நுளைச்சியர்தம் கண்களின் வனப்பைக்

காட்சிப்படுத்துகிறது, இவ்வுருக்காட்சி எனலாம். [77] "மாவடு வகிர் அன்ன கண்" என்பார் மணிவாசகர்.[78]

### உமை, பெண்கள், தேவமகளிர்:

### சீராளன் - வாய் - தொண்டைக்கனி:

சிவப்பு நிறமுள்ள தொண்டைக்கனி உமையம்மை, பெண்கள், தேவமகளிர் வாயின் சிவந்த நிறத்தைச் சிறப்பித்துக் காட்டுவதாக உள்ளது சிறுத்தொண்டர்தம் மகன் வாயினைச் சிறப்பிக்கிறது. இது மரபுவழிப்பட்டதாக உள்ளது. [79]

### மகளிர் தோள் - வேய்:

பெண்களின் தோளின் வடிவம் வேய் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகிறது. கமலவதி, சங்கிலியார் தோள் வனப்பைக் காட்டுவதாக இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. [80]

### பழவினை - வேர்:

சேக்கிழார் மரத்தினைத் தாங்கும் வலிவுடைய வேரினைப் பழவினை என்பதைக் காட்சிப்படுத்தும் உருக்காட்சியாக ஆள்கிறார். மனிதப்பிறவியின் அடிப்படையான காரணமாக உள்ளது, பழவினை என்பது தத்துவ உலகினர் கருத்து. ஊழ்வினை எனினும் பழவினை எனினும் ஒக்கும். "ஊழிற் பெருவலி எதுவும் இல்லை. அதன்பிடியிலிருந்து விடுபடுதல் அரிது. எப்பொழுதும் அது முன்வந்து நிற்கும்" என்பார் திருவள்ளுவர். மேலும், அவர்

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

என்கிறார். [81]

"ஊழ்வினை உருத்துவந் தூட்டும்" என்கிறார் இளங்கோவடிகள். [82] வினையைச் சஞ்சிதம், பிராரர்த்தம், ஆகாமியம் என மூன்றாக வகைபடுத்துபவர் - எஞ்சி நிற்பது சஞ்சிதமென்றும், அனுபவித்துக் கொண்டிருப்பது பிராரர்த்த மென்றும், இனி வரவிருப்பது ஆகாமியமென்றும் விளக்குவர்.

"போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்" 83

என்பது ஆண்டாள்மொழி.

"வினையோ டவிடும் கதிர்வேல் மறவேன்" என்பார் அருணகிரிநாதர். 84 இத்தகைய ஊழ்வினையாகிய பழவினையின் பிடியைவிட்டு நீங்குதல் மனிதர் கடனென்பர். இறைவரை வழிபடுவதாலும் இறையடியாரைப் போற்றுவதாலும் இவ்வினையைப் போக்கிக்கொள்ளமுடியும் என்ற உறுதியுடைய ஆண்டாள், இறைவரை, "வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க வினைகள் தீயினில்பட்ட தூசுபோல் அழியும்" என்கிறார். சேக்கிழார் தமது பழவினை தம்மால் போற்றப்பெறும் சுந்தரரால் நீக்கப்பெறும் என்று குறிப்பிடுகின்றார்.

"வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர் வழிபறிக்கப்
பறியுண்டவரெம் பழவினைவேர் பறிப்பா ரென்னும் பற்றாலே"

என்பது சேக்கிழார் மொழி. 85

பிறவிக்குக் காரணமாகிய பழவினையை அறவே நீக்கிவிடுவார் சுந்தரர் என்ற கருத்தினை அழுத்தமுறக் குறிக்கும் ஆசிரியர். "பழவினைவேர் பறிப்பார்" என்ற தொடரால் தெரிவிக்கின்றார். பழவினை என்னும் தத்துவக்கருத்து வேர் என்னும் காட்சிப்புலனுக்குரிய உருக்காட்சியால் விளக்கப்படுகிறது. பொருத்தமும், ஆழமும் உடையதாக இவ்வுருக்காட்சி உள்ளது. ஆழ்ந்தும், அகன்றும் நீண்டும் செல்லும் தன்மைவாய்ந்த வேரினைப் பிறவிக்குக் காரணமாக என்றும் இருக்கும் வினைக்கு உவமமாக ஆசிரியர் படைத்தமைபுதுமைநயமும் பயக்கிறது. வினையினின்றும் விடுபடவேண்டும் என்னும் ஆர்வம் மிகுந்தவராய் ஆசிரியர் விளங்குகின்றமையை இவ்வுருக்காட்சி வெளிப்படுத்துகின்றது. அடியாரிடம் பக்தி கொள்வதால் வினையினைப் போக்கிக்கொள்ளலாம் என்ற கோட்பாட்டில் சேக்கிழாருக்குள்ள உறுதிப்பாட்டை உருக்காட்சி ஆய்விலிருந்து தெரிந்துகொள்ள முடிகிறது.

## மனையறம் - வேர்:

சிறுத்தொண்டர்தம் மனைவியாரை"... பெருகுதிரு மனையறத்தின் வேராகி விளங்குகிற வெண்காட்டு நங்கை...." என்று போற்றுகின்றார் சேக்கிழார்.[86]

விதைக்கப்பட்ட முதல் மேல்நோக்கி முளைக்கும் பொழுதே வேரானது கீழ்நோக்கி நீண்டு செல்கிறது. விதைகட்கு ஏற்றபடி சல்லிவேர், ஆணிவேர் என்று வேர்கள் அமைகின்றன. செடி, கொடி, மரம் ஆகிய அனைத்திற்கும் கீழேயிருந்து அவற்றைக் கீழே சாய்ந்திடாமல் தாங்கிக்கொண்டிருப்பது வேராகும். நிலத்திற்கடியில் பரவிச்சென்றும், ஆழ்ந்துசென்றும், நீரை உறிஞ்சியெடுத்துக் கொண்டுவந்து தனக்கு மேலே இருக்கும் கொடி, செடி, மரம் ஆகியவற்றிற்கு உணவாகப் படைத்து அவற்றைக் காக்கிறது. காற்றினால் மரம் அசைந்து சாய்ந்துவிடாமல் நிலைத்து நிற்கச் செய்கிறது. மரக்கிளைகளும் இலைகளும் இதுதரும் நீரினால் சக்தியைப் பெற்று செழிப்புறுகின்றன. தளிர், கொழுந்து, அரும்பு, மலர், காய், கனி என்பன வேர் கொடுக்கும் நீரின் வளத்தால் தோற்றம் பெறுகின்றன. நீரின்றேல் அவை வாடியழிந்து விடுதல் கண்கூடு. இவ்வாறு மரத்திற்கு இன்றியமையாத உறுப்பாக விளங்கும் வேரினை இல்லறமாகிய சிறந்த வாழ்விற்கு ஆதாரமாக விளங்கும் மனைவிக்கு உவமையாகப் படைத்துள்ளார் ஆசிரியர். வேர் என்ற உருக்காட்சி சிறுத்தொண்டர்தம் இல்வாழ்க்கையின் அடிப்படையாக அவரது துணைவியர் விளங்கியமையைத் தெரிவிக்கின்றது. செயற்கரிய செய்தவர் என்ற பெருமையினைச் சிறுதொண்டர் பெற்றமைக்கு அவரது துணைவியார் முக்கிய காரணமாவார் என்ற கருத்தையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது வேர் உருக்காட்சி எனலாம்.

சேக்கிழார் இயற்கையியல் அறிவு மிகுந்தவராக உள்ளார் என்பதையும் அவரது கூர்த்த காட்சிப்புலனையும் காட்டுகிறது இவ்வுருக்காட்சி. இல்லறத்தையும் பெண்ணின் பெருமையையும் போற்றும் ஆர்வம் உடையவர் சேக்கிழார் என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. இல்வாழ்க்கைக்கு ஏற்ற நற்பண்பு உடைய பெண்ணை ஆசிரியர் வேர் உருக்காட்சியால் போற்றுவது பெண்ணின் பெருமையைக் குறிப்பதில் அவருக்குள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கிறது.

## (ஊ) இயங்குதிணை

இயங்குதிணையைச் சார்ந்த உயிரினங்கள் உருக்காட்சிகளாகப் பெரியபுராணத்தில் இடம்பெறுகின்றன. ஈரறிவுயிர், நாலறிவுயிர்,• ஐயறிவுயிர் என்பனவற்றுள் முறையே அடங்கும் சங்குப்பூச்சி,ஈ, அலவன், சுரும்பு, வண்டு, நீர்வாழ்வன, தவழ்வன, நான்குகாலால் நடப்பன, பறப்பன ஆகியுவை பொருத்தமான உருக்காட்சிகளாக ஆசிரியரால் ஆளப்படுகின்றன. இவ்வுருக்காட்சி ஆய்வின் வாயிலாகச் சுரும்பு, வண்டு, கயல், சங்குப்பூச்சி ஆகியவற்றின் இயக்கம் சேக்கிழார் மனத்தைக் கவர்ந்துள்ளது என அறியமுடிகிறது. அரி, கரி, புலி, காளை ஆகியவற்றின் தோற்றமும் வீரமும் ஆசிரியர்தம் உள்ளத்தை ஈர்த்துள்ளன எனலாம். பெரியபுராணத்துள் குறிப்பிடப்பெறும் அடியார்களின் வீரமும் இளமைத்தோற்றமும் இவ்வுருக் காட்சிகளால் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன. பசு-கன்று என்பன இணைந்து வந்து அடியார்தம் இறையுணர்வைக் காட்சிப் படுத்துவது காணத்தக்கது. காட்டில் வாழும் வலிய விலங்குகளையும் வீட்டில் வளர்க்கப்பெறும் விலங்குகளையும், மிகச்சிறிய உயிர்களையும் ஆசிரியர் உருக்காட்சிகளாகப் படைப்பது அவருடைய இயற்கையியல் அறிவைத் தெரிவிப்பதாக உள்ளது. பெரியபுராணப்படைப்பின் இயங்குதிணையைச் சார்ந்த உருக்காட்சிகள் மரபையொட்டியனவாக விளங்குகின்றன. எனினும் ஆசிரியர் அவற்றைப் புதுமைநலம் உடையனவாகப் படைப்பது குறிப்பிடத்தக்கது.அடியார்களிடம் ஆசிரியர் கொண்டுள்ள அன்புணர்ச்சியின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சிகள் உள்ளமை ஆய்வினால் தெரியவருகிறது.

கண்ணப்பநாயனார், சம்பந்தர், சுந்தரர், ஏனாதிநாதநாயனார் ஆகிய அடியார்தம் தோற்றப்பொலிவையும் ஆற்றலையும் பாராட்டுவதில் ஆசிரியர் ஆர்வம் காட்டுவதை இவ் ஆய்வினால் அறியலாம்.

### ஈரறிவுயிர்: குழலிசை - சங்குப்பூச்சி:

"ஆற்றின் அலையால் உந்தப்பெற்ற சங்குப்பூச்சி வாழையிலையின்மீது ஏறிப் பின் பசிய இலைகளையுடைய கொடியூடு தவழ்ந்து மேலேசென்று பாக்கு மரத்தின் உச்சிக்குச்

சென்று பாளைமணிகளை உதிர்க்கின்றன. அப்பாளைமணிகள் முத்துக்களைப் போல் சிதறிக்கிடக்கின்றன" என்று ஆனாயநாயனார் புராணத்தின் முதற்பகுதியில் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். [1] " ஆனாயநாயனார் கொன்றை மரத்தின் தோற்றத்தைச் சிவபெருமானாகக் கண்ட அளவில் உள்ளம் உருகி ஒன்றிய சிந்தையுடன் அஞ்செழுத்தை வழுத்திக் குழலொலியால் அமுத இசையை எழுப்பினார்."[2] "அவ்விசை எங்கும் வெள்ளமெனப் பரவியது. கற்பகமரம், விளைக்கும் தேனுடன் கலந்து செவியில் வார்ப்பதென விளங்கியது."[3] "மண்ணுலகத்தின் எல்லாவுயிர் களையும் ஈர்த்தது." [4] "காற்று அசையவில்லை. அருவிகளும் கான்யாறும் கலித்தோடவில்லை. [5] " இவ்வாறு வையத்தையும் வானத்தையும் தன் வயமாக்கிப் பொய்யான அன்பிற்கெட்டாத இறைவர் திருச்செவியில் அவ்விசை அணைந்தது"[6] எனச் சேக்கிழார் இந்நாயனரின் குழலில் பிறந்த இசை கீழிருந்து மேனோக்கிச் சென்றமை பற்றி விவரிக்கிறார். சங்குப்பூச்சி ஆனாயரின் இத்தகைய இசையைக் குறிக்கின்ற வகையில் குறியீட்டு உருக்காட்சியாக ஆளப்பெற்றது எனலாம்.

### அரிவாட்டாய நாயனார், அவர் துணைவியார் - சுரும்பு, வண்டு:

அரிவாட்டாய நாயனாரின் வாழ்பதியாகிய கணமங்கலத்தில் சுரும்பு வண்டொடு சூழ்ந்து முரல்கிறது என்று குறிக்கப் படுகிறது. [7] நாயனாரும் அவர்தம் துணைவியாரும் இணைந்து இறைவருக்குத் திருவமுது படைத்தலாகிய திருத்தொண்டு செய்தமை இவ்வுருக்காட்சியால் குறிப்பாக உணர்த்தப்படுகின்றது. எதிர்நோக்கு உருக்காட்சியாக இது விளங்குகிறது எனலாம்.

### மக்கள் மகப்பேறு, கோரோசனை தருதல் - நண்டு கருவுயிர்த்தல், கமலம் முருகுயிர்த்தல்:

"சேற்றவலன் கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ் செழுங்கமலம்" என்று ஆதனூர் வளத்தை வருணிக்கிறார் சேக்கிழார். நந்தனார் மரபினா ` மக்கள் மகவு ஈனுதற்குரிய மருந்து

வகையாகிய கோரோசனை முதலியவற்றைத் தரும் இயல்பினர். கருவுயிர்த்த பெட்டை நண்டினை ஈரம் புலர்த்தி அது கரு ஈனுதற்குரிய மருந்தினைத் தருவதுபோலத் தாமரை மலர் தன் தாதுக்களை நண்டின்மேல் உதிர்க்கிறது என்று ஆசிரியர் குறிப்பாகக் கூறுகிறார். நந்தனாரின் மரபுபற்றிய தோற்றத்தினையும், அம்மரபிற்குரிய தொழிலினையும் உள்ளுறையாக வைத்துக் கூறும் ஆசிரியர் திறன் நினைத்தற்குரியது. தாமரைமலர் உருக்காட்சியுடன் இணைந்து வந்துள்ள நண்டு உருக்காட்சி குறியீட்டு உருக்காட்சியாக உள்ளது என்பதுடன் நத்தனாரின் சரிதத்திற்குரிய தொனி அமைப்பியாகவும் அமைந்துள்ளது.[8]

## ஐயறிவுயிர்: நீர்வாழ்வன - கயல்:

### நந்தனார் - வாளை:

இயற்கை வருணனை என்ற அமைப்பில் குறிப்பிட்ட புராணத்தின் சரிதப்பொருளைச் சிறுவடிவில் கோடிட்டுக் காட்டும் திறன் சேக்கிழாரிடம் காணக்கூடியதாக உள்ளது. "இறைச்சி" என்ற இலக்கிய மரபு ஆசிரியரால் பின்பற்றப்படுகிறது எனலாம். திருநாளைப்போவார் புராணத்தில் சேக்கிழார் படைக்கும் ஓர் இயற்கை வருணனை இவ்வகையில் காணத்தக்கது.

"மணம் வீசும் இளம்பாளைகள், காய்க்குலைகள் ஆகியவற்றையுடைய தென்னை மரங்களின் அடிப்பாகத்தில் மரம் அசையுமாறு, பெரிய நீர்ப்பள்ளங்களிலிருந்து மேலெழும்பி வாளைமீன்கள் பாய்ந்து முட்டுகின்றன. அவற்றைக் கீழே புதைக்கின்ற வகையில் தென்னைமரங்கள் அவற்றின்மேல் நெற்றுக்களைச் சொரிகின்றன. அந்நெற்றுக்கள் கீழே விழும்போது பக்கத்திலிருக்கும் பலாமரங்களின் நீண்ட முதிர்ந்த கனிகளின்மேல் மோதுகின்றன. அதன் விளைவாக அக்கனிகள் கிழிந்து அவற்றிலிருந்து தேன் பெருகிக் கீழே விழுகிறது. நெற்றுக்களின் மேல் இத்தேன் விழுவதால் அவற்றின்கீழ், புதைபட்டு இருந்த வாளைமீன்கள் மேலெழுந்து குதிக்கின்றன."[9] இவ்வாறு ஆதனூர் வளம் ஆசிரியரால் வருணிக்கப்படுகிறது.

இவ்வண்ணனை குறித்து டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள்,

"பாளைவிரி மணங்கமழும் பைங்காய்வல் குலைத்தெங்கின்
தாளதிர மிசைமுட்டித் துடங்கிடங்கின் எழப்பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழம்மிதப்ப வண்பலவின்
நீளமுதிர் சுனிகிழிதேன் நீத்தத்தில் எழுந்துகளும்'

என்னும் பாடல், குறிப்புப்பொருள் செறிந்த வண்ணனைகட்கு எல்லாம் முடிமணியாய் விளங்குகிறது. கிடங்கில் உள்ள வாளைமீன் தென்னையை முட்டிப்பழம்விழச் செய்தமை நந்தனார் பெற்ற அரும்பேற்றைச் சுட்டுவது. வாளைமீன் மறைய அப்பழம் மிதந்தமை, புலையர் குலப்புன்மை மறைய நந்தனார் ஐயர் ஆயினைமயையும், கதுமெனச் சொரிந்த பலாப்பழத் தேன் கலந்த தண்ணீரில் வாளை ஆடியமை, இறைவரின் திருவருளில் நந்தனார் துளையமாடியதையும் காட்டுகிறது" என்று விளக்கம் தருகிறார். [10] இவ் இயற்கை வருணனை திருநாளைப்போவாரின் சரிதத்தை உள்ளடக்கியதாக புராணத்தின் முதலில் அமைந்துள்ளது. நாயனாரின் சரிதம் இயற்கை வருணனை என்னும் வகையில் சிறியதோர் வடிவமாகத் தரப்படுகிறது எனக் கருதலாம்.

"நந்தனார், வாளைப்போத்தெழும் பழனஞ்சூழ் தில்லை மருங்கணைந்தார்" என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். [11] இறைவர் அந்தணர் வாயிலாக அமைத்துத் தந்த தீக்குழியில் மூழ்கி அந்தணர் வடிவில் நந்தனார் எழவிருக்கும் செய்தியைக் குறிக்கும் குறியீட்டு உருக்காட்சியாக இது விளங்குகிறது எனலாம்.

இவ்வாறு மீன் உருக்காட்சி திருநாளைப்போவார் புராணத்தில் தொடர் உருக்காட்சியாக வந்து நந்தனாரின் ஆன்மநிலையைக் காட்டுகிறது எனலாம். வாளை மீனின் செயலை வைத்து நந்தனாரின் திருவுளக்கிடக்கையைக் குறிப்பாகக் காட்டும் சேக்கிழாரின் திறம் கண்டுணரத்தக்கது. புதுமையும், ஆழமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும், நிறைந்ததாக இவ்வுருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது.

## தவழ்வது - அரவு:

## அம்பு - பாம்பு:

ஏனாதிநாதநாயனார் புராணத்தில் வீரர்கள் செலுத்தும் அம்புகளைப் பாம்புகளாகக் குறிப்பிடுகிறார் ஆசிரியர்.[12]

## விதி - எயிற்றிளம்பணி:

"பூம்பாவையை மணப்பது சம்பந்தருக்குப் பொருந்தாது என்ற விதி ஓர் எயிற்றிளம்பணியாய்"[13] "மௌவல் மாதவிப்பந்தரின் மறைந்துவந்து எய்திப் பூம்பாவையின் முகிழ்விரலைக் குறித்துக் கவர்ந்தது"[14] என்றும், நாலுதந்தமும் பூம்பாவையின் விரலின் எலும்பைப் பொருந்திக் கவர்ந்து நஞ்சுகுத்து மேலெழும் படம் விரித்து நின்றாடியது"[15] என்றும், சேக்கிழார் மொழிவதில் உள்ள பாம்பு உருக்காட்சி படிப்பவர் மனத்துள் அச்சம். அவலம் ஆகிய உணர்ச்சிகளை உண்டாக்கும் திறன் வாய்ந்ததாக உள்ளது. கிளர்ச்சியூட்டும் ஆற்றலுடையதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

## நான்கு கால்களால் நடப்பன:

## இறைவர், சுந்தரர் - பசு, கன்று:

இறைவருக்கும் நாயனார்கட்கும் இடையேயுள்ள தூய அன்பு நிலையைப் பசு - கன்று என்னும் விலங்கு உருக்காட்சி வாயிலாகச் சேக்கிழார் விளக்குகிறார்.

"கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே"[16] என்பர் மணிவாசகர்.

தடுத்தாட்கொள்ளவந்த இறைவர் சுந்தரிடம்.

"முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் ஏவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்பறுற வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத் தாண்டோம் என்றார்.

இறைவர்தம் மொழியைக்கேட்ட சுந்தரர் ஈன்ற ஆவின் கனைப்புக் கேட்ட கன்றினைப்போல் கதறினார். பெருமகிழ் வெய்தினார். தொழுத கையைத் தலைமேல் வைத்துக்கொண்டு, "மன்றுளீர்! செயலோ வலியவந்து ஆட்கொண்டது?" என்று வியந்தார். [17]

பசுக்களை நன்கு வளர்த்த அனுபவம் உடையவர் ஆசிரியர் எனலாம். பசு - கன்று ஆகியவற்றிற்கிடையே நிலவும் அன்புணர்ச்சி அவரது மனத்தினைக் கவர்ந்துள்ளது. ஒன்றை-யொன்று குரலெடுத்து அழைக்கும் காட்சி அவர் மனத்தில் பதிந்துள்ளது.இறைவருக்கும் அடியாருக்குமிடையே நிலவும் தூய அன்புணர்ச்சியைத் தெள்ளிதில் காட்சிப்படுத்தும் உருக்காட்சியாகப் பசு - கன்று இணைஉருக்காட்சியாக உள்ளது. சுந்தரர்தம் இறையன்பினைக் காட்டும் பொருட்டு இவ்விணை உருக் காட்சியைத் தொடர் உருக்காட்சியாக ஆள்கிறார் சேக்கிழார்.

இறைவர் ஈன்ற பசுவாகவும், சுந்தரர் கன்றாகவும் குறிப்பிடப்படுகின்றனர். பசு - கன்று எனும் உருக்காட்சி இறைவர் - சுந்தரர் ஆகியோருக்கிடையே உள்ள அன்புநிலையைக் காட்டுகிறது. பசு கனைத்தலும், அது கேட்டவுடன் கன்று கதறலும், அவற்றிற்கிடையே நிலவும் உறவினைக் காட்டுகின்றன. கன்றுடன் தாய்ப்பசு தொடர்ந்து வருவதுபோல் ஆன்மாவுடன் இறைவர் பிறவிதோறும் தொடர்ந்து வருகிறார் என்ற தத்துவத்தைத் "தொடர்ந்து வந்து" என்ற தொடர் குறிப்பிடுகிறது.

## இறைவர் சுந்தரர் - பசு - கன்று:

வெள்ளிமலையில் சிவபெருமான் முன்பு தாழ்ந்து வீழ்ந்தெழுந்தார் சுந்தரர். 'சேணிடைவிட்ட கன்று கோவினைக் கண்டணைந்தது' என்று கூறும்படியாகக் காதலின் விரைந்தெய்தி நின்று தன்னைப் போற்றிய தனிப்பெருந்தொண்டராகிய சுந்தரரை "ஊரனே வந்தனை" [18] என்று அழைத்தார் இறைவர்.

பசு - கன்று விலங்கு உருக்காட்சி தொடர் உருக் காட்சியாக அடுத்து அடுத்து வந்து இறைவர் சுந்தரர் ஆகியோருக்கிடையே உள்ள உறவை விளக்குகிறது. பசுவை விட்டுக் கன்றும், கன்றை விட்டுப் பசுவும், பிரிந்திருக்க முடியாத நிலை

அடியாரின் பக்திச்சிறப்பை விளக்குகிறது. சுந்தரரின் அன்பின் அழுத்தம் இவ்வுருக்காட்சியால் உணர்த்தப்படுகிறது. "ஆன்கன்றும் ஆவும் என்ற இவ்வுவமை பலவிடத்தும் பயின்று வருவதொன்று: ஆயின் இதனை ஆசிரியர் எடுத்துக் கையாளும் முறைகள் மிகச் சிறப்புடையன... நம்பிகளைக் கன்றாகவும் இறைவரை, அறனை உடனின்று ஊட்டிச் சுரக்கும் தாயாகவும் உவமித்த நியமம் காண்க"19 என்று சி.கே. சுப்பிரமணிய முதலியார் உரைக்கிறார். பொருத்தமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக பசு - கன்று உருக்காட்சி விளங்குகிறது. முருகியற் சுவையுடன் அமைந்துள்ளது. படைப்பின் தலைமையுணர்வாகிய பக்தி உணர்வை மிகுவிக்கும் பாங்குடன் உள்ளது.

## இறைவர், கண்ணப்பநாயனார் - கன்று, புனிற்றா:

இறைவரைப் பசுவாகவும், நாயனாரைக் கன்றாகவும் குறிக்கும் சேக்கிழார் கண்ணப்பநாயனார் புராணத்தில் மாற்றியமைக்கிறார். திருக்காளத்தி மலையிலுள்ள இறைவரைக் கண்டு ஆரா இன்பம் அடைந்தார் கண்ணப்பநாயனார். அவரைப் பிரிய ஒண்ணாத தன்மை பெற்றார். அவருக்கு ஊட்டுதற்கு இறைச்சி கொண்டு வர எண்ணிச் செல்வார். உடன் திரும்புவார். குடுமித்தேவராம் இறைவரைப் புல்லுவார். பின்பு போவார். காதலுடன் அவரையே நோக்கி நிற்பார். இவ்வாறு கன்றைவிட்டுத் தயங்கிக்கொண்டே அகலும் ஈன்றணிமையுடைய பசுவினைப் போன்ற நிலையுற்றார்.[20] கண்ணப்பநாயனாரைப் பசுவாகவும் இறைவரைக் கன்றாகவும் குறிக்கின்றார் ஆசிரியர். கண்ணப்பநாயனாரின் இறையன்பின் உணர்ச்சியைப் பசு - கன்று விலங்கு உருக்காட்சி விளக்குகிறது.

## ஈசனடியார், பத்தராய்ப்பணிவார் - பசு, கன்று

பசுவின்பின் அதனுடைய கன்று ஆசையுடன் செல்வது போன்று ஈசனுக்கு அன்பானார் யாவரையும் காணின் கூச்சமுற்று, மிகவும் மகிழ்ச்சியுற்று, அவரிடம் பணிந்த மொழியும், இனிய மொழியுமே பேசுவர் பத்தராய்ப் பணிவார் என்னும் அடியார்கள்,

சிவனடியார்களிடம் அவர்கள் கொண்டுள்ள அன்பு இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகின்றது. [21] பக்தர்களிடையே நிலவும் அன்பின்மாட்சி இவ்வுருக்காட்சியால் குறிக்கப்படுகிறது.

## சுந்தரர் - காளை:

"கண்கள் எண்ணிலாத வேண்டும் காளையைக் காண என்பார்" [22] என்று சுந்தரர் திருமணக் கோலத்துடன் வந்த காட்சியைச் சிறப்பித்துக் கூறுகின்றார் சேக்கிழார். காளை உருக்காட்சி சுந்தரரின் தோற்றப்பொலிவைக் குறிக்கின்றது. அடுத்து, திருவாரூரில் அவர் நடந்து சென்றமையைச் சேக்கிழார் "வென்றி அடல்விடைபோல் நடந்து" [23] என்ற தொடரால் குறிப்பிடுகின்றார். சுந்தரரின் நடையில் தோன்றும் பெருமிதம் இவ்வுருக் காட்சியால் சிறப்பிக்கப்படுகிறது.

## ஏனாதிநாதர் - அடல்விடையேறு:

தம்மீது அழுக்காறுகொண்டு தம்மை எதிர்த்து வந்த அதிசூரனை, "அடல்விடை ஏறு" [24] போன்று அடர்த்தவர் ஏனாதிநாதர். தனிப்போரில் ஏனாதிநாதர் அவனைக் கொல்லக் கருதி வாளை ஓச்சும்பொழுது, அக்கடையவன் சற்றுப் புடை பெயர்ந்து தன் பல கையை நீக்கினான். அவன் நெற்றியில் திருநீற்றைக் கண்ட ஏனாதிநாதர் திடுக்கிட்டார் "முன்பு இவர்மேல் காணாத வெண்திருநீற்றின் பொலிவு கண்டேன். இவர் சிவபெருமான் அடியார் ஆயினார். இனி இவர் குறிவழி நிற்பேன்" என்று எண்ணித் தம் கைவாள், பலகை ஆகிய இரண்டையும் முதலில் நீக்கக்கருதி, ஆனால் அவ்வாறு செய்யாமல் படையற்ற ஒருவரைக் கொன்றான் என்ற இழிவு அவனுக்கு வரக்கூடாது என எண்ணி அவனை எதிர்த்து நிற்பதுபோல் வாளாநின்றார். அக்கயவன் அந்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு அவரைக் கொன்றுவிட்டான். சேக்கிழார் இந்நிகழ்ச்சியில் காளை உருக்காட்சியைப் பொருத்தமுடன் ஆண்டுள்ளார். காளை தன் சினத்தை உடன் அடக்கிக்கொள்ளும் இயல்பினது என்ற கருத்தை நினைவிற்கொண்டே ஆசிரியர் இவ்வுருக்காட்சியை ஆள்வதாகக் கருதலாம்.

### கண்ணப்பநாயனார் - கரும்போர் ஏறு:

"கரும்போர் ஏறு"[25] "வல்லேறு போல்வார்"[26] "காளையார்"[27] "இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறென வெருக்கொண்டு எய்தி"[28] என்பன, கண்ணப்பநாயனாரின் தோற்றப்பொலிவையும், சினத்தையும், மருட்சியையும் காட்டு கின்றன. "இனைத்திடைப் பிரிந்த செங்கண் ஏறென வெருக்கொண்டு" என்ற தொடரில் உள்ள காளை உருக்காட்சி கண்ணப்பநாயனார் இறைவரிடம் கொண்டிருந்த பேரன்பினை எடுத்துக் காட்டுகிறது. திண்ணனாரின் பரிவினைச் சிவகோசரியார் என்னும் வேதியருக்குக் காட்ட விரும்பிய இறைவர் தம் திருநயனத்துள் ஒன்றில் குருதிவழியுமாறு செய்தார். அதுகண்டு விரைந்தோடி வந்தார் திண்ணனார். இறைவர்தம் கண்ணிலிருந்து குருதி வழிவது கண்டு மயங்கினார். நிலத்தில் பதைத்து விழுந்தார். எழுந்துசென்று குருதி வருவதைத் தடுக்க எண்ணித் துடைத்தார். குருதி நிற்கவில்லை. புண்கள் தீர்க்கும் மெய்மருந்து தேடி மலையின் அடிவாரத்திற்குச் சென்றார். வனங்களெல்லாம் தேடினார். இறைவரைப் பிரிந்து அவரால் இருக்கமுடியவில்லை. ஊறு செய்தவரை எண்ணிச் சீற்றம் கொண்டார். மருட்சி கொண்டார். மருந்துகள் தேடி எடுத்துக்கொண்டு இறைவரிடம் வந்தார். திண்ணனாரின் இத்தகைய நில்லயைக் காளை உருக்காட்சி விளக்குகிறது. "செங்கண்" என்பது அவருடைய சீற்றத்தையும் 'வெருக்கொண்டு' என்பது அவருடைய மருட்சி நிலையையும் விளக்குகின்றன. காளை உருக்காட்சி தொடர் உருக்காட்சியாக வந்து திண்ணனாரின் பொலிவும் ஆற்றலும் மிகுந்த புறத்தோற்றத்தையும், இறையன்பால் மிகுந்த அகத்திறத்தையும் காட்டுகிறது. சிறிதுநேரங்கூட இறைவரைப் பிரிய மனம் இல்லாதவர் என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. தன் இனமாகிய பசுக்கூட்டத்திலிருந்து நீங்காதிருக்கும் காளையின் இயல்பு நாயனாரின் அன்பின் இயல்பை விளக்குகிறது.

### புரவி:

### கதிர்ச்செந்நெல் - வயப்புரவிமுகம்:

காற்றில் அசையும் நெற்க்திர்களின் தோற்றம் குதிரைப் படையைப்போல் உள்ளது என்று திருநாவுக்கரசர்

புராணத்துள் குறிக்கப்படுகிறது. 29 நெற்பயிரின் கதிர்மணிகள் முன்பக்கம் விளைந்து சாய்ந்திருக்கும் காட்சி குதிரையின் தோற்றம்போல் இருப்பது காணத்தக்கது.

### மான்:

### பரவை - மான்:

"தானே வந்து புகுந்து மயக்கத்தைச் செய்து மான்போலப் பார்வை செய்து எனது இறைவரது அருளுருவாகிய பரவை எங்கே சென்றது" என்று தமக்குள் வினவிக்கொள்கிறார் சுந்தரர். 30 பரவையின் விழிப்பார்வை மானின் பார்வை போல் மருட்சி உடையதாக இருந்தமை ஈண்டுக் குறிக்கப்படுகிறது.

### புனிதவதியார் - மாவிளம்பிணை:

தம் கணவர் தம் இரண்டாம் மனைவியுடனும், பெண்மகளுடனும் வந்து தம் காலில் வீழ்ந்து வணங்கியதைக் கண்டு மருண்ட நோக்கம் உடையவராயிருந்த காரைக்காலம்மையாரை "மாவிளம்பிணைபோல் நின்றனர்"[31] என்று கூறுகின்றார் ஆசிரியர். அந்நிலையை விளக்கும் வகையில் மான் உருக்காட்சி பொருத்தமுற ஆளப்பெற்றுள்ளது.

### நாய்:

"தெரிந்து கொள்ளற்கரிய திருத்தொண்டர்களின் ஈடு இணையற்ற சீர்மையைச் சொல்லக் கருதியது பெரிய கடலைக் குடிப்பதற்கு நாய் நினைந்தது போலாம்" என்று ஆசிரியர் பாயிரப் பகுதியிலுள்ள அவையடக்கத்தில் குறிப்பிடுகிறார். [32]

"உன் குணமாகிய பெருங்கடலை நாயேனாகிய யான் என்ன சொல்லிப் பாடுவேன்" என்று சுந்தரர் கூற்றில் வைத்துச் சேக்கிழார் பிறிதோரிடத்தில் குறிப்பிடுகிறார். 33 தொண்டரின் பண்புப்பெருமை, இறைவரின் அருட்குணம் ஆகியவற்றை இவ்வுருக்காட்சி விளக்குகிறது.

### உடும்பு:

### கண்ணப்பநாயனார் - உடும்பு:

திண்ணனார் காளத்திமலைத் தேவரைக் கண்டவுடன் அணைத்துக்கொண்ட செய்தியை. "வங்கினைப் பற்றிக்கொண்டு அகலாத வலிய உடும்பினைப் போல அவரை விட்டு நீங்காது இருந்தான்," என்று காடனிடம் நாணன் கூறுகிறான். 34 மலைநாட்டு வேடர் குலத்துத் திண்ணனார் குடுமித்தேவரைப் பற்றிப் பிடித்துக் கொண்டமையை அம்மலைப்பகுதியில் வாழும் ஓர் உயிரான உடும்பினது பிடிக்கு உவமித்தமை பொருத்தமுடைய உருக்காட்சியாக விளங்குகிறது. உடும்பு, எந்த ஒரு பொருளைப் பற்றிக்கொண்டாலும் தான் வேறு, அப்பொருள் வேறு ஆகாமல் அத்துடன் ஒன்றிவிடும் இயல்பினது. திண்ணனாரும் அவ்வாறு இறைவரை பற்றிக்கொண்டு அவரோடு இரண்டறகலந்து விட்டார் என்ற கருத்தை இவ்விலங்கு உருக்காட்சி குறிக்கிறது எனலாம்.

வேடர்கள் பேச்சில் அவர்கள் வழக்குக்கேற்ற தன்மையில் உவமைகூறி அமைத்தது ஆசிரியரது பெருங்கவித்திறமையாம். உடும்பு பிடித்தது, வங்கு அதற்குத் தன் வளைந்த அமைப்பினால் இடங்கொடுத்து விடாப்பிடிக்கு மேலும் உதவிசெய்தது என்ற உவமானப்படி இங்குத் திண்ணனாரும் பிடித்தனர். அதற்குத் தேவரும் தமது அருட்டிரு நோக்கம் செய்து தம்மை அவர் விடாது பற்றிக்கொள்வதற்கு உதவியருளினான் என்ற குறிப்பும் காண்டற்குரியது. கிளர்ச்சியூட்டும் திறனுடையதாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

### புலி:

### ஏனாதிநாதர் - வெங்கண்புலி:

தமது இல்லத்தில் வாளா இருந்த ஏனாதிநாதரிடம் வந்து, அதிசூரன் போருக்கு அழைத்தான், இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார்.

"வெங்கண் புலிகிடந்த வெம்முழையில் சென்றழைக்கும்
பைங்கண் குறுநரியே போல்வான்" 35

என்று கூறுகின்றார். குகையில் இருக்கும் வெங்கண் புலி என்பது ஏனாதிநாதரின் தோற்றத்தையும், வலியையும் குறிக்கின்றது. பைங்கண் நரி என்பது அதிசூரனின் வலியின்மையையும், வஞ்சத்தையும் குறிக்கின்றது.

## ஏனாதிநாதர் - புலிப்போத்து:

"வயப்புலிப்போத்தன்னார்" [36] என்றும், "வெம்புலிப் போத்தன்னவர்" [37] என்றும் ஏனாதிநாதர் அடுத்தடுத்துத் தொடர் உருக்காட்சியாக வரும் புலி உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகிறார். அவரது தோற்றம், சீற்றம், ஆற்றல் ஆகியவை இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகின்றன. கிளர்ச்சியூட்டும் ஆற்றலுடையதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

## திண்ணனார் - இரும்புலிப்பறழ்:

குழவிப் பருவத்திலிருந்து திண்ணனார் "இரும்புலிப்பறழ்" 38 எனப்படுகிறார். குறிஞ்சிப் பகுதியில் பிறந்த நாயனாரை அதே பகுதியில் உள்ள புலிக்குட்டியைக் கொண்டு சிறப்பித்தமை திணைப்பொருத்தத்துடன் விளங்குகிறது.

## கரி:

இதன் தோற்றப்பொலிவு, நடையழகு நெஞ்சத்தைக் கவர்ந்துள்ளமை இலக்கியங்களில் காணலாம். சேக்கிழார் நெஞ்சத்தைக் கவர்ந்த விலங்காக இது விளங்குகிறது எனலாம். அவருடைய கற்பனையின் நிறத்தை இவ்வுருக்காட்சியால் அறியலாம்.

## உமை, சிவம் - பிடி, களிறு:

உமையும், சிவபெருமானும் முறையே பிடியாகவும் களிறாகவும் குறிக்கப்படுகின்றனர். [39]

## சுந்தரர் - நற்றவக்களிறு:

"நாவலூர் வந்த சைவநற்றவக் களிறு" என்று 40 சுந்தரர் திருவாரூர் மக்களால் அழைக்கப் பெற்றார். சைவசமயத்தின் ஏற்றத்திற்குத் தொண்டாற்றியவர் என்பதையும் தவத்தில் சிறந்தவர் என்பதையும் இவ்வுருக்காட்சி விளக்குகிறது.

### எறிபத்தர் - அடுகளிறு:

சோழனின் பட்டவர்த்தனம் என்னும் யானையைத் தம் பரசினால் வீழ்த்திய எறிபத்தர், "ஒரு கை யானையை வீழ்த்திய இருகையானை போல விளங்கினார்" [41] என்று கூறியுள்ளார் ஆசிரியர். எறிபத்தரின் சீற்றத்தை இவ்வுருக்காட்சி நினைக்கச் செய்கிறது.

### வணிகனின் மகளிர், வாழைக்குலைகள் - இளம்பிடியார், யானைப்படை:

வைப்பூர்க்கோன் தாமன் என்னும் வணிகனின் ஏழுபெண்கள் "இளம்பிடியார்" 42 என்று குறிக்கப்படுகின்றனர். பெருங்குலைகளுடன் விளங்கும் வாழைமரங்களை யானைப்படை என ஆசிரியர் குறிப்பிடுவது நயமுடையதாக உள்ளது. [43]

### சம்பந்தர் - போதகம்:

"மறைச்சிறு போதகம்" [44] "சிறிய மறைக்களிறு" [45] "மங்கலம் தருமழவிளம்போதகம்" [46] "போதகம்" [47] "வென்றிமழ இளங்களிறு" 48 என்று சேக்கிழார் சம்பந்தரைக் குறிப்பிடுகிறார்.

கரி உருக்காட்சி என்பது தொடர் உருக்காட்சியாக வந்து சம்பந்தரின் இளமை, தோற்றப்பொலிவு, வென்றிச்சிறப்பு, சைவசமயத்தில் அவர் பெற்றுள்ள தலைமைச்சிறப்பு ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.

### அரி:

### கண்ணப்பநாயனார் - வயக்கோளரி:

"என்னையாளும் கானவர்க்கரிய சிங்கம்", "செங்கண் வயக்கோளரியன்ன திண்மைத் திண்ணனார்" "மறவர்கள் அரி" என்று கண்ணப்பநாயனாரின் திண்மை, வீரம், தோற்றம் ஆகியவற்றைச் சிறப்பிக்கும் வகையில் விலங்கு உருக்காட்சியைச் சேக்கிழார் ஆள்கிறார். 49 "இங்குத் திண்ணனார் மாவேட்டைக்குச் செல்லுதலால் எந்த மிருகங்களும் இவர் கீழ்ப்பட்டு

வெல்லப்பட்டும், கொல்லப்பட்டும்போம் என்பதுங் குறிப்பு. முன்னரும் இவரைச் சிங்கமென்றே கூறியதும் காண்க" என்று சி. கே. சுப்பிரமணிய முதலியார் விரித்துரைப்பது காணத்தக்கது.

திண்ணனாரின் தந்தை நாகனை "வெஞ்சின மடங்கல் போல்வான்" 50 என்றும், அவரது தாயைச் "சூர் அரிப்பிணவு போல்வாள் " 51 என்றும், சேக்கிழார் குறிக்கின்றார்.

## புகழ்ச் சோழன் - இளஅரியேறு:

"இளஅரி ஏறுபோல எழில்மணிவாயில் நீங்க" 52 என்று புகழ்ச்சோழன் அரண்மனை வாயில் விட்டு வெளிவந்தமையைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். மன்னனின் வீறுடைய இளமைத்தோற்றம், துளங்காத்தன்மை ஆகியவை இவ்வுருக் காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன.

## மனுமைந்தன் - அரிக்குருளை:

மனுநீதிச் சோழனின் மைந்தன் "போரரிக்குருளை அன்னான்" 53 எனப்படுகிறான். அவனுடைய இளமையும் வீரத்தோற்றமும் இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகின்றன.

## சுந்தரர் - மங்கலமடங்கல்:

திருமண விழாவில் மணமகனாக இருந்த சுந்தரரை "மங்கல மடங்கலனையான்" 54 என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

## சம்பந்தர் - பூசுரர் சிங்கம்:

"சிங்க இளவேறு" 55, "பூசுரர் சிங்கம்" 56, "பரசமயக்கோளரி" 57 என ஆசிரியர் சம்பந்தரைக் குறிப்பிடு கின்றார். சம்பந்தரின் இளமைத்தோற்றம், புத்தர். சமணர் ஆகிய பிற சமயத்தாருடன் வாதிட்டு அவர்பெற்ற வெற்றி, ஆகியவை இவ்வுருக்காட்சியால் விளக்கப்படுகின்றன. சைவசமயத்தைப் பிற சமயங்களின் தாக்குதல்களிலிருந்து காத்த பெருமையுடையவர் சம்பந்தர் என்பதை இவ்வுருக்காட்சி குறிப்பிடுகிறது. சம்பந்தரைப் போற்றுவதில் ஆசிரியருக்குள்ள ஆர்வத்தின் வெளியீடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

## பறப்பன:

### பறவை உருக்காட்சி:

மகளிர்தம் அழகிய சாயலைச் சிறப்பிக்க மயிலையும், அவர்தம் எழிலார்ந்த நடையினைச் சிறப்பிக்க அன்னத்தையும் கவிஞர்கள் உருக்காட்சிகளாகக் கொள்வதுண்டு.

> "...கதுப்புஎன
> மணிவயின் கலாபம் பரப்பி, பலஉடன்
> மயில், மயிற்குளிக்கும் சாயல்...." எனவும் 58
> "சேரல் மடவன்னம் சேரல் நடை ஒவ்வாய்" எனவும்

வருவனவற்றை மயில், அன்னம் ஆகிய பறவைகள் தொன்றுதொட்டு உருக்காட்சிகளாக ஆளப்பட்டு வருவதற்குச் சான்றுகளாகக் குறிப்பிடலாம்.

### மகளிர் - மயில்:

பெரியபுராணத்தில் சோழநாட்டின்கண் உள்ள கஞ்சாறூர் என்னும் பதியின் மகளிர் சாயலை,

> "புயல்காட்டும் கூந்தல்சிறு புறங்காட்டப் புனமயில்கள்
> இயல்காட்டி இடைஒதுங்க..."

என்று சேக்கிழார் குறிக்கின்றார். [59] புனமயிலின் சாயல் காண்பவர் நெஞ்சினைக் கவரவல்லது. மேகம் போன்ற கூந்தல் கஞ்சாறூர் மகளிர் சிறுபுறத்தை மறைத்துக் கொண்டிருக்கிறது. அவர்தம் கூந்தலின் நீட்சியையும், அகன்று பரந்து கிடப்பதையும் இவ்வாறு குறிப்பாகக் கூறுகின்றார் ஆசிரியர். நீண்ட கூந்தலுடன் மகளிர் இடை ஒதுங்க நடந்துசெல்வது நீண்ட தோகையுடன் மயில் அசைந்து செல்வதுபோல் உள்ளது.

தொண்டைநாட்டுக் குறிஞ்சிநில மகளிரைச் சேக்கிழார், "சுரிகுழல் தோகை" என்கிறார். "பலவாகிய பெரிய புனங்களில் படர்சிறைத் தோகையாகிய மயில்கூட்டம் இயங்குகிறது. அத்தகு புனங்களைக் சுரிகுழல்தோகையாகிய மகளிர் கூட்டம் காக்கின்றது" என்று தெரிவிப்பது நயஞ்சான்றது. "அந்நாட்டின் முல்லை நில மகளிராகிய இடைச்சியரணி நடையையும், மருதநில மகளிராகிய

உழத்தியர் சாயலையும் அடைய விருப்பங்கொண்டு, அன்னமும் மயிலும் எதிரெதிர் பயில வயல், முல்லைப்புறவு ஆகியவை இயைந்துள்ளன" என்று ஆசிரியர் குறிப்பது நினைத்தற்குரியது.[60]

## மகளிர் - அன்னம்:

"அன்னநடை மடவார்கள் ஆட்டோவா அணியரங்கு" திருவொற்றியூரில் இருந்ததாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். நடமிடும் பெண் கள் அன்னம்போல் நடை உடையராய் விளங்கினர் என்பது கருத்து. 'அணங்கினும் மேம்படும் அன்னமன்னவள் எனப் பூம்பாவையை ஆசிரியர் குறிப்பது நினைத்தற்குரியுது. மங்கையர்க்கரசியார், " அன்னமென்னடையினார்" எனக் குறிப்பிடப்படுகின்றார்.[61]

சோழநாட்டின் துறைமுகநகரமாகிய நாகப் பட்டிணத்தில் உணங்கல்மீனைக் கவர்கின்ற குருகுடன் அணைந்த அன்னக் கூட்டம், காண்போர்தம் கண்ணையும் கருத்தையும் கவர்கின்ற நுண்ணிய இடையையுடைய நுளச்சியர்தம் அசைநடை தமக்கு இல்லையே என மனமழிந்து தாம் தங்கியிருக்கும் புன்னைமரத்தின் மணங்கொள் கொம்பரிலிருந்து இறங்காமல் மருள்கின்றது" எனச் சேக்கிழார் குறிப்பது நயமுடையதாக உள்ளது[62] அன்னப்பறவை உருக்காட்சி நடையைப் பொருத்தமுறச் சிறப்பிக்கின்றது.

## மகளிர் - மயில்:

"தம்மில் தாமுறு மகிழ்ச்சியுடன். அழகிய சாயலுடைய மயிலைப்போன்று மறைக்குல மகளிர் தூமணி விளக்கொடு சுடர்க்குழைகள் மின்ன அழகிய தமது மாளிகைகளை அணிபெறச்செய்தனர்" என்று சீகாழி மகளிர் சம்பந்தருக்கு நெய்யணி விழா எடுத்த செய்தியைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

"சம்பந்தரைக் திருமணவிழவின்பொழுது எதிர்நின்று வரவேற்ற மகளிரைச் 'சாயல் இளமயிலனைய மாதர் மதுரமங்கல முன்னான வாழ்த்தொலி எடுத்தனர்" என்கிறார் ஆசிரியர்.[63]

திருமயிலாபுரி மகளிரை, "தூதியங்கும் சுரும்பணி தோகையர்" என ஆசிரியர் குறிப்பது காணத்தக்கது.[64]

இவ்வாறு மகளிர் தம் சாயல், நடை ஆகியவற்றை ஆசிரியர் மயில், அன்னம் ஆகிய பறவைகளை உருக்காட்சியாகப் படைத்துச் சிறப்பிக்கின்றார். மரபு வழிப்பட்டதாக இவ்வுருக்காட்சி இருப்பினும் ஆங்காங்குப் புதுமைப்பொலிவுடன் விளங்குமாறு சேக்கிழார் ஆள்வது குறிப்பிடத்தக்கது.

பரவையார், காரைக்காலம்மையார், கழற்சிங்க நாயனாரின் தேவி, மங்கையர்க்கரசியார், பூம்பாவை ஆகியோரைச் சேக்கிழார் மயில், அன்னம் ஆகிய உருக்காட்சி வாயிலாகச் சிறப்பிப்பது காண்டற்குரியது.

## பரவையார் - மயில்:

"என்மனங்கொண்ட மயிலியலின் இன்தொண்டைச் செங்கனிவாய் இளங்கொடி யார்? என்று வன்தொண்டராம் சுந்தரர் தம்மருங்கு நின்றவரை வினவினார்" எனச் சேக்கிழார் குறிக்கின்றார்.[65] பரவையார்தம் மயிலனைய சாயல் சுந்தரரின் மனத்தைக் கவர்ந்துவிட்டது என்பது கருத்து.

## தனித்தேவி - மாமயில்:

கழற்சிங்கநாயனார் என்ற பல்லவ மன்னர் தமது உரை சிறந்துயர்ந்த பட்டத்து ஒரு தனித்தேவியுடன் திருவாரூர் திருக்கோயிலுக்குச் சென்றார். தமது அரசியல் ஆயத்தோடு கருவறை முன் இறைவரை அம்மன்னர் வணங்கும்பொழுது, கோயிலை வலங்கொண்டு அங்கண் குலவிய பெருமையெல்லாம் சாயல் மயிலே போன்ற அவர் தேவி தனித்தனி கண்டு வந்து தூயநன் பள்ளித்தாமம் தொடுக்கு மண்டபத்தின் அருகில் விழுந்துகிடந்ததோர் புதுப்பூவினை எடுத்து மோந்தாள். அப்பொழுது செருத்துணையார் என்னும் புனிதத் தொண்டர் திருமுற்றத்துள் மலர் எடுத்து மோந்தனள் என்ற கருவியினால் அவளது மூக்கைப்பிடித்து வார்ந்தார். 'வார்ந்திழி குருதிசோர மலர்க்கருங் குழலுஞ் சோர சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலெனத் துளங்கி மண்ணில் சேர்ந்துயர்ந் துரிமைத்தேவி' புலம்பினாள்.[66]

நீண்ட குழல் சோர தேவி சோர்ந்து வீழ்ந்துகிடக்கும் காட்சியை அரற்றுந் தொகை மயில் ஒன்று துளங்கி மண்ணில் கிடக்கும் அவலக்காட்சி வாயிலாகத் தெரிவிப்பது பொருத்தமுற

அமைந்துள்ளது. திருக்கோயிலை அவள் மாமயில் போல் மகிழ்ச்சியுடன் வலங்கொண்டு வந்ததும், பின் மண்ணில் சோர்ந்து வீழ்ந்ததும் அடுத்தடுத்து ஆசிரியரால் கூறப்படுவது முரணியலாக அமைந்து தேவியின் எழிலார் தோற்றத்தைப் படிப்பவர் மனத்துள் எழுப்புகிறது. மயில் தொடர் உருக்காட்சியாகச் சேக்கிழாரால் ஆளப் பட்டுள்ளமை நினைத்தற்குரியது . அவலச்சுவையை மிகுவித்துக் காட்டும் திறனுடையதாக மயில் உருக்காட்சி ஆளப்பட்டுள்ளமை காணத்தக்கது.

## காரைக்காலம்மையார் - மயில்:

வணிகர்குலத் தலைவனார் தனதத்தனார் பெற்ற புனிதவதியாரை, "மயிலைப் புறங்கொள் மென் சாயல் மகளிர் கிளவி யாழிலொடும் குயிலைப்பொருவுங் காரைக்கால் அம்மை" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

நாகைநிதிபதியின் மைந்தன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணம் முடித்தமை குறித்துச் சேக்கிழார்,

"தளிரடி மென்நகை மயிலைத் தாதவிழ்தார் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கல்யாணம் செய்தார்கள்"

என்கிறார் [67] மயில், காளை உருக்காட்சிகள் இணைந்து வந்துள்ளன. ஒன்று பறவையாகவும் மற்றொன்று விலங்காகவும் உள்ளமை முரணைப் படைக்கிறது. மென்மையும் அச்சமும் உடையதான மயிலுக்கும் வன்மையும் மிடுக்கும் உடையதான காளைக்கும் இடையே ஒருமைப்பாட்டை எதிர்பார்ப்பதற்கில்லை. எனவே இத்திருமண மக்களிடையே ஒருமையுணர்வைக் காண்டல் அரிது என்ற கருத்தை ஆசிரியர் குறிப்பாகத் தெரிவிக்கின்றார். சோதிடக் கலைக்கிணங்கவும் இவ்வாறு மணமக்களின் பொருந்தா நிலையைத் தெரிவிப்பதாகவும் கொள்ளலாம். மயில், காளை என்பன முறையே பெண் ஆண் இருவரையும் சிறப்பிக்கும் வகையில் உவமைகளாக ஆளப்படும். சேக்கிழாரும் அந்த மரபையொட்டி இவற்றை ஆள்கிறார் எனினும் பொருந்தாமையை குறிக்கும் உத்தியா கவும் இவற்றை ஆள்வது நயம் தருகிறது.

சேக்கிழார் மயில் உருக்காட்சியை இரண்டுமுறை ஆள்வதன் வாயிலாக அம்மையாரின் எழிலை மட்டுமின்றி

நடந்தேறிய திருமணத்தின் பொருந்தாமையையும் விளக்குவது பொருத்தமாகவும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலுடையதாகவும் உள்ளது.

அன்னம், மயில் ஆகிய பறவைகளை உருக் காட்சிகளாகக் கொண்டு மகளிர்தம் அழகுத்தோற்றத்தைக் சிறப்பிப்பது மரபின்பாற்பட்டதாக இருப்பினும், சேக்கிழார் இவற்றைப் புதுமையும் பொருத்தமும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் ஆழமும் உடைய உருக்காட்சிகளாகப் படைத்து ஆள்கின்றமை கண்டுணரத்தக்கது.

## (ii) அன்றாட வாழ்க்கை

### (அ) மக்கள் உருக்காட்சி

பெரியபுரணத்தில் மக்களை உருக்காட்சிகளாக ஆசிரியர் படைத்துள்ளமை காணத்தக்கது. திருத்தொண்டர்தம் சீர் பரவுதலைத் தம் படைப்பின் பாடுபொருளாக அவர் கொண்டுள்ளபடியால் தம்மால் ஆர்வமுடன் போற்றப்பெறும் அத்திருத்தொண்டர்களை உருக்காட்சிகளாகப் படைத்துள்ளார். தொண்டர்தம் வாழ்வு ஆசிரியர்தம் நெஞ்சத்தை ஈர்த்துள்ளது. தொண்டர்தம் வேடம், தூய அன்பு, வழிபாட்டுணர்வு ஆகியவை ஆசிரியரைக் கவர்ந்துள்ளன. சோழ அரசர்மாட்டு அன்பும் நன்றியுணர்வும் கொண்டவர் என்பதை அவர் ஆளும் அரசர் உருக்காட்சி தெரிவிக்கிறது. அறவுணர்வில் ஆர்வம் உடையவராய் இருந்தார் என்பதை அவர் ஆளும் மாதவர், வேதியர், ஞானநெறியினர் ஆகியோர் உருக்காட்சிகளாக ஆளப்படும் திறத்திலிருந்து அறியமுடிகிறது. பக்திநலம் வாய்ந்ததும் ஒழுக்கவுணர்வு உள்ளதுமான ஒரு சமுதாயத்தை அவர் விரும்புகிறார் என்பதைச் சேக்கிழார் ஆளும் மக்கள் உருக்காட்சியால் அறியமுடிகிறது. இறையுணர்வு அற்றோரை அவர் வெறுக்கிறார் என்பதை இவ்வுருக்காட்சி ஆய்வு தெரிவிக்கிறது. ஆசிரியர்தம் கற்பனையின் மனவியலைக் காட்டும் சான்றாக மக்கள் உருக்காட்சியுடன் இடம்பெறும் தொண்டர் உருக்காட்சி விளங்குகிறது.

### தொண்டர்:

சைவசமய அடியார்கள்பால் சேக்கிழர் மிகுந்த அன்புடையவர் என்பதைத் "தொண்டர் உருக்காட்சி" காட்டுகிறது. ஓடுகின்ற ஆறு, கவிந்து மணியுடன் சாய்கின்ற நெற்பயிர், ஒலிக்கின்ற வண்டு ஆகியவற்றை ஆசிரியர் மெய்யடியார்களாகக் காண்கிறார். சேக்கிழார் ஆள்கின்ற மக்கள் உருக்காட்சி வரிசையில், சிறப்பும், புதுமையும், பொருத்தமுடையதாகத் தொண்டர் உருக்காட்சி விளங்குகிறது. பக்தி உணர்வைப் படிப்பவர் மனத்துள் உருவாக்கும் திறனை இவ்வுருக்காட்சியில் காணலாம்.

### ஆறு - அரனடியார்:

பூவும் நீரும் கொண்டுசெல்லும் காவிரியாறு அரனைப்போற்றும் அடியாரைப்போல் விளங்குகிறது என்கிறார் ஆசிரியர். 1 தன் இருகரைகளிலும், அவற்றின் மருங்கில் இருக்கும் சோலைகளிலும் உள்ள மலர்களை எடுத்துக்கொண்டு செல்லும் காவிரி புனிதத் தலங்களை ஓட்டிச்செல்லும்பொழுது அடியார்களைப் போன்று இறைவரை மலர்களால் வழிபாடு செய்கிறது என்கிறார். தொண்டர்சீர் பரவுவாராகச் சேக்கிழார் விளங்கும் பாங்கினை இவ்வுருக்காட்சியால் அறியலாம்.

### நெற்பயிர் - அடியார்:

ஆற்றின் நீர்வளத்தால் ஓங்கிய நெற்பயிர்களின் காட்சி இறைவரிடம் தம் நெஞ்சத்தை முழுதும் கொடுத்துவிட்ட அடியார்களின் காட்சியாகத் தோன்றுகிறது ஆசிரியருக்கு. நெற்கதிர்கள் அலர்வதற்கு முன்பு இருந்த வளர்ச்சி நிலைகளைப் படிப்படியாக ஆசிரியர் கூறுகிறார்.

"சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிக ரின்றி மிக்கு
வாலிதாம் வெண்மை கருவினால் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆவின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம்"

என்பது பாடல். [2] நெற்கதிர்களின் வளர்ச்சியையும், தொண்டரின் நெஞ்ச உணர்ச்சியையும், ஒருங்குவைத்துக் காண்கிறார் சேக்கிழார்.

சீவகசிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவர், நெற்பயிரை வருணித்துக் கூறும் பகுதி இங்கு ஒப்பிட்டுக் காண்டற்குரியது.

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்ற மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்ந்தவே"

என்பது சிந்தாமணிப்பாடல். [3] "பச்சைப்பாம்பின் தோற்றம்போலக் கருத்தாங்கியிருந்து, குடிப்பிறவாதவர் செல்வத்தைப்போலத் தலையை நேரேநிறுத்தி, மெய்ப்பொருளை ஆராய்ந்த நூற்கல்வி பொருந்திய மக்களைப்போல மிகவும் வளைந்து, விளைந்தன நெற்பயிர்கள்" என்பது இப்பாடற்பொருள், பச்சைப்பாம்பினது வடிவின் நினைவும், குடிப்பிறவாதவர், மெய்ப்பொருள் நூற்கல்வியாளர் ஆகியோரின் நினைவும் நெற்பயிரின் வளர்ச்சி நிலைகளைக் காணும்பொழுது திருத்தக்க தேவருக்கு உண்டாகின்றன. குடிப்பிறவாதவர் மீது வெறுப்பும் தேர்ந்தநூற் கல்விசேர் மாந்தரிடம் விருப்பும் உடையவர் அவர் என இவ்வுருக்காட்சியால் அறியலாம். அறிஞர்பால் திருத்தக்கதேவர் கொண்டிருந்த ஆர்வத்தை இவ்வருணனையின் காணமுடிகிறது. ஆனால், சேக்கிழார் நெற்கதிரின் வளர்ச்சி நிலைகளைக் காணும்பொழுது சிவனடியாரை நினைக்கிறார். இத்தகைய மக்கள் உருக்காட்சி சேக்கிழாரின் தனிச்சிறப்பிற்குச் சான்றாக உள்ளது.

"பக்தியினால் வழிபாடு செய்து சிவபெருமானுக்கு ஆளாயொழுகுகின்ற அன்பர் ஒருவரையொருவர் கூடுவாராயின் தத்தமக்குள்ளே தலையினால் தாழ்ந்து வணங்குவதுபோல நெற்பயிர்களெல்லாம் நெருங்கி நீண்ட வரிசையினையுடையன வாகிப் பால் முதிர்ந்த கதிராகிய தலைகளை எதிரெதிர்த் தாழ்த்தி மேலே சொல்லிய அடியார்களின் சிவானுபவத்தன்மையைப் போல விளைந்தன" என்று அடியார்களின் பக்குவ நிலையை ஆசிரியர் விளக்குகிறார். [4]

## இக்குமரம் - அடியார்:

பருத்த கரும்புகளிலிருந்து முத்துக்கள் சொரியும் காட்சி, பெரியோரைக் கண்டு உருகிக் கண்ணீர் மல்கும் அடியாரின் காட்சியைச் சேக்கிழார் கற்பனையில் தோற்றுவிக்கிறது.[5]

"…. இக்குப் பெருகிப் புடைமுதிர்தரளஞ் சொரிவன பெரியோரவர் திருவடியைக் கண்டு உருகிப் பரிவுறுபுனல்கண் பொழிவன என முன்புள வளவயலெங்கும்" என்பது சேக்கிழார் மொழி.

## வண்டு - தொண்டர்:

"கைதைமலர்களின் வெண்தாது படியப்பெற்ற மேனியுடன் விளங்கும் வண்டுகள் திருநீறணிந்த மேனியுடன் விளங்கும் தொண்டர்களைப்போல் தோன்றுகின்றன" என்கிறார் ஆசிரியர்.[6]

## சந்திரகாந்தக்கல் - தொண்டர்:

திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தில் காஞ்சி நகரத்துச் சிறப்பை ஆசிரியர் உயர்வாக வருணிக்கிறார். "மின்னலைப் போல் ஒளிவிடும் பல மணிகளால் இழைக்கப்பெற்று விளங்கும் தவளமாடங்களின்மேல் வைக்கப்பட்டுள்ள சந்திரகாந்தக் கற்கள் போன்று ஒளிரும் செக்கர் நிறப்பொழுதில் தோன்றும் இளமதியைக் கண்டு உருகி நீர் பெருக்குகின்றன. வன்புலியின் உரியாடையுடன் திகழும் திருஏகம்பரின் சடையையும், இளம்பிறையையும் கண்டு கும்பிட்டு அன்புருகி மெய்பொழியக் கண்ணீர் வாரும் அடியார்களைப் போன்று அவை விளங்குகின்றன" என்பது வருணனை.[7]

## தாமரை - வேதியர்:

சீகாழித்தலத்தின்கண் வாவியில் பூத்துள்ள தாமரை மலர்களைக் குறிப்பிடும் சேக்கிழார் அவை வேதியர்கள் போலத் தோற்றமளிக்கின்றன என்கிறார்.[8]

**மெய்:**

"சங்கரன் சார்பிலோர்க்கு உள்ள நீடிய மெய் மின்னலைப்போல மறைந்துவிடும் என்ற சொல்லை மெய்ப்பிப்பதுபோல் சமணசமயத்தைச் சார்ந்த வடுகக்கருநாட மன்னது உடல் சாய்ந்தது. அவன் இறந்தொழிந்தான்" என்கிறார் ஆசிரியர்.[9]

உலகத்தில் மிக உயர்ந்த பண்புடன் விளங்கும் நல்லோர் முத்தி உலகத்தை விரைந்து அணைவதைப்போல அரனாரின் அடியாராகிய மூர்த்தியாரைத் துன்புறுத்திய தீயோனாகிய வடுகக்கருநாட மன்னன் வெவ்வாய் நிரயத்திடை விரைந்து வீழ்ந்தான்" என்கிறார் சேக்கிழார். பண்பாற் சிறந்த பெரியோர்கள் விரைவில் வீடுபேறு பெறுவர் என்றும் பண்பற்ற கயவர்கள் விரைவில் நிரையத்தை அடைவர் என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். வடுகக்கருநாடனின் வீழ்ச்சி இவ்வுருக் காட்சியால் விளக்கப்படுகிறது.[10] பெரியோர்கள் வீடுபேற்றைப் பெறும் விரைவைக் கொண்டு பண்பற்ற சிறியோர்கள் நிரையத்தை அடையும் விரைவை நயமுறத் தெரிவிக்கிறார் சேக்கிழார்.

**சமணர் - அறிஞர்:**

மதுரையில் சம்பந்தரும் தொண்டர்களும் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்டனர் சமணர்கள். அதை அறிந்த சம்பந்தர் அத்தீயின் வெப்பு " பையவே சென்று பாண்டியற்காக" என்றார். அதன் விளைவால் பாண்டியனுக்கு வெப்புநோய் ஏற்பட்டது. அரசியாராலும், அமைச்சராலும் அழைத்துவரப்பெற்ற சம்பந்தர் பாண்டியன் உடம்பின் வலப்பகுதியைத் திருவளர் திருநீறுகொண்டு தம் திருக்கையால் தடவுகின்றார். பொய்கையைப் போன்ற குளிர்ச்சி அப்பகுதியில் உண்டாயிற்று. ஆனால் சமணர்கள் மயிற்பீலி கைக்கொண்டு அவன் உடம்பின் இடப்பகுதியைத் தடவும் பொழுது வெப்பம் உண்டாயிற்று. அவ்வெப்பம் தீயாகச் சமணர்களையும்

தீண்டியது. எனவே அவர்கள் சற்று ஒதுங்கி நிற்கலாயினர். சமணர் அவ்வாறு ஒதுங்கிநின்ற செயலைச் சேக்கிழார்.

"........தீத்தம்மை
எறியமா சுடலுங் கன்றி அருகுவிட்டேற நிற்பார்
அறிவுடை யாரை யொத்தார் அறிவிலா நெறியில் நின்றார்"

என்கிறார். 11

## சுந்தரர் துன்புறுதல் - அன்பிலாதவர் துன்புறுதல்:

சிவபெருமானிடம் அன்பிலாதவர் துயருறுவார் என்ற கருத்துடையார் ஆசிரியர் என்று தெரிகிறது. பரவையாரைத் தமக்கு மணம் செய்விக்கும்படி சுந்தரர் இறைவரிடம், "நீரே அல்லால் யார் என் துய்ரம் அறிவார், உம்மிடம் அன்பில்லாதவர்போல் யானும் துன்புறுவேனோ" என்று கேட்கிறார். [12] இவ்வாறு சுந்தரர் மொழியை அமைக்கிறார் ஆசிரியர்.

## கங்குல் - மேலார்:

திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தில், இரவு வருவதைத் குறிப்பிடும் சேக்கிழார், "மேலார் போல் கங்குல்வர" என்கிறார். [13] இறைவரை வணங்காதார் மீது ஆசிரியருக்குள்ள வெறுப்பின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி உள்ளது.

## மாலைப்பொழுது - வடுகக்கருநாட மன்னன்:

மூர்த்திநாயனார் புராணத்தில் வடுகக்கருநாடர் மன்னன் இறந்த செய்தியை ஆசிரியர் கூறுகிறார். அவனை "முழுதும் பழுதேபுரி மூர்க்கன்" என்கிறார், சேக்கிழார். அவன் இறந்தபொழுது அவனுடைய மனைவியரும், சுற்றமும் அழுது புலம்பினர். கதிரவன் மறைந்ததனால் மாலைப்பொழுது புலர்வுற்றது. இதைக் குறிப்பிடும்பொழுது, "மற்றவன் அன்னமாலைப்பொழுதும் புலர்வுற்றது" என்று கூறுகிறார். மாலைப்பொழுதின் மயக்க நிலையை இவ்வாறு அவர் குறிப்பிடுகிறார். [14]

## கொடிகள் - அமணர் புத்தர்:

கலியநாயனார் புராணத்தில் திருஒற்றியூர் நகரின் சிறப்பைக் கூறுகிறார் ஆசிரியர். "பீடுகெழும் பெருந்தெருக்களில் மாளிகைகளின் மீது பறக்கும் கொடிகள் ஆகாயவெளி என ஒன்று இல்லை என்று அமணர்களும் புத்தர்களும் மெய்யை மறைத்துக் கூறுவதுபோல் வானத்தை மறைத்துக்கொண்டிருந்தன என்கிறார்.[15] உண்மையை மறைத்துப் பேசுகின்ற அமணர்களை, புத்தர்களை ஆசிரியர் வெறுக்கிறார் என்பதை இம்மக்கள் உருக்காட்சி காட்டுகிறது.

## இறையருள் பெற்ற நாவரசர் - தவம்பெற்று மகிழ்ந்த வறியவன்:

நல்லூருக்கு வந்த நாவரசரிடம் "உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்" என்றுகூறி அவர் சென்னியிடைப் பாதமலர் சூட்டினார் சிவபெருமான். அப்பரடிகள் "நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார்" என்று அரியதொரு திருத்தாண்டகம் பாடிப்போற்றினார். மகிழ்ச்சிப்பெருக்கில் திளைத்தார். அவரது அவ்வானந்த நிலையைச் சேக்கிழார். "ஒழியாத தனம் பெற்றுவந்த வறியோன் போல மனந்தழைத்தார்" என்று குறிப்பிடுகின்றார். இறைவருடைய திருவருளைப் பெறுதற்காக ஏங்கிக்கிடந்தவர் நாவரசர் என்ற கருத்து படிப்பவர் மனத்தில் எழுகிறது. பிற மதத்திற்குத் தாம் சென்றமையை எண்ணிஎண்ணி மனம் புழுங்கியவர் அவர். தம்முடைய தலைமேல் திருவடி சூட்டுமாறு இறைவரை மிக விரும்பி வேண்டிக்கொண்டார். அவ்வேண்டுகோளை இறைவர் நிறைவேற்றினார். "ஒழியாத தனம்" என்பது இறைவர் திருவடியைக் குறிக்கும். நாவரசரின் முன்னைய வறியநிலையை எடுத்துக்காட்டும் வகையில் "தழைத்தார்" என்ற வினைச்சொல் உருக்காட்சி (Verbal image) ஆளப்பெற்றுள்ளமை காணத்தக்கது.[16] முன்பு வாடியிருந்த பயிர் தற்பொழுது தழைத்தது என்ற நிலை நினைத்தற்குரியது.

## நாவரசர் வருகை - அற்றவர்கள் அருநிதியம் பெற்றது:

அடுத்து நாவரசர் திங்களூரில் வாழ்ந்துவந்த அப்பூதியடிகளாரின் இல்லத்திற்கு வருகைபுரிந்தார். அவருடைய வருகையால் அவ்வருமறையோர் "அற்றவர்கள் அருநிதியம் பெற்றார்போல்" மகிழ்ந்தார்.[17] உள்ளம் களிகூர நாவரசர் முன்னின்று கூத்தாடி உற்ற விருப்புடன் ஓடினார் பாடினார். ஈண்டு அருநிதியமாக விளங்குபவர் நாவரசர். வறியவர்கள் பொருளைப்பெற்று மகிழ்கின்ற நிலையை உருக்காட்சியாக அப்பூதியடிகளார் இன்பநிலையை விளக்குவதற்காகப் பயன் படுத்துகிறார் ஆசிரியர். இறைவருடைய திருவடியும், நாயனார் நட்பும் முறையே ஒழியாத தனம், அருநிதியம் என்று குறிக்கப்படுகின்றன. இவ்வுருக்காட்சி இறைவரது திருவடிப் பெருமையையும் அடியாரின் நட்பின் மாண்பையும் சிறப்பித்துக் காட்டுகிறது. இறைவரது திருவடிப்பேறு நாவரசருக்கு ஒழியாத தனம் ஆயிற்று. அந்த நாவரசர் அப்பூதியடிகளாருக்கு அருநிதியம் ஆனார். நல்லவர் இணக்கம் பெறற்கரிய செல்வம் என்ற கருத்தை இவ்வுருக்காட்சியால் சேக்கிழார் விளக்குகிறார்.

## கன்னிப்பெண் - மறிகடலில் கலங்கவிழ்ந்தார்:

திருமருகல் என்னும் திருத்தலத்தில் இறைவரை வணங்கி வழிபட்ட சம்பந்தர், ஒரு மடத்தில் இரவு தங்கியிருந்தார். அவர் இருந்த மடத்திற்கு அருகிலிருந்த மற்றொரு மடத்தில் ஒரு வணிகன் அரவு தீண்டப்பெற்று மாண்டுக் கிடந்தான். அவன் அருகில் ஒரு கன்னிப்பெண் அழுதுகொண்டிருந்தாள். அவளுடைய தாய்மாமன் அவன். வைப்பூர் வணிகன் தாமன் என்பானின் ஏழாவது மகள் அவள். இறந்துகிடக்கும் வணிகன் தன் தமக்கை மகளை மணம்புரிந்துகொள்ள விரும்பினான்.வணிகனின் தமக்கையின் கணவனாகிய தாமன் அவனுக்குப் பெண் தருவதாகக் கூறித் தன் ஆறு பெண்களையும் வேறிடத்து மக்கட்கு மணம்செய்து வைத்து விட்டான். ஏமாற்றமடைந்த அவன் மைத்துனன் மிகவும் மனம் நொந்தமையைக் கண்டு அவன்மீது பரிவுகொண்ட ஏழாவது பெண் எவருக்கும் தெரியாமல் அவனுடன் புறப்பட்டு வந்தாள். அவர்கள் இருவரும் திருமருகலில் தங்கினார்கள். அவ்வாறு தங்கியிருந்தபொழுது அரவினால் தீண்டப்பெற்று அவன்

மாண்டான். தன் தந்தை, தாய், சுற்றம் ஆகிய அனைவரையும் துறந்து அவனே எல்லாம் என்று புறப்பட்டு வந்தாள் அப்பெண். அவனோ மாண்டுவிட்டான். அவளுடைய துயரை எவ்வாறு விளக்க முடியும்? இறைவரை நோக்கிப் பலவாறு வேண்டுகிறாள் . அவளுடைய புலம்பலைக் கேட்டு அம்மடத்திற்கு வந்தார் சம்பந்தர். அவளிடம் "பயப்படேல், நும்பருவரலும் பரிசும் பகர்வாய்" என்று கேட்கின்றார். அவள் அவர் திருவடிகளில் வீழ்ந்து தாங்கள் போந்ததுவும், புகுந்ததுவும் கூறினாள். அவள் கூற்றாக வரும் ஆசிரியர் பாடல் வருமாறு:

"மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான்
மறிகடலில் கலங்கவிழ்ந்தார் போல நின்றேன்
சுற்றத்தார் எனவந்து தோன்றி என்பால்
துயரமெலாம் நீங்கவருள் செய்தீர்..."

கலத்தை முழுதும் நம்பித்தான் கடலில் பயணம் செய்கின்றனர் மக்கள். அக்கலம் புயலாலோ, கற்பாறைகளின் தாக்குதலிலோ, வேறு காரணங்களினாலோ கவிழ்ந்தால் அம்மக்கள் நிலைமை எவ்வாறிருக்குமோ அத்தகைய நிலையில் அவள் இருந்தாள். வணிகக்குலப் பெண்ணின் கூற்றில் இவ்வாறு மக்கள் உருக்காட்சியை அமைத்தது சேக்கிழாரின் கவித்திறத்தின் மாண்பைக் காட்டுகிறது. படிப்பவர் மனத்தைத் தொடுகிறது இவ்வுருக்காட்சி மேலும் இது காதலனை இழந்து தவிக்கும் ஒரு தையலின் துயரைப் படம்பிடித்துக் காட்டுகிறது. படிப்பவர் கற்பனையைத் தூண்டுகிறது. 18 கிளர்ச்சியூட்டும் திறனுடன் இவ்வுருக்காட்சி விளங்குகிறது. "சுற்றத்தார்" என்பதும் மக்கள் உருக்காட்சியாக அமைந்துள்ளது. தாய், தந்தை, சுற்றத்தார் அனைவரையும் விட்டுவந்த அப்பெண்ணுக்குத் துன்பம் உற்றவிடத்து உதவ முன்வந்த சம்பந்தர் சுற்றத்தார்போல் விளங்கினார் என்பது சம்பந்தரின் அருள்திறத்தைக் காட்டுகிறது.

## பெருமிழலைக்குறும்பர் - கண்ணிற்கரியமணிகழிய வாழ்வோர்:

சுந்தரருடைய நாமத்தை நவின்ற நலத்தால் சித்திகள் பெற்றவர் பெருமிழலைக்குறும்பர். "சுந்தரர் திருக்கயிலைக்குச் செல்லும் நாளை எய்த யான் பிரிந்து வாழேன், யோகத்தால்

சிவனடியை இன்றே சென்றடைவேன்" என்கின்றார். சுந்தரரைத் தம் கண்மணியாகக் குறிப்பிடுகிறார் இவ்வடியார். அவரைப்பிரிந்து வாழ்வதை வெறுக்கிறார். "கண்ணிழந்த குருடனைப்போல வாழேன்" என்கின்றார் [19] குருடர் உருக்காட்சி ஆளப்பெற்றுள்ளது. சுந்தரரிடம் இவர் கொண்டிருந்த அன்பின் திறத்தை இவ்வுருக்காட்சி விளக்குகிறது.

## கங்குல் - பெண்:

"மாசற்ற சிந்தையுடைய வன்தொண்டராகிய சுந்தரரே ஒரு பெண்ணின்மேல் (பரவை) ஆர்வமுற்று வருந்தினால் வேறு எந்த ஆடவர்தாம் தப்பிப் பிழைப்பார்கள் என்று கேட்டு, இரவுப்பெண் சிரிக்கின்றாள்" என்கின்றார் ஆசிரியர். [20] காதலால் வருந்தும் ஓர் இளைஞரைப் பார்த்து நகைப்புடன் சிரிக்கின்ற ஒரு பெண்ணின் தோற்றத்தைப் படிப்பவர் சிந்தையில் பதிக்கிறார் ஆசிரியர். வியப்புடன் வினவும் பெண்ணின் சிரிப்பாக இரவின் நிலவுத்தோற்றத்தைக் குறிப்பிடுகிறார். முருகியற்சுவை பயப்பதாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

## காவிரி - செவிலி;

ஆசிரியர் சேக்கிழார் தாய்மையின் மாண்பைப் பல இடங்களில் உவமைகளில் வைத்துப் போற்றுகிறார். "செய்ய பூமகட்குநற் செவிலி போன்றது" என்று காவிரியின் சிறப்பை இயம்புகின்றார். [21] எண்ணக்கோவையுடன் கூடிய, உருக்காட்சி இது. ஒரு செவிலித்தாய் எவ்வெவ்வகையில் தலைவிக்கு உதவுகின்றாள் என்பதைச் சிந்தித்துப் பார்ப்போர்க்குப் பொன்னியின் பெருமை நினைவில் எழலாம். பூமியாகிய பெண்மைக்குச் செவிலித்தாய் போல இன்பதுன்பங்களில் பங்குபெறுகிறது காவிரி என்பது ஆசிரியர் கருத்து. தலைவியின் நலத்தைப் பொன்னேபோலப் போற்றிக் காப்பவள் செவிலி. அவள் வாழ்வில் நிறையப் பங்குபெறுபவள் செவிலி, பூமியின் வளத்திற்கு உதவுவது காவிரி, அதன்பொலிவுக்குக் காரணமானது காவிரி, சோழநாட்டில் அமைச்சராக-விளங்கிய சேக்கிழார் அதன் சிறப்பை நன்கு உணர்ந்த நிலையில் இவ்வுருக்காட்சியைப் படைத்துள்ளார் எனல் பொருந்தும்.

"செய்யபூமகள்" என்று சோழநாட்டைக் குறிப்பிடுகிறார் -சேக்கிழார். செம்மை நலம் சான்றதொரு பெண்ணாகச் சோழநாட்டைக் கருதுகின்றார். இத்தகைய பெண்ணிற்குச் செவிலித்தாயாகக் காவிரியாற்றைக் குறிக்கின்றார். சோழநாடு என்னும் பெண்ணின் அகப்புற வளர்ச்சிக்கு மிகவும் உதவுகிறாள் காவிரி. சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெறும் தலைவி, அவளை வளர்க்கும் செவிலித்தாய் என்ற பாத்திரங்களை நினைவிற்கொண்டு இவ்வுருக்காட்சியைப் படைத்துள்ளார் ஆசிரியர் எனலாம்.

## கடவுள் - தாய்:

பெரியபுராணத்தில் நான்கு இடங்களில் இறைவர் தாயாகக் குறிக்கப்படுகிறார். தடுத்தாட்கொண்ட புராணத்தில், சுந்தரர் இறைவரைப் பித்தா பிறைசூடி எனத்தொடங்கும் பதிகத்தில் பாடிப் பரவுகின்றமையை ஆசிரியர் குறிப்பிடும் பொழுது இறைவரை, "மெய்த்தாயினும் இனியான்" என்று கூறுகின்றார். "தாயின் நல்ல பெருங்கருணை அடியார்களுக்குத் தண்ணளியும்" என்ற தொடர் திருநீலகண்ட யாழ்ப்பாணர் புராணத்தில் வருகிறது. இறைவரின் பேரருள் திறம் இவ்வாறு கூறப்படுகிறது.

"எவ்வுயிர்க்கும் தாயானாயை" என்றும், "தாயினும் இனிய தங்கள் தம்பிரானைக் கண்டார்" என்றும் திருஞானசம்பந்தர் புராணத்துள் இறைவர் குறிக்கப்படுகின்றார்.[22]

## பாலி - தாய்:

திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தில் தொண்டை நாட்டின் வளம் கூறப்படுகிறது. அந்நாட்டிற்குரிய பாலியாற்றின் பெருமை ஆசிரியரால் போற்றப்படுகிறது.

"பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணல்திடர் பிசைந்து கைவரு—
வெள்ள நீர் இருமருங் குங்கால் வழிமிதந் தேறிப்
பள்ள நீர்வயல் பருமடை உடைப்பது பாலி"

என்பது சேக்கிழார் பாடல்[23]

பாலியாற்றில் நீர் மற்ற ஆறுகளில் செல்வதுபோல் இழிந்து செல்வதில்லை. மள்ளர்கள் அதன் மேற்பரப்பான மணல்திடர்களைப் பிசைந்து கைகளினால் வருடினால் நீர் சுரந்து மேலேவரும். வெள்ளம்போல் அந்நீர் பெருகிக் கால்களாகப் பிரிந்து பள்ளங்களில் உள்ள நீண்ட வயல்களில் பெரிய மடைகளை உடைக்கும். பாலியாற்றின் அத்தகைய சிறப்பை ஆசிரியர் சேயின் தளிர்க்கைகள் தடவுவதால் தாய்முலை சுரக்கின்ற பாங்கினுக்கு ஒப்பிடுகிறார். தாய்மையின் மாண்பைப் போற்றும் ஆசிரியர் நெஞ்சத்தை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. தாய் உருக்காட்சி பொருத்தமாக ஆளப்பட்டுள்ளது.

## மலர்க்கொம்பு - வரவேற்பாளர்:

திருஞானசம்பந்தர் தில்லைக்கு வருகின்றார். அவ்வூர் எல்லையில் மயில்கள் களித்தாடி வரவேற்கின்றன. குளிர்ந்த காற்று அங்கு வந்து உலவி முன் பணிந்து எதிர் கொள்கிறது. அத்துடன் வரும் வண்டுகள் ஆர்க்கின்றன. செம்மைநிறமுடைய தளிர்களின் ஒளி திகழ, இருபுறங்களிலும் சூழைகள் ஆட அலராகிய முகத்துடன் மலர்ச்சோலைகளின் கொம்பு ஆடுகிறது. கொம்பரைப் பெண்ணாகவும், அதிலுள்ள மலரை முகமாகவும், இலைகளைக் குழைகளாகவும், தளிர்களை மேனிநிறமாகவும், கண்டு காட்டுகிறார் ஆசிரியர். மக்கள் உருக்காட்சி இங்கு ஆளப்பெற்றுள்ளது. முருகியல் உணர்ச்சியும், பக்திச்சுவையும் கலந்து விளங்குவது நினைத்தற்குரியது. சான்றோரை எதிர்கொண்டு வரவேற்கும் மரபு குறிப்பிடப்பட்டுள்ளது.[24] சம்பந்தரைப் போற்றிப் பரவுவதில் ஆசிரியருக்குள்ள ஆர்வத்தை இவ்வுருக்காட்சி வெளிப்படுத்துகிறது.

## பொய்கை - வரவேற்பாளர்:

"புனற்பொய்கை தனது தாமரை மொட்டுக்களாகிய கரங்களை குவித்துக் கும்பிட்டு மலர்ந்த தாமரைகளாகிய முகங்களைக் காட்டி, பறவை ஒலிகளால் வாழ்த்துரை கூறி, இளங்களிறு போன்ற சம்பந்தரை வரவேற்றது" என்று சேக்கிழார் கூறுகிறார். கற்பனைச் செறிவுடன் கூடிய மக்கள் உருக்காட்சியாக இது விளங்குகிறது. பொய்கையை ஒரு வரவேற்பாளராகவே காண்கிறார் சேக்கிழார். முகமலர்ச்சியுடன் கரங்குவித்து வாழ்த்துக்கூறி வரவேற்கும் ஒருவராகப் பொய்கை ஆசிரியருக்குத்

தோற்றமளிக்கிறது. இவ்வருணனை பெரியோரை வரவேற்கும் உயர்வினைப் படம் பிடித்துக் காட்டுகிறது. சம்பந்தரிடம் ஆசிரியர் கொண்டுள்ள அன்பை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.[25]

## மாருதம் - வரவேற்பாளர்:

மதுரைக்குச் சம்பந்தர் வந்தபொழுது செந்தமிழ் மாருதம் அவரை எதிர்கொண்டு வரவேற்றது எனச் சேக்கிழார் வருணிக்கிறார்.[26]

## நெற்பயிர்கள் - வரவேற்பாளர்:

குளிர்ந்த மென்மையான காற்றினால் மணம்பொருந்திய மலர்களின் நுண்ணிய பூந்தாதுக்களாகிய சுண்ணம் தூவித் தழைத்தும் பொங்கும் எழில்முகம் செய்து சம்பந்தரை நெற்பயிர்கள் வணங்கின. வாசனைத்துகள் தூவியும் எழில் முகஞ்செய்தும் வணங்கி வரவேற்பவரைப் படிப்பவர் மனத்துள் தோன்றச் செய்கிறது இங்கு ஆளப்பெற்றுள்ள மக்கள் உருக்காட்சி.[27]

## நறும்பூகம் - மகிழ்ச்சியுடன் ஆடுபவர்:

தம்மால் போற்றப்படுபவர், தமக்கு மிகவும் நெருங்கிய நண்பர், உறவினர் ஆகியோர் வரக்கண்டு மகிழ்ச்சிகொண்டு மக்கள் ஆடுவது இயல்பு. இக்காட்சியை நினைவுபடுத்தும் வகையில் சம்பந்தரின் வரவுகண்டு குளிர்ந்த காற்றால் நறும்பூகங்கள் அசைந்தாடிய செய்தியை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். பலவாகிய கணுக்கள் என்னும் கண்களைப் பெற்ற பயனைப் பெற்றதாக எண்ணிச் சம்பந்தர் வரவினைக் கண்டு நறும்பூகங்கள் அசைந்து ஆடின என்கிறார் சேக்கிழார்.[28]

## நெடுவானம்- நுண் துகில் விதானிப்பவர்:

"சம்பந்தரை வரவேற்கும் பொருட்டு. தில்லைப்பதியில் வேதியர்கள் பயிலும் வேள்விகளில் சிவத்தன்மையை விளைக்கும் பயனையுடைய ஆகுதிகளினின்றும் எழும் செழும்புகையின் பரப்பு என்னும் உயர்ந்த நீலநிறமுள்ள நுண்ணிய துகிலினை நெடுவானம் மேற்கட்டியாக விரித்துக் கட்டியது" என்கிறார் சேக்கிழார்.[29]

## இறைவர் - இளம்புதல்வர்:

பெற்றோர்கள் தம் குழந்தையின் மீதுள்ள ஆசையாலும், அன்பு மேலிட்டாலும் அதன் கைகளைப் பிடித்து அசைப்பது, கன்னத்தைக் கிள்ளுவது, அடிப்பது, இறுக அணைத்துக்கொள்வது போன்ற வன்செயல்கள் செய்வது இயல்பு. குழந்தை அத்தகு வன்செயல்களைப் பொறுத்துக்கொள்ளுவதும் இயல்பு. இந்த அன்புக்காட்சியைக் கொண்டு ஆசிரியர் ஆண்டவனுக்கும், அடியாருக்கும் இடையே நிலவும் உறவை விளக்குகின்றார். சாக்கியநாயனார் சிவலிங்கத்தின்மீது கற்களை வீசுகின்ற செயல், பெற்றோரின் வன்செயல்களாகவும், ஆண்டவனின் பொறுமை, குழந்தைகளின் இன்பமாகவும், காட்டப்படுகின்றன. பெற்றோர், குழந்தை இணையுருக்காட்சி ஈண்டு ஆளப்பட்டுள்ளது.

"அகநிறைந்த பேருவகை அடங்காத ஆதரவால்
மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினால்
இகழ்வனவே செய்தாலும் இளம்புதல்வர்க் கின்பமே
நிகழுவது போலதற்கு நீள்சடையார் தாம்மகிழ்வார்"

என்பது சேக்கிழார் பாடல்.[30] மழலைச்செல்வத்திடம் ஆசிரியருக்குள்ள ஈடுபாடு நினைத்தற்குரியது.

## தொண்டர் - படைவீரர்:

"வஞ்சனையால் பாண்டியநாட்டில் இடம் பெற்றவராகிய எண்ணற்ற சமணர்கள் என்னும் பாவ இருஞ்சேனை இரிந்தோடுமாறு மண்ணுலகம் மட்டுமின்றி விண்ணுலகமும் செய்த புண்ணியத்தின் படையெழுச்சியைப்போல் சம்பந்தரும் அவர் தொண்டரும் மதுரைக்கு எழுந்தருளினார்கள்" என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். அரச உருக்காட்சியை எழுப்புகின்ற படை உருக்காட்சி, வரவிருக்கும் சமணரின் தோல்வியையும் சம்பந்தர் குழுவின் வெற்றியையும் படிப்பவர் மனத்துள் பதியச் செய்கிறது.[31]

## காமவேள் - வேடன்:

பூம்பாவையின் உரோமவல்லியை வருணிக்கும் பொழுது, காமவேளை வேடனாகக் குறிப்பிடுகிறார் சேக்கிழார்.[32]

## திண்ணனார் - உன்மத்தர்:

இறைவர் திருநயனத்திலிருந்து வந்த குருதியைத் தடுத்து நிறுத்தவேண்டித் தம் கண்முதலைத் தோண்டி எடுத்துக் கையில் வாங்கி முதல்வர் கண்ணில் அப்பினார் திண்ணனார். செங்குருதி நின்றது. இதைக் கண்ணுற்ற திண்ணனார் நிலத்திலிருந்து உயரப்பாய்ந்து குதித்தார். தோள்களைக் கொட்டினார். கூத்தாடினார். தாம் செய்த செயலைத் தாமே போற்றிக்கொண்டார். பெருங்களிப்புடையராயினமையால் உன்மத்தர் போன்ற நிலையை அடைந்தார். உன்மத்தர் உருக்காட்சி திண்ணனாரின் அன்பின் திறத்தை வெளிப்படுத்துகிறது. [33]

## பகலோன் எழுச்சி - சம்பந்தர் அவதாரம்:

"புன்னெறிச் சமயமாகிய அரந்தைவல்லிருள் அகல்வதற்கு ஞானசம்பந்தர் அவதரித்தாற்போன்று பரந்தபேரிருள் நீங்க வந்து எழுந்தனன் பகலோன்" என்று ஆசிரியர் வருணிக்கிறார். பகலோனின் உதயம் சம்பந்தரின் அவதாரமாக ஆசிரியருக்குத் தோன்றுகிறது. திருஞானசம்பந்தர் புராணத்தின் தொடக்கத்தில் "சேமஉதயப்பரிதி" என்று சம்பந்தரைக் குறித்த ஆசிரியர், அப்புராண இறுதியில் பகலோன் சம்பந்தரைப் போல் தோன்றுவதாகக் குறிப்பது நயமுடைத்தாக உள்ளது. சேக்கிழார் சம்பந்தரிடம் கொண்டுள்ள அன்புணர்வின் திறத்தைக் காட்டுவதாக இவ்வுருக்காட்சி உள்ளது. படைப்பில் குறிப்பிடப்பெறும் சம்பந்தரை ஓர் உருக்காட்சியாக ஆசிரியர் படைத்தமை புதுமையுடையதாக உள்ளது. [34]

மக்கள் உருக்காட்சி சேக்கிழாரின் சமுதாய உணர்வை எடுத்துக்காட்டுகிறது. திருத்தொண்டர்களிடம் அவர் கொண்டுள்ள அன்புணர்ச்சியைத் தெள்ளத்தெளிவாகக் காட்டுகிறது. இவ்வுணர்ச்சியின் அடிப்படையில் எழுந்த உருக்காட்சிகள் அவரைப்பிற ஆசிரியர்களிடமிருந்து வேறு பிரித்துக் காட்டுகிறது. சோழமன்னன் அநபாயனிடம் அவருக்குள்ள பற்றும், நன்றி உணர்வும், செங்கோன்மையில் அவருக்குள்ள விருப்பும், கொடுங்கோன்மையில் அவருக்குள்ள வெறுப்பும் இவ்வுருக்காட்சியால் தெரியவருகின்றன. நெற்பயிர், வண்டு, ஆறு, காற்று, சந்திரகாந்தக்கல், இறைவர் திருமேனி என்பன

திருத்தொண்டர்களையும் அவர்தம் பண்பியல்புகளையும் ஆசிரியர் நெஞ்சத்தில் தோற்றுவிக்கும் பான்மை இவ்வுருக்காட்சி ஆய்வில் கண்டுணரப்பட்டது. சேக்கிழார் கற்பனையின் மனவியற்பாங்கு இவ்வுருக்காட்சியால் வெளிப்படுகிறது. இறைவர் திருமேனி மிக்கெழும் அன்பர்களின் அன்பின் விளைவு போன்றதென்றும், அரிவாட்டாயநாயனார் எடுத்துச்சென்ற செந்நெல் அரிசி அவருடைய மூளும் அன்புபோல் தூயது என்றும் சேக்கிழார் குறிக்கும் பகுதிகள் புதுமையும், ஆழமும், பக்திச்சுவையும் உடையனவாய் விளங்குகிறன்றன.[34அ]

"தொண்டர்சீர் பரவுவார்" எனச் சேக்கிழார் அழைக்கப்படுவதன் பொருத்தத்தை இவ்வுருக்காட்சியால் அறியலாம்.

## (ஆ) உடம்பு :

### உறுப்புகள் உருக்காட்சி:

சேக்கிழார் மனிதர்தம் உடம்பின் உறுப்புக்களை உருக்காட்சிகளாகப் படைத்து அடியார்தம் பெருமையையும், தொண்டார்வத்தையும், மகளிர் விழியழகையும், சோலையழகையும், பிறப்பு, ஆணவம் ஆகியவற்றையும், சமண சமயம் பற்றிய கருத்தையும் விளக்குகின்ற பான்மை புதுமையும் நயமும் பயக்கின்றது.

### கடலினுள் கல் மிதந்தது:

சமணசமயத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொண்ட நாவரசர் தமது தமக்கையார் ஆதரவால் மீண்டும் சைவசமயத்தில் சேர்ந்த செய்தியறிந்து சினம்கொண்ட சமணர்களின் சொற்கிணங்கப் பல்லவ வேந்தன்,

"தீங்குபுரிந் தவன்தன்னைச் சேமமுறக் கொடுபோகிப்
பாங்கொருகல் லிலணைத்துப் பாசம்பிணித் தோர்படகில்
வீங்கொலிவே லையில்எற்றி வீழ்த்துமின்"

என்றுவிடுத்தான். வினைமாக்கள் வேந்தன் ஆணைப்படி செய்தனர். "செப்பியவண் தமிழ்தன்னால் சிவன்

அஞ்செழுத்தைத் துதித்தார்" நாவரசர். "அப்பொழுது அவர்கட்டப்பட்டிருந்த கல் கடலினுள் தெப்பமென மிதந்தது. கயிறும் தப்பியது. கருணை நாவரசை வருணன் தனது அலைக் கரங்களால் தன் தலைமீது தாங்கினான். இவ்வாய்ப்புப் பெற அவன் முன்பு மாதவம் செய்துள்ளான்" சேக்கிழார் இவ்வாறு குறிப்பிடுகின்றார். 35 கடலை வருணனாகவும், அலைகளை அவன் கரங்கள் ஆகவும், மிதந்த கல்லை அவன் தலையாகவும் சேக்கிழார் கற்பனையில் கண்டுகூறுவது, புதுமைநயம் தருகிறது. நாவரசர்தம் பெருமையைப் படிப்பவர் மனத்துள் பதிவிக்கிறது. சேக்கிழார் நாவரசரிடம் கொண்டுள்ள அன்பினை எடுத்துக் காட்டுகிறது.

## நாவரசர், சம்பந்தர் - கண்ணிரண்டு:

சீகாழித்தலத்தில் நாவரசர், சம்பந்தரைச் சந்தித்தார். அவ்விரு நாயன்மாரும் சந்தித்துக்கொண்டது சைவசமய வரலாற்றில் முக்கியமானதொரு நிகழ்ச்சியாக கருதும் சேக்கிழார். "பொருட்சமய முதற்சைவநெறிதான் பெற்ற புண்ணியக்கண் இரண்டினைப்போல் நாவரசரும் சம்பந்தரும் விளங்கினோர்கள்" எனக் குறிப்பதில் ஆர்வம் காட்டுகிறார். 36 பரசமயங்களாகச் சைவநெறியினர் கருதும் சமணசமயம், புத்தசமயம் ஆகியவற்றின் பிடியிலிருந்து மக்களை விடுவித்து மீண்டும் சைவநெறியில் சேர்ந்திடச் செய்யும் திருத்தொண்டினை இவ்விருவரும் சிறப்பாகச் செய்தமையால் ஆசிரியர் அவர்களை இவ்வாறு குறிப்பிட்டுப் போற்றுகின்றார். மனித உடம்பில் கண் மிகவும் இன்றியமையாத உறுப்பு. மக்கள் தம் குழந்தைகளை அன்பாக அழைக்கும்பொழுது தங்கள் கண்ணாகவும் கண்ணினுள் இருக்கும் மணியாகவும் குறிப்பது இவண் நினைத்தற்குரியது. சைவசமய நெறியினருக்கு இவ்விரு பெருமக்களும் புண்ணியக்கண் இரண்டு போன்றவர்கள் எனச் சேக்கிழார் போற்றுகின்றார். சைவசமய மக்களை வழிநடத்திச்சென்ற முதன்மை பெற்றிருந்த இவ்விரு நாயன்மார்களின் பெருமையைக் குறிப்பதாக கண் உருக்காட்சி அமைந்துள்ளது. நாயன்மார்களின் பெருமையைப் போற்றுவதில் சேக்கிழார் கொண்டுள்ள ஆர்வத்தின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

**சுந்தரர் - கண்ணின் கரியமணி:**

பெருமிழலைக் குறும்ப நாயனார் இறைவர் திருவடியைத் தம் நெஞ்சில் இடையறாமல் நினைந்து நாளும் சிவனடியார்க்குத் தொண்டாற்றி வந்தார். திருத்தொண்டத் தொகையை அளித்த சுந்தரர் தம் பாதத்தை நினைக்கும் நியமத்தை மேற்கொண்டு வாழ்ந்திருந்தார். ஆரூரர்தம் நாமத்தை இடைவிடாது நவின்றமையினால் அவருக்குச் சித்திகள் கூடின. கொடுங் கோளூரினின்றும் சுந்தரர் இறையருளால் கயிலைக்குச் செல்லவிருக்கும் நிலையை தெளிய உணர்ந்த இந்நாயனார், "என் தொண்டரைப் பிரிந்து, கண்ணிற் கரியமணிகழிய வாழ்வோர் போல வாழேன், இன்றே என் யோகநெறியால் சிவன்தாள் சென்றடைவேன்" என எண்ணினார். தம் ஆற்றலால் தாம் எண்ணியவாறே சிவன்தாளை அடைந்தார்.[37]

பெருமிழலைக் குறும்ப நாயனார் சுந்தரரைக் கண்ணின் மணிபோல் எண்ணிப் போற்றிய அன்பின் திறம் நினைத்தற்குரியது. கண்ணிற்கரியமணி என்ற உருக்காட்சி சுந்தரரிடம் நாயனார் கொண்டுள்ள ஈடுபாட்டைக் காட்சிப்படுத்துகிறது. ஓர் அடியவருக்கு மற்றோர் அடியவர் கண்மணி போன்று தோன்றுவது பக்தியுணர்வைக் காட்டுகிறது.

**சமணம் - ஊனம்:**

மனிதர்தம் உறுப்புக்கள் ஆகிய கைகள், கால்கள் பிறப்பிலேயே செப்பமுற அமையாமற் போவதுண்டு. மக்கள் தமது வாழ்க்கையின் இடையே எதிர்பாராத விபத்துக்களால் இத்தகைய உறுப்புக்களை இழப்பதுண்டு. அல்லது இவ்வுறுப்புக்களுக்கு ஊறுகள் விளைவதுண்டு. இவ்வாறு பிறப்பினாலோ விபத்தினாலோ உறுப்புக்கள் குறைபாடுடையனவாக இருப்பதை ஊனம் என்று குறிப்பர். ஊனம் என்பது குறைபாடு என்ற பொருளைத் தருகிறது. உடலில் காணப்பெறும் இவ்வூனம் என்பதை உருக்காட்சியாகப் படைக்கிறார் சேக்கிழார். சமுதாயம் என்பதை உடலாகக் கொண்டால், சமண சமயம் என்பதை அதன் ஊனமாகக் கொள்ளலாம் எனச் சேக்கிழார் கருதுகிறார். சமணசமயத்தைச் சமுதாயத்தின் ஊனமாகக் காண்கிறது அவரது சைவப்பற்றுடைய நெஞ்சம், அவரது சைவசமய ஈடுபாட்டைக்

காட்டுவதுடன் சமண சமயத்தினைப்பற்றி அவர் கொண்டுள்ள கருத்தையும் காட்டுகிறது. ஊனம் என்னும் உருக்காட்சியைச் சமணசமயம் பற்றிய அவரது உணர்ச்சியின் வெளிப்பாடாகக் கருதலாம்.

"மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
ஊனமாஞ் சமணை நீக்கி உலகெலாம் உய்யக் கொண்ட
ஞானசம் பந்தர் வாய்மை ஞானத்தில் பெருகி யோங்கத்
தேனலர் கொன்றை யார்தம் திருநெறி நடந்த தன்றே" 38

என்பது சேக்கிழார் மொழி. உலகம் உய்வதற்குத் தடையாக இருந்தது சமணசமயம் என்பதும் அந்தச் சமயமாகிய ஊனத்தைச் சம்பந்தர் நீக்கினார் என்பதும் ஆசிரியர் குறிப்பிடும் கருத்து.

## ஏழுபிறப்பு - முடங்குகூன்:

வம்பறாவரிவண்டுச் சருக்கத்தின் முடிவில் உள்ள கூற்றுவ நாயனார் புராணத்தின் இறுதிப்பாடலில் சேக்கிழார் திருத்தொண்டத் தொகையைப் பாடிய சுந்தரரைப் போற்றுகின்றார். "தமக்கு முடியில் சூடுவதற்கு மாலையும் உண்ணுவதற்குத் தாம்பூலமும் கொடுத்த கூனனுக்கும் குருடனுக்கும் இறைவர் தம்பொருட்டுப் பரவையாரிடம் தூது சென்றுவந்த திருநாளில் சுந்தரர், முறையே முதுகின் வளைவையும், விழிப்பார்வையற்ற நிலையையும் நீக்கியருளினார். அத்தகைய சுந்தரர்தம் மலர்ப்பாதத்தை வணங்கி நானும் எனது எழுபிறப்பின் முடங்கு கூனைத் தீர்க்கின்றேன்" என்று குறிப்பிடுகின்றார். 39 கருவில் மனித உடல் முடங்கிக் கிடத்தலாகிய நிலை படிப்பவர் நினைவில் எழுகிறது. பிறப்பற்ற பெருநிலை எய்துவதில் ஆசிரியருக்குள்ள ஆர்வமும், சுந்தரர்பால் அவர் கொண்டுள்ள அன்புணர்வும் இவ்வுருக்காட்சியால் வெளிப்படுகின்றன.

மனித உடல் உறுப்புக்களையும், அவற்றின் குறைபாடுகளாகிய கூன், ஊனம் ஆகியவற்றையும் சேக்கிழார் உருக் காட்சிகளாகப் படைத்துள்ளமை பொருத்தமுற அமைந்துள்ளது.

## வினைச்சொல் உருக்காட்சி:

சேக்கிழார் தமது படைப்பில் வினைச் சொற்களைக் கொண்டு உருக்காட்சியைப் படைத்துப் பொருளை விளக்கும் உத்தியை மேற்கொள்கிறார். இயக்கவினைச்சொற்களாக இவை விளங்குவது குறிப்பிடத்தக்கது. பெண்ணின் அழகு, காதல் உணர்வு, இறையுணர்வு, தத்துவ உணர்வு, பரசமயத்தை விட்டு விலகிவிடுதல். பெண்ணடியார் ஒருவரின் பண்புநலன், ஆகியவற்றுடன் தொடர்புடையதாக வினைச்சொல் உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. சேக்கிழார்தம் இறையுணர்வு, தத்துவ உணர்வு ஆகியவற்றின் வெளிப்பாடாக அமைந்து இவ்வுருக்காட்சி அவரது தனிச்சிறப்பைத் தெரிவிக்கிறது.

## பரவையார் பொற்பின் சிறப்பு - அள்ளுதற்கு அமைதல்:

கலம் நிறைய உள்ள சோற்றை எடுத்துக் கொடுப்பதை அள்ளிக் கொடுத்தல் என்பர். குவிக்கப் பெற்றிருக்கும் நெல்லை எடுப்பது அள்ளி எடுத்தல் எனப்படும். எனவே ஒரு பொருள் அதிகம் இருந்தால் அள்ளிக்கொள்ளவியலும் என்பது பெறப்படுகிறது. மேலும், அள்ளிக் கொள்வதாகிய செயல் ஒருவரின் ஆர்வத்தையும் குறிக்கிறது. 'அள்ளுதல்' என்ற சொல் பொருளொன்றின் மிகுதிப்பாட்டையும் அதைக் தமக்கென எடுத்துக்கொள்ள விழையும் ஒருவரின் ஆர்வத்தையும் உடன் தெரிவிப்பதாக உள்ளது. சேக்கிழார் பரவையார்தம் பேரெழிலைச் சிறப்பித்துக் காட்டுதற்கும், அப்பேரெழிலைத் தாம் கொள்ள வேண்டும் என அவாவும் சுந்தரர்தம் விருப்பையும் ஒரேநேரத்தில் காட்டுதற்கு ம் 'அள்ளுதல்' என்ற வினைச் சொல்லை ஆள்கிறார்.

"பிள்ளைமைப் பருவமும் அதற்கடுத்த பேதைப்பருவமும் நீங்கி மங்கைப்பருவம் அடைந்திருந்த பரவையாரின் அழகு அள்ளுதற்கமைந்தவகையில் இருந்தது" என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். 40 பரவையாரின் அழகு சுந்தரரின் நெஞ்சத்தைக் கவர்ந்துவிட்டது. அவருக்குக் காதல் உணர்வு தோன்றுவதற்குக் காரணமாகியது.

## சுந்தரர் அழகு பரவையார் மனதைக் கவர்ந்தமை:

### மனத்திருப்பம்:

"திரித்த" என்ற சொல்லை உருக்காட்சியாகச் சேக்கிழார் ஆள்கிறார். 'திரி' என்பது வேர்ச்சொல். திரித்தான், திரிந்தான் என்பன போன்ற சொற்கள் இதிலிருந்து தோன்றுபவை. திரித்தல் என்ற செயல் ஒருபொருளின் இயல்பான நிலையை மாற்றியமைப்பது. திரிதல் ஒருபொருள் தன் இயல்பான நிலையிலிருந்து மாறுபாடு அடைவது. 'பால் திரிந்தது' என்றால் பிரையிடப்பட்ட பால் தயிராகத் திரிவதை குறிக்கும். 'திரிந்தான்' எனின் தனக்குரிய ஒரு நிலையான இயக்கத்தில் இருந்து மாறுபட்டு அங்குமிங்கும் குறிக்கோளில்லாமல் அலைந்தான் என்பதாகக் கொள்ளலம். 'திரிந்தான்', 'திரித்துச் சொன்னான்' என்பன போன்ற சொற்கள் உண்மைச் செய்தியைக் கூட்டியோ, குறைத்தோ, மாற்றியோ பிறருக்குக் கூறுவதைக் குறிக்கின்றன. பரவையார் தமது மனம் சுந்தரரால் சலனமடைந்ததை எண்ணித் தம் தோழியிடம் "எனது மனத்தைத் திரித்த இவர் யாவர்?" என வினவுகின்றார். 'திரித்த' என்ற வினைச்சொல்லைப் பொருத்தமான உருக்காட்சியாகப் பயன்படுத்திப் பரவையாருக்குத் தோன்றிய காதல் உணர்வை ஆசிரியர் காட்சிப்படுத்துவது நினைத்தற்குரியது.[41]

### துன்பமுறுதல் - அழுந்துதல்:

திருநாவுக்கரசர் தமது மிக இளமைப்பருவத்தில் தந்தையையும் தாயையும் இழந்தார். தமக்கையார் திலகவதியார் ஒருவர்தாம் அவரைப் புரக்கும் நிலையில் இருந்தார். தந்தை தாய் ஆகிய இருவரையும் இழந்து துன்புற்ற நாவரசர்தம் அவலநிலையைச் சேக்கிழார், "இடரின் அழுந்தினார்" என்று குறிப்பிடுகிறார். துன்பத்தில் ஆழ்ந்து விடுகின்ற நிலையை ஆசிரியர் "அழுந்துதல்" என்ற சொல்லால் காட்சிப்படுத்துகின்றார். ஆழமான உளைச்சேற்றில் அகப்பட்ட ஒருவர் அழுந்திப்போகிற காட்சியை நினைவில் எழுப்புகிறது இச்சொல்.[42]

## பற்றுதல், எறிதல்:

ஒருவர் தமக்கு விருப்பமானதைத் தம்மிடம் வைத்துக்கொண்டு தமக்கு வேண்டாததும், சுமையானதும், துன்பம் தருவதுமான பொருளை எறிந்துவிடுவது உலகில் காணக்கூடிய செயல் ஆகும். பருப்பொருளாக உள்ள ஒன்றை வீசி எறிவது காட்சிப் புலனுக்குரியது. சேக்கிழார் விறன்மிண்ட நாயனாரின் சிவப்பற்றினைச் சிறப்பிக்கும் வகையில், "சிவனார் செய்ய கழல்பற்றி எப்பற்றினையும் அற எறிவார்" என்று குறிப்பிடு கின்றார்.[43] நாயனார் சிவனாரின் திருவடியைப் பெரிதும் விரும்பிப் பற்றிக் கொள்வதாகவும் இறைப்பற்றிற்குத் தடையாக உள்ள உலகப்பற்றை எறிவதாகவும் ஆசிரியர் குறிக்கின்றார். இறைப்பற்று, உலகப்பற்று என்பன பருப்பொருள்களைப் போல் ஆசிரியரால், 'பற்றுதல்', 'எறிதல்' என்ற சொற்களால் காட்டப்படுகின்றன. நாயனார்தம் இறையுணர்வைத் தெள்ளிதின் உணர்த்தும் உருக்காட்சிளாக இவை விளங்குகின்றன.

## பரசமயத்தினின்றும் விடுபெறுதல் - அறுத்தல்:

விலங்கு அல்லது மனிதன் தன்னைப் பிணித்திருக்கும் கயிற்றை அறுத்துவிட்டு வெளிவரும் செயலை உருக்காட்சியாகப் படைக்கிறார் ஆசிரியர். சமணம், புத்தம் ஆகிய சமயங்களைச் சைவ உலகினர் பரசமயம் எனக்கருதுவர். நாவரசர் சமண சமயத்தினை விட்டு நீங்கிய பான்மையைப் போற்றும் ஆசிரியர் "பரசமயப் பற்றறுத்த பான்மையினார்" என்கிறார். 44 நாவரசர் பரசமயப்பற்று என்ற கயிற்றை அறுத்துவிட்டு வெளிவந்த திறன் இவ்வாறு போற்றப்படுகிறது . மேற்கொண்டு இருந்த ஒரு கொள்கையிலிருந்து ஒருவர் முழுக்கவும் விலகிக் கொள்வதை, "அறுத்துக் கொள்ளுதல்" என்ற தொடரால் இயம்புவதைப் பேச்சு வழக்கில் காணலம். "அறுத்தல்" என்னும் இச்சொல்லைப் பொருத்தமுற உருக்காட்சியாக ஆசிரியர் ஆள்கிறார். "இங்கே என்வினையை அறுத்திட்டு எனையாளும் கங்கா நாயகனே" எனச் சுந்தரர் மொழியினிலும் 45 "பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே என்னும் திருவாசகத் தொடரிலும் ஆளப்பட்டுள்ள "அறுத்தல்" என்ற சொல்லாட்சி மரபு இவண் நினைத்தற்குரியது. சேக்கிழார் தமக்குமுன் வாழ்ந்த

அருளாளர்கள் ஆண்டுள்ள சொற்களைப் பொருத்தமுறத் தம்படைப்பில் ஆள்வது காணத்தக்கது.

பொருட்பற்றை விடுதல் - புரையற எறிதல்:

பொன்னி நாட்டுத் திருநகராகிய நாகப்பட்டினத்தில் வாழ்ந்த நுளையர் குலத் தலைவரென விளங்கிய அதிபத்த நாயனார் என்பார், "வலைவளைத்து மீன்படுத்து முன்குவிக்கும் ஓங்கு பல்குவை உலப்பில உடையராய் உயர்ந்திருந்தார். நட்டமாடிய நம்பராகிய இறைவருக்கென வலைமுகந்து பட்ட மீன்களில் ஒரு தலைமீனை விடாத அன்புடன் கடலில் விட்டுவரும் செயலை நாளும் செய்துவந்தார். அநேகநாள் ஒரு மீனே வலையில்பட்டது. அம்மீனையும் தமது நோன்பிற்கிணங்கக் கடலில் விட்டார். வளம் குறைந்தது. வறுமை உண்டாயிற்று. நாயனாரின் அன்பெனும் அமுதுண்ணும் நோக்குடன் இறைவர் ஒருநாள் செஞ்சுடர் உதித்தென உலகெலாம் வியக்குமாறு அவரது வலையில் மீனொன்று படுமாறு செய்தார். பொன்திரள்சுடர் நவமணி பொலிந்த அம்மீனையும் "இறைவர் பொற்கழல் சேர்கெனக் கடலில் விடுத்தார் நாயனார்". இத்தொண்டினைப் போற்றும் வகையில் சேக்கிழார்.

"அகில லோக மும்பொருள்மு தற்றாமெனு மளவில்
புகலுமப்பெ ரும்பற்றினைப் புரையற எறிந்த
இகலில் மெய்த் திருத்தொண்டர் முனிறைவர் தாம்விடைமேல்
முகில்விசும்பி டைஅணைந்தனர் பொழிந்தனர் முகைப்பூ"

எனக்குறிப்பிடுகின்றார். 46.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு"

என்னும் வள்ளுவர். 47 மொழியை நினைப்பிக்கும் பாங்கில் நாயனார் தொண்டு விளங்குவது காணத்தக்கது. "எறிதல்" என்ற சொல்லாட்சி நாயனார்தம் பொருள் பற்றின்மையைத் தெள்ளிதின் உணர்த்தும் உருக்காட்சியாக உள்ளது.

வினையின் பிடியிலிருந்து விடுவிக்கப் பெறுதல் - குளத்திலிருந்து எடுக்கப்படுதல்:

நீந்தத் தெரியாமல் குளத்தில் மூழ்க இருப்பவரை மற்றொருவர் கைகொடுத்துக் கரையேறச் செய்யும் நிகழ்ச்சியினை உருக்காட்சியாகப் படைக்கிறார் சேக்கிழார். முதுகுன்றத்து இறைவர் தமக்குத் தந்த பொன்னை மணிமுத்தா நதியில் இட்டு வந்த சுந்தரர் அதனை ஆரூர்க்குளத்தில் எடுத்தாற்போல் தம்மை வினையின் குறிவாய் நின்று எடுத்தார் எனச் சேக்கிழார் நன்றிப் பெருக்குடன் குறிப்பிடுகின்றார். 48 "எடுத்தல்" என்பது உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது. சேக்கிழார் சுந்தரரிடம் கொண்டுள்ள அன்பினைக்காட்ட வல்லதாக உள்ளது இவ்வுருக்காட்சி. நாயனார்தம் புராணச்செய்தியைக் கொண்டு தத்துவ விளக்கம் செய்யும் இப்போக்கு சேக்கிழாரின் தனிச்சிறப்பைக் காட்டுகிறது. சமய தத்துவச் சிந்தனையுடன் கூடிய கற்பனை அவரிடம் இருப்பதை இவ்வகையில் காணமுடிகிறது.

## சிவன் கழலிற்செறிவு - தெள்ளிவடித்தறிந்த பொருள்:

நெல். உளுந்து, பயறு போன்ற தானிய வகைகளைத் தூசு நீக்கி எடுத்துக் கொள்ளும் செயலை நேரிற்கண்ட அனுபவம் உடையவர் சேக்கிழார் எனலாம். முறம், சல்லடை போன்றவற்றைப் பயன்கொண்டு மக்கள் புடைத்தல், தெள்ளுதல், வடித்தல் ஆகிய செயல்களால் பொருள்களுடன் கலந்திருக்கும் கல், மண் போன்ற தூசுகளை நீக்குவர். இச்செயல்களை உருக்காட்சியாகப் படைத்துச் சேக்கிழார், "தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன்கழலிற் செறிவு" என்ற தொடரை அமைக்கிறார். 49 சிவன்கழலிற் செறிவு ஒன்றே மக்கள் கொள்ளவேண்டிய பொருள், பிறவெல்லாம் தெள்ளி வடித்தலால் நீக்கப்பட வேண்டுவன என்பது கருத்து. தாமாகவே சிந்தனை செய்து இறையுணர்வு பெறுதலில் முனைப்பு மேற்கொள்ள வேண்டும் என்பது ஆசிரியர் தரும் கருத்துரை. ஆசிரியர்தம் இறையன்பின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.

பெரியபுராணப் படைப்பில் வினைச்சொல் உருக்காட்சியைக் கொண்டு சேக்கிழார், அடியார்தம் குறிப்பிடத்தக்க அழுத்தமான தொண்டினைக் குறிப்பிட்டுத் தத்துவக் கருத்துக்களைப் படிப்பவர் மனத்துள் பதியுமாறு செய்வது அவரது தனிச்சிறப்பைப் காட்டுகிறது. ஆங்காங்கே பொருத்தமுற இவ்வுருக்காட்சியினை அவர் ஆள்கிறார்.

## அணிவன - மணிகள் உருக்காட்சி:

தம்மை அழகுபடுத்திக் கொள்வதில் பொதுவாக மக்களுக்கு ஆர்வமுண்டு. நிலத்தின் அடியிலிருந்தும், கடலின் அடியிலிருந்தும் எடுக்கப்பெறும் மணிகள் தலை, காது, கழுத்து, மார்பு, கைகள், விரல்கள், இடை, குறங்கு, கால் ஆகிய உறுப்புகளுக்குரிய அணிகலன்களைச் செய்துகொள்வதற்குப் பயன்படுத்தப்படுகின்றன. விலைமதிப்பு உடையனவாக இருப்பதால் இவற்றை மிகுதியாக வைத்துக்கொள்வதில் மக்கள் ஆர்வம் காட்டுகின்றனர். அதிகமாக இவற்றை வைத்திருப்பவர் செல்வர் எனக் கருதப்படுகின்றனர். மணிகள் பலவகைப்படும் எனினும் அவற்றுள் சிறப்புடையனவாகக் கருதப்பெறும் ஒன்பது மணிகள் நவமணிகள் என அழைக்கப்படுகின்றன. தமிழர்தம் வாழ்வில் இவை இன்றளவும் பெரும்பங்கு பெற்று வருகின்றன. மக்கள் சென்று முடிந்த தம் வாழ்நாளின் பகுதிகளையும், தம்மால் நடத்தப்பெறும் சிறந்த நிறுவனங்களில் சென்று முடிந்த காலக்கூறுகளையும் குறிக்கும் வகையில் நடத்தப்பெறும் விழாக்கள் மணிகளின் பெயரால் அழைக்கப்பெறுவது நினைத்தற்குரியது. மக்கள் தமது அருமைக்குழந்தைகளை, தம்மால் பெரிதும் போற்றப்படும் இறைவரை, தலைவர்களை, பெரியோர்களை, முத்து, மாணிக்கம், இரத்தினம் என அழைத்து மகிழ்வதும் குறிப்பிடற்குரியது. "மருகலுறை மாணிக்கம்" என்று இறைவரை அழைக்கிறார் நாவரசர்.[50]

வைரம் என்பது நவமணிகளுள் முதன்மையானது. உறுதியும் திண்மையும் உடையது. முத்து என்பது வைரத்திற்கு அடுத்த நிலையில் சிறப்புடையது. உருட்சியும், ஒளியும், தெளிவும் உடைய மணியாக இது விளங்குகிறது. மாணிக்கம் என்பது செந்நிறமுடைய மணி. மரகதம் பச்சைநிறமுடைய மணி. தமிழ் இலக்கியங்களில் "மணி" எனவரும் இடங்கள் முத்தினையோ

மாணிக்கத்தினையோ குறிக்கும். நீலமணி, புட்பராகம்; வைடூரியம், கோமேதகம் போன்ற மணிகள் அடுத்தடுத்துச் சிறப்புடையன. கடலில் படிந்து வாழும் உயிரினங்களுள் ஒருவகையாகிய பவளப்பூச்சிகளின் கழிவுப்பொருள்களாகிய கொடிப்பாறைகளே பவளமணிகள் ஆகும். செம்மை நிறமுடைய இப்பவளம் என்பது உண்மையான இரத்தினக்கல் அன்று. சேக்கிழார் இம்மணிகளின் சிறப்பை நன்கு அறிந்திருந்தவர் எனலாம். அரசரிடம் அமைச்சராகப் பணிபுரிந்தவராகையால் அவரது வாழ்வுக்களம் இத்தகைய மணிகளைப்பற்றி அறிந்து கொள்வதற்கு வாய்ப்பு அளித்துள்ளது எனல் பொருந்தும். முத்து, மாணிக்கம், மரகதம், பவளம் என்பன பெரியபுராணப்படைப்பில் உருக்காட்சிகளாக இடம்பெற்றுள்ளன. இறைவர் மேனி, சடை, நெற்றி, வாய், மகளிர்மேனி, வாய், வயிறு, கோயில்வாயில் ஆகியவை மணிகள் உருக்காட்சியினால் சிறப்பிக்கப்படுகின்றன.

## முத்து:

சேக்கிழார் முத்து உருக்காட்சியைப் பெண்களின் சிறப்பு, வியர்வைத் துளி, அருவியின் தோற்றம், ஆற்றின் தோற்றம், நெற்பொலியின் தோற்றம், பெண்ணடியாரின் கண்ணிமையின் தூய்மை ஆகியவற்றை விளக்குதற்குப் பயன்படுத்துகிறார்.

பெருகொளிமுத்து, தண்சுடர்ப்பரியமுத்து, வெண்சுடர்த்தரள மாலை, ஒளிகதிர்த்தரளம், தளிரொளி துளும்புமுத்து, குளிர்நிலவெறிக்கும் முத்து, நளிர்கதிர் முத்துமாலை, வாள்விடு வயிரக்கட்டு, தரளக்கொத்து எனச் சேக்கிழார் குறிப்பிடுவது மணிகளின் வடிவையும் ஒளித்தன்மையையும் நன்கு கண்டு தெரிந்து கொள்வதில் ஆர்வம் உடையவராயிருக்கிறார் எனத்தெரிகிறது. அவர் மணிகளின் மதிப்பறியும் திறன் பெற்றவராக இருந்திருக்க வேண்டும் எனலாம். காண்பவர்தம் கண்களுக்குக் குளிர்ச்சியான ஒளியைச் தரும் முத்து அவரைக் கவர்ந்திருக்கிறது. அதன் வெண்மை நிற ஒளியும், தெளிவும், அவரது கண்களையும் கருத்தையும் ஈர்த்து இருக்கின்றன. முத்து, பவளம், வைரம், மரகதம், மாணிக்கம் போன்ற மணிகளைக் கொண்டு செய்யப்பெற்ற அணிகலன்களைக் கண்டும், பெற்றும், அனுபவிக்கக் கூடியதாக அவரது அரசுப்பணியுடன் கூடிய வாழ்வுக்களம் அமைந்திருந்தது எனலாம்.

## பெண்கள் சிரிப்பு - முத்து நகை:

பெண்கள் சிரிக்கும்பொழுது காணப்பெறும் அவர்தம் பற்களின் வெண்மைநிறம், உருட்சியான வடிவம், ஒரே அளவான தன்மை, வரிசையொழுங்கு என்பனவற்றால் உண்டாகும் அழகு ஆசிரியரால் குறிப்பிடப்படுகிறது. முத்து உருக்காட்சி பொருத்தமுற அமைந்து மகளிர் சிறப்பைச் சிறப்பிக்கிறது. [50அ]

## எற்புமணி, பாளைமணி, வியர்வைத்துளி - முத்து:

மாவிரதர் வடிவில் வந்த இறைவர் தம் காதில் அணிந்து கொண்டிருக்கும் எற்புமணிகள், கமுகு மரத்திலிருந்து கீழே தரையில் விழுந்து சிதறிக்கிடக்கும் பாளை மணிகள் என்பன முத்துமணிகளைப்போலக் காட்சியளிக்கின்றன. எற்புமணி, பாளைமணிகளின் வெண்மைநிறம், உருண்டு திரண்டு விளங்கும் அவற்றின் வடிவம் முத்து உருக்காட்சியால் காட்சிப்படுத்தப் படுகின்றன.

சேக்கிழார் மகளிரின் வியர்வைத்துளிகளை முத்துக்களாகக் குறிப்பிடுவது நயம் சான்றது. "வாண்முகப்பொற்செந் தாமரை மேலன நித்திலம் சேர்ந்த சோவை" என்பது சேக்கிழார் வாக்கு. மகளிர்தம் சிவந்த முகத்தின்மேல் தோன்றும் வியர்வைத்துளிகள் அழகுறக் காட்சிப்படுத்தப் படுகின்றன. [51]

## சங்கிலியார் - கோவா முத்து:

சங்கிலியார்தம் கன்னிமைப் பருவத்தினைக் குறிப்பிடும் வகையில் கோக்கப்பெறாத முத்து என்பது உருக்காட்சியாகப் பொருத்தமுற ஆளப்பட்டுள்ளது. சங்கிலியார்தம் அழகிய தோற்றமும் தூய கன்னிமைச் சிறப்பும் இவ்வுருக்காட்சியால் குறிக்கப்படுகின்றன. விண்மீன் போன்று ஒளிவீசும் தன்மை கொண்டதும், காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீர்நிலை என்னும் நான்குவகை குற்றங்கள் இல்லாததும், திண்மையுடையதும், பார்வைக்கு இனிமையுடையதும், பளிங்கு போன்று தெளிவுடையதும் ஆகிய முத்து என்னும் உருக்காட்சி

சங்கிலியார்தம் தோற்றம், பண்புநலம் ஆகியவற்றைச் செவ்விதின் உணர்த்துகிறது.[52]

## காவிரியாறு - முத்தாரம்:

"அழகிய மண்ணக மடந்தையின் பொன்மார்பில் தவழும் முத்துமாலையைப் போன்று காவிரியாறு திகழ்கின்றது" என்கிறார் சேக்கிழார். தமிழகத்தின் மேற்கில் உள்ள குடகுமலையில் தோன்றி, கன்னட நாட்டின் வழியாக வந்து தமிழகத்தின்கண் பாய்ந்து கிழக்குக் கடலில் விழும் காவிரியாற்றின் வளைவான போக்கு, சேக்கிழார் மனக்கண்ணில் முத்தாரம் போன்று தோன்றியிருக்க வேண்டும். பூமிக்கு மேலே இருந்து கொண்டு ஓடும் ஆற்றினைப் பார்க்கும் ஒருவர்தம் பார்வையில் தோன்றும் காட்சியின் அடிப்படையில் இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது.[53]

திருக்காளத்தி மலையில் விழும் அருவியை, "நித்தில அருவி"[54] என்கிறார் ஆசிரியர். தொலைவிலிருந்து கொண்டு மலையருவியைக் காண்பவருக்குத் தோன்றும் அருவிக்காட்சியாக இதனைக் கருதலாம். சேக்கிழார்தம் இயற்கையியல் ஈடுபாட்டின் வெளியீடாகக் காவிரியாறு, அருவி ஆகியவை பற்றிய முத்து உருக்காட்சி விளங்குகிறது. அவற்றைக் கண்டு மகிழ்ந்திருக்கிறார் எனத் தெரிகிறது. இயற்கைக் காட்சிகளில் அவரது நெஞ்சம் தோய்ந்திருக்கிறது எனக்கொள்ளலாம்.

## சம்பந்தர் திருமணக்கோலம்:

திருஞானசம்பந்தர் மணவணி பற்றி ஆசிரியர் வருணிப்பதில் முத்து சிறப்பிடம் பெறுகிறது. அவரது திருவடிமலரின்மேல் பூத்ததொரு செழுநகைச்சோதி போன்று தரளக்கோவை மணிச்சரி என்பன அணியப்பெற்றன. பொற்சரட்டில் கோத்த பெருகொளிமுத்து மாலை பிறங்கிய தொங்கல் பரட்டின்மீது சாத்தப்பெற்றது. பொன் நாளில் கோத்த பரியமுத்தினால் ஆன அரைஞாணை அவரது இடுப்பில் அணிவித்தனர். உதர பந்தனத்தின்மேல் தரளக்கோவை அணியப்பெற்றது. முத்தினால் செய்யப்பெற்ற சன்னவீரம் என்ற அணி சாத்தப்பெற்றது. முத்தின் பூணநூல் அணிவிக்கப் பெற்றார்.

முத்துமாலைகளும் ஆரங்களும் அணியப்பெற்றன. முத்தின் தண்டையும், சரியும், தோள்வளைத் தரளப்பைம்பூணும், பருத்த முத்தொழுங்கு கோத்த படரொளி வடமும், வருக்கவெண்தரளக்கொத்தின் வடிக்குழையும், முத்தின் பனிச்சுடர்த்திரணையும், முத்தின் எழில்வளர் மகுடமும், சம்பந்தருக்கு அணிவிக்கப்பெற்றன. இவ்வாறு சம்பந்தர்தம் மேனியின் அடி முதல் முடிவரை முத்தால் செய்யப்பெற்ற அணிகலன்கள் சாத்தப் பெற்றன. இத்தகைய அணிகலன்களுடன் விளங்கும் சம்பந்தர்தம் மணக்கோலத்தை, "ஏர்வளர் தெய்வக் கோலம்" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். முத்துக்களாலான அணிகலன்கள் ஒன்றன்பின் ஒன்றாகச் சம்பந்தர் மீது அடிமுதல் முடிவரை மிகவும் அணியப் பெற்றமையை வருணிப்பதன் வாயிலாகச் சம்பந்தர்தம் திருமணக்கோலத்தைப் படிப்பவர் மனத்துள் தோன்றச் செய்கிறார் ஆசிரியர். [55] திருமணப் பூம்பந்தரின்கண் பீடத்தில் சம்பந்தர் இவ்வணிகலன்கள் ஒளிவிட அமர்ந்திருந்த காட்சியைச் சேக்கிழார்.

> "ஓங்கிய ஞான வெள்ளம் உள்நிறைத் தெழுவ தென்னத்
> தாங்கிய முத்தின் பைம்பூண் தண்ணிலா எறிப்ப ஏறிப்
> பாங்கொளி பரப்பி நின்றார் பரசம யங்கள் வீழ்த்தார்" [56]

என்று ஆர்வத்துடன் குறிப்பிடுகிறார். முத்தின் பைம்பூண், சம்பந்தர்தம் ஞானம் பொங்கி வழிவதைப் போன்று விளங்குவது என்று சேக்கிழார் குறிப்பது புதுமை நயம் பயக்கிறது. முத்தின் ஒளி ஞானத்தின் சின்னமாகக் கருதப்படுகிறது. திருமணவிழாவில் தமது கரம்பிடிக்கும் மணப்பெண்ணுடனும். மெய்த்தொண்டர்களுடனும் விழாவிற்கு வந்த அனைவருடனும் இறையருள் சோதிக்குள் செல்லவிருக்கும் சம்பந்தர் முத்தின்பைம்பூண் சோதியுடன் திகழ்வதாகச் சேக்கிழார் குறிப்பிடுவதில் இன்புறுகிறார். சம்பந்தருக்கு அணிவிக்கப்பெற்ற முத்துக்களால் ஆன அணிகலன்களைப் பற்றிய வருணனையால் எழுப்பப்படும் உருக்காட்சி சேக்கிழார் சம்பந்தர்மாட்டுக் கொண்டிருந்த அன்பின் வெளிப்பாடாக உள்ளது எனலாம். அவருக்குமுன் பன்னூறு ஆண்டுகட்குமுன் வாழ்ந்த நாயனாராகிய சம்பந்தருக்குத் தம் கற்பனைத் திறன் கொண்டு அடிமுதல் முடிவரை பல்வேறு முத்தின்பைம்பூண்களை அணிவித்துக் காண்பதில் ஆசிரியர் ஆர்வம் காட்டுகிறார் எனின் பொருந்தும். அவரது

கற்பனையின் மனவியலைக் காட்டுவதாக முத்து உருக்காட்சி அமைந்துள்ளது எனலாம்.

## மணி:

### இறைவர் - மணி:

சேக்கிழார் இறைவரை மணி உருக்காட்சியால் பெரியபுராணப் படைப்பில் குறிப்பிடுவது ஒரு தொடர் உருக்காட்சியாக உள்ளது. "நீண்ட சுடர் மாமணி", "பொன்னார்மேனி" மணிவெற்பு", "மணிமேனிப் பெருவாழ்வு", "மலைச்சிரைச் சிகாமணி", "மாணிக்கச் செழுஞ்சோதி", "மணி", "கண்ணாரும் அருமணி", "நீடுமாமணி", "நீல மிடற்றருமணி", "மாமணி" என இறைவரைப் போற்றுகின்றார் ஆசிரியர். இறையன்பின் வெளிப்பாடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. சேக்கிழார் குறிப்பிடும் மணி என்பது செம்மை நிறமுடைய மாணிக்கத்தைக் குறிக்கும் எனலாம். "நீலமிடற்றருமணி" என்பதில் நீலமணி செம்மணியாகிய மாணிக்கத்துடன் இணைந்து இருக்கும் காட்சி நினைத்தற்குரியது. [57] மணியின் ஒளி ஆசிரியரைக் கவர்ந்துள்ளது எனலாம்.

### இறைவர் கண்டம் - நீலம்:

"களமணிகளத்துச் செய்ய கண்ணுதல்" என்றும் "மணிவளர் கண்டர்" என்றும் இறைவரைக் குறிப்பிடுகிறார் சேக்கிழார். களமணி என்பது நீலமணியைக் குறிக்கும் மணிவளர் கண்டர் எனவும் இறைவரை ஆசிரியர் குறிப்பிடுவது காணத்தக்கது. [58]

### சம்பந்தர் - மணி:

பல இடங்களில் சம்பந்தரை மணி உருக்காட்சியால் ஆசிரியர் போற்றிப் பரவுகின்றார். தொடர் உருக்காட்சியாக மணி உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. சம்பந்தர்தம் பெருமையைக் குறிப்பதாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது. சமணம் என்னும் இருளைப் போக்க வந்தவர் என்ற கருத்தினை மனத்துட்கொண்டு சேக்கிழார் இவ்வுருக்காட்சியினை ஆண்டுள்ளார். பொரு பொன்னித்துறை பெறுமணி, வைதிக மாமணியானவர்,

வைதிகமாமணி, சைவசிகாமணியார், அந்தணர் சூளாமணியார், வைதிக சூளாமணி, சைவசிகாமணி, பூசுரர் சூளாமணி எனச் சேக்கிழார் சம்பந்தரைக் குறிப்பிடுகின்றார். சம்பந்தர்மாட்டு ஆசிரியர் கொண்டுள்ள அன்பினைக் காட்டுவதாக இவ்வுருக்காட்சி உள்ளது. மணி என்பது செம்மை நிறமுடைய மாணிக்கத்தைக் குறிக்கும். சம்பந்தர்தம் செம்மை நிறமுடைய மேனியைக் கற்பனைக் கண்கொண்டு காணும் சேக்கிழார் மணி உருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்கிறார். மிகுந்த மதிப்பும், இனிய செந்நிற ஒளியும் உடைய மணி பொருத்தமான உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது.[59]

***சீராளன் - மணி:***

பெறற்கரிய மணி, நம்மைக் காக்க வருமணி, செய்யமணி எனச் சிறுத்தொண்டரின் மைந்தன் சீராளனைக் குறிப்பிடுகிறார்.[60]

"நம்மைக் காக்க வருமணியைச் சென்று பள்ளியினிற் கொண்டு வாரும்" என்றார் சிறுத்தொண்டரின் மனைவியார். "ஒரு குடிக்கு நல்ல சிறுவன் ஒருமகனைத் தாதை அரியத் தாய் பிடிக்கும் பொழுதில் தம்மில் மனமுவந்தே ஏதமின்றி அமைத்தகறி யாம் இட்டு உண்பது" என மொழிந்த பைரவர்தம் விருப்பினை நிறைவேற்றுவதாகிய செயற்கரிய செயலுக்குத் துணை புரிந்தமையால் "தம்மைக் காக்க வருமணி" எனப்பெற்றான் சீராளன். - சிறுத்தொண்டர், அவர் மனைவியார் நெஞ்சத்தில் ஏற்பட்ட குழப்பமாகிய இருளைப் போக்கியவன் சீராளன் என்பது கருத்து. "நாமிங்குண்பது அவன் வந்தால் நாடி அழையும்" என்று இறைவர் பணித்த மொழிக்கிணங்க, சிறுத்தொண்டர் மனைவியார், "செய்யமணியே! சீராளா! வாராய் சிவனார் அடியார்யாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்" என்று ஓலமிட்டார். பொதுவாகத் தாயர் தம் மக்களை மணிகளின் பெயரைக் குறிப்பிட்டு அன்புடன் அழைப்பது மரபு. தாயின் கூற்றாக வரும் மணி உருக்காட்சி கிளர்ச்சியூட்டும் ஆற்றலுடனும் பொருத்தமுடனும் விளங்குகிறது. செயற்கரிய செய்த சிறுத்தொண்டர் வரலாற்றில் சிறப்பிடம் பெறும் சீராளன் மணி உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுவது நினைத்தற்குரியது. பெரிய புராணப்படைப்பில் தொடர் உருக்காட்சியாக இவ்வுருக்காட்சி

இடம்பெற்றுச் சீராளனின் பெருமையைப் படிப்பவர் மனத்துள் பதியச் செய்கிறது.

## பூம்பாவை - மணி:

திருமயிலைப் பெருவணிகர் சிவநேசர் என்பார்தம் மகள் பூம்பாவையின் அழகைச் சேக்கிழார் ஒளிப்பொருள்களை உருக்காட்சிகளாக அமைத்துச் சிறப்பிக்கின்றார்.

"தளருமின் னின்அங்குர மெனத்தம னியக்கொடியின்
வளரி ளந்தளிர்க் கிளையென மணிகிளர் ஒளியின்
அளவில்அஞ் சுடர்க்கொழுந் தெனஅணை வுறும்பருவத்
திளவனப் பிணைஅனை யவர்க்கேழு யாண் டெய்த"

என்பது சேக்கிழார் படைக்கும் வருணனை.[61]

"தளரும் மின்னல் என்ற அங்குரம் போலவும் தமனியக் கொடியில் வளர்கின்ற இளந்தளிர்கள் நிறைந்த கிளை போலவும் காட்சியளிக்கும் பூம்பாவை மணிகிளர் ஒளியின் அளவில் அஞ்சுடர்க்கொழுந்து போன்று விளங்குகின்றாள்" எனச் சேக்கிழார் முதற்கண் இவ்வருணிப்பில் வானில் தோன்றும் மின்னலை உருக்காட்சியாக ஆண்டு, அடுத்துப் பொன்னை உருக்காட்சியாக அமைக்கிறார். அதனை அடுத்து மணியை உருக்காட்சியாகப் படைக்கிறார். மின்னல், பொன், மணி ஆகிய மூன்றும் அடுத்தடுத்து வந்து பூம்பாவையின் ஒளிமிகு தோற்றத்தை நினைக்குமாறு செய்கின்றன. பெருவணிகர் ஒருவர்தம் பெண்ணைப் பொன், மணி என்ற உருக்காட்சிகொண்டு சிறப்பிப்பது பொருத்தமுற அமைந்துள்ளது.

## உமையம்மை சிவனார் - மரகதம், பவளம்:

வெண்மையான பனிபடர்ந்திருக்கும் கயிலை மலையில் செம்மை நிறமுடைய இறைவர்தம் இடப்பக்கத்தில் பசுமைநிற மேனியுடைய உமையம்மையுடன் அமர்ந்து இருக்கும் காட்சியினை ஆசிரியர், வெள்ளி வெற்பின்மீது மரகதக் கொடியுடன் தெள்ளு பேரொளிப்ப பவளவெற்பினைப் போன்று வீற்றிருப்பதாகக் குறிப்பிடுகின்றார்.[62] வெள்ளியைப்போல் ஒளிவிடும் கயிலைமலையின்மேல் மரகதமணிகளால் ஆன கொடியைப்போல்

உமையம்மை திகழ்வதாகவும், பவள மலையைப்போல் சிவனார் விளங்குவதாகவும் சேக்கிழார் கற்பனைக்கண் கொண்டு காண்கிறார். வெள்ளிவெற்பின்மீது பவளவெற்பும், அதன்மேல் மரகதக் கொடியும் காட்சி அளிப்பதாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

## சிவனார் மேனி - பவளம்:

"அம்பவளச் செவ்வண்ணர்", "பவளவெற்பு", "பவளத்திருமேனி நீற்றர்", "செழுந்தண்பவளச் சிவக்கொழுந்து", "செழும்பவளச் சிவக் கொழுந்து" எனச் சிவனாரைச் சேக்கிழார் ஆர்வமுடன் குறிப்பிடுகின்றார். சிவனார்தம் செந்நிறமான பவளம் போன்ற மேனியினை எப்பொழுதும் தம் நினைவில் கொண்டிருந்தவர் ஆசிரியர் என்பதை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.[63]

## சிவனாரின் சடை, நெற்றி - பவளம்:

துப்புறழ் வேணி. துப்புநேர்சடை, பவளச்சடை எனச் சிவனாரின் சடை குறிக்கப்படுகிறது.[64]

"விரிசுடர்ச் செம்பவள ஒளி வெயில்விரிக்கும் விளங்குசுடர்த் திருநுதல் மேல் திருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க" என்று சிறுத்தொண்டர்முன் தோன்றிய சிவனார்தம் நெற்றியும், அதன்மேல் திகழும் திருநீறும் விளங்கியமையைத் தெரிவிக்கின்றார் ஆசிரியர். சிவனார்தம் செம்மைநிற மேனியின் பொலிவைப் படிப்பவர் மனத்தில் தோன்றச் செய்கிறது பவள உருக்காட்சி. சேக்கிழார் சிவனார்தம் செந்நிற மேனியின் நினைவில் தோய்ந்திருந்தமையால் பவளம் அவரது நெஞ்சைக் கவர்ந்திருக்கிறது எனலாம்.

மணி உருக்காட்சி சேக்கிழார்தம் இறையன்பையும், அடியார்மாட்டு அவர் கொண்டிருந்த அன்பினையும் காட்டுகிறது. ஒளிதரும் பொருள்களில் அவருக்குள்ள ஈடுபாட்டையும், அவற்றின் வடிவு, தன்மை ஆகியவற்றை நன்கு அறிந்திருந்த பாங்கினையும் இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## உலோகம்:

மக்கள் பூண்பதற்கான அணிகலன்கள் பொன், வெள்ளி, செம்பு, இரும்பு ஆகிய உலோகங்களில் செய்யப்படுகின்றன. தம்மை அழகுபடுத்திக் கொள்ளும் ஆர்வம் காரணமாக உலோகங்களை உருக்கிப் பல்வேறு அணிகலன்களைப் படைத்துக் கொள்கின்றனர். இவ் உலோகங்கள் பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்படுகின்றன. உலோகங்களுள் பொன் மிகுந்த விலைமதிப்பு உள்ளதாகும். மாடை, தங்கம், ஆடகம் எனவும் பொன் என்ற உலோகம் குறிக்கப்படும். உரையாணியின் துணைகொண்டு பொன்னின் சிறப்புத்தன்மை, மாற்று என்ற வகையில் மதிப்பிடப்படுகிறது. தீயின் வெப்பத்தில் சூடேற்றப் பெற்றுக் காய்ச்சப்படும்பொழுது ஒளியை மிகுதியாகப் பெற்று விளங்கும் பொருளாகப் பொன் விளங்குகிறது. தம்மால் பெரிதும் பாராட்டப்படும் தமது குழந்தைகளைப் பொன் என்று பெற்றவர் ஆர்வத்துடன் அழைப்பதுண்டு. நிறுவனங்களின் சென்று முடிந்த ஆண்டுப்பகுதியை வெள்ளிவிழா, பொன் விழா எனக் குறிப்பிடுவதைக் காணலாம். வெள்ளி உலோகத்தில் குழந்தைகட்குக் காலிலும் கையிலும் அணியும் பலவகை அணிகளும், பொன்னினால் தலை, காது, கழுத்து, மார்பு, தோள், கை, விரல், இடை, கால் ஆகிய உறுப்புக்களின் பூணுதற்குரிய பலவகை அணிகளும் செய்யப்படுகின்றன. மிகவும் நுட்பமான வேலைப்பாடுகளுடன் கூடிய அணிகள் பொன்னினாலும், வெள்ளியினாலும், செம்பினாலும் செய்யப்படுகின்றன. மக்கள் வாழ்வில் பொன் உலோகம் மிகுந்த மதிப்புடையதாகக் கருதப்படுகிறது.

## இறைவர் மேனி - பொன்:

இறைவரது ஒளிமிகுந்த மேனியைப் போற்றும் சேக்கிழார், "பொன்மேனி", "பொன்னார் மேனி", "பொன்மேனி வெண்ணீறு புனைந்த கோணப்பொலிவு" எனக்குறிப்பிடுகிறார்.[65] "செம்பொன்தாளிணை", "பொன்னடித்தலத்தாமரை", "பொன்னடித்தலம்", "பொன்னடிக் கமலம்" என இறைவர் திருவடியைக் குறிக்கின்றார்.[66] "பொன்திரள்கள்போல் புரிந்த சடை", "பொன்புரி செஞ்சடை", "செம்பொன்ஏர்சடை",

பொன்புற்கென்றிட ஒளிருஞ்சடை" எனச் சிவனாரின் சடை போற்றப்படுகிறது.[67] "செம்பொன்செழுஞ்சுடர்" என்று இறைவரது முழுத்தோற்றத்தையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[68] இறைவர் அணியும் கொன்றைமலர், "பொன்னிதழ்க் கொன்றை", "பொன்னார் இதழி" எனப்படுகிறது.[69]

## உமையம்மையின் கை - பொன் தளிர்:

பொன்தளிர்க்கை" என்று உவமயம்மையின் கையின் பொலிவு குறிப்பிடப்படுகிறது.[70]

## இமயமலை, பனிபடர்ந்திருப்பது - பொன், திருநீறு:

ஞாயிற்றின் ஒளி விசுவதால், பொன்போல் ஒளிவிடுகிறது. அதன்மீது வெண்பனி படர்ந்திருப்பது திருநீற்றைப் போன்று தோன்றுகிறது.

சேக்கிழார் இக்காட்சியைப் பற்றி,

"பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரை......."

என்று குறிப்பிடுகின்றார். பொன் உருக்காட்சி ஞாயிற்றின் ஒளியால் பளபளக்கும் இமயமலையின் ஒளித்தோற்றத்தை நினைக்கச் செய்கிறது.[71]

## புன்னை மலர்கள், கொன்றை மலர்கள் - பொன்:

புன்னை மரங்களிலிருந்து கீழே விழுந்துகிடக்கும் மலர்களின் தோற்றத்தை, "வழிக்கரைப் பொதிப்பொன் னவிழ்ப்பன மலர்ப்புன்னை" என்கிறார் சேக்கிழார். புதுமைநயம் சான்றதாக பொன் உருக்காட்சி உள்ளது.

"தண் துணர்க்கொன்றை பொன்சொரிவன தளவயற்பால்" என்று ஆசிரியர் கொன்றைமலர்கள் மரத்திலிருந்து வீழ்கின்ற காட்சியைக் குறிப்பது நயமுடையதாக உள்ளது.

தொண்டை நாட்டின் வளத்தினைச் சிறப்பிக்கும் வகையில் பொன் உருக்காட்சியை இவ்வாறு பொருத்தமுறச் சேக்கிழார் ஆள்கிறார்.[72]

## இரும்பு, பொன் - திண்ணனார்:

[illegible] முன்பு இருந்த திண்ணனார் நிலை இரும்பு என்பதாகவும், அவ்வருள் பெற்ற பின்பு ஏற்பட்ட நிலை பொன் என்பதாகவும் சேக்கிழாரால் குறிக்கப்படுகின்றன. பொன்னினை நோக்க இரும்பு என்னும் உலோகம் மதிப்புக் குறைவுடையது. ஒளி குறைவானது. பொன் அணிகள் வாங்க இயலாத மக்கள் இரும்பினால் செய்யப்பெற்ற அணிகளைப் பூண்பதுண்டு. வேதகம் என்ற கலைத்திறன் கொண்டு விலை மதிப்பு அதிகமில்லாத இரும்பு என்னும் உலோகத்தைப் பொன்னாக மாற்றும் செய்தி பெரியபுராணத்தில் குறிப்பிடப்படுகிறது.

"வேதகத்தினால் இரும்பைப் பொன்னாக்குவது போன்று இறைவர் தமது திருவருள் நோக்கினால் உடலின் பரிசு. இருவினை, மும்மலம் ஆகியவற்றை நீக்கி, அன்பின்பிழம்பு என்ற வடிவத்தைத் திண்ணனாருக்கு வழங்கினார்" என்று சேக்கிழார் இயம்புகின்றார். "இன்புறு வேதகத் திரும்பு பொன்னானாற்போல" என்பது சேக்கிழார் மொழி.

இரும்பு, பொன் என்ற உருக்காட்சிகள், ஆழமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் புதுமை நயமும் உடையனவாக விளங்கிச் சேக்கிழார்தம் படைப்பாற்றலைத் தெரிவிக்கின்றன. [73]

## கயிலைமலை - வெள்ளிவெற்பு:

இறைவர் வீற்றருளும் கயிலைமலை வெண்பனிபடர்ந்து ஒளிமிகுந்து காணப்படும் தோற்றத்தை ஆசிரியர் "வெள்ளி வெற்பு" என்பதாகக் குறிப்பிடுகிறார். [74]

## சுந்தரர், இறைவர் - இரும்பு, காந்தம்:

புத்தூரின்கண் சடங்கவி மறையோனது மகளை மணம்புரிய விருந்த சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள வேண்டி இறைவர் முதிய வேதியர் வடிவில் திருமணவிழவிற்கு வந்து, "சுந்தரர் தமக்கு அடியான்" என மொழிந்தார். "எமது வழக்கை முடித்தபின்னர்தான் வதுவை நடக்க வேண்டும் என்கிறார் வந்த வேதியர். இதைக்கேட்டு நகைத்த சுந்தரரிடமும், விழாவில் இருந்த

மற்றை மறையோரிடமும், "ஆள் ஓலை ஒன்று தம்மிடம் உ" எனத்தெரிவித்தார். "ஓலையைக் காட்டுக" என்ற சுந்த பார்த்து, "நீ ஓலைகாணற்குத் தகுதியுடையவனல்ல. பணி செய்யக் கடமைப்பட்டவன்" என்றார் இறைவர். பின்பு தம்மிடம் காட்டப்பெற்ற அந்த ஆவணத்தை இறைவரிடமிருந்து பறித்துக் கீறியிட்டார் சுந்தரர். "வெண்ணெய் நல்லூரில் மூல ஓலைகாட்டு நீ அடிமை என்பதைச் சாதிப்பேன்" என்று இறைவர் கூற, அவரைப் பின்தொடர்ந்து சுந்தரர் சென்றார். நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியுடையவராகவும், கண்டதோர் வடிவால் காதல் செய்து உருகும் உள்ளமுடையவராகவும் இருந்த சுந்தரர் வேதியர் வடிவில் வந்த இறைவரது பின்னே விரைவாகச் சென்றார். இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார்

"செல்லுமா மறையோன் தன்பின் திரிமுக காந்தஞ் சேர்ந்த
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங் கடிது சென்றார்"

எனக் குறிப்பிடுகின்றார். 75

தனக்குமுன் வைக்கப்பெறும் இரும்பினைத் தன்பால் ஈர்க்கும் தன்மையுடைய திரிமுகக் காந்தத்தைச் சேர்ந்த வன்மையான இரும்பு போன்று சுந்தரர் இறைவரது பின்னே சென்றார் என்பது கருத்து.

"திரிமுகக் காந்தம்" என்பது வாளா கிடக்கும் இரும்பினைத் தன்னை நோக்கி இயங்கச் செய்யும், அதாவது திரிக்கும் தன்மை வாய்ந்த, காந்தம் ஊட்டப்பட்ட இரும்பினைக் குறிக்கும். தமது குறிக்கோளை மறந்து செயல்பட முனைந்த சுந்தரரைத் தம்பால் ஈர்த்தமையால் இறைவர் திரிமுகக் காந்தம் என்ற உருக்காட்சியாலும் வேதியரிடமிருந்து ஆள் ஓலையைப் பறித்துக் கீறியிட்ட வன்மையுடைய சுந்தரர் வல்விரும்பு என்ற உருக்காட்சியாலும் பொருத்தமுறக் குறிப்பிடப்படுகின்றனர். ஆழமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும், புதுமையும் உடையனவாக இரும்பு, காந்தம் என்ற உருக்காட்சிகள் விளங்குகின்றன.

உலோகம் என்ற உருக்காட்சி புராணப்படைப்பில் சேக்கிழாரால் நயம்பயக்கும் வகையில் ஆளப்பட்டுள்ளது.

அன்பர்களைத் தடுத்தாட்கொள்கின்றார் இறைவர் என்ற கோட்பாட்டைப் பற்றிப் பெரியபுராணப் [illegible] தடுத்தாட்கொண்ட புராணம் என்ற பகுதியில் சேக்கிழார் நாடகம் போன்று காட்சிகளையும் உரையாடலையும் அமைத்து விளக்குகின்றார். அவரால் ஆளப்பெறும் இரும்பு, காந்தம் என்ற உருக்காட்சிகள் அந்தக் கோட்பாட்டை நன்கு விளக்குகின்றன. "அவனருளாலே அவன்தான் வணங்குதல்" [75]அ என மணிவாசகர் தெரிவிக்கும் கருத்து இவண் நினைத்தற்குரியது.

## படைக்கருவிகள் - உருக்காட்சி:

சேக்கிழார் படையில் பயன்படுத்தப்பெறும் வில், அம்பு, வேல், வாள், அம்பறாத்தூணி முதலியவற்றை உருக்காட்சிளாகப் படைத்த மகளிர்தம் நெற்றி, புருவம், விழிகள் ஆகியவற்றைச் சிறப்பிக்கின்றார்.

சம்பந்தர்தம் வாக்கினைப் படைக்கருவி உருக்காட்சியில் விளக்குகின்றார் ஆசிரியர்.

## மகளிர் நெற்றி, புருவம் - வில்:

வில் என்னும் படைக்கருவி வளைவாக உள்ள ஒன்று. வீரன் தனது வளைவான வடிவுடைய வில்லைத் திறமையாகப் பயன்படுத்திப் பகைவரை வீழ்த்துவதுபோன்று மங்கையின் தமது வில்போன்ற புருவம் நெற்றி ஆகியவற்றைக் கொண்டு தம்மை விருப்புடன் காண்கின்ற ஆடவர்தம் உள்ளத்தைக் கலக்கமுறச் செய்கின்றனர் எனக் கவிஞர் குறிப்பது மரபு.

"ஒண்ணுதற் கோஓ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும் என் பீடு"

என்பது குறள். [76] மங்கையருக்கு அவர்தம் நெற்றி வில்லாக உள்ளது என்பது கருத்து.

சேக்கிழார் மகளிர் நெற்றியை, விற்புரை நுதல், வில், வில்லொத்த நுதல், விற்புருவம், வில்லோடு நுதல். வாங்குசிலை நன்னுதல் என்ற தொடர்களால் குறிப்பிடுகின்றார். [77] பரவையார், குங்குவியக் கலய நாயனார் மனைவியார், மானிட மகளிர், தேவமகளிர், சங்கிலியார் ஆகியோருடைய நெற்றி இவ்வாறு

சிறப்பிக்கப்படுகிறது. மரபுவழிப்பட்டதாக வில் உருக்காட்சி இவண் அமைந்துள்ளது.

## பூம்பாவை நெற்றிப் புருவங்கள் - வில்:

"திரிபுரத்தை எரித்த சிவனாரின் நெற்றிக்கண்ணினின்றும் தோன்றி நெருப்பால் சாம்பலாகிய காமன் பூம்பாவையின் நெற்றிப் புருவங்களில் ஒன்றினைச் செருஎழுந்தனுவாகவும், மற்றொன்றை உற்றுழி உதவுதற்குரிய செமவில்வாகவும் ஏற்றான்" எனச் சேக்கிழார் நயமுறக் குறிக்கின்றார்.[78] பூம்பாவையின் நெற்றிப் புருவங்களின் பொலிவு இவ்வாறு பழங்கதை உருக்காட்சியுடன் இணைந்த படை உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றது. மரபையொட்டிச் சென்று இவ்வுருக்காட்சிக்குப் புதுமை நயம் ஊட்டுகிறார் சேக்கிழார் எனலாம்.

## பரவையார் - காமனின் இளந்தனு:

பரவையார்தம் இளமைப்பருவத்தின் அழகைச் சிறப்பிக்கும் சேக்கிழார், அவரது புருவத்தினைக் காமன் தனது இளம்பருவத்தில் கற்பதற்கெனப் பயன்படுத்தும் இளம்தனு என்று குறிப்பிடுவது புதுமை நயம் தருகிறது.[79]

## சம்பந்தர் வாக்கு - அம்பு:

தம்முடன் சமயவாதம் செய்த புத்தநந்தியைத் தோல்வியுறுமாறு செய்தார் சம்பந்தர். புத்தநந்தியின் தலையைச் சம்பந்தரின் "அத்திர வாக்கு" அறுத்துவிட்டது. அத்திரம் என்ற வடசொல் அம்பு எனப் பொருள்படும்.[80]

## பூம்பாவையின் கணைக்கால் - காமனின் அம்பறாத்தூணி:

பூம்பாவையின் அழகிய தோற்றத்தை வருணிக்கும் சேக்கிழார், "அவளது கணைக்கால் காமனின் ஆவநாழிகை போல் உள்ளது" என்கிறார். ஆவநாழிகை என்பது அம்பறாத்தூணியைக் குறிக்கும்.[81]

## மகளிர் விழி, முதலை எயிறு - வாள்:

மகளிர் தம் ஒளிபடைத்த விழிகள் வாள் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன. [82] முதலையினது கூரிய எயிறுகளின் தோற்றம் இவ்வுருக்காட்சியால் பொருத்தமுறக் குறிக்கப்படுகின்றது. [83]

## மகளிர் விழி - வேல்:

பரவையார், சிறுமகளிர், சங்கிலியார் ஆகியோர்தம் விழிகள் முறையே "வேற்கண்", "அலையார் வேற்கண்", "வடிவேல் ஒண்கண்" எனக் குறிப்பிடப்படுகின்றன. [84]

வில், அம்பு, வாள், வேல் என்பன மரபுவழிப்பட்ட உருக்காட்சிகளாக உள்ளமை நினைத்தற்குரியது.

சேக்கிழார் இவ்வுருக்காட்சிகளைப் பொருத்தமும் புதுமையும் உடையனவாக ஆய்வது குறிப்பிடத்தக்கது.

## பரவையார் நுதல், கண் - வில், வேல்:

"விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை" என்ற தொடரில் வில், வேல் என்னும் இரண்டு படைக்கருவிகளும் உருக்காட்சிகளாகப் படைக்கப் பெற்றுள்ளன. பரவையார் நெற்றி, விழி ஆகியவற்றை இவை சிறப்பிக்கின்றன. நெற்றி வில்லாகவும் விழி வேலாகவும் அமைந்து சுந்தரருக்குச் சலனத்தைக் கொடுத்தன என்பது கருத்து [85]

## சமயம்

## (இ) திருநீறு உருக்காட்சி

சைவசமய நெறியின் சின்னமாகத் திருநீறு விளங்குகிறது. சைவசமய நெறியைத் திருநீற்று நெறி என்றும் குறிப்பிடுவர். [1] சமண சமயத்தில் தருமசேனர் என்னும் தலைமைநிலை பூண்டிருந்த, தமது தம்பியாராகிய திருநாவுக்கரசரை மீண்டும் சைவ சமயத்தில் சேர்த்துக் கொண்டமைக்குச் சான்றாக திலகவதியார் அவருக்கு அஞ்செழுத்தினை ஓதித் திருநீற்றைக் கொடுத்தார். பெருவாழ்வு வந்ததென நாவரசர் தமக்கையார் தமக்கு

வழங்கிய திருநீற்றை ஏற்றுத் தமது வடிவம் ஆர அணிந்து கொண்டார். திருநீற்றைத் தருவதன் வாயிலாகத் தமக்கும் உய்யும் நெறியைத் தமக்கையார் அளித்ததாக எண்ணினார் நாவரசர். [2] பவங்கள் மாற உதவும் ஆற்றல் உடையது திருநீறு என்ற கருத்து சைவ உலகினரிடம் உள்ளது. [3] ஆய்ந்த மெய்ப்பொருள் திருநீறு எனவும் சைவர்கள் எண்ணுவர். தூய்மைத் திருநீற்றடைவே மெய்ப்பொருள் என அறியும் துணிவு உடையராய் நமிநந்தியடிகள் நாயனார் திருத்தொண்டு புரிந்ததாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். [4] திருநீற்றுக் காப்புச் சாத்துதல் என்ற மரபினைச் சைவ சமயத்தினர் பெரிதும் போற்றுவர். [5] திருநீறு அணிந்துகொண்டு இறைவர் காட்சி தருவதைத் சைவசமயத்தினர் எண்ணி மகிழ்கின்ற இயல்பினர் எனலாம். அந்தி இளம்பிறையைச் சிறுமதியாக மாற்றிப் பின்னர்ச் சாத்தியது போன்று தமது விரிசுடர்ச் செம்பவள ஒளி வெயில் விரிக்கும் விளங்குசுடர்த் திருநுதல் மேல் திருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க இறைவர் சிறுத்தொண்டரைக் காண வந்ததாகச் சேக்கிழார் விவரிப்பது காணத்தக்கது. [6]

"இழைத்த அன்பினில் இறைதிருநீற்று மெய்யடிமை பிழைத்திலோம் என்றால் பெருந்துலை நேராக நிற்கட்டும் என்று பகர்ந்து. தழைத்த அஞ்செழுத்தினை ஓதிக் துலைத்தட்டில் அமர்நீதி நாயனார் ஏறினார். துலைத்தட்டு நேர்நின்றது. இறைவர் திருவருள் புரிந்தார்" எனச் சேக்கிழார் அமர்நீதி நாயனார்தம் திருத்தொண்டின் திறத்தை இயம்புகின்றார். "திருநீற்று மெய்யடிமை" என்ற தொடர் சைவசமயத்தினர் திருநீற்றை மிகுதியும் போற்றிக் காப்பதில் ஆர்வம் காட்டுவதைத் தெரிவிக்கிறது. [7]

"சம்பந்தர் பாண்டியன் நின்றசீர் நெடுமாறனுக்கு உண்டான வெப்புநோயைத் திருநீற்றினால் நீக்கினார். அனல், புனல் வாதங்களில் சமணர்களை வென்றார். தென்னவனாகிய பாண்டியனுக்குத் திருநீறு ஈந்தார். அவன் அத்திருநீற்றை அணிந்து கொண்டான். அவனது குடிமக்களும் திருநீற்றை அணிந்து கொண்டனர். சமண சமயம் தன் சிறப்பை இழந்தது. சைவ சமயம் சிறப்புப் பெற்றது" என்று ஆசிரியர் பாண்டி நாட்டில் சைவ சமயத்தைச் சம்பந்தர் நிறுவிய வரலாற்றை விவரித்துக் கூறுகிறார். [8]

"மேதினி புனிதமாக வெண்ணீற்றின் விரிந்தசோதி
மாதிரந் தூய்மைசெய்ய அமணிருள் மாய்ந்ததன்றே"

என்பது சேக்கிழார் மொழி. "மேதினி புனிதமாயிற்று. வெண்ணீற்றின் சோதி நாட்டைத் தூய்மை செய்தது. சமண சமயம் மாய்ந்தது" என ஆசிரியர் குறிப்பது அவரது சைவசமய ஈடுபாட்டையும், திருநீற்று நெறியைப் போற்றிக் காப்பதில் அவருக்கிருக்கும் ஆர்வத்தையும் காட்டுகிறது.

மணப்பந்தருக்குச் செல்லும் முன்பு உலகோர் ஏத்தத் திருவடையாள மாலையை எடுத்து அணிந்துகொண்ட சம்பந்தர், அழகினுக்கணியாம் வெண்ணீறு அஞ்செழுத்தோதிச் சாத்தினார் என ஆசிரியர் குறிப்பிடுகின்றார். முத்துக்களால் செய்யப்பெற்ற பல்வேறு அணிகளால் சம்பந்தர் தெய்வக்கோலம் பெற்றார். எனினும் இத்தெய்வக் கோலத்திற்கு இன்னும் அழகு சேர்ப்பதாக அமைந்தது அவர் தம்மேல் திருநீற்றைச் சாத்திக்கொண்ட செயல் என்பதாகச் சேக்கிழார் தெரிவிக்கின்றார். சைவசமயம் திருநீற்றிற்குத் தரும் மதிப்பினைச் சேக்கிழார் பொருத்தமுறப் படைப்பினைக் கற்பவர் நெஞ்சினில் பதியும்வகையில் இங்குக் குறிப்பிடுகிறார் எனலாம்.[9]

"தொன்மைத் திருநீற்றின் தொண்டின் வழிபாட்டின்
நன்மைக்கண் நின்ற நலமென்றுங் குன்றாதார்"

என ஏனாதிநாத நாயனாரைப் பற்றி ஆசிரியர் தெரிவிக்கின்றார். அதிசூரன் என்பான் இந்நாயனார்திறத்து ஏலா இகல்புரிந்தான். இவரை எதிர்த்துப் போரிட்டுத் தோற்றுப் போனான். 'நாட்டாரைக் கொல்லாமல் நாமிருவரும் வேறிடத்தில் வாள்தாயம் கொள்ளுதற்குரிய போரினை நிகழ்த்துவோம்' என ஏனாதிநாதருக்கு ஆள்மூலம் தெரிவித்தான். அச்செய்தியைக் கேட்ட நாயனார் அவனுடன் போரிடத் தன்னந் தனியாக வந்தார். திருநீறு தாங்கிய நெற்றியினார் தங்களை எவ்விடத்தும் ஏனாதிநாத நாயனார் தீங்கிழையார் என்பதை அறிந்த அவ் அதிசூரன் திருநீறுபண்டு பயிலாதவனாவன். எனினும்,

"வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
உண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பும் உடன்கொண்டு
வண்ணச் சுடர்வாள் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப் போர்வீரர்க் குச்சொன்ன இடம்புகுந்தான்".

தனது நெற்றியை மறைக்கும் வகையில் பலகையால் மறைத்துக்கொண்டு போரிட்ட அவனை அடர்த்துக் கொல்ல முற்படும்பொழுது அவன் புடைபெயர்ந்தான். தனது பலகையைப் புறம்போக்கினான். அந்தக் கடையவன் நெற்றியின்மேல் வெண்ணீற்றினைக் கண்ட நாயனார், 'கெட்டேன் முன்பு இவர்மேல் காணாத வெண்ணீற்றின் பொலிவினைக் கண்டேன். வேறு இனிச் செய்யத்தக்கது எதுவும் இல்லை. அண்டர்பிரான் சீரடியாராகி விட்ட இவர் கொள்கைக் குறிவழி நிற்பேன்' என்று எண்ணியவராய், நிராயுதரைக் கொன்றார் எனும் தீமை அவருக்கு நேரிடாமல் இருக்கவேண்டும் என்று பலகையும் வாளையும் கைக்கொண்டு போர்செய்வாரைப் போன்று எதிர்நின்றார். அந்த அதிசூரன் தன் கருத்தை முற்றுவித்தான்.[10] இவ்வாறு ஏனாதிநாத நாயனார் திருநீற்று நெறியின்கண் உறுதியுடன் நின்ற செய்தியினை ஆசிரியர் இயம்புகின்றார். சைவசமயத்தினர் திருநீற்றுத் தொண்டினைத் தம் உயிருக்கும் மேலாகக் கருதுவர் என்பதை ஏனாதிநாத நாயனார் புராணத்தின் வாயிலாக ஆசிரியர் தெரிவிக்கின்றார். மைபொதி விளக்கைப் போன்று மனத்தினுள் கறுப்பு வைத்துப் பொய்த்தவ வேடத்துடன் வந்த முத்தநாதனால் தாம் கொல்லப்பட்ட நிலையிலும்,மெய்ப்பொருள் நாயனார் மெய்யெலாம் நீறுபூசி வேணிகள் முடித்துக்கட்டிக் கையில் படையை மறைத்துப் புத்தகக் கவளி ஏந்தி வந்த அவனைக் 'கொண்டுபோய் விடுக'வெனத் தம் மெய்காவலாகிய தத்தனுக்கு ஆணையிட்டார். விதியினாலே பரவிய திருநீற்றன்பு பாதுகாத்து உய்ப்பீர் என்று தம் மக்களிடம் கூறினார். திருநீற்று நெறியைச் சைவசமயத்தினர் போற்றும் பாங்கினை இந்நாயனார் வரலாறு தெரிவிக்கிறது.[10அ]

முழுநீறு பூசிய முனிவர் பற்றிய பகுதியில் சேக்கிழார் திருநீற்றின் வகைகள், அதனைச் செய்யும் திறம் ஆகியவை பற்றிக் குறிப்பிடுகிறார்.

கற்பம், அநுகற்பம், உபகற்பம் எனத் திருநீறு மூவகைப்படும். அகற்பம் என்பதாக ஒருவகை உண்டு. அதனைப் பயன்படுத்துதல் நன்றன்று. மோகாதி குற்றங்களை நீக்கும் திறன் திருநீற்றிற்கு உண்டு.

சிவமந்திர ஓமத்தால் உற்பவித்த சிவாங்கிதனில் இறைவர் திருவடியை நினைத்து அங்கிட்ட தூநீறு கற்பமாகும்.

அத்திர மந்திரத்தால் ஓமத்தீயிலிட்டு கீரணியும்படி வெந்துகொண்ட செல்லத் திருநீறு அறுகற்பமாகும். அடவிபடும் அங்கியினால் வெந்த நீறு, ஆனிலைகள் அனல்தொடக்க வெந்தநீறு, இடவகைகள் எரிகொளுவ வெந்தநீறு,மிட்டிகைகள் சுட்ட எரிபட்ட நீறு, மந்திரங்கொண்டு உண்டையாக்கப் பெற்று மடமதனில் உள்ள சிவாங்கியில் வெந்த நீறு ஆகிய அனைத்தும் உபகற்பமாகும். இம்மூவகையால் பெறப்பட்ட திருநீற்றை அரன் முன்பும், மெய்ம்மை அறிவித்த குரு முன்பும், அங்கி, ஆறு, நன்மை அல்லாப் பூமி ஆகியவற்றின் முன்பும் அணிதல் கூடாது. பிறைபோலவும் வட்டமாகவும் தொண்டர் அணிவர். தொடர்ந்துவரும் மும்மலத்தையும் அறுத்தற்கு உதவுவது திருநீறு. இவ்வாறு சேக்கிழார் திருநீறு பற்றித் தெரிவிக்கின்றார்.[11]

சைவசமயக் காப்பியமாகிய பெரியபுராணத்தில் திருநீற்றினைப் பற்றி ஆசிரியர் ஆர்வத்துடன் விவரிப்பது ஆய்வுக்குரியது. திருநீற்று நெறியின்கண் ஈடுபாடு கொண்டனர் சேக்கிழார் என்பதைக் காட்டும் வகையில் அவர் ஆள்கின்ற திருநீறு உருக்காட்சி விளங்குகிறது. திருநீறு பற்றிய சிந்தனையில் அவர் தோய்ந்து இருந்தமையைத் திருநீறு உருக்காட்சி பற்றிய ஆய்வினால் அறியமுடிகிறது. பெரியபுராணப் படைப்பிற்குத் தனிச்சிறப்புத் தரும்வகையில் இவ்வுருக்காட்சி விளங்குகிறது. திருநீற்றினை நெற்றி விரவப் பூசித்திளைத்த அடியார் சேக்கிழார் எனக்கருதற்கு ஏற்றவகையில் இவ்வுருக்காட்சி ஆய்வில் கண்டுணர முடிகிறது.

## இமயமலை, வெண்பனி - பொன், வெண்திருநீறு:

பெரியபுராணப் படைப்பின் தொடக்கத்தில் முதற்சருக்கமான திருமலைச் சருக்கத்தில், 'பொன்னின் வெண் திருநீறு புனைந்தென' கயிலைமலை தோற்றமளிக்கிறது என்கிறார் சேக்கிழார் 12. பொன்னைப்போல் ஒளிவிடும் இமயமலையின் மேல் வெண்பனி படர்ந்திருக்கும் காட்சியை ஆசிரியர் இவ்வாறு ஆர்வமுடன் வருணிக்கிறார். வெண்பனி அவருக்கு வெண்ணீற்றைப்போல் தோன்றுகிறது. இறைவர் உறைவதாகக் குறிக்கப்படும் கயிலைமலை என்பது இமயமலையின்கண் உள்ளது. இறைவரைச் சார்தற்குத் துணைபுரிவதாகவும், இறைவரைவிட்டு என்றும் நீங்காதிருப்பதாகவும், தானும் தூய்மையுடன் இருந்து தன்னை இட்டுக்கொள்வோரையும் தூய்மைபெறச் செய்வதாகவும்

உள்ள திருநீற்றை இறைவர் உறைவதாகக் கருதப்பெறும் கயிலைமலையின் மேல் படர்ந்திருக்கும் வெண்பனிக்கு உவமையாக்கிக் கூறியது பொருத்தமுறத் திகழ்கிறது. இவ்வகையில் சைவசமயத்தின் அடையாளமாக விளங்கும் திருநீறு படைப்பின் தொடக்கத்தில் உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது காணத்தக்கது. பாயிரத்தை அடுத்துள்ள படைப்பின் தொடக்கத்தில் முதல் உருக்காட்சியாக திருநீறு இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது.

## அடியார் உளத்தூய்மை - பூசுநீறு:

சுந்தரரிடம் இறைவர் அடியார்தம் பெருமை குறித்து விளக்கும்பொழுது

"மாசி லாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்"

எனக் கூறியதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 13 அகமும் புறமும் தூய்மை உடையவர்கள் அடியார்கள் என்ற செய்தியை இவ்வாறு ஆசிரியர் இயம்புகின்றார். "பூசுநீறு" என்பது உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது. மோகாதிகளை நீக்கித் தூய்மையைத் தரவல்லதாகிய திருநீற்றைப்போல் அடியார்தம் உள்ளம் தூய்மையானது என்ற கருத்து நினைத்தற்குரியது. அணிந்து கொள்பவர்தம் உள்ளத்தூய்மையின் சான்றாகத் திருநீறு விளங்குகிறது என்ற கருத்து இவண் நினைத்தற்குரியது. உள்ளம் புனிதத் தன்மை பெறுதற்குத் திருநீறு அணிதல் வேண்டற்பாலது என்பதும் ஆசிரியர் குறிப்பிடும் கருத்தாகக் கொள்ளலாம். திருநீறு உருக்காட்சி அடியார்தம் பெருமையைச் சிறப்பிக்கும் வகையில் ஆளப்பட்டுள்ளது. இறைவர் மொழியில் திருநீற்றின் பெருமையை ஆசிரியர் அமைத்துள்ளமையும் இவண் காண்டற்குரியது. நல்லோரது மனம்போல் அவரணிந்த சேமம் நிலவு திருநீற்றின் பெருமையை ஆசிரியர் அமைத்துள்ளமையும் இவண் காண்டற்குரியது. நல்லோரது மனம்போல் அவரணிந்த சேமம் நிலவு திருநீற்றின் சிறந்த வெண்மை என ஆசிரியர் குறிப்பதும் இவண் நினைத்தற்குரியது. 13அ நல்லோர் மனத்தை நினைப்பின் திருநீற்று வெண்மையும் திருநீற்றை நினைப்பின் நல்லோர் தூயமனமும் சேக்கிழார் மனத்துள் உருக்காட்சிகளாகத் தோன்றுகின்றன.

திருநீற்றுப்பூச்சு நல்ல மனத்தின் சின்னம் என்பது ஆசிரியர் குறிப்பிட விரும்பம் செய்தி.

### மலர்த்தாது - திருநீறு:

கைதை மலர்களின் வெண்ணிறமுள்ள தாதுக்கள் திருநீற்றைப்போல் விளங்குவதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

"தில்லைப்பதியின் மதில்களுக்கு அடுத்துள்ள அகழிகளில் உள்ள கமலமலர்களின் மேல் கைதைமலர்களின் தாதுக்கள் படிந்த மேனியுடன் வண்டுகள் சென்று சென்று முரல்கின்றன. தூயநீறு பூசிய தொண்டர்களைப்போல் அவை திகழ்கின்றமையைச் சுந்தரர் கண்டு மகிழ்ந்தார்" என ஆசிரியர் விவரிக்கின்றார். திருநீற்று நெறியினைக் காக்கும் திருத்தொண்டில் ஈடுபாடுடைய நாயனார் முன்பு வண்டுகள் தொண்டர்களைப் போல் தோன்றின என ஆசிரியர் படைப்பது அவரது கற்பனையின் மனவியலைக் காட்டுகிறது. கைதைமலர்களின் வெண்தாதுக்கள் வெண்ணீறாக அவருக்குத் தோன்றுகின்றன. வண்டுகளும் திருநீறணிந்து கொண்டு முரல்கின்றன என்பதாகக் கற்பனை செய்து குறிப்பிடுவதில் ஆசிரியர் ஆர்வம் காட்டுகிறார்.[14]

திருஞானசம்பந்தரின் திருமணத்திற்கு மருத்து சந்தமலர்த் தாதினைத் திருநீறாக அணிந்துகொண்டு வந்ததாக ஆசிரியர் குறிக்கின்றார்.[15]

### நீள்நிலா - அண்ணல் வெண்ணீற்றொளி:

நிலவின் நிறம், வினை, பயன் ஆகியவற்றை எண்ணும் ஆசிரியருக்கும் திருநீற்றின் நினைவு உண்டாகிறது.

தடுத்தாட்கொண்ட புராணத்தில் சுந்தரர்தம் காதல் வேட்கை குறித்து ஆசிரியர் விவரிக்கின்றார்.

"மறுவில் சிந்தை வன்தொண்டர் வருந்தினால்
இறுமருங் குலார்க்கி யார்பிழைப் பார்என்று
நறுமலர்க் கங்குல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா"

என்று குறிப்பிடப்படுகிறது. [16] இரவு என்னும் நங்கையின் முறுவலைப் போல நிலவு தோன்றுவதாகக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். அடுத்து.

"தோற்றும் மன்னுயிர்கட் கெல்லாம் தூய்மையே
சாற்றும் இன்பமும் தண்மையும் தந்துபோய்
ஆற்ற அண்ட மெலாம்பரந் தண்ணல்வெண்
நீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா"

என்றும் இயம்புகிறார். [17]

ஒரு பெண்ணின் முறுவலைப் போன்று நிலவின் தோற்றம் இருப்பதாகக் குறிப்பிட்ட ஆசிரியர் அந்நிலவு அண்ணல் வெண்ணீற்றின் பேரொளிபோன்று உள்ளது எனக் குறிப்பது அவரது கற்பனையின் மனவியலைக் காட்டுகிறது.

"..............வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்
சொக்கவெள்ளிப் பாற்குடமோ அமுத ஊற்றோ
காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பி ழம்போ
அந்தியிரு ளாற்கருகும் உலகு கண்டேன்
அவ்வாறே வான்கண்டேன் திசைகள் கண்டேன்
பிந்தியந்தக் காரிருள்தான் சிரித்த துண்டோ?
பெருஞ்சிரிப்பின் ஒளிமுத்தோ நிலவே நீதான்.
"உனைக்காணும் போதினிலே என்னு ளத்தில்
ஊறிவரும் உணர்ச்சியினை எழுது தற்கு
நினைத்தாலும் வார்த்தைகிடைத் திடுவ தில்லை
நித்தியத ரித்திரராய் உழைத்து உழைத்துத்
தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறி துகூழ் தேடுங்கால் பானை ஆரக்
கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின்நிலவே உனைக்காணும் இன்பம் தானோ?..
இன்பமென்னும் பால்நுரையே குளிர்வி ளக்கே
எனைஇழந்தேன் உன்னெழிலில் கலந்த தாலே" [18]

என்று பாரதிதாசன் நிலவுபற்றிப் பாடுகின்ற பாங்கு அவரது சமுதாய உணர்வின் அழுத்தத்தைக் காட்டுகிறது. பூத்த தனிப்பூ, சொக்கவெள்ளிப் பாற்குடம், அமுத ஊற்று, குளிரடைந்த

ஒளிப்பிழம்பு, காரிருளின் சிரிப்பு என்று பலவகை உருக்காட்சிகளை மரபின் வழியில்நின்று ஆள்வதன் வாயிலாக நிலவைச் சிறப்பித்துக்கூறும் பாரதிதாசன் "பானை ஆரக் கனத்திருந்த வெண்சோறு" என்ற உருக்காட்சியைப் படைத்து நிலவைப் போற்றும் இடம் அவரது கற்பனையின் மனைவியலைக் காட்டுகிறது. காரிருள் என்னும் மங்கையின் சிரிப்பு என நிலவைக் குறிப்பதில் ஒருமைப்பாடு கொண்டவராகச் சேக்கிழாரும் பாரதிதாசனும் விளங்குகின்றனர். எனினும் அண்ணல் வெண்ணீற்றின் பேரொளி, பானை ஆரக் கனத்திருந்த வெண்சோறு என்ற உருக்காட்சிகள் இவருடைய கற்பனையின் மனைவியலில் உள்ள வேறுபாட்டைக் காட்டுகின்றன. சைவசமய உணர்வில் அழுத்தம் உடைய ஒருவராகச் சேக்கிழாரையும் சமுதாய உணர்வில் அழுத்தம் உடைய ஒருவராகப் பாரதிதாசனையும் கண்டுணரத்தக்க வகையில் இவ்வுருக்காட்சிகள் உள்ளன. திருநீற்று நெறியில் சேக்கிழாருக்குள்ள ஈடுபாட்டின் வெளிப்பாடு எனத் திருநீறு உருக்காட்சி விளங்குகிறது. பெரியபுராணப் படைப்பின் தனிச்சிறப்பிற்குக் காரணமாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது. பெரியபுராணப் படைப்பில் காணப்பெறும் சைவசமய மணத்திற்குக் காரணமாக இவ்வுருக்காட்சி திகழ்கிறது. இறைவர்தம் வெண்ணீற்றின் பேரொளி போன்று, நிலவு காட்சி தருகிறது எனச் சேக்கிழார் குறிப்பது அவரது பத்தியுணர்வைக் காட்டுகிறது.

## பகற்பொழுது - திருநீறு:

"சீகாழிப்பதியில் ஓமதூமத்தினால் இரவுப்பொழுதும் திருநீற்றொளியால் பகற்பொழுதும் தோன்றுகின்றன. இரவுப்பொழுது எனவும் பகற்பொழுது எனவும் வேறு இருப்பது மிகைதாம்" என்கிறார் சேக்கிழார். சீகாழிப்பதியில் இடையறாமல் வேள்விகள் நடத்தப்படுகின்றன என்பதையும், மக்கள் திருநீற்றைப் பெரிதும் போற்றுகின்றனர் என்பதையும் சேக்கிழார் இவ்வாறு குறிப்பிடுகின்றார். சீகாழிப்பதியில் சைவசமயம் செழிப்புற்றிருந்தது என்ற கருத்தைத் தெரிவிப்பதாகத் திருநீறு உருக்காட்சி விளங்குகிறது.[19]

" பூம்புகலூர் என்னும் பதியின்கண் வாழ்ந்த திருத்தொண்டராகிய முருகநாயனார் அணிந்திருந்த திருநீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளி யாம இருளையும் வெளியாக்கியது.

திருப்பள்ளித் தாமத்திற்காக மலர் பறிக்கும்பொழுது மலர்மேல் அமர்ந்து மதுவை உண்ணும் வண்டுகளும் அவரது கண்களுக்குக் களங்கமின்றி விளங்கின" என்று சேக்கிழார் மொழிகின்றார்.[20] இரவை நீக்கிப் பகலை உண்டாக்கியது திருநீறு என்பது கருத்து. இரவையும் பகலாக மாற்றிவிடும் ஆற்றல் திருநீற்றிற்குண்டு என ஆசிரியர் ஆர்வத்துடன் குறிப்பிடுகிறார்.

## முத்துவெண்குடை - திருநீற்றின் சோதி:

"சம்பந்தர் இறைவரால் தரப்பெற்ற முத்துச்சிவிகையில் அமர்ந்து சென்றார். அப்பொழுது தொண்டர்கள் முத்தினால் செய்யப்பெற்ற வெண்குடையைப் பிடித்து வந்தனர். அந்த வெண்குடை திருநீற்றின் சோதி நல்லதொரு ஒளிவட்டமாக அமைந்து மேலே வருவதுபோல் தோன்றியது" என்று சேக்கிழார் வருணிக்கிறார்.[21] திருநீற்று நெறியாகிய சைவசமயத்தை நிறுவுவதற்குத் தொண்டுபுரிந்த சம்பந்தருக்கு இறைவர் அளித்த வெண்குடையைத் திருநீற்றின் சோதி நல்லொளி வட்டம் என்ற உருக்காட்சியால் ஆசிரியர் சிறப்பிப்பது பொருத்தமாக உள்ளது.

பெரியபுராணப் படைப்பிற்குச் சைவசமய மணத்தை ஊட்டும் திறனுடையதாகத் திருநீறு உருக்காட்சி விளங்குகிறது என்பது இவ்வாய்வினால் கண்டுணரப்பட்டது. திருநீற்று நெறியைப் போற்றுவதில் ஆசிரியர் ஆர்வம் உடையவர் என்பதை ஆய்வுவாயிலாக அறியமுடிகிறது. திருநீற்றை அணிந்து கொள்வதில் ஈடுபாடு மிக்கவர் ஆசிரியர் என்பதையும், திருநீற்றின் சோதி அவரது மனத்தை ஈர்த்துள்ளது என்பதையும் திருநீறு உருக்காட்சி தெரிவிக்கிறது. பெரியபுராணப் படைப்பின் தனிச்சிறப்பையும் ஆசிரியர்தம் கற்பனையின் மனவியலையும் இவ்வுருக்காட்சியால் அறியலாம்.

## விளக்கு உருக்காட்சி:

விளக்கு உருக்காட்சி தொன்றுதொட்டுத் தமிழ் இலக்கியத்தில் இடம்பெற்று வருகிறது. சேக்கிழார் பெரியபுராணத்தின் இவ்வுருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்கின்றார்.

இறைவரைத் தூண்டாவிளக்கு என்று குறிப்பிடுகின்றார் சேக்கிழார்.[22] சம்பந்தரை ஞானமணி விளக்கு என்று ஆசிரியர் குறிப்பிடுவது முருகியற்கலை பயப்பதாக உள்ளது. "பெருகொளிப்பரப்பால் அண்டமெலாம் கொண்டதொரு ஞானமணி விளக்கு எழுந்து வந்ததுபோல இருந்தது. ஞானசம்பந்தர் மதுரைக்கு எழுந்தருளிய செயல்" என்கின்றார் ஆசிரியர்.[23] சம்பந்தர்தம் ஞானம், அருள்தன்மை, தொண்டின் மாண்பு ஆகியவை இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன. புதுமை, ஆழம், கிளர்ச்சியூட்டும் ஆற்றல் உடையதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

சம்பந்தருக்கு இறைவர் நல்கிய முத்துவெண்குடை, சிவிகை, சின்னம் ஆகியவை எண்டிசைக்கும் உரிய விளக்கினைப்போல் உள்ளன என்பதாக ஆசிரியர் வருணிக்கிறார்.[24]

மானக்கஞ்சாறநாயனாரின் மகளைச் செம்மணியின் தீபம் எனவும்.[25] திலகவதியாரைத் தூண்டுதவ விளக்கெனவும்.[26] பரமதத்தனின் பெண்மகவைப் பெருகொளி விளக்கெனவும்.[27] பூம்பாவைய்யை அணிவிளக்கெனவும்.[28] சம்பந்தரின் மணப்பெண்ணை அம்பொன் செய் தீபமெனவும்,[29] சங்கிலியாரைத் தூண்டுசோதி விளக்கு, குன்றாவிளக்கு எனவும்,[30] பரவையாரைத் தூண்டுசோதி விளக்கெனவும், மணிவிளக்கெனவும்,[31] அண்டம், முச்சுடர் ஆகியவற்றை முறையே திருமனை, தீபம் எனவும்,[32] ஞானத்தை ஒளிவிளக்குச்சுடர் எனவும்[33] சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

## தவவேடம், வஞ்சம் - விளக்கு, உட்கறுப்பு:

சிவவேடத்தைப் பெரிதும் போற்றும் மெய்ப்பொருள் நாயனாரின் சீலத்தை அறிந்து அவ்வேடம் கொண்டு வஞ்சனையால் அவரை வெல்லும் நோக்குடன் முத்தநாதன் என்பான் திருக்கோயிலூருக்கு வந்தான். அவன் வந்தமையை,

"மெய்யெல்லாம் நீறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி ஏந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன்"

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். 34

மையினை உள்ளே பொதித்துவைத்து வெளியே ஒளிவிடும் விளக்கினைப்போல் மனத்தினுள் வஞ்சனையைப் பொதிந்து வைத்துப் புறத்தில் தவவேடம் தாங்கி வந்தான் அம்முத்தநாதன். தவவேடம் விளக்கின் சுடரைப்போல் ஒளிவிடுகிறது. அவன் நெஞ்சிலுள்ள வஞ்சனை, விளக்குத்திரியைச் சுற்றியிருக்கும் நீலக்குப் பாயத்தைப்போல் உள்ளது.

"..... ஒவ்வொரு விளக்கின் சுடரும் திரியினைச் சுற்றிய நீலக்குப்பாயம், அதன் மேற்செஞ்சுடர், அதன்மேல் வெண்சுடர் என மூன்று பகுதிகளையுடையது. விளக்குச்சுடர் எரிவதற்கு ஆதரவானது நெய். அது உருகி நெய்யாவியாக மாறும். அது நீலநிறத்துடன் நின்று திரியைச் சுற்றிய சுடர்வது உட்பாகமாய், நெருப்புக்கு விறகு உதவுவதுபோல விளக்குச்சுடர் எரிவதற்குக் காரணமாய் உதவுகின்றது. ஆகவே சுடரின் நிலைப்பகுதியான உட்கறுப்பே அதன் விளக்கத்துக் காரணமாம். இங்கு முத்தநாதன் கொண்ட தவவேடத்திற்கும், அவன் தன் மனத்தினுட்கொண்ட வஞ்சகக் கறுப்பே காரணமாயிற்று என இவ்வரிய உவமத்தின் அழகினை விரித்துக் கண்டுகொள்க. 'நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீலமணி மிடற்றான்' (அப்பர்பெருமாள் - கோயில் திருவிருத்தம் - 4) முதலிய திருவாக்குகள் காண்க. விளக்கும் இருளும் என்று முரண்பட்ட இருபொருளுக்கு ஏற்ற இந்த அரிய உவமானம் ஆசிரியர் சேக்கிழார் பெருமானது தெய்வமணக்கும் செய்யுள்களில் காணும் அரிய உவமானங்களில் ஒன்று. இஃது வேறு எந்தக் கவிகளிடத்தும் காணுதலரிது. இதன் அருமையினை உன்னிக்கவனிக்க.. நீறு வேணி என்னும் சைவத்தெய்வத் தவவேடம் என்றும் மெய்யேயாம். அவ்வேடம் பொய்யாவதில்லை" என்ற விளக்கம் 35 இவ்வுருக்காட்சியில் முருகியலுணர்ச்சியூட்டும் திறனைக் காட்டுகிறது. பொருத்தமும் செறிவும் ஆழமும் புதுமையும் நிறைந்த உருக்காட்சியாக இது திகழ்கிறது.

மகளிர் விளக்கு உருக்காட்சியால் சிறப்பிக்கப் படுகின்றனர். செம்மணியின் தீபம், தூண்டுதவ விளக்கு, பெருகொளி விளக்கு, அணிவிளக்கு, அம்பொன்செய் தீபம், தூண்டுசோதி விளக்கு என்ற தொடர்களில் வரும் அடைமொழிகள் பொருட்சிறப்புடன் நயம் சான்றவையாக உள்ளன.

நினைக்குமாறு செய்கிறது. இது பிறவித்துன்பத்தைத் தெள்ளிதின் உணர்த்துகின்ற உருக்காட்சி [illegible] ள்ளது.[5]

## நமிநந்தியடிகள் - ஆணி:

ஆணி என்பது பொன்னின் மாற்றினைக் கண்டறிதற்கு உதவும் கட்டளைக் கல் அல்லது உரையாணி என்பதைக் குறிக்கும். (பொன்னின் தரத்தை அளந்துகாட்டும் உரை ஆணியைப்போல் பெருமைமிக்க அடியார்தம் திறத்தை அளந்துகாட்டும் திறனுடையவர் நந்தியடிகள் நாயனார் என்ற பொருளில்) நாவரசர் அவரைத் "தொண்டர்க்கு ஆணி" என்று போற்றினார் என ஆசிரியர் தெரிவிப்பது நினைத்தற்குரியது. தொண்டர்கட்கெல்லாம் சிறந்ததொரு எடுத்துக் காட்டாக நமிநந்தியடிகள் நாயனார் விளங்கினார் என்பது கருத்து.[6]

## இருவினையொப்பு - துலை:

"திருஞானசம்பந்தரால் திருநீறு பூசப்பெற்றமையால் பாண்டியன் நின்றசீர் நெடுமாறனின் முன்னை வல்வினைகள் நீங்கின. முதல்வனாகிய இறைவரை அறியும் தன்மையை அவன் அடைந்தான். அவனது நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் ஒத்த தன்மையை அடைந்து துலை என நின்றன" என்பதாகச் சேக்கிழார் மொழிவதில் துலை உருக்காட்சி இருவினையொப்பு என்னும் தத்துவக் கோட்பாட்டை விளக்குகிறது. பொருத்தமானதாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது.[7]

## பூம்பாவையின் குதிக்கால் - ஆவநாழிகை:

"திருமயிலைப் பதியைச் சேர்ந்த சிவநேசர் என்ற பெருவணிகர்தம் மகளாகிய பூம்பாவை தன் என்புசேர் குடத்திலிருந்து சம்பந்தர் பாடிய திருப்பதிகத்தின் திறத்தால் மேலெழுந்தாள். மலரிலிருந்து எழும் திருமகள் போல் விளங்கிய அவளது குதிக்கால் பொன்னை நிறுக்கும் தராசுத் தட்டினைப்போல் இருந்தது" என்கிறார் சேக்கிழார். வணிககுலப் பெண்ணின் உடலுறுப்பை வணிகத்துறைச் சார்பான பொருளை உருக்காட்சியாகக் கொண்டு ஆசிரியர் சிறப்பிப்பது நினைத்தற்குரியது.[8]

### அமணர் - வலை:

சம்பந்தர்தம் திருவடியைச் சேர்ந்தமையால் பாண்டியன் நின்றசீர் நெடுமாறன் அமணராகிய வலையிலிருந்து விடுபட்டான் என ஆசிரியர் குறிப்பிடுகின்றார். வலை உருக்காட்சி அமணர்கள் பாண்டிய மன்னனைத் தம் வயப்படுத்திக் கொண்டிருந்தனர் என்ற செய்தியைத் தெரிவிக்கிறது.[9]

### சமணர் - தீச்செயல்; கடைக்கால்:

கட்டப்படவிருக்கும் மனைக்கு அடிநிலை அமைப்பதாகிய செயல் கடைக்கால் எனப்படும். அடிநிலையின் அமைப்பிற்கேற்பக் கட்டடத்தின் அகலம், நீளம், உயரம் என்பன அமையும். கடைக்கால் இடுதல் என்ற செயலைச் சேக்கிழார் உருக்காட்சியாகப் படைக்கிறார்.

"சம்பந்தர் தம் தொண்டர்களுடன் தங்கியிருந்த திருமடத்திற்குச் சமணர் தீயிட்டனர். தீ இட்டதாகிய தீய தொழிலில் தம்செயலின் கடைக்காலை இட்டனர். எனவே அதன்மேல் விளம்பும் பயன்களும் அதனை ஒட்டியே உண்டாகும். அஃது எவ்வாறு அமையுமோ! என்று பாண்டிமாதேவியார் எண்ணினார்" என்பதாகச் சேக்கிழார் மொழிகின்றார்.[10] பொருத்தமான ஒன்றாகக் கடைக்கால் உருக்காட்சி விளங்குகிறது.

பிற உருக்காட்சிகளில் இடம்பெறுவனவாகவுள்ள உருக்காட்சிகள் பின்னிணைப்பில் காட்டப்பட்டுள்ளன.

ஆசிரியர்தம் உலகியலறிவைத் தெரிவிப்பனவாக இவ்வுருக்காட்சிகள் விளங்குகின்றன. தெரிந்த பொருள்களை உருக்காட்சிகளாகப் படைத்துக் கொண்டு அவற்றின் வாயிலாக நுட்பமான தத்துவக் கருத்துக்களை விளக்கும் ஆசிரியர் திறம் காணத்தக்கது.

## (II) கேள்விப்புல உருக்காட்சி:

பெரியபுராணத்தில் ஆளப்படும் கேள்விப்புல உருக்காட்சியை இயற்கை, அன்றாட வாழ்க்கை என்ற வகைப் பாடுகளில் அறிந்து ஆய்வதற்கு வாய்ப்புள்ளது. வேகத்துடன் கூடிய இடிமுழக்கம், ஆற்றின் ஒலி, கடல்ஒலி, சுரும்பு, வண்டு, எழுப்பும் ஒலி, பசு, கன்று இவற்றின் ஒளி, நாய் குரைப்பொலி, குயில், கிளி ஆகியவற்றின் இன்னொலி, சுகை, ஆந்தை ஆகியவற்றின் இன்னாதஒலி ஆகியவற்றை ஆசிரியர் கேள்விப்புல உருக்காட்சியாக ஆள்கின்றார். இவை அனைத்தையும் இயற்கை என்ற வகையில் காணலாம். இசைக்கலைத் துறையின்பாற்படும் இசைக்கருவிகள், மக்கள் எழுப்பும் பல்வேறு வகை ஓசைகள், சந்தத்துடன் கூடிய பாடல்கள் என்பன கேள்விப்புல உருக்காட்சிகளாக ஆளப்பட்டுள்ளன. இவை அன்றாட வாழ்க்கை என்ற வகையில் இடம்பெறுகின்றன. ஆசிரியர்தம் இயற்கையியல் அறிவும், அன்றாட வாழ்க்கை அனுபவமும் இவ்வுருக்காட்சியால் வெளிப்படுகின்றன். ஆசிரியர்தம் இசைக்கலையார்வம், கவிதைத்திறன், இறையன்பு ஆகியவைபற்றி அறிய இவ்வுருக்காட்சி ஆய்வு உதவுகின்றது.

## இயற்கை: வான்: மேகம் - இடி முழக்கம் உருக்காட்சி:

மழைக்காலத்தில் கேட்கப்பெறும் இடிமுழக்கம் உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது. விலங்குகளின் இயக்கம், முழக்கம் என்பன இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கப்படுகின்றன.

## கருமேதி வாவியில் படிதல் - உருமேகம் இடியுடன் கடலிற் படிதல்:

தொண்டைநாட்டுச் சிறப்பினைச் சேக்கிழார் திருநாவுக்கரசர் புராணத்துள் வருணிக்கின்றார். "கருமேதிகள் வாவியில் படிவது இடியுடன் கூடிய மேகங்கள் பெருங்கடலினுட் படிவதுபோல் உள்ளன" என்கிறார். [1] கருமேதிகளின் பருமையும் தன்மையும், நாட்டின் நீர்வளமும் இதனால் விளக்கப்படுகின்றன.

## யானைகளின் முழக்கம் - மேகமுழக்கம்:

திருக்காளத்தி மலையில் மதங்கொண்ட யானைகள் எங்கும் இடிக்குரல் எழிலியொடு மாறுகொள் முழக்கங்காட்டும் என்பது சேக்கிழார் மொழி. [2]

## பரி, மறவர் படைக்கலம், கரி இவற்றின் ஒலி -

## கடைநாளின் மேகமுழக்கு:

நின்றசீர் நெடுமாறநாயனார் புராணத்துள் போர்க்களம் பற்றிய வருணணையில் சேக்கிழார் குறிப்பது கேள்விப்புல உருக்காட்சியாக உள்ளது. மன்னனின் வெற்றிச்சிறப்பை விளக்கும் உத்தியாக இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.

"வயப்பரியின் களிப்பாலியும் மறவர்படைக் கலஒலியும்
கயப்பொருப்பின் முழக்கொலியும் கலந்தெழுபல் லியஒலியும்
வியக்குமுகக் கடைநாளின் மேகமுழக் கெனமீளச்
சயத்தொடர்வல் லியுமின்ற தாம்விடுக்கும் படிதயங்க"

என்பது சேக்கிழார் பாடல்.[3]

## வெண்சங்கம் - பெருமழைக்குலத்தினார்ப்பு:

சுந்தரர் திருமணக்கோலத்துடன் திருமணப் பந்தருக்கு வந்தபொழுது வெண்சங்கம் இடியோசை போல ஆர்த்தது என்கிறார் ஆசிரியர்.[4] திருமண விழாவை நினைவில் தோற்றுவிப்பதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

## தூரியம் - மழைஇடி:

திருவாரூர்வாழ்வோர் சுந்தரரை எதிர்கொண்ட பொழுது தூரியம் என்ற இசைக்கருவி மழைஇடியைப்போல ஒலித்தது என்கிறார் சேக்கிழார்.[5] சமயத் தலைவரைத் தொண்டர்கள் ஆர்வத்துடன் வரவேற்பது நினைவில் தோன்றுகின்றது எனலாம்.

## நாண் ஒலி - இடிஒலி:

விலங்குகள் விலகியோடுமாறு செய்யவேண்டித் திண்ணனார் தமது வில்லின் சிறுநாணைத் தடவியபொழுது, அந்த நாண் இடிஒலியைப்போன்று ஒலித்தது.[6] திண்ணனார்தம் வில்லின் வலிமை இவ்வாறு சிறப்பிக்கப்படுகிறது.

### மங்கல இயங்கள் - மழைமுழக்கு:

திருவாரூர் நகரின் சிறப்பைக் குறிக்கும் ஆசிரியர், மலர்த்தடம், சாலைகள், நெற்றிகள், சதுக்கம், ஆடரங்கு, இமையவரும் விரும்பும் வியலிடம் ஆகியவற்றின்கண் மங்கல இயங்கள் மழை முழக்கினைப்போல் ஒலித்தன என்கிறார்.[7] திருவாரூர் என்னும் சிவத்தலம் ஆசிரியரை மிகவும் கவர்ந்த ஒன்று என்பதை இவ்வுருக்காட்சியால் அறியலாம்.

### ஏனத்தின் தோற்றம், ஓசை - கருமுகில், இடி:

திண்ணனார்தம் வேட்டையில் பிடிபட்ட ஏனத்தைப் பற்றிச் சேக்கிழார்,

"பொய்கரு முகிலென இடியோடு பிதிர்கனல் விழிசிதறி
மொய்வலை களைஅற நிமிர்வுற முடுகிய கடுவிசையில் சென்றது"

என்கிறார்.[8]

ஏனத்தின் முழக்கம் இடியோசையைப்போல் இருந்தது என்பது கருத்து. இத்தகைய ஏனத்தைத் திண்ணனார் கொன்றார் என்பதை விளக்கும் வகையில் இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளது.

### பட்டவர்த்தனம் - முகில்முழக்கம்:

கருவூர்ச்சோழனின் பட்டவர்த்தனம் என்னும் யானையின் முழக்கம் முகிலின் இடியோசையைப் போன்று இருந்தது என்கிறார் சேக்கிழார்.[9]

### கொலைக்களிற்றின் ஒலி - இடியொலி:

திருநாவுக்கரசரை வீழ்த்துவதற்கெனப் பல்லவ மன்னனால் ஏவிவிடப்பட்ட யானையின் ஒலி இடியுற்றெழும் ஒலியாக இருந்தது என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[10]

### மறையொலி முழக்கம் - மாமழைமுழக்கம்:

• திருவாக்கூர் என்னும் பதியில் தூமலர்ச் சோலைகளிலும்; சுடர்தொடு மாடங்களிலும் மழைமுழக்கம் இருந்தது. ஆனால் அந்த ஊரில் கேட்கப்பெற்ற மறையொலியின்

முழக்கம் அந்த மழைமுழக்கத்தையும் தாழுமாறு செய்துவிட்டது என்று ஆசிரியர் கூறுகின்றார். [11] மறையொலியைக் கேட்பதில் சேக்கிழார் ஈடுபாடு உடையவர் என்பதை இவ்வுருக்காட்சியால் அறியலாம். மழைமுழக்கத்திற்கு மறைமுழக்கம் இன்றியமையாதது என்ற கருத்து ஆசிரியருக்கு உண்டு எனவும் குறிப்பிடலாம்.

## ஆற்றின் ஒலி உருக்காட்சி:

### மெய்யன்பர் ஆர்ப்பு - கங்கையின் ஆர்ப்பு:

சுந்தரருடன் வந்த சைவ மெய்யன்பர்கள் எழுப்பிய ஆரவாரம் கங்கையாற்றின் ஆர்ப்பினைப்போல இருந்தது என ஆசிரியர் குறிப்பிடுகின்றார். [12] மெய்யன்பர்தம் இன்ப உணர்வைத் தெரிவிப்பதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

## கடலொலி உருக்காட்சி:

### மாதவர் ஆர்ப்பு - கடலொலி:

திருஞானசம்பந்தர் பாண்டிநாட்டிற்குப் புறப்படும் பொழுது திருநாவுக்கரசர் அவரை வணங்கி விடைகொடுத்தார். சம்பந்தர் முத்துச்சிவிகையின் மீதேறினார். ஒருநாமத்து அஞ்செழுத்தும் ஓதி வெண்ணீற்றொளி விளங்கும் நாவுக்கரசர்தம் திருமேனியைத் தொழுதார். இந்நிகழ்வினைக் கண்ணுற்ற மாதவர்கள் மகிழ்ச்சிகொண்டு, நெஞ்சில் வருநாமத்து அன்புருளும் கடலொலியைப்போல ஆர்ப்பொலியை எழுப்பினர். அந்த ஒலி வையம் முழுதும் நிறைந்தது. சம்பந்தர், நாவரசர் ஆகியோர்மாட்டு மாதவர் கொண்டிருந்த அன்பின் வெளிப்பாடாக அவர்தம் ஆரவாரம் உள்ளமை நினைத்தற்குரியது. [13]

### ஆவணவீதி - கடல்ஒலி:

பொருள்களை விலைக்குக் கொடுப்போர், கொள்வோர் பேரோசை ஆவணவீதி முழுதும் நிறைந்துள்ளது. பல தெருக்களிலிருந்தும் நிறைந்த பண்டங்கள் ஆவணவீதிகளுக்குக் கொண்டுவரப்படுகின்றன. ஆவணவீதிகளின் அகற்சி, பொருள்களின் நிறைவு, பொருள் விற்போர், வாங்குவோர் உண்டாக்கும் பேரொலி, பொருள்களைக் கொண்டுவருவதும்,

எடுத்துச்செல்வதும் ஆகிய செயல்களால் உண்டாகும் ஆரவாரம் ஆகியவை இவ்வுருக்காட்சியில் குறிக்கப்பெறுகின்றன. கடல் உருக்காட்சி, திருவாரூர் நகரில் கடைத்தெருவின் காட்சியைப் பொருத்தமுறத் தெரிவிக்கிறது. [14] கரும்பாலையில் பணிபுரிவோர் ஓலமும் சோலைகளில் வண்டினங்கள் எழுப்பும் சும்மையும், மறையவர்கள் வேதம் ஓதும்பொழுது உண்டாகும் ஓசையும் ஒன்றுசேர்ந்து கடலோசையைவிட மிகுந்த பேரொலியை உண்டாக்குகின்றன என்கிறார் ஆசிரியர்.

## நாகை - கடல்ஒலி:

சோழநாட்டுத் துறைமுக நகராகிய நாகப்பட்டினத் திருநகரை அதிபத்தநாயனார் புராணத்துள் குறிப்பிடுகிறார் ஆசிரியர். நாகை நகரமே கடல்போலத் தோன்றுகிறது. வணிகர்கள் பல நாட்டிலிருந்தும் அங்கு வருகின்றனர். பல்வேறு பண்டங்கள் அங்குவந்து குவிகின்றன. மக்களின் ஆரவாரம் பேரொலியாக விளங்குகின்றது. திருமகள் வாழும் இடமாக அந்நகரம் திகழ்கிறது. வேண்டுவன அனைத்தும் கிடைக்கின்றன. இவ்வகையில், "அந்நகரத்தின் தோற்றம் கடலைவிடப் பெரிதென்று கூறும்படி சிறந்துள்ளது" என்று சேக்கிழார் நாகையைப் புகழ்ந்து பாடுகிறார். "வெளிநாடுகளிலிருந்து வரும் கலங்கள் தாம் சுமந்துவந்த பல கரிகளையும், பரிகளையும், மணியின் வகைகளையும். துகிலின் வகைகளையும் தரையில் சொரிகின்றன. கரிகளும், பரிகளும் கூட்டம் கூட்டமாக அல்லது வரிசை வரிசையாகக் கரைக்கு வருகின்ற தோற்றம் அலைகளைப்போல் தோன்றுகிறது" என்கிறார் சேக்கிழார். நாகை நகரில் தோற்றம் கடலைவிடப் பெரிதாகத் தோன்றுகின்றது என்று கூறுவதின் வாயிலாக ஆசிரியர் அந்நகரின் வளத்தை உணர்த்தியவராகிறார். கடல் உருக்காட்சியைப் பொருத்தமாக ஆள்கிறார். துறைமுக நகரைக் கடலுக்கே உவமித்தமையின் பொருத்தமும் நினைத்தற்குரியது. மக்கள் அலைஅலையாக வருகின்ற காட்சி அவர்களிடமிருந்து எழும் பேரொலி, பல்வகைப் பண்டங்களின் மிகுதிப்பாடு கரி, பரி போன்றவற்றின் திரட்சி ஆர்ப்பொலி, ஆகிய அனைத்தும் சேர்ந்து நாகையைக் கடலினும் பெரிதாகத் தோன்றுமாறு செய்கின்றன.[14]

## இரண்டு:

புகழ்ச்சோழரின் படையும் அதிகர்கோவின் படையும் மோதுவதைப் பற்றிக் குறிப்பிடும் ஆசிரியர் கடல் ஒலியை உருக்காட்சியாக ஆள்கிறார்.[15]

கிளர்ச்சியுற்று வரும் கடல்கள் இரண்டு, ஒன்றையொன்று மோதிக்கொள்வதுபோல் சோழர்படையும் அதிகன் படையும் சீற்றம்கொண்டு போரிட்டன என்பது கருத்து. இருபகுதியிலிருந்தும் அலைஅலையாய்ப் படைகள் சீற்றத்துடன் வந்தமையை இவ்வுருக்காட்சி நினைக்கும்படிச் செய்கிறது. படையின் சீற்றம் இக்கடலொலி உருக்காட்சியால் குறிக்கப்படுகிறது. படையின் ஆர்ப்பு இதனால் கூறப்படுகிறது.

"கடற்றானை" என்ற புகழ்ச்சோழர் புராணத்தின் இறுதியில் ஆசிரியர் குறிப்பது படையின் பெருக்கத்தையும் அதன் ஆர்ப்பையும் தெரிவிக்கிறது.[16]

## படைக்கடல்:

நின்றசீர் நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னன் நெல்வேலியில் தன் பகையரசர்களை வென்றொழித்த வரலாற்றைச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். நெல்வேலிப் போர்க்களத்தில் தன் படைக்கடலையும், பரிமாவின் பெருவெள்ளத்தையும், மதயானைகளின் வரிசையையும் பரப்பிப் பகைவரை வென்றான் என்று கூறுகிறார். பாண்டியனின் படை கடலாகக் கூறப்படுகிறது.[16அ]. இத்துடன் இணைந்துள்ள கடலொலி உருக்காட்சி படைப்பெருக்கத்தையும் ஆரவாரத்தையும் ஒருங்கே குறிக்கிறது.

## யானையின் அலறல் - கடலோசை:

எறிபத்தநாயனார் சிவகாமியாண்டாரைத் தள்ளிவிட்ட யானையின் கையைத் துணித்து விடுகிறார். அது கடல்போலக் கதறிக்கொண்டு கீழேவீழ்ந்தது என்ற கூறப்படுகிறது.[17] யானையின்

கதறல் கடலோசையைப்போல் மிகுதியாக இருந்தது என்பது கருத்து.

## படைஒலி - கடலொலி:

சேரமான்பெருமாள் நாயனாரின் சேனையின் ஆர்ப்பொலியைக் கடல் ஒலி உருக்காட்சியால் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். [18]

கருவூர்ச்சோழனுடைய படை எழுச்சியின்பொழுது இசைக்கப்படுகின்ற பல்வேறு ஒலிகளின் தொகுதியில் உண்டாகும் பேரோசையைக் கடல்ஒலி உருக்காட்சியால் கூறுகிறார் ஆசிரியர். [19]

"காருடன் கடைநாட்பொங்கும் கடலெனக்
கலித்த அன்றே"

என்பது சேக்கிழார் வாக்கு. "கடைநாட் பொங்கும்கடல்" என்பது பழங்கதை உருக்காட்சியுடன் இணைந்த கடல்ஒலி உருக்காட்சியாக உள்ளது.

எறிபத்தநாயனார் புராணத்துள் புகழ்ச்சோழனது சேனையின் ஓசை ஏழுகடல் ஒன்றுசேர்ந்து ஒலிப்பதுபோல் இருந்தது என்கிறார் ஆசிரியர்.

## ஊரின் பேரொலி - கடலோசை:

மூர்த்திநாயனார் நாட்டு மன்னரானமை குறித்து மதுரை மக்கள் அடைந்த மகிழ்ச்சி ஆரவாரம் கடலொலி உருக்காட்சியால் பெருத்தமுறத் தெரிவிக்கப்படுகிறது. 20

## இசைக்கருவிகள் ஒலி -கடல்ஒலி:

நாவரசருக்குண்டான சூலைநோய் இறையருளால் நீங்கியது. இறைவரின் கருணைத்திறத்தை அவர் போற்றினார். நாவரசர் உய்ந்தமையறிந்த திருத்தொண்டர்கள் அதிகைப்பதியைச் சூழ்ந்தனர். முரசம், படகம், துடி, தண்ணுமை, யாழ். முழவம், கிளைதுந்துபி, கண்டை, நிரைசங்கு ஆகிய இசைக்கருவிகளைக் கொண்டு ஒலியெழுப்பித் தங்கள் மகிழ்ச்சியை வெளிக்காட்டினார்கள். இவற்றினால் உண்டான பேரொலி

"நெடுமாகடல்" என்று கூறும்படியாக யாங்கணும் நிறைந்தது.[21] கடலின் அலைகள் ஒரே அளவில் ஒலிக்கின்ற தன்மைபோல் இச்செய்தியைக் குறிப்பிடும் சேக்கிழார் பாடலில் சந்தம் ஆளப்பட்டுள்ளது. இசைக்கருவிகள் இணைந்து ஒலிப்பது படிப்பவர் மனச்செவியில் தோன்றுகிறது.

## வாகை ஒலி - கடலொலி:

திருஞானசம்பந்தர் இறைவர் ஆணைப்படி இறைவியால் ஞானப்பால் ஊட்டப்பெற்றார். அவரது இப்பெரு நிலையைக் கண்ட மக்கள் வியந்தனர். மகிழ்ச்சியுற்றனர். இறைவர்மீது திருப்பதிகம் பாடிய சம்பந்தரை மக்கள் போற்றினர். அமரரெல்லாம் வாகைத்தே ஆரவாரித்தனர். பிரசமலரை மழையெனப் பொழிந்தனர். வாகைத் துந்துபியின் முழக்கமும், கந்தருவர், கின்னரர்கள் எழுப்பிய கானமாகிய ஒலிக்கடலின் முழக்கமும், இந்திரன் முதலிய தேவர்களின் ஏத்தொலி முழக்கமும், எல்லையற்ற பலவாகிய கணநாதர்களின் "அர" என்னும் ஓசையில் அடங்கிவிட்டன.[22] வானகத்தார் எழுப்பிய இசை "கானஒலிக்கடல்" எனப்படுகிறது.

சுந்தரர் கயிலைக்கு வரும்பொழுது எழுந்த ஐவகைநாதம், "நாற்கடல் முழக்கம்" போன்று இருந்தது என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[23]

## கொடுங்கோளூர் நகரின் ஒலி - கடலொலி:

கடலைச் சார்ந்த நகரமாகிய கொடுங்கோளூர் நகரின் ஒலி, கடல் ஒலியை அடக்கிவிடுவதாகவும், கடல்ஒலிக்கு எதிரொலியாகவும் விளங்குவதாகச் சேக்கிழார் கூறுகிறார். நகரத்தின் கலைவளம், படைவளம், சோலைவளம் ஆகிய பல்வேறு வளமும், மக்கள் வாழ்வுச்சிறப்பும், கடலொலி உருக்காட்சியால் விளக்கப்படுகின்றன.

பலவாகிய கலைகளின் ஒலி, யானைக்கன்றுகளில் ஒலி, சுரும்பினொலி, குதிரைகளின் கனைப்பொலி, பாலை, விபஞ்சி பயிலுமொலி, பாடல், ஆடல் முழவினொலி, கொடுங்கோளூரில் காலைப்பொழுதில் கேட்கப்பெறுகின்றன. இவற்றின்

ஒலியெல்லாம் சேர்ந்து கடலின் ஒலியை விழுங்கிவிடுகின்றன எனக் குறிப்பிடுகின்றார் சேக்கிழார்.[24]

ஒவ்வொருநாளும் தில்லை இறைவரின் சிலம்பொலி கேட்ட பின்னரே உணவுகொள்ளும் நியதியுடன் வாழ்ந்தவர் சேரமான் பெருமாள் நாயனார். உலகத்துவாழ் உயிர்களின் பல்வேறு பேச்சு ஒலிகளையும் கேட்டு அவற்றின் பொருள் உணரும் ஆற்றலுடையவர் அந்நாயனார். எனவே அவருடைய வரலாற்றையும், திறனையும் குறிக்கும் வகையில் செவிப்புலனுருக் காட்சியுடன் இணைந்த கடலொலி உருக்காட்சியில் அவர்தம் புராணத்தைத் தொடங்குகிறார் சேக்கிழார். 'ஒலி' என்றசொல் ஏழுமுறை இச்செய்தியைக் கூறும் பாடலில் பயின்று வருவது நினைத்தற்குரியது. இந்நாயனார் புராணத்தின் பொருத்தமுடைய தொடக்கமாக இவ்வுருக்காட்சி திகழ்கிறது.

## கடற்கரை ஒலி - கடலதிரொலி:

அதிபத்தநாயனார் புராணத்துள் கடற்கரைப் பகுதியில் உண்டாகும் பலவகை ஒலிகளைப் பற்றி ஆசிரியர் குறிக்கிறார். வலைபடும் தொடர்வடத்தை இழுத்துச் செம்மை செய்பவர்களது ஒலி, மீன்குவைகளை விலைகூறிக் கொடுப்பவர்களின் ஒலி, வெண்சங்குகளைச் சொரிபவர் ஒலி ஆகியவை கடலொலிக்கு எதிரொலியாக விளங்குகிறன என்கிறார் ஆசிரியர். "அலைநெடுங்கடல் அதிரொலிக்கெதிரொலி" என்ற தொடர் கடற்கரைப்பகுதியில் உண்டாகும் ஒலியையும் கடலொலியையும் ஒருங்கே படிப்பவர் செவியில் விழுமாறு செய்கிறது எனலாம். நெய்தல்நில மக்களின் வளமான வாழ்வைத் தெரிவிக்கிறது இவ்வுருக்காட்சி. கடற்கரைப் பகுதிக்குச் சென்று அங்கு வாழும் மக்களைப் பற்றி நேரில் கண்டறிந்தவர் ஆசிரியர் எனலாம். குறிப்பிட்ட பகுதியில் எழுகின்ற ஒலிகளை அடுக்கிக் கூறி அப்பகுதியில் வளச்சிறப்பைக் காட்டும் கவிமரபை இவ்வருணையில் காணமுடிகிறது.

## "அர" எனும் ஓசை - கடலின் ஆர்ப்பு:

பல்லவமன்னன் ஆணையால் கல்லில் கட்டப்பெற்றுக் கடலில் விடப்பட்ட நாவரசர் திருப்பாதிரிப்புலியூர்

இறையருளால் கரையேறினார். கல் அவருக்குத் தெப்பமாக அமைந்தமையைக் கண்ட மக்கள் வியப்புடன் பேராரவாரம் செய்தனர். எத்திசையினும் 'அர' என்னும் ஓசை எழுந்தது. இதே ஓசையைக் கடலும் ஆர்த்தது என்கிறார் சேக்கிழார்.[26] தற்குறிப்பேற்றமாக வந்துள்ள கடல் உருக்காட்சி அவருடைய பக்தி உணர்வைக் காட்டுகிறது. கடலின் ஆர்ப்பினும் கடவுளின் நாமஒலியைக் கேட்கிறார் ஆசிரியர் எனலாம்.

## மறைச்சிறு மாணவர் கூட்டம் ஓதும் மறையொலி,

## கமுகுச்சோலை கடல்ஒலி, சீகாழி - தோணி.

சம்பந்தர் பிறந்த பதியாகிய சீகாழியில் மறைச்சிறு மாணவர்கள் மறைகளைப் பதம், கிரமம், சடை, கனம் என்ற முறைகளின்படி ஓதுகின்றனர். இம்மறைகளின் ஒலி ஊழிக்காலத்துக் கடல்ஒலிபோல் உள்ளது. மிக்க பசுமைநிறம் காட்டும் கமுகுச்சோலைகள் கருநீல நிறம் காட்டும் கடல் நிறத்தைக் காட்டுகின்றன. மறையொலியும் கமுகுச்சோலையும் மேலே எழுந்து தோன்றுகின்றன. எனவே இப்பதி கடல்மேலே மிதக்கும் தோணிபோல உள்ளது. தோணி உருக்காட்சியுடன் இணைந்த கடல் உருக்காட்சி சீகாழிப்பதியின் சிறப்பை விளக்கிக் காட்டுகிறது. ஆழமும், கிளர்ச்சியூட்டும் திறனும், முருகியற் சுவையும் உடைய உருக்காட்சியாக இது விளங்குகிறது.[27] உயரேயிருந்து காண்பவர்க்குத் தோன்றும் சீகாழியின் காட்சியை இவ்வருணனை குறிக்கிறது எனலாம். சம்பந்தர் பிறந்த பதியாகிய சீகாழியின்மீது சேக்கிழாருக்குள்ள ஆர்வத்தை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. ஊழிக்காலத்தில் சீகாழி மட்டும் தோணிபோல் அழியாமல் தனித்து நின்றது என்ற பழங்கதைச் செய்திக்கு இயற்கை வருணனையால் ஆசிரியர் பொருத்தம் கூறுவது குறிப்பிடத்தக்கது.

## சம்பந்தர் திருமண எழுச்சியில் முழக்கு - புணரி முழக்கு:

திருஞானசம்பந்தரின் திருமண விழாவை வருணிக்கும் சேக்கிழார் கடலின் முழக்கம் பற்றிக் கூறுகிறார்.

"நங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்
மங்க லத்திரு மணஎழுச் சியின்முழக் கென்னத்
துங்க வெண்திரைச் சுரிவளை ஆர்ப்பொடு சூழ்ந்து
பொங்கு பேரொலி முழக்குடன் எழுந்தது புணரி"

என்பது சேக்கிழார் பாடல். புணரியின் முழக்கு சம்பந்தரின் திரு மண எழுச்சியின் முழக்குப்போல் இருந்தது என உரைப்பது புதுமை நயம் பயக்கிறது.

சம்பந்தர்மீது அவர் கொண்டுள்ள பெருமதிப்பையும், பக்திப்பெருக்கையும் இக்கடல் உருக்காட்சி தெரிவிக்கிறது. இது திருஞானசம்பந்தர் திருமண விழாவில் எழுந்த பேரொலியை நினைக்குமாறு செய்கிறது. [28]

## இயற்பகைநாயனார் சுற்றத்தார் ஆரவாரம் - கடல்:

இயற்பகைநாயனாரை அவருடைய சற்றத்தாரும். மனைவியின் சுற்றத்தாரும் சினத்துடன் ஆரவாரம் செய்து வளைத்தமையைக் கடல் உருக்காட்சியாலும், கடலொலி உருக்காட்சியாலும் விளக்குகிறார் ஆசிரியர். [29] சுற்றத்தாரின் எண்ணிக்கை மிகுதியைக் கடலுருக்காட்சி தெரிவிக்கிறது. சுற்றத்தாரின் ஆரவாரத்தைக் கடலொலி உருக்காட்சி குறிக்கிறது.

## இயங்குதிணை : நாலறிவுயிர்:

### சுரும்பு, வண்டு:

### வேதம் - வண்டு :

வேதங்கள். "மறைச்சுரும்பு", "திருமாமறை வண்டு" எனப்படுகின்றன. [30] "இறைவர் திருவடித்தாமரைத் தேனை உண்ணற்கு வேதங்களாகிய வண்டுகள் சூழ்கின்றன" என்று குறிக்கப்படுகின்றன. வேதம் ஒலிக்கின்றது. வண்டும் ஒலிக்கின்றது. பூவினில் தேனை உண்ண வண்டுகள் இடையறாமல் சுற்றிச்சுற்றி வருவதுபோல் மறைகள் திருவருள் பெறுதற்கு இறைவர்தம் திருவடியாகிய தாமரை மலரைச் சுற்றி வருகின்றன என்பது கருத்து. வண்டுகளின் ஓசையும், இடையறாத முயற்சியும் இவண் நினைத்தற்குரியவை.

## குழலிசை வானுலகம் செல்லல் - சுரும்பேறல்:

ஆனாயநாயனார் புராணத்தின் முதற்பாடலில், நெற்கதிர் பரப்பப்பெற்றுள்ள வயலின் வரப்புக்களில் சுரும்புகள் ஏறுகின்றன என்ற செய்தி கூறப்படுகிறது. சோலையின் மேல் நிலவு ஏறுகிறது என்றும், ஈடு பெருக்கிய போர்களின் மேல் மேகம் ஏறமுடியாமல் இளைத்தேறுகிறது என்றும், இத்துடன் இணைத்துக் கூறப்படுகின்றது.[31] கீழிருந்து இவ்வமூன்றும், மேலே செல்வதாகிய செயல் அடுக்கிக் கூறப்படுகிறது. ஆனாயநாயனாரின் குழலிசை விண்ணுலகம் சென்றமை,[32] இறைவர் திருச்செவியில் சேர்ந்தமை,[33] ஆகிய செய்திகளைக் குறிப்பாகக் காட்டும் வகையில் இவ்வாறு கூறப்பெற்றது எனக்கொள்ளின் சுரும்பு உருக்காட்சியை எதிர் நோக்கு உருக்காட்சியாகக் கருதுவதற்கு இடமுண்டு.

கார்முல்லைத் தண்ணகை வெண்முல்லை முகைகளிலிருந்து சுரும்புகள் கண்போல் மலர்ந்துள்ள காவிமலர்களில் பாய்கின்றன என்றும்,[34] பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகள் என்றும் கூறப்படுவன இவ்வாறு ஆய்வதற்குரியன எனலாம்.[35]

## ஆனாயர் கைவிரல்கள் - வண்டுகள்:

ஆனாயநாயனார் ஏழுவிரலிடையிட்ட இன்னிசை வங்கியமெடுத்துப் பெருந்துளையில் மணி அதரம் வைத்து ஊதியமையை வண்டு உருக்காட்சியால் விளக்குகிறார் ஆசிரியர். "தாழ்கின்ற மலர்களின் வண்டுகள் தாதுபிடிப்பதுபோலத் தம கைவிரல்களால் சூழ்துளைகளிலும், முரலுதல், எழுதல், நிற்றல் ஆகியவற்றைச் செய்து குழலை ஊதினார்" என்கிறார் ஆசிரியர்.[36]

"தாதுபிடித்தல் என்பது தாது நுண்பொடிகளை ஏற்றபடி எடுத்துக் குழைத்துச் சேர்த்துக்கொண்டு போதல். தாதுப்பொடிகளினால் வண்டுகள் தமது தேன்கூடுகளை அமைக்கும் என்ப. அதன்பொருட்டுத் தாதுத்தூள்களை ஒவ்வொன்றாக மலர்களின் கேசரங்கள் என்ற பூந்தான்களினின்று எடுத்து ஒன்றுதிரட்டிக் கொண்டு செல்வதற்குரிய காலஅளவுவரை வண்டுகள் பலமலர்களையும் சூழ்ந்து முரன்றும், எழுந்தும், நின்றும் தொழிற்செய்யும் இத்தொழில்களால் பலதிறப்பட்ட சுரங்கள்

போன்ற ஓசைஎழும்பும். ஆதலின் இங்கு இதனை உவமை கூறினார். வினைபற்றி வந்த உவமம்" என, சி.கே. சுப்பிரமணிய முதலியார் விளக்கம் தருகிறார்.[36அ] இசைக்கருவியாகிய குழலை வாசிக்கும் செயலுக்கு இசைக்கின்ற வண்டினையே உவமையாகக் கூறிய பொருத்தம் காணத்தக்கது. இயற்கையில் ஆசிரியருக்கு இருந்த ஈடுபாட்டைக் காட்டும் வகையில் இவ்வுருக்காட்சி அமைந்துள்ளது எனலாம். இசைக்கலையில் அவருக்குள்ள ஈடுபாட்டையும் இவ்வுருக்காட்சியால் அறியலாம். வண்டுகள் பூக்களிலிருந்து தாதுபிடிக்கும் செயலைச் சேக்கிழார் கூர்ந்து கவனித்துள்ளார் எனலாம். குழலூதும் கலையின் கூறுபாடுகளை அவர் அறிந்திருந்தமையை இவ்வுருக்காட்சியால் அறியலாம். குழலிசையில் அவருக்கிருக்கும் ஈடுபாட்டையும் அறியமுடிகிறது.

## சீகாழிப்பதியின் சிறப்பு - சுரும்பிசை:

சேக்கிழார் சம்பந்தர்தம் பிறந்த பதியாகிய சீகாழியின் சிறப்பை விவரிக்கும் வகையில்.

"காமர்திருப் பதியதன்கண் வேதியர்போற் கடிகமழுந்
தாமரையும் புல்லிதழுந் துயங்கியநூ லுந்தாங்கித்
தூமருநுண் துளைணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையாற் செழுஞ்சாமம் பாடுமால்"

என்று பாடுகிறார்.[36ஆ]

மக்கள் உருக்காட்சியுள் இடம்பெறத்தக்க வேதியர் உருக்காட்சி தாமரைமலர்களின் சிறப்பைக் காட்டுகிறது. இது காட்சிப்புல உருக்காட்சியாக அமைந்துள்ளது. தாமரைமலர்கள் தம்மிடம் உள்ள சுரும்பின் இசையால் செழுமையான சாமவேதத்தைப் பாடுகிறது என ஆசிரியர் குறிப்பது கேள்விப்புல உருக்காட்சியாக விளங்குகிறது. சுரும்பின் ஒலி சாமவேத ஒலியாகத் தோன்றுவதாக ஆசிரியர் தெரிவிக்கிறார். வேத ஒலியைக் கேட்பதில் ஆசிரியர் கொண்டுள்ள விருப்பத்தின் வெளிப்பாடாக இது விளங்குகின்றது எனலாம். சம்பந்தர் பிறந்த பதியில் தாமரை மலர்கள் தம்மீது உள்ள சுரும்பிசை கொண்டு சாமவேதம் இசைக்கிறது என்ற கருத்து ஆசிரியரின் கற்பனையின் மனவியலைத் தெரிவிக்கிறது.

## இறைவர் - கதறிக் கனைக்கும் புனிற்றா :

காவிரியாறு பெருகி இருகரையும் பொருது செல்கிறது. நாவாய், ஓடங்களால் கடத்தற்கரிய வகையில் வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது. சுந்தரரும் சேரமான்பெருமாள் நாயனாரும் காவிரியைக் கடந்து வடகரையில் உள்ள திருவையாற்று இறைவரைத் தொழுதிடச் சென்றனர். "ஐயாறுடைய அடிகளோ" என்ற வேட்கையுடன் அழைத்துத் திருப்பதிகம் பாடினார் சுந்தரர்.[37], அப்பொழுது மன்றிலாடும் இறைவர்,

"கன்று தடையுண் டெதிரழைக்கக்
கதறிக் கனைக்கும் புனிற்றாப்போல்
ஒன்றும் உணர்வால் சராசரங்கள்
எல்லாம் கேட்க ஓலம் என
நின்று மொழிந்தார் பொன்னிமா
நதியும் நீங்கி நெறிகாட்டி"

என்று குறிப்பிடுகிறார். "கன்று தடையுண்டு எதிரழைக்கும் ஓசை கேட்டுப் பசு கனைத்துக் கதறுகிறது[37] என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். கன்று சுந்தரரையும் பசு இறைவரையும் குறிக்கின்றன. பசுவை அடையவேண்டும் என்று கன்றும், கன்றினை அடையவேண்டும் என்று பசுவும் ஒன்றுக்கொன்று முந்துகின்ற நிலையை நுணுகியறிந்து சேக்கிழார் விலங்கு உருக்காட்சியை ஆள்கிறார். "புனிற்றா என்பது ஈன்றணிமையுடைய பசு, கன்றின்மீது எல்லையற்ற பாசம் உடையது இப்பசு. கன்று தம் தாய்ப்பசுவினை அணுகுதற்கு இடையில் ஏதேனும் தடையுண்டாகில் தாயினை அழைத்துக்கூவும். அதுகேட்டுத் தாய்ப்பசுவும் தானும் அம்மாவெனக் கதறி எதிர்கூவும். இவ்வாறு உலகிற்காணும் இயல்புபற்றி இவ்வுவமை எழுந்தது" என்பர் சி. கே. சுப்பிரமணிய முதலியார்.[38] புனிற்றா கதறிக்கனைக்கும் செயலை நேரிற் கண்டுணர்ந்தவர் ஆசிரியர் எனத்தெரிகிறது. பசு-கன்று ஆகியவற்றிற்கிடையே காணப்பெறும் அன்பு ஆசிரியர் மனத்தினைக் கவர்ந்துள்ளது எனலாம். புனிற்றாவின் கனைப்பு கேள்விப்புல உருக்காட்சியாக அமைந்துள்ளது.

### குயில் கூவுதல், கிளி பூவை மொழிபகர்தல்:

" திருநாவுக்கரசர் தில்லைக்கு வருகைபுரிந்தபொழுது பலவகை தருக்களுடன் பொலிகின்ற திருநந்தனவனத்தில், குயில்கள், "பிறவிப்பகை நெறியை விட்டுவிடுவர், இருவினைபெருகித் தொடர் பிணி பாசம் பறிவுற்றிட அணையுமின்" என்று இரண்டு பக்கங்களிலும் சூழ்ந்திருந்த கிளைகளின்மீது இருந்துகொண்டு கூவின" என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். குயில்கள் எழுப்பும் ஒலியில் இத்தகைய கருத்தினை ஏற்றிக் கற்பனையாக மொழிகின்றார். அடுத்து, "நாவரசர் முன்பு பணிவொடு தொழுது அணிகொம்பரின்மேல் உள்ள வளர்சிறை மென்கிளிகளுடன் பூவைகளும் சேர்ந்துகொண்டு, தவம் முன்பு புரிதலில் வரு தொண்டெனும் நிலையில் தலைநின்ற உயர்ந்த தமிழ் இறையோராம், இவர்தம் திருவடி அதுகண்டு அதிசயம் என வந்து எதிர் 'அரகர' என்றே மொழிபகர்கின்றன" எனவும் ஆசிரியர் கற்பனையாக இயம்புகிறார்.

குயில் கூவுதல், கிளி பூவை மொழிபகர்தல் என்ற செய்திகளைச் சேக்கிழார் கேள்விப்புல உருக்காட்சியாகப் படைத்துள்ளார். சமயப் பெரியார்களை அஃறிணை உயிர்கள் இவ்வாறு போற்றுவதாக அமைப்பது ஆசிரியர், அப்பெரியார்கள்மீது கொண்டுள்ள அன்புணர்வின் திறத்தைக் காட்டுகிறது. மேலும் அவர்தம் கற்பனையின் மனவியலைக் காட்டும் சான்றாகவும் இப்பறவைகளின் ஓசையாகிய கேள்விப்புல உருக்காட்சி அமைந்துள்ளது. பெரியபுராணப்படைப்பு சமயக் காப்பியமாக விளங்கும் தன்மைக்கு இத்தகைய உருக்காட்சி உதவுகிறது.[39]

### காரைக்காலம்மையார் மொழி - குயில்ஒலி:

காரைக்காலம்மையார்தம் மொழி குயிலின் ஒலிபோல் இனிமையுடையது என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். அவ்வம்மையார்தம் மொழியினிமையை மனத்துள் தோற்றுவிப்பதாக இவ்வுருக்காட்சி உள்ளது.[40]

### பூம்பாவை மழலை - கிளிக்குலம்:

திருமயிலை சிவநேசர்தம் மகள் பூம்பாவையின் மழலைமொழி கிளியின் ஓசைபோல உள்ளது என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[41]

### துன்நிமித்தம் - கூகை, ஆந்தை ஒலி:

குயில், கிளி ஆகிய பறவைகளின் செவிக்கு இனிமைதரும் ஓசையைக் கேள்விப்புல உருக்காட்சியாக ஆள்வதன் வாயிலாக, மகளிர்தம் மொழியினிமையைச் சிறப்பிக்கும் ஆசிரியர், கூகை, ஆந்தை ஆகிய பறவைகள் எழுப்புகின்ற செவிக்கு இனிமை தராத ஓசையையும் கேள்விப்புல உருக்காட்சியாக ஆள்வதன் வாயிலாகச் சம்பந்தர் மதுரைக்கு வந்துகொண்டிருந்தபொழுது எண்பெருங்குன்றத்தில் மேவியிருந்த அமணர்கட்கு அழிவுமுன் சாற்றும் துன்நிமித்தம் தோன்றிய பாங்கினைக் குறிப்பிடுகின்றார்.

"பள்ளிகள் மேலும் மாடு பயிலமண் பாழிமேலும்
ஒள்ளிதழ் அசோகின்மேலும் உணவுசெய் கவளங்கையில்
கொள்ளுமண்டபங்கள் மேலும் கூகையோ டாந்தை தீய
புள்ளின மான தம்மிற் பூசலிட் டழிவு சாற்றும்"

என்பது சேக்கிழார் மொழி.

கூகை, ஆந்தை ஆகியவற்றின் ஓசையைக் கேள்விப்புல உருக்காட்சியாக அமைத்துச் சமணர்தம் அச்சவுணர்வையும் நினைக்குமாறு செய்கிறார் ஆசிரியர்.[42]

## (II ஆ) அன்றாட வாழ்க்கை

### இசைக்கலை - இசைக்கருவிகள்:

கேள்விப்புல உருக்காட்சியுள் வைத்து எண்ணத்தக்க வகையில் இசையும் இசைக்கருவிகளும் விளங்குகின்றன.

மகளிர்தம் மொழியினிமையைச் சிறப்பித்துக் காட்டுதற்குச் சேக்கிழார் இசைக்கருவிகளாகிய குழல், யாழ் என்ற இசைக்கருவிகளினின்றும் எழுப்பப்பெறும் இனிய ஒலியை உருக்காட்சியாகப் படைக்கிறார். இவ்விசைக்கருவிகளின் ஓசையில்

அவருக்கு ஈடுபாடு இருந்திருக்கிறது என அறியமுடிகிறது. பண்ணின் இனிமையை உருக்காட்சியாக அமைத்து மகளிர் மொழியினிமையை உணர்த்துகிறார். பண்களைப் பற்றிய செய்திகளை நன்கு அறிந்து அனுபவித்தவர் ஆசிரியர் எனத்தெரிகிறது. இசைக்கலையில் ஈடுபாடு கொண்டவர் சேக்கிழார் என்பதைக் கேள்விப்புல உருக்காட்சி ஆய்வினால் அறியமுடிகிறது. ஆனாயநாயனார் புராணத்தில் குழல் என்னும் இசைக்கருவி பற்றியும் இசைக்கலை பற்றியும் சேக்கிழார் குறிப்பிடும் செய்திகள் அவரது இசைக்கலையார்வத்தைக் காட்டுகின்றன.

"பண்படும் இன்சொற் செய்யவாய்" எனப் பாண்டிநாட்டு மகளிரின் இன்சொல்லைச் சிறப்பிக்கின்றார் சேக்கிழார்.[1]

"பண்ணின் கிளவி மணிவாயும்
பதிகச் செழுந்தேன் பொழியுமால்"

எனப் பதிகம் பாடும் அடியார்களின் குரலினிமையைக் குறிப்பிடுகின்றார்.[2] பண்ணாலும் பொருளாலும் சிறந்து விளங்கும் பதிகத்தைச் செழுந்தேன் என்கிறார் ஆசிரியர்.

பண்ணின் பயனாகிய நல்லிசையைப் போன்று சண்டீசர் தோன்றிய பதியாகிய சேய்ஞலூர் விளங்கியது என அவ்வூரை அவர் போற்றுவது குறிப்பிடத்தக்கது.[3] தம்மால் போற்றப்பெறும் நாயனார்தம் பதியைத் தம்மால் மிகவும் விருப்பப்படும் பண்ணின் பயனாகிய நல்லிசை என்ற உருக்காட்சி வாயிலாகச் சேக்கிழார் சிறப்பிக்கின்றார்.

"கவின்மேவும் பண்ணியல் கதியே!" எனச் சம்பந்தரைச் சீகாழி மக்கள் போற்றினர் என அவர் தெரிவிக்கிறார்.[4] "கானத்தின் எழுபிறப்பு" எனவும் சம்பந்தர் அழைக்கப்படுகிறார்.[5]

மதங்கசூளாமணியாரை இசைவடிவானவர் என்று அவர் குறிப்பிடுகிறார்.[6]

"பண்ணமரும் மொழியுமையாள்" என இறைவியைப் போற்றுகின்றார்.[7]

'பண்ணீர்மைமொழிப் பரவையார்', 'பண்ணார் மொழிச் சங்கிலியார்' 'பண்ணமரும் மொழிப்பரவையார்' என அவர் குறிப்பதும் நினைத்தற்குரியது.[8]

பெரியபுரர்ணப்படைப்பில் இவ்வாறு சேக்கிழார், பண், பண்ணின்கதி, பண்ணின் பயனாகிய நல்லிசை என்பன வற்றை உருக்காட்சிகளாகப் படைப்பது அவருடைய இசைக் கலையார்வத்தைக் காட்டுகிறது. சோழர் காலத்தில் தமிழகத்தில் இசைக்கலை ஏற்றம் பெற்றிருந்தது என்பது வரலாற்றுச்செய்தி. அக்காலத்தில் அமைச்சராகப் பணிபுரிந்த சேக்கிழார்தம் வாழ்வுக்களம் இசைக்கலைத் தொடர்பு உடையதாக இருந்திருக்கலாம். பண்ணையும் பண்ணின் திறங்களையும் நன்கு அறிந்தவராகச் சேக்கிழார் இருந்திருக்க வேண்டும். இசைக்கலையில் ஈடுபாடு உடையவராயிருந்தமையால் இத்தகைய உருக்காட்சி களைப் படைக்கும் இயல்பு அவருக்கு அமையலாயிற்று. சம்பந்தரைப் பண்ணியல் கதியே எனச் சீகாழி மக்கள் போற்றினர் எனச் சேக்கிழார் குறிப்பது ஆய்ந்து காண்டற்குரியது. "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தன்" எனச் சுந்தரரால் போற்றப்படும் சம்பந்தரைப் பொருத்தமான இவ்வுருக்காட்சியால் சேக்கிழார் சிறப்பிக்கின்றார்.[9] சம்பந்தர்தம் திருத்தொண்டில் அவருக்கிருந்த ஈடுபாட்டை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. "கானத்தின் எழுபிறப்பு" எனச் சம்பந்தரைக் குறிப்பது சேக்கிழார் நாயனாரிடத்துக் கொண்டுள்ள அன்பின் திறத்தினை எடுத்துக் காட்டுவதாக உள்ளது.[10]

## மகளிர்மொழி - யாழ், குழல்:

யாழும், குழலும் மிகத்தொன்மையான இசைக்கருவிகள் ஆகும். "யாழைப் பழித்தன்ன மொழிமங்கை ஒருபங்கன்" என இறைவியின் மொழியினிமையைப் போற்றுகிறார் சுந்தரர்.[11]

கிளவியாழினொடும் குயிலைப்பொருவும் காரைக்கால் அம்மை" என்பது சேக்கிழார் மொழி.[12]

யாழின் ஓசையினிமையை யொத்தது காரைக்கால் அம்மையின் மொழியினிமை என்பது கருத்து.

மங்கையர்க்கரசியார், சங்கிலியார் மொழி யாழின் ஓசையைப்போல் இனிமை தருவன என ஆசிரியர் தெரிவிக்கின்றார்.[13]

"தேனும் குழலும் பிழைத்த திருமொழியாள்" எனப் பரவையார்தம் மொழியினிமையை ஆசிரியர் சிறப்பிக்கின்றார்.[14]

"யாழின் மொழியாள் உமை" என அவர் குறிப்பது நினைக்கத்தக்கது.[15] குழந்தையின் மழலைமொழியினிமையைச் சிறப்பிக்கும் வள்ளுவர்,

"குழலி னிதியா ழினிதுஎன் பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்"

எனக் குறிப்பிடுவார்.[16]

குழல், யாழ் என்னும் இசைக்கருவிகளிலிருந்து எழுப்பப்படும் இசையின் இனிமையைக் கேட்டு அனுபவித்தவராகச் சேக்கிழார் இருந்திருக்க வேண்டும். மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை ஆகியவற்றைப் பாடிய காரைக் காலம்மையார்தம் மொழியினிமையானது யாழ், குயில் இவற்றின் ஒலியைப் பொருவும் தன்மையது என ஆசிரியர் குறிப்பது பொருத்தமுடையது.

## இசைக்கருவிகள் - பலவகை ஒலிகள்:

ஊதுவன, மிழற்றுவன, கொட்டுவன என்ற வகைகளின் இசைக்கருவிகள் உள்ளமையை ஆசிரியர் குறிப்பிடுவதுடன் அவை உண்டுபண்ணும் ஒலிகளின் வேறுபாட்டையும் தெரிவிக்கின்றார். அக்கருவிகள் இயக்கப்படும் பாங்கினையும் இயம்புகின்றார். கடவுளர் திருவிழாக்கள், திருமணநிகழ்ச்சிகள், வேட்டைவினை, போர்வினை, தொழில்கள். நாடு, நகரம் ஆகியவற்றை நினைவில் எழச்செய்யும் வகையில் அவ்வவற்றிற்குரிய இசைக்கருவிகளின் பெயர்களையும் அவை எழுப்பும் ஒலிவ்கைகளையும் ஆசிரியர் குறிப்பது கேள்விப்புல உருக்காட்சியாக விளங்குகிறது. வல்லோசையையும் மெல்லோசையையும் எழுப்பும் கருவிகளை மக்கள் பயன்படுத்துவதைத் தெரிவிக்கின்றார். மலைப்பகுதியில் வாழும் மக்கள் பயன்படுத்தும் இசைக்கருவிகளைக் குறிப்பிடுகிறார்.

மறையவர்தம் விழாநிகழ்ச்சிகளில் பயன்படுத்தப்பெறும் இசைக்கருவிகளைப் பற்றி ஆசிரியர் தெரிவிக்கிறார்.

### குன்றவர்கள் - பேரொலி:

திருக்காளத்தி மலைப்பகுதியில் வாழும் குன்றவர்கள் வில்விழா அயர்ந்தமையை ஆசிரியர் வருணிக்கும்பொழுது "அவர்கள், தொண்டகம், முரசு, கொம்பு, துடிகள், வேய்ங்குழல் ஆகியவற்றை இசைத்துப் பேரொலியை எழுப்பினர். அந்த ஒலி எண்டிசையும் நிறைந்து விம்மியது" என்கிறார் சேக்கிழார். மேலும் அந்தத் திண்திறல் மறவர்தம் ஆர்ப்பு சேண்விசும்பினையும் இடித்துச் சென்றது எனவும் அவர் குறிப்பிடுகிறார்.[17]

### சம்பந்தர் திருமணம் - பலவகை ஒலி:

சம்பந்தரின் திருமணம் பற்றி ஆசிரியர் கேள்விப்புல உருக்காட்சி வாயிலாக வருணிப்பது காணத்தக்கது.

"மறைமுழங்கியது, விசும்பிலும் நிலத்திலும் வானதுந்துபி, மங்கல இயங்கள் இனிய ஓசையை எழுப்பின. சம்பந்தர் சிவிகைமேல் அமர்ந்தார். தொங்கல், பிச்சம், குடை, கவரி சிவிகைக்கு அருகில் நெருங்கியிருந்தன. சங்கு, தாரை, சின்னம், தனிப்பெருங்காளம், தாளம், வங்கியம் முதலிய துளைக் கருவிகளிலிருந்து பொங்கிய ஒலி ஓங்கியது. பூசுரர் பாடும் வேதகீதத்தின் இனிய ஓசையும் எங்கும் எழுந்தது. இவ்வகையில் சம்பந்தர்தம் திருமணம் எழுந்தது". என்பது சேக்கிழார் வருணனை. இவ்வாறு பலவகை ஒலிகளை அடுத்தடுத்துக் கூறுவதன் வாயிலாகக் கேள்விப்புல உருக்காட்சியை ஆசிரியர் படைக்கின்றார். மேலும் சில ஒலிகளைப் பற்றி அவர் குறிப்பிடுவதைக் கீழ்வரும் பாடலில் காணலாம்.

"கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி ஒருபால் கோல
வேதியர் வேத வாய்மை மிகுமொலி ஒருபால் மிக்க
ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி ஒருபால் ஏத்தும்
நாதமங் கலங்கள் கீத நயப்பொலி ஒருபா லாக"

மென்மையான இனிய ஒலியை உண்டுபண்ணும் வண்டுகள், மறையாளர் ஓதும் வேதம், விபஞ்சி, வீணை, யாழ்

நாதமங்கலக்கருவிகள், கீதம் ஆகியவற்றையும் ஆசிரியர் சம்பந்தர் திருமண நிகழ்ச்சி பற்றிய வருணனையில் தெரிவிக்கின்றார். துளைக்கருவிகள் பேரொலி எழுப்புவதையும், நரம்புக்கருவிகள் மெல்லொலி எழுப்புவதையும் அடுத்தடுத்துக் குறிப்பிடுவதன் வாயிலாகத் திருமணம் பற்றிய நினைவை ஆசிரியர் தோற்றுவிக்கின்றார்.[18]

## கொடுங்கோளூர் - பலவகை ஒலி:

கழறிற்றறிவார் நாயனார்தம் பதியாகிய கொடுங்கோளூரின் சிறப்பைக் காட்டுதற்கு ஆசிரியர் அந்நகரில் எழும் பல்வேறு ஒலிகளைக் குறிப்பிடுகின்றார்.

"காலையில் எழுகின்ற பலகலைகளின் ஒலி, களிற்றுக்கன்று வடிக்கும் ஒலி, சோலையில் எழுகின்ற சுரும்பின் ஒலி, புரவிகள் செருக்கினால் சுலவும் ஒலி, பாலை விபஞ்சிபயிலும் ஒலி, பாடல் ஆடல் முழவின் ஒலி ஆகியவை கடலொலியையும் விழுங்கி எழுந்து எங்கும் பரவியது. கேட்போருக்கு வியப்பினைத் தந்தது" எனச் சேக்கிழார் ஒலிவகைகளை அடுக்கிக் கூறுவது கேள்விப்புல உருக்காட்சியாக அமைந்து கொடுங்கோளூர் நகரின் கலைச்சிறப்பு, செல்வச்செழுமை, இயற்கை வளம், ஆகியவற்றைப் பயில்பவர் மனத்துள் தோற்றுவிக்கிறது. யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வுடைய கழறிற்றறிவார் நாயனார் பற்றிய புராணத்தின் தொடக்கப் பகுதியில் இவ்வாறு கேள்விப்புல உருக்காட்சியைப் பொருத்தமுற ஆசிரியர் ஆள்கின்றார். ஒலியின் நுட்பங்களை அறியும் திறனுடைய நாயனார்தம் பதியின் சிறப்பை ஒலிபற்றிய வருணனையாகக் கூறிக் கேள்விப்புல உருக்காட்சியாகப் படைத்து அதனைத் தக்கதொரு பின்னணியாகவும் சேக்கிழார் அமைக்கிறார் எனலாம்.[19]

## தில்லை - ஒலிகள்:

சைவசமயத்தினரால் போற்றப்பெறும் பதியாகிய தில்லையின் சிறப்பைக் குறிக்கும் வகையில் ஆசிரியர்,

"நரம்புடை யாழ்ஒலி முழவின் நாதஒலி வேதஒலி
அரம்பையர்தம் கீதஒலி அறாத்தில்லை" என்கிறார்.[20]

## மக்கள் ஓசை:

இசைக்கருவிகளினால் எழுப்பப்பெறும் ஓசையைக் கேள்விப்புல உருக்காட்சியாகப் படைக்கும் சேக்கிழார் மக்கள் வாய்விட்டு எழுப்பும்' ஓசையையும் அவர்கள் வாய்மொழிப் பாட்டுக்களையும் குறிப்பிடுவதன் வாயிலாகவும் உருக்காட்சியைப் படைக்கின்றார். நாடு, நகர் ஆகியவற்றின் வளத்தை நினைக்குமாறு செய்வது மக்கள் ஓசை என்னும் கேள்விப்புல உருக்காட்சியின் நோக்கமாக உள்ளது எனலாம்.

## மள்ளர் ஓசை:

காவிரியாறு சோழநாட்டின் வளத்திற்கு நீரை அளித்து உதவுகிறது. "மதகு வழியாகக் காவிரியின்கண் புதுப்புனல் வரும்பொழுது மள்ளர்கள் ஆரவாரம் செய்து அதனை வரவேற்கின்றனர். தம் கைகளைத் தட்டி அவர்கள் முழக்குகின்ற ஓசை வானத்திற்கு அப்பாலும் செல்கிறது" என ஆசிரியர் குறிப்பது மள்ளர்தம் மகிழ்ச்சியை நினைக்குமாறு செய்கிறது.[21]

"பாலியாறு தொண்டை நாட்டிற்குத் தாய் போன்றது எனக் குறிக்கும் சேக்கிழார், அதன் வெள்ளம் இரண்டுபக்கங்களிலும் கால்வாய்கள் வழியாக மிதந்து ஏறிப் பள்ளமாக உள்ள நீண்ட வயல்களின் பெரிய மடைகளை உடைக்கிறது. இவ்வாறு பாலியாற்று வெள்ளம் முழக்கம் செய்து பணைகளில் நிறைந்து, திண்ணிய கரைகளைக் கொண்டுள்ள பெரிய குளங்களின் கடிமதகுகளின் வாய்களைத் திறந்துவிடுகிறது. இதனைக் கண்டு வினைஞர்கள் ஆர்ப்பொலி எடுக்கின்றனர்"[22] என்று சேக்கிழார் இயம்புகின்றார்.

மள்ளர்களின் ஓசையைக் கேள்விப்புல உருக் காட்சியாக ஆசிரியர் அமைத்துள்ளார். இவ்வகையில் சோழநாடு, தொண்டைநாடு ஆகியவற்றின் வளம் சிறப்பிக்கப் படுகிறது. கரும்பாலைகளிலுள்ள மரக்கோவையை மள்ளர்கள் உகைப்பதால் அது, பலமுறை வந்தெழும் ஓசை எங்கும் கேட்கப்படுகிறது என ஆசிரியர் குறிப்பதும் நாட்டுவளத்தை நினைக்கச்செய்கிறது.[23]

உழவர்கள் தம் தொழிலின்பொருட்டு இயங்கும் பொழுது உண்டாகும் ஒலி காலப்பகுதிகளைக் காட்டுகிறது என்கிறார் சேக்கிழார். "பொழுதுழவர் ஒலி காட்டும்" என்பது அவர்மொழி. இதனால் குறித்தகாலத்தில் தங்கள் பணியை மேற்கொள்வதில் உழவர்கள் கருத்துடையராய் இருக்கும் தன்மை குறிக்கப்படுகிறது. காலந்தவறாமை (Punctuality) என்ற பண்புடையராய் விளங்கிய உழவரை நினைக்குமாறு செய்கிறது "பொழுதுழவர் ஒலிகாட்டும்" என்ற தொடர். "உழவர் ஒலி" என்பது கேள்விப்புல உருக்காட்சியாக உள்ளது.[24]

நெறிசூழ்ற்புலைமகளிர் நெற்குறு பாட்டொலி பரக்கும்" எனச் சேக்கிழார் திருநாளைப்போவார் நாயனார் புராணத்தில் குறிப்பிடுகிறார். புலைமகளிர் நெல்குத்தும் வினை செய்யும்பொழுது பாடுகின்ற பாட்டின் ஒலி எங்கணும் பரந்து செல்கிறது என்பது கேள்விப்புல உருக்காட்சியாக அமைந்து நாயனார்தம் பதியாகிய ஆதனூர் வளத்தைக் காட்டுகிறது. புலைப்பாடியில் வாழும் மக்களின் அமைதியான வாழ்க்கையையும் நினைக்கச்செய்கிறது.[25]

## தொண்டர் 'அர' ஓசை:

நாயனார்தம் வாழ்வில் நடைபெற்ற வியத்தகு நிகழ்வுகள் பற்றி ஆசிரியர் இயம்பும்பொழுது தொண்டர்கள் எழுப்பும் அர என்னும் ஓசையை ஆர்வத்துடன் குறிப்பிடுவார். அர என்னும் ஓசை கேள்விப்புல உருக்காட்சியாக அமைந்து தொண்டர்தம் இறையன்பின் திறத்தையும், சமயத்தலைவர்களிடம் அவர்கள் கொண்டுள்ள அன்பையும், வியத்தகு நிகழ்வுகளைக் கண்டமையால் அவர்களிடம் உண்டான வியப்புடன் கூடிய மகிழ்ச்சியையும் ஒருங்கே தெரிவிப்பதாக உள்ளது.

"சமணர்தம் சொற்கேட்டு, நாவரசரைக் கல்லில் பிணைத்துக் கடலில் விட்டுவிடச் செய்தான் பல்லவமன்னன். அஞ்செழுத்தை அன்பொடு பற்றிய உணர்வினால் பதிகம் பாடினார் நாவரசர். கருநெடுங்கடலினும் கல்மிதந்தது. அதுவே நாயனாருக்குச் சிவிகையாக மாறியது. திருப்பாதிரிப் புலியூர் மருங்கில் அவர் கரையேறினார். இத்தகைய வியத்தகு நிகழ்வினைக் கண்ணுற்ற மெய்த்தவக் கூட்டத்தினராகிய தொண்டர்கள் ஆர்த்தெழுந்தனர்.

எத்திசையிலும் அவர்கள் எழுப்பிய அர என்னும் ஓசையைப்போல் கடலும் ஆர்த்தது".[26]

இவ்வாறு சேக்கிழார் நாவரசர் வாழ்வில் நடந்த நிகழ்ச்சியையும் தொண்டர்தம் மகிழ்ச்சியையும் தெரிவிக்கிறார். அர என்னும் தொண்டர் ஓசை கேள்விப்புல உருக்காட்சியாக உள்ளது எனலாம்.

இறைவர்தம் ஆணைக்கிணங்க உமையம்மையால் சிவஞானத்தின்னமுதம் ஊட்டப்பெற்ற சம்பந்தர், திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப்புச்சாத்தி இறைவரைத் தொழுது நின்றார். அப்பொழுது வானக துந்துபி கந்தருவர் கின்னரர் கானஒலி, இந்திரன் முதலிய தேவர் எடுத்தேத்தும் இசை ஆகியவற்றின் முழக்கம் எழுந்தது. அவற்றையெல்லாம் அடக்கும் வகையில் அந்தமில் பல்கணநாதர் எழுப்பிய அர என்னும் ஓசை எழுந்தது.[27] சம்பந்தர் ஞானப்பால் ஊட்டப்பெற்ற வியத்தகு நிகழ்வை நினைக்குமாறு செய்கிறது 'அர' என்னும் கேள்விப்புல உருக்காட்சி.

"சம்பந்தர் பாடிய நற்பதிகமாகிய மெய்த் திருவாக்கெனும் அமுதத்தின், ஆற்றலால் பூம்பாவை தமது என்பு வைக்கப் பெற்றிருந்த குடத்தினின்றும் உயிர்பெற்றுத் திருமகளைப்போன்ற வனப்புடன் எழுந்தாள். இதனைக் கண்டவர்கள் வியந்து நின்றார்கள். ஆங்கிருந்த தொண்டர்கள் 'அரகர' என்று முழங்கினார்கள். அவர்கள் எழுப்பிய அந்த ஓசை உம்பர்நாட்டினைச் சென்றடைந்தது"[28] என்று சேக்கிழார் சம்பந்தர் வாழ்க்கையில் நடைபெற்ற வியத்தகு நிகழ்வினைத் தெரிவிக்கிறார். "அரகர" ஓசை என்பது கேள்விப்புல உருக்காட்சியாக உள்ளது. சம்பந்தர்தம் பெருமையையும், தொண்டர்கள் அவர்மீது கொண்டுள்ள அன்பையும் தெரிவிக்கின்ற வகையில் உள்ள இவ்வுருக்காட்சி தொண்டர்தம் இறையன்பின் திறத்தையும் உணர்த்துவதாக உள்ளது. நாவரசர், சம்பந்தர் ஆகிய நாயனார்தம் வாழ்வில் காணப்பெறும் வியத்தகு நிகழ்வுகட்கெல்லாம் இறையருளே காரணம் என்பதை எண்ணியவராய் 'அர' என்னும் ஓசையைத் தொண்டர்கள் எழுப்பினர் என்பதும் ஆசிரியர் குறிக்கும் கருத்தெனக் கொள்ளலாம்.

*சந்தப்பாடல்கள்:*

சேக்கிழார் யாப்பறிபுலவர் என்பதை அவர் ஆளும் சந்தப்பாடல்கள் தெரிவிக்கின்றன. பாவண்ணங்களின் திறன்களைத் தெரிந்து ஆளும் ஆற்றல் உடையவராக விளங்குகிறார்.

திருமணவினை, வேட்டைவினை, போர்வினை ஆகியவற்றை நினைப்பிக்கும் கேள்விப்புல உருக்காட்சிகளாகச் சந்தப்பாடல்கள் பெரியபுராணத்தில் இடம் பெற்றுள்ளன. மாந்தர்தம் உணர்ச்சி நிலைகளைத் தெரிவிக்கும் திறன் பெற்றனவாகவும் இவை விளங்குகின்றன. நாடு, நகர் ஆகியவற்றின் செல்வச்செழுமையைக் குறிப்பனவாக உள்ளன.

படைப்பைப் பயில்பவர்தம் செவியில் ஒலிக்கின்றாற்போல் ஒருபாடலில் ஒரேசொல்லைப் பலமுறை பின்பற்றிக் கேள்விப்புல உருக்காட்சியினைச் சேக்கிழார் படைக்கின்றார். பெரும்பாலும் நாடு, ஊர் என்பனவற்றின் வளங்களை நினைப்பிக்கின்ற வகையில் இத்தகைய சொல்லடுக்கு உத்தியுள்ள பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பொதுவாக, தாம் முன்னர்க் கண்டதும், தற்பொழுது காண்கின்றதும் ஆகிய நாடு ஊர் அல்லது ஓர் இடம் ஆகியவை குறித்து மற்றவரிடம் கூறும்பொழுது எல்லாம், எங்கும் என்பன போன்ற சொற்களை மக்கள் தமது மொழியில் பயன்படுத்துவதைக் காணலாம். இச்சொற்கள் மீண்டும் மீண்டும் வந்து கேட்பவர் செவியில் ஒலிப்பதால் தெரிவிக்கப்பெறும் செய்தி மனத்தில் நன்கு பதிவாகிறது. மக்கள்தம் இவ்வியல்பினைச் சேக்கிழார் தமது பாடல்களில் உத்தியாக ஆள்வது அவர் படைப்பிற்குச் சுவை ஊட்டுகிறது. சுருங்கக்கூறின், மக்களின் பேச்சுவழக்குப் பாங்கினை ஆசிரியர் ஓர் உத்தியாக ஏற்றுக் கேள்விப்புல உருக்காட்சியைப் படைத்துக்கொண்டர் எனலாம்.

எல்லாம், எங்கும். சூழும், பயிலும் என்பன போன்ற சொற்களை இவ்வாறு பயன்படுத்துவதன் வாயிலாகப் பாடல்களில் சந்தத்தை அமைக்கிறார் ஆசிரியர். ஒழுங்குற அடுக்கி வைத்தாற்போல் செய்திகளை அமைத்துக் காட்டுவனவாக இச்சொற்கள் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. பாடல்கட்கு அழகும் உணர்ச்சியும் ஊட்டுவனவாகவும் இவை உள்ளன.

சேக்கிழார்தம் படைப்பாற்றலின் ஆளுமைக்கு சான்றுபகர்வதாகச் சந்தப்பாடல்களில் அமைந்துள்ள கேள்விப்புல உருக்காட்சி விளங்குகிறது.

சொல்லடுக்கு உத்தியுடன் கூடிய சந்தப்பாடல்கள் மட்டுமின்றிச் சந்தங்கள் மட்டும் அமைந்த பாடல்களும் பெரியபுராணத்தில் கேள்விப்புல உருக்காட்சியாக உள்ளன.

## செழுந்திருக்கடவூர் வளம் - 'எல்லாம்':

குங்குலியக்கலியநாயனார் புராணத்தில் கடவூர் என்ற பதியின் வயல்வளம், வேள்விவளம், நீர்வளம், தொழில்வளம் ஆகியவற்றை நினைக்குமாறு செய்யும் வகையில் சேக்கிழார் அமைக்கும் சந்தப்பாடல் 'எல்லாம்' என்ற சொல்லடுக்கினைப் பெற்றுவருவது காணத்தக்கது.

"வயலெலாம் விளைசெஞ் சாலி
வரம்பெலாம் வளையின் முத்தம்
அயலெலாம் வேள்விச்சாலை
அணையெலாம் கழுநீர்க் கற்றை
புயலெலாம் கமுகின் காடப்
புறமெலா மதன்சீர் போற்றல்
செயலெலாம் தொழில்கள் ஆறே
செழுந்திருக் கடவூ ரென்றும்"[29]

'எலாம்' என்பது எல்லாப்பகுதிகளிலும் மிகுந்து காணப்படுகின்றன என்ற சொற்றொடரின் சுருக்கமாக உள்ளது.

## போற்றிசை அரவம் - மெல்லின எழுத்துக்கள், இடையின எழுத்துக்கள்:

இறையருள் ஆணையின் வண்ணம் இறைவியால் ஞானப்பால் ஊட்டப்பெற்ற சம்பந்தர் மறையவர்களாலும் தொண்டர்களாலும் போற்றப்படுவதைச் சேக்கிழார் இனிய ஓசையுடன் கூடிய சந்தப்பாடலில் விவரிக்கின்றார். மெல்லின எழுத்துக்கள் ஞ,ங,ண,ந,ம,ன என்பனவும், இடையின எழுத்துக்கள் ய,ர,ல,வ,ழ,ள என்பனவும் அடுத்தடுத்து அமையுமாறு சொற்களைப் படைத்து ஆள்வதன் வாயிலாகச் செவிக்கு

இனிமைதரும் ஓசையை ஆசிரியர் உண்டுபண்ணுகிறார். இசைக்கருவிகளினைக் குறிப்பிட்டு அவை எழுப்பும் ஓசைகளின் வகைகளையும் குறிப்பிடுகின்றார். பாடல் முழுதும் படித்து முடித்தபின் அதன்கண் ஆளப்பட்டுள்ள சொற்கள் படித்தவர் செவியின்கண் மீண்டும் ஒலிக்குமாறு செய்கிறார். சேக்கிழார் படைக்கும் கேள்விப்புல உருக்காட்சியாக இப்பாடல் அமைந்துள்ளது எனலாம்.

"மறைமு ழங்கின தழங்கின
வண்தமிழ் வயிரின்
குறைந ரன்றன முரன்றன
விளைக்குலங் காளம்
முறைஇ யம்பின இயம்பல
ஒலித்தன முரசப்
பொறைக றங்கின பிறங்கின
போற்றிசை அரவம்"[30]

என்பது சேக்கிழார் பாடல். இப்படாடலில் "ழங்கின" "தழங்கின" என்ற சீர்களும், "ரன்றன" "முரன்றன" என்ற சீர்களும் "யம்பின," "இயம்பல", "றங்கின", "பிறங்கின" என்ற சீர்களும் உள்ளன. அடிக்கு ஐந்து ஈரசைச்சீர்களைக் கொண்டதாகிய நான்கு அடிகளைப் பெற்று விளங்குகிறது இப்பாடல்.

## வேட்டைவினை - சந்தப்பாடல்:

"தான, தான, தான, தான
தான. தான. தானன"

என்ற சந்தக்குழிப்பை ஆசிரியர் கண்ணப்பநாயனார் புராணத்துள் ஏனமோடு எனத்தொடங்கும் பாடலின் ஒவ்வொர் அடியிலும் பயன்படுத்தியுள்ளார். இச்சந்தம் படிப்பவர்க்கு வேட்டைவினையின் விரைவையும், வேடுவர்தம் செயல்பாட்டையும் நினைவுக்குக் கொண்டுவருகின்றன. இச்சந்தம் இப்பாடலைக் கேள்விப்புல உருக்காட்சியாகப் படைத்துள்ளது.[30அ]

வேடுவர்தம் அம்புகளால் தாக்கப்பட்ட விலங்குகள் வீழ்கின்ற நிகழ்வையும் ஆசிரியர் சந்தப்பாடலில் தெரிவிக்கின்றார்.[30ஆ]

"தானனதன தனதனதன தனதனதன தனன"

என்ற சந்தக்குழிப்பு தூளறுவன எனத்தொடங்கும் இப்பாடலைக் கேள்விப்புல உருக்காட்சியாக அமைப்பது காணத்தக்கது.

## போர்வினை - சந்தப்பாடல்:

பெரியபுராணப்படைப்பில் போர்வினைச் செய்திகளுடன் கூடிய பகுதிகளை ஆசிரியர் சந்தப்பாடல்களில் அமைக்கின்றார். சந்தங்கள் கேள்விப்புல உருக்காட்சியைப் பாடல்களுக்கு ஊட்டுகின்றன. வீரர்தம் சீற்றம், செயல்திறம் ஆகியவை இப்பாடல்களில் ஆளப்பட்டுள்ள சந்தம் எழுப்பும் ஓசையால் தெரிவிக்கப்படுகின்றன.

ஏனாதிநாதநாயனார் அதிசூரன் ஆகியோர்க்கிடையே நடைபெற்ற போர்நிகழ்ச்சியை ஆசிரியர் பலபாடல்களில் வருணிக்கின்றார். சான்றாக ஒருபாட்டல் இவண் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

"வாளொடு நீள்கைது டித்தன மார்பொடு வேல்கள்கு ளித்தன
தோளொடு வாளிநி லத்தன தோலொடு தோல்கள்த கைத்தன
தாளொடு வார்கழல் இற்றன தாரொடு சூழ்சிர மற்றன
நாளொடு சீறிம லைப்பவர் நாடிய போர்செய்க ளத்தினில் "

"தானன, தானன, தன்னன, தானன, தானன, தன்னன" என்ற சந்தக்குழிப்பு இப்பாடலுக்குக் கேள்விப்புல உருக்காட்சியைத் தருகிறது எனலாம்.[31] சேக்கிழார் பெரியபுராணப்படைப்பில் கேள்விப்புல உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாக நிகழ்ச்சிகளையும். அவற்றில் பங்குகொள்ளும் மாந்தர்தம் உணர்ச்சி நிலைகளையும் விளக்குவது அவரது படைப்பாற்றல் திறனைக் காட்டுகிறது. காட்சிப்புல உருக் காட்சியை அடுத்து விளங்கும் சிறப்பினதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

## (III) நுகர்வுப்புல உருக்காட்சி:

உயிர்வாழ்வுக்கு உதவும் உணவுப் பொருள்கள் உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என நான்கு வகையினவாகவும், இனிப்பு, உறைப்பு, புளிப்பு, கசப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என ஆறு சுவையுடையன்வாகவும் உள்ளன. நுகர்வுப்புலனுக்குரிய பொருள்களில் இனிப்புச் சுவையுடைய பொருள்களை மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். விழாக்களில் இனிப்பான பண்ணியங்கள் பரிமாறப்படுகின்றன. அவரவர் செல்வவளத்திற்கேற்ப நுகர்வுப் பொருள்களைப் படைத்துக் கொள்கின்றனர். அமுது, தேன் என்னும் இனிப்புச் சுவையுடைய பொருள்களை உருக்காட்சிகளாகக் கொண்டு தம்மால் பெரிதும் விருப்பப்படும் குழந்தைகளை, பெரியோர்களை, தம்மால் போற்றப்படும் இறைவரை, மழலை மொழியை, மகளிர் மொழியை மக்கள் சிறப்பிப்பது இயல்பான ஒன்று.

மருதன் இளநாகனார் என்பார் குழந்தையின் மழலைதரும் இனிமையை அனுபவிக்கும் அன்னையின் கூற்றாக அமுது என்னும் நுகர்வுப்புல உருக்காட்சியால் குறிப்பது வருமாறு.

"பெரும, விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்
பெருந்தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்றத்
திருந்துபு நீகற்ற சொற்கள் யாம்கேட்ப
மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்றால்
பெருந்தகாய் கூறுக சில".[1]

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாயெயி றூறிய நீர்"[2]

என்பது தனது தலைவியின் இனியமொழி தரும் இன்பத்தை அனுபவித்துப் போற்றும் தலைவன் கூற்றாகத் திருக்குறளில் வரும் பாடலாகும்.

"சிந்தையுள் தேறல்போலும் திருச்சோற்றுத் துறையனாரே"[3] எனவும், "மயக்கம் தீர்க்கும் மருந்து" எனவும் நாவரசர் இடையறாது இறைவரை நினைந்து உருகிப் பெற்ற இன்ப அனுபவத்துடன் நவில்கின்றமை சிந்தித்தற்குரியது.[4]

"பாவிப்பார் மனத்தூ றுமத் தேனைக்
கட்டியைக் கரும்பின் தெளிதன்னை"

என்பது சுந்தரர் இறையுணர்வினால் பெற்ற இன்ப அனுபவ வெளியீடாக உள்ளது.[5]

"ஞானக் கரும்பின் தெளிவைப் பாகை
நாடற் கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை ஆயினானச்
சித்தம் புகுந்து தித்திக்க வல்ல
கோனை......................"

என்பது மணிவாசகர் திருவாசகம்.[6] "கற்றவர் விழுங்கும் கற்பக் கனி" என்கிறார் சேந்தனார்.[6அ] இவ்வாறு நுகர்வுப்புலனுக்குரிய இனிய பொருள்களால் இறைவரைக் குறிப்பிடும் மரபு அருளாளர்களின் இறையன்பின்னைக் காட்டுகிறது.

"பிள்ளைக் கனியமுதே கண்ணம்மா"[7] என்பார் அமரகவி சுப்பிரமணிய பாரதியார்.

நாயனார் பாடிய திருப்பதிகம், இறைவர் திருக்காட்சி, இறைவர் திருவடி, திருக்கூத்து, சிவஞானம் ஆகியவற்றையும், திருத்தொண்டர் அன்பின் திறத்தையும். சம்பந்தர்தம் அழகிய தோற்றத்தையும் மகளிர் இளமை, மொழி. இன்னிசை, ஓசை ஆகியவற்றையும் நுகர்வுப்புல உருக்காட்சியின் வாயிலாகச் சேக்கிழார் சிறப்பிப்பது ஆய்வுக்கு உரியது. சேக்கிழாரது நுகர்வுப்புலன் நுண்ணயமானதாக இருப்பது குறிப்பிடத்தக்கது. பெரியபுராணத்தின் சில பகுதிகளில் விருந்தோம்புதல், இறைவருக்கு உணவுபடைத்தல் போன்ற செய்திகளையொட்டிச் சேக்கிழார் குறிப்பிடுவன நுகர்வுப்புல உருக்காட்சியாக அமைந்துள்ளது எனலாம்.

## சொல்மலர் பொதிநலன்:

சிவனாரைப் போற்றும் நாயன்மார் தம் தூய சொல்லாகிய பதிகம் என்ற மலரின்கண் பொதிந்துள்ள பொருளாகிய தேனை அடியார் திருக்கூட்டம் நுகர்கிறது எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[7அ]

## பதிகச் செழுந்தேன்:

"முருகநாயனார்தம் பண்ணின் மொழியுடன் கூடிய திருவாய் பதிகச் செழுந்தேனைப் பொழிகின்றது" என்று [7ஆ] ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

## பதிகம் - தெள்ளமிர்தம்:

"சம்பந்தர்தம் மெய்ப்பதிகத்தை உள்ளபடி கேட்டலுமே உருகுகின்ற பெருமகிழ்ச்சி யுற்றவராய்த் திருநீலகண்டத்துப் பெரும்பாணர், தெள்ளமிர்தம் அருந்தினர்போல் சிந்தை களிப்புறத் தொழுதார்" என்றும்,[8] சேக்கிழார் குறிப்பது நாயனார்தம் பதிகங்களின் இனிமைச் சிறப்பைத் தெரிவிக்கின்றது. சேக்கிழாருக்குப் பதிகங்களில் உள்ள ஈடுபாட்டையும் படைப்பில் ஆளப்பெற்றுள்ள நுகர்வுப்புல உருக்காட்சி உணர்த்துகிறது.

## திருவாக்கு - அமுதம்:

"மட்டிட்ட" என்னும் நற்பதிகம்பாடி திருமயிலைச் சிவநேசர்மகள் பூம்பாவையை உயிர்பெற்று எழச்செய்த சம்பந்தரைப் போற்றும் சேக்கிழார்,

"அன்ன மெய்த் திருவாக்கெனும் அமுதம் அவ்வங்கம்
துன்னவந்து வந்துருவமாய்த் தொக்கதக் குடத்துள்"[9]

என்கிறார். சம்பந்தர்தம் திருவாக்கு மட்குடத்துள் வைக்கப்பட்டிருந்த "பூம்பாவையின் என்புடன் கலந்தமையால் அவர் அழகிய உருவம் பெற்றாள்" என்பது கருத்து. ஆக்கத்தின் குறியீடாக அமுதம் குறிக்கப்படுவதும் இவண் நினைத்தற்குரியது.

## தேவர்பிரான் - தேன்:

தென்புகலூரின்கண் எழுந்தருளியுள்ள இறைவரைத் 'தென்புகலூர் மன்னியதேன்" என்கிறார் சேக்கிழார். திருக்காளத்தி இறைவரைச் "செய்யதேன்" என்கிறார் ஆசிரியர். திருவாரூர் இறைவர், 'செம்பொற் புற்றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேன்" எனக் குறிக்கப்படுகிறார்.

"மன்னிய தேன்" என்பது நிலைபேற்றுத் தன்மையையும், "செய்யதேன்" என்பது செம்மைத் தன்மையையும், "செழுந்தேன்" என்பது செழிப்புத் தன்மையையும், காட்டுவதாக ஆளப்பட்டுள்ள தொடர்கள், தம்மைச் சார்பவருக்கு இறைவர் நிலைபேற்றையும், செம்மையுள் நிற்பதாகிய பெருநிலையையும், செழிப்பான உயர் வாழ்வையும் தரவல்லவர் என்ற கருத்து இச்சொற்றொடர்களினின்றும் பெறப்படுகிறது.[10]

தேன் என்பது உணவாகவும், உடல், மனம், ஆகியவற்றிற்கு வலிமைதரும் மருந்தாகவும் உள்ளது. எளிதில் செறிக்கப்படுவதாக உள்ளது. இயற்கையான சத்துணவாகவும் இருக்கிறது. வலிவுக்குறைவான இருதயத்திற்கும், மூளைக்கும், வயிற்றிற்கும் வலிமை தருகிறது. இது மலர்களிலிருந்து கிடைக்கப் பெறுவதாகும். குழந்தை பிறந்தவுடன் அதன் நாவில் முதன்முதல் தடவப்பெறும் சிறப்புடையது தேன். குழந்தைக்குத் தரப்பெறும் முதல் உணவு இதுவெனின் அமையும். ஊக்கம்தரும் பொருளாக இது விளங்குகிறது. இத்தகைய நுகர்வுப் பொருளாகிய தேனை உருக்காட்சியால் அமைத்துத் தம்மால் போற்றப்பெறும் இறைவரைத் குறிப்பது பொருத்தமுற அமைந்துள்ளது. மரபு வழிப்பட்ட உருக்காட்சியாக இது விளங்குவது குறிப்பிடத்தக்கது.

## இறைவர் - மருந்து:

உண்ணும் நீரையும் அருந்தும் உணவையும் சேர்த்து இருமருந்து என்பர். பொதுவாக, மருந்து என்பதன் பொருள் உடலுக்குண்டாகும் பிணியையும் சோர்வையும் போக்கும் பொருளைக் குறிக்கும். பசித்துன்பத்தைப் போக்குவதாகலின் உணவு மருந்தெனப்படும். உடலுக்கு வரும் பிணியை மருந்து தீர்ப்பது போன்று உயிருக்கு யாக்கையின் பரிசு, இருவினை, மும்மலம் ஆகியவற்றினால் வரும் அல்லலினை இறைவர் போக்குகின்றார் எனக் கருதும் சமயவுணர்வுடையோர், இறைவரை மருந்து என்று போற்றும் இயல்பினராக உள்ளனர். தமக்குமுன் வாழ்ந்த அருளாளர்கள் இறைவரை மருந்து எனக்குறிப்பதன் பொருளை உணர்ந்த சேக்கிழார், "மைதழையும் கண்டத்து மலைமருந்து," "பிறவிமருந்தான பெருந்தகை", "மலைமேல் மருந்து", "மலையின் மேல் மருந்தானார்", "திருப்பனங்காட்டூரில் அல்லல் அறுக்கும் அருமருந்து", "திருநள்ளாற்று மருந்து" எனக் குறிப்பிடுவதில் ஆர்வம் காட்டுகின்றார்.[11] இறைவர்தம் பேரருள்திறத்தில் அவருக்குள்ள ஈடுபாட்டின் வெளிப்பாடாக மருந்து என்னும் நுகர்வுப் பொருள் உருக்காட்சியாக அமைந்துள்ளது.

அண்மைக் காலத்தினராய வடலூர் இராமலிங்க சுவாமிகள், "அம்பலத்தரசே அருமருந்தே" என இறைவரைக் குறிப்பது இவண் நினைத்தற்குரியது.[12] "பிறவி மருந்தான பெருந்தகை" என்ற தொடர் நயமுற அமைந்துள்ளது. பிறவி என்பது

உயிரை வருத்தும் பிணியெனவும், பெருந்தகையையுடைய இறைவர் அப்பிணியை நீக்கும் மருந்தெனவும் சேக்கிழார் குறிப்பதன் வாயிலாகப் பொருத்தமும் கிளர்ச்சி ஊட்டும் ஆற்றலும் கூடிய நுகர்வுப்புல உருக்காட்சியைப் படைக்கிறார்.

## இறைவர் - அமுது:

கனி, கரும்பு ஆகிய பொருள்களிலிருந்து இன்சுவையான சாறு பிழிந்து எடுக்கப்படுகிறது. எஞ்சிய கோது ஒதுக்கப்படுகிறது. கோதுடன் இருக்கும் அமுது பிரித்தெடுக்கப்படுகிறது என்பது கருத்து. உலகத்துப் பொருள்களினின்றும் கிடைக்கப்பெறும் அமுதம், தேன் ஆகியவை கோதுடன் கூடியவை. இறைவர் "கோதிலா அமுது" என்று போற்றப்படுகின்றார். சுந்தரர் இறைவரைக் "கோதிலா அமுது" எனப் போற்றுவதைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[13]

"ஆரா அமுது", "அமுது" எனத் திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவரைச் சேக்கிழார் புராணப்படைப்பில் தொடர்ச்சியாகக் குறிப்பது காணத்தக்கது.[14]

"தேறுவார்க்கமுதமான செல்வனார்" என அவர் குறிப்பது ஆழமுடைய கருத்தாக உள்ளது.[15] தெள்ளத் தெளிந்த பெருமக்கள் சிந்தையில் எப்போதும் அமுதம்போல் இருந்து இறைவர் இனிமை தருகிறார் என்பது அவர் குறிப்பிடும் கருத்தாகும். "சிந்தை ஆரமுது"[16] என அவர் குறிப்பதும் நினைத்தற்குரியது.

"நுகர்கின்ற தொண்டர் தமக்கு அமுதாகி நொய்யானை"[17] என்று திருஞானசம்பந்தர் புராணத்துள் சேக்கிழார் இயம்புவது இறைவர்தம் எளிமைத்திறனும் அருள்திறனும் தொண்டர்க்கு எத்துணை இன்பத்தை வழங்குகிறது என்பதைத் தெள்ளிதின் உணர்த்துகிறது. தொண்டர்கள் நுகர்தற்கேற்ற வகையில் இறைவர் அமுதம்போல் மிகவும் எளிமையுடன் வந்தமைகிறார் என்பது கருத்து. நுகர்வுப் பொருளாகவே இறைவரைக் குறிப்பிடும் நயம் காண்டற்குரியது. நொய்மை என்பது துகளாம் தன்மையைக் குறிக்கும். மிக விரைவில் செறித்தற்குரிய உணவாக உள்ளது நொய் எனப்படும். வலிவற்ற

வயிற்றிற்கு ஏற்ற உணவாகக் கொள்ளப்படும். தொண்டர்தம் நல்வாழ்விற்கு இறைவர் உதவுகின்ற அருட்பான்மையை அமுது என்ற நுகர்வுப்புல உருக்காட்சி சிறப்பித்துக் காட்டுகிறது. இறைவரை அமுது என்று பன்முறை சேக்கிழார் குறிப்பது அவரது இறையன்பின் வெளிப்பாடாக உள்ளது. ஆக்கத்தைக் குறிக்கும் குறியீடாக விளங்கும் அமுது என்பதை ஆசிரியர் இறைவரைக் குறிப்பிடும் உருக்காட்சியாகத் தொடர்ந்து ஆள்கின்றார்.

"அஞ்சைக்களத்து நஞ்சுண்ட அமுது", "நஞ்சுண்ட அமுது" எனச் சேக்கிழார் இறைவர்தம் பேரருள்பாங்கினை எண்ணிப்போற்றும் வகையில் வரும் நுகர்வுப்புல உருக்காட்சியுடன் கூடிய தொடர்கள் நயம் சான்றனவாக உள்ளன.[18]

## திருவருள் - அமுதம்:

திருநாவுக்கரசரைச் சேக்கிழார், "அருளின் ஆரமுதுண்ண அன்பு பெற்றவர்" எனக் குறிப்பிடுகின்றார்.[19]

இறைவர்தம் அருள் பெறுதற்குக் காரணமாகும், அன்பு என்பதும் இறைவரது அருளினால் பெறுதற்குரிய ஒன்று என்பர்.

"அவனருளால் அவன்தாள் வணங்கி" என்பது மாணிக்கவாசகர் மொழி.[20] "சிந்தையிடையறா அன்பு" உடையவர் எனப்பிறிதோரிடத்துச் சேக்கிழார் குறிப்பது இவண் நினைத்தற் குரியது.[21] மூவா அன்பு என்பது நிலைத்தலும் இடையறவு இல்லாத துமான தூய அன்பினைக் குறிக்கும்.

சமணர்தம் வேண்டுகோட்கிணங்க வெண்ணீற்ற றையில் இடப்பெற்ற திருநாவுக்கரசர் எவ்வித ஊனமும் இன்றி வெளிபோந்தமை சமணர்க்கு அதிர்ச்சியையும் வியப்பையும் ஊட்டிற்று. இறைவர்தம் அருள் துணை இதற்குக் காரணம் என்னும் கருத்துடையராய சேக்கிழார், "அருளின் ஆரமுதுண்ண மூவா அன்பைப் பெற்றவர் திருநாவுக்கரசர்" என இயம்புகின்றார். இறைவர் திருவருள் என்பது அமுது என்னும் நுகர்வுப்புல உருக்காட்சியால் விளக்கப்படுகிறது.

திருக்கூத்து - அமுதம்:

திருநாவுக்கரசர் தில்லைக்கு வருகைபுரிந்தார். அங்கு இறைவர்தம் திருநடத்தைக் கண்டு ஆர்வமுடன் அவர் தொழுத நிகழ்ச்சியை,

"கையுந் தலைமிசை புனைஅஞ் சலியன கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுடன் உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடுமவர் ஆர்வம் பெருகுதல் அளவின்றால்"

எனச் சேக்கிழார் விவரிக்கின்றார்.[22] திருநாவுக்கரசர் தம் இன்பம் அளவின்றிப் பெருகுதற்குக் காரணமாக இருந்த இறைவர்தம் நடம், "அமுதத்திருநடம்" எனச் சேக்கிழாரால் குறிப்பிடப்படுகிறது.[23]

தில்லைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் இறைவர் நடராசர் எனப்படுவார். நடமிடும் கோலத்தில் இறைவர் திருவுருவம் அமைந்துள்ளது. சைவநாயன்மார்களும், சைவ சமயத்தைச் சார்ந்தவர்களும் தில்லை நடராசர் கோலத்தைக் கண்டு வழிபடுவதில் ஆர்வம் உடையவர்கள். சிலப்பதிகாரத்தில் இறைவர்தம் ஆடலாகக் கொடுகொட்டி அல்லது கொட்டிச்சேதம், பாண்டரங்கம் என்பன குறிப்பிடப்படுகின்றன. சிவனார்தம் ஆடல். தோற்றம், கல். ஐம்பொன், சுதை ஆகியவற்றில் அமைக்கப்பட்டுள்ளன. கூத்துக்கலை என்பது தமிழர்தம் கலைகளுள் சிறப்புடைய ஒன்றாக உள்ளது.

"மனிதனுடைய மனத்தில் உணர்ச்சியை எழுப்பி அழகையும் இன்பத்தையும் அளிக்கின்ற பண்பு அழகுக் கலைகளுக்கு உண்டு. மனிதன் தன்னுடைய அறிவினாலும் மனோபாவத்தினாலும் கற்பனையினாலும் அழகுக்கலைகளை அமைத்து அவற்றின் மூலமாக உணர்ச்சியையும், அழகையும் இன்பத்தையும் காண்கிறான். அழகுக்கலைகள் மனத்திலே உணர்ச்சியை எழுப்பி அழகுக்காட்சியையும் இன்ப உணர்ச்சியையும் கொடுத்து மகிழ்விக்கின்றபடியினாலே நாகரிகம் படைத்த மக்கள் அழகுக்கலைகளைப் போற்றுகிறார்கள். பேணி வளர்க்கிறார்கள். துய்த்து இன்புற்று மகிழ்கிறார்கள்." என அறிஞர் குறிப்பிடுவர்.[24] அழகுக்கலைகளுள் சிறந்ததாகிய சிற்பக்கலையினால்

படைக்கப்பெற்ற சிவனார்தம் திருக்கூத்துடன் கூடிய வடிவம் திருநாவுக்கரசர் நெஞ்சத்தை ஈர்த்தமைபற்றிச் சேக்கிழார் தமது பாடலில் விவரிக்கின்றார் எனினும் இவரும் அவ்வடிவினைக் கண்டு சுவைப்பதில் ஆர்வம் மிகுந்தவராயிருந்தார் என்பதை அவர் பாடலில் அவர் ஆண்டுள்ள நுகர்வுப்புல உருக்காட்சியாகிய "அமுதம்" என்பது தெரிவிக்கிறது.

சைவசமயத்தினர் தம் வழிபடு தெய்வமாகிய சிவனாரின் திருக்கூத்து வடிவம் தத்துவக் குறியீடாக உள்ளது. தத்துவப்பொருள் குறித்துத் தரப்பெறும் விளக்கம் வருமாறு "நடராச மூர்த்தி தம் நான்கு திருக்கரங்களில் வலப்புறத்து மேற்கரத்தில் டமருகம் (உடுக்கை) வைத்திருக்கிறார். வலப்புறத்து கீழ்க்கரம் அபயஸ்தம், இடப்புறத்து மேற்கரம் அக்கினியைத் தாங்குகிறது. இடப்புறத்துக் கீழ்க்கரம் குஞ்சித பாதமாகிய இடது திருவடியைக் காட்டுகிறது. நடராசப் பெருமானது இரண்டு திருவடிகளில் வலது திருவடி முயலகன்மீது நிற்கின்றது. இடது திருவடி தூக்கிய திருவடியாகிய குஞ்சிதபாதமாய் விளங்குகிறது. இந்த மூர்த்தியின் தத்துவமானது சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபாவம், அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியம் செய்யும் பதி தாமே என்பதாகும். நாத தத்துவத்தினின்றும் உலகமுண்டாகின்றது என்னும் உண்மையை உடுக்கை தரித்த திருக்கை விளக்குகின்றது. அபயஹஸ்தம் உயிர்களெல்லாவற்றையும் தாம் காப்பவனென்னும் உண்மையை விளக்குகின்றது.. முயலகன் மீது ஊன்றிய வலது திருவடி, உயிர்களுக்கு உலக போகத்தை ஊட்டுவதாகிய திரோபவத்தை உணர்த்துகின்றது. இடது திருவடியைத் தூக்கி இடதுபுறத்துக் கீழ்க்கரத்தால் அதனைக் காட்டுகிறது: பிறவிப் பெருங்கோடையில் வருந்தும் உயிர்களே, உங்கள் பிறவியை நீக்கிப் பேரானந்தமாகிய பெருநிழல் தருவம்! இங்கே சரண் புகுங்கள் என்னும் அனுக்கிரகத்தைக் காட்டுகின்றது. இந்தத் தத்துவம்

"தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"





என்று உண்மை விளக்கமென்னும் நூலிலே விளக்கப்படுகின்றன" என்பது அறிஞர் ஜே.எம். சோமசுந்தரம் தரும் விளக்கமாகும்.[25]

இறைவரது திருக்கூத்து தன்மாட்டுக் கொண்டிருக்கும் தத்துவக் கருத்துக்களால் நாயன்மார்தம் நெஞ்சத்தை ஈர்த்தது எனலாம். அந்த நாயன்மார்களிடம் ஈடுபாடு கொண்டுள்ள சேக்கிழாரும் இறைவர்தம் திருக்கூத்து எடுத்துக்காட்டும் தத்துவப் பொருளைப் பற்றிய உணர்வினால் ஏற்பட்ட அனுபவத்தின் விளைவாகிய இன்ப உணர்ச்சியின் வெளியீடாக, "ஆடும் கழல்புரி அமுதத் திருநடம் ஆராவகை தொழுதார்கின்றார்" என்ற நுகர்ப்புல உருக்காட்சியுடன் கூடிய தொடரும்,[26]

"அளவில் இன்பப் பெருங்கூத்தர்
ஆட எடுத்த கழல்காட்ட
உளமும் புலமும் ஒருவழிச் சென்
றுருகப் போற்றி உய்கின்றார்
களனில் விடம்வைத் தளித்தஅமு
தன்றி மன்றில் கழல்வைத்து
வளருந் திருக்கூத் தமுதுலகுக்
களித்த கருணை வழுத்தினார்"[27]

என்ற பாடலும் விளக்குகின்றன எனலாம். கழறிற்றறிவார் நாயனார் தில்லையில் இறைவர்தம் திருநடத்தைக்கண்டு போற்றிய திறம் மேற்குறித்த பாடலில் தெரிவிக்கப்படுகிறது.

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வா யிற்குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇம் மாநி லத்தே"

என நாவரசரும்,[28]

"நினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போது
மனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என மணிவாசகரும்[29] இறைவர்தம் திருக்கூத்தினால் ஈர்க்கப்பெற்றமை இவண் ஒப்பவைத்துக் காண்டற்குரியது.

சேக்கிழார், இறைவர் சம்பந்தருக்கு வழங்கிய மெய்ஞ்ஞானத்தையும், அந்த மெய்ஞ்ஞானத்தால் விளையும் ஆனந்தத்தையும் முறையே அம்பலமாகவும் திருக்கூத்தாகவும் குறிப்பிடுகின்றார்.[30] ஐம்புலனுக்கும் உரிய சிவபோகமாகவும் இறைவர் திருக்கூத்து ஆடும் திருக்கோலம் விளங்குகிறது எனச் சம்பந்தர் போற்றி இன்புறுவதாகச் சேக்கிழார் குறிப்பது நினைத்தற்குரியது.[31]

"உளமும் புலமும் ஒருவழிச் சென்றுருகப் போற்றி உய்கின்றார்" என நாவரசர் சிவனார் திருக்கூத்தினால் மனங்கவரப் பெற்றமையைத் தெரிவிப்பது சேக்கிழார்தம் மன உருக்கத்தையும், இறையன்பினையும் அதன் வாயிலாகப் பெற்ற இன்ப உணர்வினையும் உணர்த்துகிறது எனலாம். "ஆரா அமுதத் திருநடம்" என அவர் குறிப்பதும் நினைத்தற்குரியது.[32]

## தொண்டர் அன்பு - அமுதம்:

திருப்பாற்கடலைக் கடையும்பொழுது வெளிவந்த நஞ்சினைக் கண்டு தேவரும் அசுரரும் அஞ்சி ஓடினர். இறைவர் அவர்தம் அச்சத்தைப் போக்கிக் கொடிய அந்நஞ்சினை உண்டார் என்பது பழங்கதை. திருப்பாற்கடலில் எழுந்த அமுதத்தை மற்றவர்க்கு வழங்கிய இறைவர் தாம் நஞ்சினை உண்டார் எனும் பெருந்தகைமை சைவ சமயத்தினரால் பெரிதும் போற்றப்படுவ தொன்றாகும். வலையின்கண்பட்ட மீன் ஒன்றினை நாளும் இறைவர்க்கென விட்டுமகிழ்ந்து. உணவயர்ந்து, மேனி தளர்ந்து இருந்த அதிபத்த நாயனார்தம் தூய அமுத்தமான அன்பினைக் கண்டு இன்புற அந்த ஒரு மீனும் கிடைக்கப் பெறாமல் செய்தார். செஞ்சுடர் போன்ற நவமணியாலான மீனை அவரது வலையிற்படுமாறு செய்தார். அந்த மீனையும் நாயனார் இறைவர்க்கெனக் கடலில் வீசியெறிந்து தமது இறையன்பினை விடாதிருந்தார். நாயனார்தம் இத்தகைய அன்பினைக் காண வந்தார் இறைவர் என்ற பொருளில் சேக்கிழார், "ஆலமுண்டவர் தொண்டரன்பெனு மமுதுண்பார்" எனக் குறிப்பிடுகின்றார். அடியார்தம் அன்பின் திறத்தைப் போற்றும் சேக்கிழார் ஆர்வம்

'அமுது' என்னும் நுகர்வுப்புல உருக்காட்சியால் வெளிப்படுவது காணத்தக்கது.[33] ஆலத்தையுண்ட பேரன்பினராகிய இறைவர் தொண்டர் அன்பினை உண்ண வருகின்றார் என்பது நயமும் ஆழமும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடைய நுகர்வுப்புல உருக்காட்சியுடன் விளங்குகிறது. அன்பினால் பெறப்படும் இன்ப அனுபவம் அமுது என்னும் நுகர்வுப்புல உருக்காட்சியால் குறிக்கப்படுகிறதெனலாம்.

## பரமானந்தம் - நன்மது:

திருவாரூர்த் திருக்கோயில்கண் தமக்குக் காட்சி நல்கிய இறைவரைப் போற்றும் சுந்தரர்,

"மன்பெ ருந்திரு மாமறை வண்டுசூழ
அன்பர் சிந்தை அலர்ந்தசெந் தாமரை
நன்பெரும் பரமா னந்த நன்மது
என்த ரத்தும்அ ளித்தெரிர் நின்றன"

என்று பரவுவதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[34] திருவடிகள் என்னும் செந்தாமரை அன்பர் சிந்தையென்னும் பொய்கையில் மலர்வதாகவும், அத்திருவடிகளை எண்ணிப் போற்றும் அன்பினால் உண்டாகும் பரமானந்தம் அந்தச் செந்தாமரை மலரில் ஊறும் நன்மதுவாகவும் ஆசிரியர் குறிப்பது நயம்சான்ற நுகர்வுப்புல உருக்காட்சியுடன் விளங்குகிறது. இறைவர்தம் திருவடியை இடையறாது சிந்திப்பதால் விளையும் இன்ப அனுபவம். 'நன்மது' என்று குறிப்பிடப்படுகிறது. உயிருக்கு உய்வு தருவதாகலின் பரமானந்தம் என்பது நன்மது எனச் சிறப்பித்துக் கூறப்படுகிறது எனலாம்.

## சம்பந்தர் - அமுது:

இறைவர் வழங்கிய ஞானத்தமுதினை உண்ட சம்பந்தரைச் சீகாழித்தலத்து மக்கள்

"காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே அதனிடை அமுதே.................."

எனத் துதித்தாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[35]

ஆழமான ஞானமென்னும் கடலிலிருந்து தோன்றிய இனிய அமுதுபோன்றவர் சம்பந்தர் என்பது சம்பந்தர்தம் பெருநிலையைத் தெரிவிக்கிறது. சம்பந்தர்பால் சேக்கிழார் கொண்டுள்ள ஆர்வத்தின் வெளிப்பாடு இந்தப் போற்றுதலில் தெரிகின்றது.

## பரவையார் - தேன்:

உருத்திர கணிகையர் என்ற பதியிலார் குலத்தில் பிறந்த பரவையாருடைய அழகையும் வளர்ச்சியையும் சேக்கிழார் சிறப்பித்துப் பாடுகின்றார்.

"மான்இளம் பிணையோ தெய்வ வளர்இளம் முகையோ வாசத்
தேன்இளம் பதமோ..........................................."

என்று அவர் குறிப்பிடும் தொடரில் தேன் இளம் பதம் என்பது நுகர்வுப்புல உருக்காட்சியாக ஆளப்பெற்றுள்ளது. 'பதம்' என்ற சொல் பக்குவம் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது எனக் கொள்ளலாம். தேன் என்பது சொல்லும் அளவில் இன்பத்தைக் குறிக்கும். 'இளம்பதமோ' என்ற சொற்களைச் சேர்த்துத் தேனின் முதிராத பக்குவத்தை அவர் குறிப்பிடுகிறார்.. 'வாசத்தேன்' என்பதில் முகர்வுப்புல உருக்காட்சியுடன் நுகர்வுப்புல உருக்காட்சி இணைந்து பரவையாரின் இளமைப் பொலிவினை உணரச் செய்கிறது.[36]

## பரவையார் - மின்னிடை அமுது:

தமது உயிரனைய பரவையாரை இறைவர் தமக்குத் தந்தருள்வார் என்ற நினைவுடன் சுந்தரர் இருந்தபொழுது மாலைப் பொழுது வந்தமைந்தது. அப்போது கதிரவன் கடலில் மறைந்து கொண்டிருந்தான். சேக்கிழார் தமது கற்பனைத் திறன் கொண்டு மறைகின்ற கதிரவனுக்கும் பரவையாரை இறைவர் தமக்குத் தந்தருள்வார் என எண்ணுகின்ற சுந்தரருக்கும் இடையே ஓர் இணைப்பைப் படைக்கிறார். "'கடலைக் கடைந்து உமது தலைவியாகிய அமுதத்தை எடுப்பேன்' என்று கூறுவதுபோல் கதிரவன் கடலில் புகுந்தான்" என்கிறார் சேக்கிழார்.

இனிய அமுதம் மின்னல் போன்ற இடையுடன் விளங்குவதுபோல் பரவையாரின் தோற்றப்பொலிவு இருப்பதாகச் சேக்கிழார் குறிப்பது நயம் சான்றதாக உள்ளது. காட்சிப்புல உருக்காட்சியாகிய மின்னலுடன் நுகர்வுப்புல உருக்காட்சியாகிய அமுதம் இணைந்து பரவையாரின் அழகினைச் சிறப்பித்துக் காட்டுகிறது.[37]

## பெண்ணமுதம்:

காப்பணியும் இளங்குழவிப்பதம் நீங்கிச் சுருட்குழலும் பொன்குழையும் உடையளாய் மென்சிறுமணிமேகலை அணியப்பெற்ற சிற்றாடையுடன் கோப்பமைந்த கிண்கிணி அசைக்குறுந் தளிரனைய மெல்லடி யொதுங்கி, தாதியர்தம் நடுவில் மனையின் முன்றிலில் மணற்சிறுவீடு இழைத்து மணிக்கனைகுரல் சிலம்பு அலையுமாறு கழல் விளையாட்டு முதலிய விளையாட்டுக்கள் பயின்ற முலை நனைமுகஞ்செய் முதற்பருவமாகிய பேதைப்பருவத்தை மானக்கஞ்சாற நாயனார்தம் மகள் அடைந்தாள் என்பதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[38] 'முதற்பருவம் நண்ணினள் அப்பெண்ணமுதம்' என்பது சேக்கிழார் மொழி.

உயர்பெருமகற்கு மகட்பேசப்பெற்ற பெருமையுடைய இப்பெண்ணின் கூந்தலை மாவிரதர் கோலத்தில் வந்த சிவனார் மானக்கஞ்சாற நாயனாரிடம் வேண்டினார். நாயனார் இவள் கூந்தலை அரிந்து சிவனாருக்கு அளித்தார். இத்தகு பெருமையுடைய பெண் என்பதைக் குறிக்கும் வகையிலும், இளமைப் பொலிவு மிக்கவள் என்பதைச் சிறப்பிக்கும் வகையிலும் "அமுதம்" என்ற நுகர்வுப்புல உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. அழகும் பண்பும் நலனும் சான்ற பெண்ணை அமுதம் என ஆசிரியர் குறிப்பது பெண்ணின் பெருமையைப் போற்றும் அவரது ஆர்வத்தைக் காட்டுகின்றது.

பெண்மையைப் போற்றும் இயல்பினர் சேக்கிழார் என்பதை இவ்வுருக்காட்சி வாயிலாக அறியமுடிகிறது. மண், பெண், பொன் என்பன மூவேடணைகள் எனப்படும். இவை ஆன்ம ஈடேற்றத்திற்குத் தடைகள் என்பர்.[39] ஆடவன் பெண்ணினத்தைத் தாம் அனுபவிக்கும் பொருளாகக் கருதாமல், மனையறத்தின் வேராகவும், விளக்காகவும் கருதி அவருடன் இயைந்து வாழ்ந்து

அறம்புரிதல் வேண்டும் என்பதையும், அன்னார் அமுதம் போன்று ஆக்கப்பாட்டிற்கு உதவக்கூடியவர் என்பதையும் சேக்கிழார் "அமுதம்" என்னும் நுகர்வுப்புல உருக்காட்சியின் வாயிலாகக் குறிப்பிடுகிறார் எனவும் கருதலாம்.

## ஊன் திருவமுது:

திண்ணனார் தமது வேட்டைவினையால் பட்ட வனவிலங்குகளைக் காட்டின் ஒருபக்கம் இட்டார். நறிய கோல்தேனை தேக்கிலையில் வைத்துக் கொண்டார். வெந்தழலை உண்டாக்கி அயில் அகலம்பால் குட்டமிட்டுக் கொழுப்பினை அரிந்து வக்குவனவற்றை வக்குவித்தார். அவ்வம்பினால் அழிப்பதுவும் வகுப்பதுவும் செய்து பயன்படக்கூடிய உறுப்பிறைச்சியையெல்லாம் அரிந்து ஒரு கல்லையில் இட்டுக் கொண்டார். அவ்விறைச்சியைக் காயநெடுங்கோலின்கண் கோத்துக் கனலில் நன்கு பக்குவம் உறக்காய்ச்சினார். தூய திரு அமுது அமையவேண்டும் என நினைத்து அவ்விறைச்சியின் சுவையைத் தம் வாயிலிட்டுக் காணலானார். நல்ல பதமுற வெந்து நாவின்கண் இடும் இறைச்சியைப்பின் கல்லையினிற் படைத்து அதனுடன் தேனைப்பிழிந்து கலந்தார். இவ்வாறு பக்குவம் செய்யப்பெற்ற ஊனைத் திருக்காளத்தியப்பருக்குப் படைப்பதற்கு ஆர்வமுடன் எடுத்துச்சென்றார். சேக்கிழார் திண்ணனார் ஊன் உணவு செய்தமைத்த பாங்கினை விவரிக்கும் பாங்கு நுகர்வுப்புல உருக்காட்சியைப் படைக்கிறது எனலாம்.

திண்ணனார் இறைச்சியின் சுவைகாண முற்பட்டமையை,

"எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டூட்டும்
வண்ணஎரி வாயின்கண் வைத்தெனக் காளத்தி
அண்ணலார்க்காம் பரிசுதாம் சோதித்த மைப்பார்போல்
திண்ணனார்தி ருவாயில்அ மைத்தார்ஊன் திருவமுது"

எனச் சேக்கிழார் பாடுகின்றார். திண்ணனார்தம் திருவாய் வேள்வித் தீக்குண்டமாகவும் சுவைகாணப்பெறும் ஊன் கடவுளர்க்கென வைக்கப்பெற்ற அமுதாகவும் சேக்கிழார் குறிப்பது நயம்சான்று விளங்குகிறது. ஊனேயாயினும் உண்மை அன்புடன்

படைக்கப்படுவது உயரிய அமுதம் போன்றது என்ற கருத்தைச் சேக்கிழார் இவ்வுருக்காட்சியால் விளக்குகின்றார்.

இறைவர் முன்னே ஊனமுதினைக் கல்லையுடன் வைத்து, 'இது முன்னையதைவிடச் சிறந்தது. ஏனமொடு மான்கலைகள் மரை கடமை இவற்றிலிருந்து எடுக்கப்பட்ட உறுப்பிறைச்சியமுதாக உள்ளது. அடியேனும் இதன் சுவையைச் சோதித்துள்ளேன். தேனும் இவ்வமுதில் கலக்கப்பட்டுள்ளது. தித்திக்கும்' எனத் திண்ணனார் கூறினார்" என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். தாய் ஒருத்தி தனது சேய்க்கு உணவின் சிறப்பையெல்லாம் சொல்லி ஊட்டுதற்கு முனைவது போல இறைவர்க்கு ஊட்ட முனைகின்றார் திண்ணனார் எனலாம். உறுப்பிறைச்சி எவ்வெவ் விலங்குகளிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டது என்பதையும், தேன் கலக்கப்பட்டுத் தித்திக்கும் தன்மையது என்பதையும் திண்ணனார் இறைவரிடம் அடுத்தடுத்து அன்புணர்வுடன் கூறுவதாகச் சேக்கிழார் அமைந்திருக்கும் உரையாடல் நுகர்வுப்புல உருக்காட்சியாக உள்ளது எனலாம். திண்ணனார் இறைவருக்குப் படைத்த ஊன் திருவமுது எனவும், ஊனைப்படைத்த செயல் ஒப்பரிய பூசனை எனவும் சேக்கிழார் குறிப்பதும் இவண் நினைத்தற்குரியது. மேலும் இறைவர் வேதியர் சிவகோசரியாரிடம், "வெம்மையான தீயினில் பதங்கொள்ள வெந்துள்ளதோ என அறிய அன்பால் நையும் மனத்துடன் நைய மிக மென்றிடலால், முன்பு மறைவேள்வியோர் தந்த திருத்தமான அவியமுதைவிடத் திண்ணன் இட்ட ஊன் எனக்கு இனியதாக உள்ளது" என்று கூறுவதாகச் சேக்கிழார் அமைப்பது, திண்ணனார் திருவாய் வேள்விக்குண்டம் போன்றது என முன்னர்க் குறிப்பிட்டமைக்கு அரணாக அமைகிறது எனலாம்.

திண்ணனார் ஊன்திருவமுது படைத்த செயலை விவரிப்பதன் வாயிலாக நுகர்வுப்புல உருக்காட்சியைச் சேக்கிழார் படைக்கின்றார். திண்ணனார்தம் தூய அன்பின் சிறப்பை இதனால் விளக்கிக் காட்டுகின்றார்.

40

இவ்வாறு நுகர்வுப்புல உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாக நாயனார்தம் பதிகம், இறைவர் திருக்காட்சி, திருவடி, திருவருள், திருக்கூத்து என்பனவற்றையும் சம்பந்தர்தம் அழகிய தோற்றம், தொண்டர் அன்பு, மகளிர் இளமை, திண்ணனார் இறைவழிபாட்டுச் சிறப்பு ஆகியவைபற்றியும் சேக்கிழார் விளக்குகின்றார். பெரிய புராணப்படைப்பில் இவ்வுருக்காட்சி பொருத்தமுற ஆளப்பட்டுள்ளது. படைப்பிற்குப் பக்திச்சுவையை ஊட்டுவதாக இவ்வுருக்காட்சி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. சேக்கிழார்தம் இறையன்பின் திறத்தைத் காட்டுவதாகவும் இவ்வுருக்காட்சி அமைந்து உள்ளது.

## முகர்வுப்புல உருக்காட்சி

நறுமணம் தரும் மலர்களையும், நறுமணப் பொருள்களையும் மக்கள் விரும்புகின்றனர். திருமணவிழா, கோயில் விழா முதலிய மங்கல நிகழ்ச்சிகளில் மலர்களும் மணப்பொருள்களும் முக்கியத்துவம் பெறுகின்றன. பொதுவாக மகளிர் தம் கூந்தலில் மணமலர்களை அணிந்து கொள்கின்றனர். மலர்களும், மணப்பொருள்களும் முகர்வுப் புலனுக்குரியவைகளாக அமைந்து மக்களுக்கு மகிழ்வூட்டுகின்றன.

"அகில்கெழு சாந்தம் மாற்றி ஆற்றப்
புகைகெழு சாந்தம் பூசு வோரும்......
வாச நறுநெய் ஆடிய வான் துகள்
மாசுஅறக் கண்ணடி வயக்கி வண்ணமும்
தேசும் ஒளியும் திகழ நோக்கி
வாச மணத் துவர் வாய்க்கொள் வோரும்......
வாசனை கமழும் வாச மேனியர்........."

என்பது பரிபாடல் வரிகள். பழந்தமிழ் மகளிர் நறுமணப் பொருள்களைப் பயன்படுத்தியமையை இச்செய்தியால் அறிய முடிகிறது.[1]

மல்லிகை, முல்லை, உரோசா (ROSE) போன்ற மலர்கள் நறுமணம் தருவனவாக இருப்பதால் மகளிரால் பெரிதும் அவை விரும்பி வாங்கப்படுகின்றன. அன்பின் அடையாளமாக இந்தமலர்கள் தரப்படுகின்றன. திருமணவிழா எனின் மணம் பரப்பும் மலர் சிறப்பிடம் பெறுகிறது. மணப்பொருளாகிய சந்தனத்தைப் பனிநீரில் குழைத்து விருந்தினருக்குத் தருவது தொன்று தொட்டு த் தமிழ்மக்களிடம் காணப்படும் மரபு எனலாம். சந்தனத்தைப் புகைத்தும் மணம் பெறுவதுண்டு. அகிற்கட்டையைப் புகைத்து அதன் மூலம் மகளிர் தமது கூந்தலைப் புலர்த்தும் செயல் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றது. திருமஞ்சனம் ஆட்டுதற்குரிய நறுமணப் பொருள்களாகக் கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம் என்ற பஞ்சவாசம் பயன்படுகின்றமை

குறிப்பிடத்தக்கது. கோயில்களில் குங்குலியத் தூபம் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். ஆகுதிப் புகையாலும் நறுமணம் உண்டாவதைக் காணலாம்.

சேக்கிழார் நறுமணம் தரும் மலர்கள், பொருள்கள் ஆகியவற்றை இடத்திற்கேற்ப, நிகழ்ச்சிகளைப் படிப்பவர் மனத்துள் காட்சிப்படுத்தும் நோக்குடன் குறிப்பிடுவதன் வாயிலாக முகர்வுப்புல உருக்காட்சியைப் படைக்கின்றார்.

பொதுவாகப் பொருள்களிருந்து வெளிவரும் மணம் என்பது காற்றின் துணைக் கொண்டு எங்கும் பரவுகிறது. தென்றல் காற்று மலர்களின் மணத்தைப் பூம்புகார்த் தெருக்களில் பரப்புகின்ற செய்தியினை இளங்கோவடிகள்,

"மாதர் கொடுங்குழை மாதவி தன்னொடு
இல்வளர் முல்லை மல்லிகை மயிலை
தாழிக் குவளை சூழ்செங் கழுநீர்
பயில்பூங் கோதை பிணையலிற் பொலிந்து
காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து
நாள்மகி ழிருக்கை நாளங்காடியிற்
பூமலி கானத்துப் புதுமணம் புக்குப்
புகையும் சாந்தும் புலராது சிறந்து........
மலய மாருதந் திரிதரு மறுகில்"

என்று குறிப்பிடுகின்றார். பூமலி கானம், பூம்பொழில் ஆகியவை மலர்களால் நிறைந்திருப்பதும், அவற்றிலிருந்து தென்றல் காற்று நறுமணத்தைக் கொணர்ந்து தெருக்களில் பரப்புவதும் ஆகிய செய்திகளைக் குறிப்பிட்டுக் காட்டும் அளவில் முகர்வுப்புல உருக்காட்சியினை அவர் படைக்கிறார் எனலாம்.[2] "காசறு விரையே" எனக் கண்ணகியைக் கோவலன் பாராட்டுவதாக இளங்கோவடிகள் உலவாக் கட்டுரை என்ற வகையில் அமைக்கிறார்.[3] காசறு விரை என்பது உருவகமாக வருகிறது. இவ்வுருவகம் முகர்வுப்புல உருக்காட்சியாக உள்ளது. சேக்கிழாரும் இத்தகைய முறையை ஆள்வது காணத்தக்கது.

மலர்களின் மணம், மங்கலக்கலவை மணம், அகில், சந்தனம், ஐயவி, கரும்பாலை, ஆகுதி ஆகியவற்றின் புகை மணம், தேன் கரும்பின்சாறு ஆகியவற்றின் மணம், சேக்கிழார் ஆளும் முகர்வுப்புல உருக்காட்சியில் இடம்பெறுகின்றன. நறுமணப் பொருள்களை நன்கு பயன்படுத்தியவராய்ச் சேக்கிழார் இருந்திருக்க வேண்டும். மங்கலக்கலவை செய்யப்படும் பாங்கினை அவர் தெரிவிப்பதைக் கொண்டு, அவரது வாழ்வுக்களம் நறுமணப் பொருள்களைப் பயன்படுத்தும் வாய்ப்புள்ளதாக இருந்தது எனக்கருதலாம். அமைச்சராகப் பணியாற்றிய காரணத்தால் அரண்மனை வாழ்வோருடனும், செல்வர்களுடனும் அவர் வாழ்க்கை தொடர்புடையதாக இருந்திருக்க வேண்டும் எனல் பொருந்தும். நறுமணப் பொருள்களைச் செல்வ நிலையிலுள்ள மக்கள் பெரிதும் ஆள்வது கண்கூடு. கோயில்களில் நடாத்தப்பெறும் வேள்விகளிலிருந்து ஆகுதிப்புகை மேலெழுந்து எங்கும் பரவுகின்றமையைச் சேக்கிழார் ஆர்வத்துடன் குறிப்பிடுகிறார். நறுமணம் தரும் பொருள்களைப் பற்றி குறிப்பிடும் சேக்கிழார் தெய்வமணம், சிவமணம் என்பதாகக் குறிப்பது அவரது படைப்பின் தனிச்சிறப்புக்குக் காரணமாக உள்ளது எனலாம்.

சுந்தரரைப் பற்றிய செய்திகளில் முகர்வுப்புல உருக்காட்சியைச் சேக்கிழார் ஆள்வது குறிப்பிடத்தக்கது. தோழமை நெறியினைக் கொண்டு இறைவரை வழிபடும் இயல்பினராகிய சுந்தரர், இறைவரிடமிருந்து நறுமணப் பொருள்களை வேண்டிப் பெற்றவர் என அறிய முடிகிறது.

"முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே"

என்பது சுந்தரர் பாடல்.[4]

"சுந்தமுதல் ஆடை ஆபரணம்
பண்டாரத்தே எனக்குப் பணிந்தருள வேண்டும்
பண்டுதான் பிரமாணம் ஒன்றுண்டே...."[5]

என அவர் இறைவரிடம் தெரிவிப்பது நினைத்தற் குரியது. சுந்தரர் நறுமணப் பொருள்களில் கொண்டிருந்த

ஆர்வத்தை மனத்துட்கொண்டு முகர்வுப்புல உருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்கிறார் சேக்கிழார்.

சோழநாட்டின் வளம், திருவாரூரின் சிறப்பு, சுந்தரர் திருமணக்கோலம், திருக்கடவூர், கஞ்சாறூர், சீகாழி, நீடூர், திருமறைக்காடு ஆகிய பகுதிகளின் வளம், கோயில்களின் சிறப்பு ஆகியவை முகர்வுப்புல உருக்காட்சியால் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன.

## நாட்டுவளம் :

திருநாட்டுச் சிறப்பு என்ற பகுதியில்,

"சுரும்படு களமர் ஆலைக் கமழ்நறும் புகையோ மாதர்
சுரும்பெழ அகிலா லிட்ட தூபமோ யூப வேள்வி
பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ சூழ்வ மாடமும் காவும் எங்கும்"

என்று சேக்கிழார் குறிப்பது காணத்தக்கது.[6] சோழநாட்டிலுள்ள மாளிகையின் மாடங்களிலும், சோலைகளிலும் களமர்கள் கரும்பினைச் சுடுவதால் ஆலையி லிருந்து எழும்புகை, மாதர்கள் உண்டாக்கிய அகிற்புகை, வேள்விச்சாலையிலிருந்து எழும்புகை ஆகியவற்றின் மணம் எங்கும் பரவியது என்பது சேக்கிழார் கூறும் செய்தி. ஆலைவளம், வேள்விச்சாலை வளம், மகளிர் வாழ்வு வளம் என்பன ஒருங்கே தெரிவிக்கப்படுகின்றன. மழைதரும் மேகங்கள் சூழ்ந்திருப்பது என்னும் செய்தி எல்லா வளத்திற்கும் அடிப்படையான வளத்தைச் சோழநாடு பெற்றுள்ள சிறப்பைக் குறிக்கிறது. புகைகளின் மணத்தை நினைவுப்படுத்தும் முகர்வுப்புல உருக்காட்சியால் சோழநாட்டின் சிறப்பை நயமுறத் தெரிவிக்கின்றார் ஆசிரியர்.

சோழநாட்டில் உள்ள பல்வேறு மலர்களை அடுக்கிக் கூறுவதன் வாயிலாக எழுப்பப்படும் முகர்வுப்புல உருக்காட்சியை ஆசிரியர் ஆள்கின்றார். நாளிகேரம், நரந்தம், கோளிசாலம், தமாலம், குரவம், நாகம், வஞ்சி, காஞ்சி, கோங்கம், சூதபாடலம், வழை, ஞாழல், சாதிமாலதி, நறவம், மாதவி, சரளம், வகுள சண்பகம், கைதை பூகம் புன்னாகம் ஆகிய மலர்களை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[7] சோழநாட்டின் வளத்தைப் பல்வேறு

மலர்களின் மணங்களைக் கொண்டு குறிப்பிடுவதில் ஆசிரியருக்குள்ள ஆர்வம் இப்பாடல்களில் வெளிப்படுகிறது. மலர்வளங்கள் வைத்துப் பேணிக் காத்தவராகச் சேக்கிழார் இருந்திருக்கிறார் எனலாம்.இறைவழிபாட்டிற்கெனப் பல்வேறு மலர்களைப் பயன்படுத்தியவர் எனவும் கருத இடமுண்டு. வடிவு, தன்மை ஆகியவற்றைக் குறிப்பிட்டு மலர்களைக் குறிப்பது அவற்றைப் பற்றி நன்கு அறிந்தவர் என்பதைக் காட்டுகிறது. மலர்மணம் நிறைந்த நாடாகச் சோழநாடு விளங்கியது என்ற செய்தி அந்நாட்டின் வளத்தின் சிறப்பைத் தெள்ளிதின் உணர்த்துகிறது.

## திருமணவிழா : நன்மணக்கோலம் :

தடுத்தாட்கொண்ட புராணத்தில் சுற்றத்தினர் சுந்தரருக்கு நன்மணக்கோலம் செய்தமைப்பற்றிக் கூறப்படுகிறது.

" ஈசனுக்கினியான்" எனச் சேக்கிழாரால் ஆர்வமுடன் அழைக்கப்பெறும் சுந்தரர் மேனியை உறவினர்கள் எழில்பெற விளக்கினார்கள். வாசநெய்யை அவரது மேனியில் ஊட்டினர். பின்பு மலர்மணம் நிறைந்த தூய நீரினால் அவரை ஆட்டினர். அதன் பின் அரிசனம் சாத்தினர். அரிசனம் என்பது மஞ்சளைக் குறிக்கும். நீராடும் பொழுதில் தமிழ்மக்கள் தம்மேனிக்கு மணம் ஊட்டும் பழக்கம் உடையராய் இருந்தமையை இச்செய்தியால் அறியலாம். நீராட்டப் பெற்ற பின்பு இவ்வாறு தம் மேனியில் எழிலும் மணமும் பெற்றசுந்தரர் அகில் விரைத்தூபம் ஏய்ந்த அணிகொள் பட்டாடை சாத்தப்பெற்றார். கைவலான் துகிலைக் கொண்டு அவரது குஞ்சியின் ஈரத்தைப் புலர்த்திச் சிகழியை ஆர்த்தான். தூய நறுமணம் கமழும் பசுங்கர்ப்பூரச் சுண்ணத்தால் வண்ணப் போதில் ஆன தண்ணிய பனிநீரைக் கூட்டி அமைத்த சந்தனச் சேறாட்டி, மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவையை அவர்மீது சாத்தினர். முந்நூல் மின்ன விளங்கும் சுந்தரருக்குத் தூமலர்ப் பிணையல், மாலை, துணரிணர்க் கண்ணி, கோதை, தாமம் என்ற மலர் அணிகளைச் சாத்தினர். இவ்வாறு மங்கலக்கலவை மணத்துடன் மலர்மணம் இணைந்தது. பின்னர் மணிகளாலான அணிகள் பூட்டப்பெற்றார். சுந்தரர் கொண்ட நன்மணக்கோலம், உண்மையில் நறுமணம் கமழும் கோலமாக அமைந்தமை காணத்தக்கது.[8]

நீராடும்பொழுது மேனிக்கு ஊட்டப் பெற்ற வாசநெய், மலர்விரை, அடுத்து தூநீர், அரிசனம் ஆகியவற்றின் மணம், அகில் விரைத்தூப மணம், சந்தனச் சேற்றின் மணம், மங்கலக் கலவையின் மணம், மலரானான அணிகளின் மணம் ஆகியவை அனைத்தும் இணைந்து இனிய திருமணக்கோலமாக அமைவதைச் சேக்கிழார் விளக்குகின்றார். நன்மணக்கோலம் பற்றி அவரது விளக்கமான வருணனை முகர்வுப்புல உருக்காட்சியாக அமைந்து மணமகளையும், மணவிழாவையும் நினைக்கச் செய்கிறது.

சுந்தரர் கொண்ட நன்மணக்கோலத்தைச் சேக்கிழார் "மன்னவர் திரு" என்று குறிக்கின்றார்.[9]

## குழலின் வாசம் :

மணமகள், நன்மணக்கோலம் கொள்ளும் பாங்கு முன்னர்க் கூறப்பட்டது. "பதியிலார் குடும்பத்தில் பிறந்த பரவையார்தம் குழலின் வாசம் திசைசெயலாம் சென்று சூழ்ந்தது " என்று சேக்கிழார் குறிப்பது மகளிர் மலர்களால் தமது குழலுக்கு மணம் ஊட்டியமையைத் தெரிவிக்கிறது. " குழலின் வாசம் திசைசெயலாம் சென்று சூழ்ந்தது " என்பது முகர்வுப்புல உருக்காட்சியாக உள்ளது.[10]

## நகர்களின் வளம் :

திருக்கடவூரில் வாழ்ந்த அருமறை அந்தணராகிய கலயர் என்பார் வேணிப்பிரான் கழலை வணங்கி நாளும் உருகிய அன்பு கூர்ந்த சிந்தையராயும், ஒழுக்கம் மிக்காராயும் விளங்கினார். காலனார் உயிர்செற்ற இறைவர்க்குக் கமழ்ந்த குங்குலியத்தூபம் மிகவும் நிறைந்து விம்ம இடும்பணியிலும் இடையறாது ஈடுபட்டார். அத்தகையார் வாழ்ந்த திருக்கடவூரின் வளத்தை முகர்வுப்புல உருக்காட்சியால் சேக்கிழார் குறிப்பது பொருத்தமுற அமைந்துள்ளது.

" துங்கநீள் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமும் தீம்பால் நாறும்
மங்குல்தோய் மாடச் சாலை மருங்கிறை ஒதுங்கும் மஞ்சும்
அங்கவை பொழிந்த நீரும் ஆகுதி புகைப்பால் நாறும் "

என்பது சேக்கிழார் மொழி.[11]

திருக்கடவூரின் வளம், தூய்மையான மணம் மிக்க சூழல் இப்பாடலில் குறிக்கப்படுகின்றன. வாவியில் மேதி படிந்து பாலை சொரிந்து விடுகிறது. செங்கயல்கள் பாய்கின்றன. கமலமலர்களில் தீம்பால் மணம் உண்டாகிறது. மலர் மணத்துடன் பால்மணம் இணைகின்றது. வானத்தைத்தொடும் அளவு உயர்ந்திருக்கும் மாடச்சாலைகளின் அருகில் ஒதுங்குகின்ற மேகங்கள் மழைபொழிகின்றன. அந்தணர்கள் ஓம்பும் வேள்விகளிலிருந்து எழும் ஆகுதிப்புகையின் மணம் சார்வதால் மழைநீர் ஆகுதிப்புகை மணத்தைப் பெற்றுவிடுகிறது. இவ்வாறு வாவி நீரிலும், வான மழைநீரிலும் முறையே பால்மணமும், ஆகுதிப்புகை மணமும் கலப்பதாகிய செய்தி முகர்வுப்புல உருக்காட்சியாக அமைந்து திருக்கடவூர் வளத்தை நினைக்கச் செய்கிறது. நிலவளம், நீர்வளம், மக்கள் மனவளம் ஆகியவற்றை இவ்வுருக்காட்சியினால் ஆசிரியர் சிறப்பித்துக் காட்டுகின்றார். ஆழமும், பொருத்தமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக முகர்வுப்புல உருக்காட்சி இங்கு ஆளப்பட்டுள்ளது.

மானக்கஞ்சாறனார் என்ற நாயனார்,தம் பதியாகிய கஞ்சாறூரின் வளத்தினைச் சிறப்பிக்கும் சேக்கிழார்.

"கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகும்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்"

என்கிறார். மரக்கொம்புகளினின்றும் ஒழுகும் தேன், கனிகளிலிருந்து ஒழுகும் சாறு, வயலிலுள்ள கரும்புகளின் சாறு ஆகியவற்றின் மணம் கஞ்சாறூர் முழுதும் கமழ்கிறது என்பது கருத்து.[12]

தென்புகலிக் கோனாகிய சம்பந்தரும் நாவுக்கரசரும் மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலைகள் நிறைந்த திருமறைக்காட்டினை அடைந்தமையைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[13] திருமறைக்காடு எனும் தலம் புன்னைமலர் மணத்தால் நிறைந்திருந்தது என்பது ஆசிரியர் கருத்து. சீகாழியில் பொழில்வளம் மிகுந்திருந்தமையை.

" பூமுகை அவிழ்த்து மணம்மேவு பொழில்எங்கும் "

என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார்.[14] சீகாழித் தலத்திலுள்ள சோலைகளில் பூமணம் நிறைந்திருந்தமை இவ்வாறு

கூறப்படுகிறது. அடுத்து சேக்கிழார் சிலமறையோர்கள் செய்த ஓமவினை பற்றிச் சிறப்பிக்கின்றார். வெண்சிறுகடுகுடன்பல அமைத்த புகையும், நெய் அகில் நறுக்குறை நிறைத்த புகையும், வெய்யதழல் ஆகுதியின் விழுப்புகையும் ஒன்றாக இணைந்து சீகாழித் தலத்தில் தெய்வமணம் கமழுமாறு செய்தன என்று சேக்கிழார் குறிப்பது புதுமையும் ஆழமும் உடையதாக உள்ளது.[15] தெய்வமணம் என்பது மனிதர்தம் புலனுக்கு அப்பாற்பட்ட ஒன்று எனினும் ஆசிரியர் மக்கள் அறிந்த மூன்று புகைகளைக் குறிப்பிட்டு அவற்றின் இணைப்பினால் உண்டாகின்ற இனிய புகைமணம்தான் தெய்வமணம் என்பதுபோல் குறிப்பிடுவது சிந்தித்தற்குரியது. சேக்கிழார்தம் இறையன்பின் சான்றெனத் திகழ்கிறது இங்கு ஆளப்பெற்றுள்ள முகர்வுப்புல உருக்காட்சி எனலாம். இவ்வகையில் சேக்கிழார்தம் கற்பனையின் மனவியலைக் காட்டுவதாக உள்ளது இவ்வுருக்காட்சி. தெய்வமணம் என்ற புதுமையான சொல்லாட்சியை ஆள்கிறார் ஆசிரியர். இனிய மணம் எல்லாம் தெய்வமணம் என்பது அவர் கருத்தாகும் எனலாம்.

தில்லைத் திருவீதியில் சிவமணம் கமழ்வதாக ஆசிரியர் குறிப்பதும் இவண் நினைக்கத்தக்கது.[16] சிவமணம், தெய்வமணம் என்பனவற்றைப் பூமணம்போல் எளிதில் உணருமாறு செய்கின்றார் ஆசிரியர்.

முனையடுவார் நாயனார்தம் பதியாகிய நீடூர் எனும் ஊரின் வளம்பற்றிக் குறிப்பிடும் சேக்கிழார்,

"மாறு கடிந்து மண்காத்த வளவர் பொன்னிந் திருநாட்டு
நாறு விரைப்பூஞ் சோலைகளின் நனைவாய் திறந்து பொழிசெழுந்தேன்
ஆறு பெருகி வெள்ளமிடும் அள்ளல் வயலின் மள்ளருழுஞ்
சேறு நறுவா சங்கமழும் செல்வ நீடூர் திருநீடூர்"

என்று பாடுகிறார்.

சோலைகளிலுள்ள அரும்புகள் மலர்ந்தபொழுது அவற்றிலிருந்து செழுந்தேன் ஒழுகி ஆற்று வெள்ளமெனப் பெருகி உழவர்கள் உழுகின்ற வயலின்கண் சேற்றில் கலந்து கமழ்கின்ற தன்மையைச் செல்வ நீடூரில் காணலாம் என்பதாக ஆசிரியர் வருணிக்கின்றார். இங்கு ஆளப்பெற்றுள்ள முகர்வுப்புல உருக்காட்சி நீடூரின் செல்வ வளத்தை நினைக்கச் செய்கிறது.[17]

நன்மணமில்லாத சேறும் தேன்மணத்தின் சேர்க்கையால் நறுமணம் பெற்றுக் கமழ்கிறது என்ற செய்தி நினைத்தற்குரியது.

## மண அணிசெய் மறைமூதூர்:

திருஞானசம்பந்தர் தம் திருமணவிழவினைச் சேக்கிழார் விவரிக்கும்பொழுது,

"குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போர் இனங்குழுமப்
பொங்குவிரைப் புதுக்கலவைப் புகைஎடுப்போர் தொகைவிரவத்
துங்கநறுங் கர்ப்பூரச் சுண்ணமிடிப் போர்நெருங்க
எங்குமலர்ப் பிணைபுனைவோர் ஈட்டங்கள் மிகப்பெருக",

"இனையபல வேறுதொழில் எம்மருங்கும் நிரைத்தியற்றும்
மனைவளரும் மறுகெல்லாம் மணஅணிசெய் மறைமூதூர்"[18]

என்று நறுமணம்தரும் கூட்டு, புகை, சுண்ணம், மலர்ப்பிணை முதலியவற்றைச் செய்கின்ற தொழில் திறனுடையவர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். மறைமூதூராகிய சீகாழித்தலம் இவற்றால் மணம்பெற்று விளங்கியமையையும், திருஞானசம்பந்தர்தம் திருமணவிழாவையும் நினைக்கச் செய்யும் வகையில் இவ்வருணனை முகர்வுப்புல உருக்காட்சியாக அமைந்துள்ளது எனலாம்.

முகர்வுப்புல உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாகச் சுந்தரமூர்த்தி நாயனார்தம் திருமணக்கோலத்தை ஆசிரியர் படிப்பவர் மனக்கண்முன் தோன்றுமாறு செய்கிறார். நாடு, நகர் ஆகியவற்றின் வளங்களைச் சிறப்பித்துக் காட்டுகின்றார். வயலின்கண் உள்ள சேறும் மணக்கிறது என அவர் குறிப்பது புதுமைநயம் சான்றதாக உள்ளது. சிவமணம், தெய்வமணம் என்ற செய்தி இவ்வுருக்காட்சியின் தனிச்சிறப்பைக் காட்டுகிறது. பெரியபுராணப் படைப்பில் முகர்வுப்புல உருக்காட்சி நறுமணத்தை மட்டும் குறிப்பதாக அமையாமல் சேக்கிழாரது வெறுப்புணர்ச்சியின் வெளியீடாகவும் அமைந்திருப்பது குறித்துக் காண்பதும் பொருத்த முடைத்து. "பால்நாறும் மணிவாயர்" எனச் சம்பந்தரைக் குறிப்பதில் விருப்புடைய ஆசிரியர் சமணர்தம் உடல், வாய் இவற்றில் தீநாற்றத்தை வெறுப்புடன் குறிப்பிடுகிறார்.[19]

முழுமணம்:

திருஒற்றியூரின்கண் கடற்கரையின் மணற்பரப்பில் கிடக்கும் மாதவி, புன்னை, ஞாழல், சண்பகம், செருந்தி, கைதை ஆகிய மலர்கள் முழுமணத்தைப் பரப்புவதனால் கடலின் நீரும் நன்மணம் பெற்றது" என்கிறார் ஆசிரியர்.[20] நல்ல மணம் தீயமணத்தை அடக்கி மேலோங்கி நிற்பதை ஆசிரியர் குறிப்பது அவரது கற்பனையின் மனவியலைக் காட்டுகிறது. நன்மையே எப்பொழுதும் சிறந்து விளங்கவேண்டும் நன்மையால் தீமை அடக்கப்பெற வேண்டும், என்ற உணர்வு உடையவர் ஆசிரியர் எனக்கருத இடமுண்டு.

சேக்கிழார்தம் படைப்பாற்றலின் ஆளுமையைக் காட்டுவதாக முகர்வுப்புல உருக்காட்சி விளங்குகிறது.

## ஊற்றுப்புல உருக்காட்சி

ஐம்புல உணர்வுகளுள் ஒன்றான ஊற்றுப்புல உணர்விற்குரிய உருக்காட்சிகள் பெரியபுராணத்தில் ஆளப்பட்டுள்ளன மாலையிலும் இரவிலும் தண்மையான கதிர்களைப் பரப்பும் நிலவு, தென்றல் காற்று, மங்கலக்கலவை, பனிநீர், மலர், தளிர், குளிர்ப்பருவம் என்பனவும் ஞாயிற்றின் வெப்பம் மிகுதியாயுள்ள வேனிற்பருவம், தீ, வெப்புநோய்க்கொடுமை முதலியனவும் முறையே தண்மை, வெப்பம் ஆகிய உணர்வுகளைக் குறிக்கும் வகையில் உருக்காட்சிகளாகப் படைப்பில் ஆளப்படுகின்றன. இரும்பு, கல் போன்ற வன்மையான பொருட்களும், மலர், அகவிதழ், தளிர், பூமாலை, பஞ்சு போன்ற மென்மையான பொருட்களும் வன்மை, மென்மைத் தன்மைகளைச் சிறப்பிக்கும் வகையில் உருக்காட்சிகளாக ஆளப்படுகின்றன. இவற்றைப் பற்றி ஆசிரியர் பெற்றுள்ள அனுபவ அறிவு ஊற்றுப்புல உருக்காட்சி ஆய்வினால் தெரியவருகிறது.

இறைவர் திருவடி, மன்னனுடைய ஆட்சிச்சிறப்பு, நாயனார், மகளிர் ஆகியோருடைய கண்கள், கைகள், கால்கள் முதலியவற்றின் மென்மைத் தன்மை; சில மனிதர்தம் திண்ணிய மனத்தின் இயல்பு ஆகியவை விளக்கப்படுகின்றன. மங்கையர்

முகத்தின் பொலிவு, திருமணம் போன்ற மங்கல நிகழ்வுகளின் சிறப்பு, தென்றல் இனிமை, தமிழின் இனிமை, ஆற்றுநீரின் தண்மை, இறைவர் திருவடிப் பேற்றினைப் பற்றிய அனுபவம் முதலியவற்றை உணர்த்த ஊற்றுப்புல உருக்காட்சியைச் சேக்கிழார் பொருந்தமுற ஆள்கிறார். குளிர்ப்பருவம், வேனிற்பருவம் என்பனபற்றி அவர் வருணிக்கின்ற பகுதிகள் ஊற்றுப்புல உருக்காட்சியைப் படைக்கின்றன. மலர், தளிர், இரும்பு, கல் போன்றவை உவமைகளாக அல்லது உருவகங்களாக அமைந்து ஊற்றுப்புல உருக்காட்சிகளைப் படைக்கின்றன. பருவ வருணனைப் பகுதிகளில் ஆசிரியரால் அடுத்தடுத்து வைக்கப்பெறும் செய்திகள் ஊற்றுப்புல உருக்காட்சிகளை எழுப்புகின்றன. நெடுநல்வாடை என்ற தமது படைப்பில் நக்கீரர் குளிர்ப்பருவம் பற்றிக் குறிப்பிடும் செய்திகள் ஊற்றுப்புல உருக்காட்சியாக அமைந்துள்ளமை இவண் நினைத்தற்குரியது.[1]

## தண்மை:

குளிர்ச்சியான காற்று வீசும்பொழுதும், மழைத்துளி உடம்பில் படும்பொழுதும், அருவிநீரில் நீராடும்பொழுதும், சந்தனம் போன்ற தண்மையான பொருள்களைத் தொட்டுப் பூசிக்கொள்ளும் பொழுதும், மரத்தின் நிழலில் கோடை வெய்யிலின் கொடுமையிலிருந்து விடுபடுதற்கு ஒதுங்கி யிருக்கும்பொழுதும் தண்மையான ஊற்றுப்புல உணர்வு உண்டாகின்றது. இவை உடம்பைப் பொறுத்த தண்மையைக் குறிக்கின்றன. இனிய பசுமையான காட்சிகள் கண்ணுக்குக் குளிர்ச்சியைத் தருகின்றன. இனிமையான இசை, நல்ல பாராட்டு மொழிகள் செவிக்குக் குளிர்ச்சியைத் தருகின்றன. நல்ல நினைவுகள் மனத்திற்குக் குளிர்ச்சியைத் தருகின்றன. சேக்கிழார் ஊற்றுப்புல உருக்காட்சியில் அடங்கும் தண்மை உருக்காட்சியை ஆள்வது குறிப்பிடத் தக்கது.

*"பொற்புடந் தோளால் வையம்பொ துக்கடிந்(து) இனிது காக்கும்*
*கொற்றவன் அநபா யன்பொற்கு டைநிழற் குளிர்வ தென்றால்*
*மற்றவன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ?"*

என்று சோழமன்னன் அநபாயனின் ஆட்சிச்சிறப்பைக் குறிப்பிடுகிறார். "பொற்குடை நிழல் குளிர்வது" என்ற தொடர்

தன்மை உருக்காட்சியுடன் விளங்குகிறது. மக்களுக்கு ஏற்படும் துன்பங்களை வெயிலாகவும், பொற்குடை நிழலை ஆட்சிச்சிறப்பாகவும் பொருள்கொள்வது பொருத்தமுடைத்து. அநபாயனின் ஆட்சி மக்களுக்கு நேரும் துன்பத்தைப் போக்குவதுடன் இன்பத்தையும் தருவதாக உள்ளது என்ற கருத்து இவ்வாறு உருக்காட்சியால் விளக்கப்படுகிறது. சேக்கிழார் செங்கோன்மையைப் பெரிதும் போற்றுபவர் என்பது இவ்வுருக்காட்சியால் வெளிப்படுகிறது.

## தண்பனிநீர், சந்தனச்சேறு:

சுந்தரருக்கு நன்மணக்கோலம் செய்யும்பொழுது தண்மையான பனிநீரில் குழைத்து அமைக்கப்பட்ட சந்தனச் சேற்றினை அன்பர்கள் மேனியில் இட்டுத் தண்மை ஊட்டினர் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். பசுங்கர்ப்பூரப்பொடி, மான்மதச்சாந்து ஆகியவை தோய்ந்த மங்கலக் கலவையை அவர்க்குச் சாத்தினர் என்பதையும் ஆசிரியர் தெரிவிக்கிறார். முகர்வுப்புல உருக்காட்சியினைப் படைப்பனவாக இது அமையினும் தண்பனிநீர், சந்தனச்சேறு என்பவை தண்மை உருக்காட்சியைப் படைப்பது காணத்தக்கது.[2] நன்மணத்துடன் கூடிய தண்மையைப் பெறுவதில் மக்களுக்கு உள்ள ஆர்வத்தை இதனால் காணமுடிகிறது.

இயற்கையியல் ஈடுபாடும் அனுபவமும் உடையராய்ச் சேக்கிழார் விளங்குகின்றமையைப் பனிப்பருவம் குறித்து அவர் படைக்கும் வருணனைப் பகுதியில் அறிய முடிகிறது. திருஞானசம்பந்தர் சிவனார் அமர்ந்தருளும் செங்குன்றூர் என்னும் பதிக்குவந்து தங்கினார். அப்பொழுது பனிப்பருவம் எய்தியிருந்தது. அவண் எய்திய பனிப்பருவம் பற்றிச் சேக்கிழார், "வரையுங் குளிரும் பனிப்பருவம்" என்கிறார். அடுத்து அவர்,

"அளிக்குலங்கள் சுளித்தகல அரவிந்தம் முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியிற்கோத்த பான்மையெனத்
துளித்தலைமேல் அறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியால்
குளிர்க்குடைந்து வெண்படாம்போர்த் தனைய குன்றுகளும்,"
"மொய்பனிசுூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்க்கொதுங்கி
வெய்யவனும் சுரம்திமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
ஐதுவெயில் விரிப்பதுவும் அடங்குவதும் ஆகுமால்."

"நீடியஅப் பதிகளெலாம் நிறைமாடத் திறைகள்தொறும்
பேடையுடன் பவளக்கால் புறவொடுங்கப் பித்திகையின்
தோடலர்மென் குழல்மடவார் துணைக்கலச வெம்மைமுலையுள்
ஆடவர்தம் பணைத்தோளும் மணிமார்பும் அடங்குவன."

•

"அரிசனமும் குங்குமமும் அரைத்தமைப்பார் அயலெல்லாம்
பரியஅகிற் குறைபிளந்து புகைப்பார்கள் பாங்கெல்லாம்
எரிஉமிழ்பேழ் வாய்த்தோணி இரும்பீர்ப்பார் இடையெல்லாம்
விரிமலர்மென் புறவணிந்த மீப்புலத்து வைப்பெல்லாம்"[3]

என நான்கு பாடல்களில் செங்குன்றூர்க்கண் எய்தியிருந்த பனிப்பருவம் பற்றிக்குறிப்பது காணத்தக்கது.

"அளிக்குலங்கள் சுளித்தகல அரவிந்தம் முகம்புலர" என அவர் குறிப்பது பனிப்பருவம் பற்றிய உணர்வினை உடன் உணர்த்துவதாய் உள்ளது. "அரவிந்தம் முகம் புலர்ந்து விட்டமையால் வண்டுக் கூட்டங்கள் அம்மலரைவிட்டு அகல்கின்றன. அருகம்புல்லின்மேல் பனித்துளி கோத்திருக்கின்றது. குன்றுகள் குளிரைத் தாங்கிக் கொள்ளும் திறனற்றவையாய் வெண்மேகங்களைத் தங்கள்மீது போர்த்திக் கொண்டு இருப்பதுபோல் தோன்றுகின்றன. சோலைகளும் குலைந்தசைகின்றன. வெய்யவனாகிய கதிரவன் குளிர்க்கு ஒதுங்கித் தன் கதிர்களாகிய கரங்களை நிமிர்க்க முடியாதவனாய் விசும்பின்கண் மெல்ல வெயிலை விரிப்பதாகவும் அடங்கிக் கொள்வதாகவும் உள்ளான். மாடப்புறாக்கள் ஒடுங்கிக் கிடக்கின்றன. மகளிர் மார்பில் ஆடவர் மார்பும் தோளும் அடங்கியுள்ளன. அரிசனத்தையும் குங்குமத்தையும் அரைத்துக் கொள்கின்றார்கள். அகிற்புகையை எங்கும் எழுப்புகிறார்கள். நெருப்பை உமிழும் இருப்புத் தோணியை ஈர்க்கிறார்கள்" எனச் செய்திகளை நிரல்படக்கூறிச் சேக்கிழார் குளிர்ப்பருவ உணர்வை எழுப்புகின்றார்.

செங்குன்றூரில் மக்களும் மற்ற உயிர்களும் பனிப்பருவத்தினால் துன்புறுவதைக் கண்டு மனம் இரங்கிய சம்பந்தர் தமது திருப்பதிகத்தால் தீயபனிப் பிணியை நீக்கி அருளினர் என்ற செய்தியைச் சிறப்பித்துக் காட்டும் ஆசிரியரது ஆர்வம் பனிப்பருவ வருணனைக்குக் காரணம் எனலாம்.

மிகக்கொடிய பனிப்பருவத்தின் கொடுமையில் இருந்து மக்களை விடுவித்த இவ்வருட்செயலை மதுரையில் சமணர்தம் பிடியிலிருந்து மக்களை விடுவிக்கும் அரியசெயலின் முற்குறிப்பாக ஆசிரியர் கருதியிருக்கலாம் எனத் தோன்றுகின்றது. கடுங்குளிரையும் பொருட்படுத்தாமல் பதிகள்தோறும் சென்று இறைவரை வழிபட்டு வந்த சம்பந்தர்தம் திருத்தொண்டின் சிறப்பையும் இவ்வுருக்காட்சி குறிப்பாகக் காட்டுகிறது எனலாம்.

## மணம்செய் ஈரம்:

"வண்டுகள் கூட்டமாக முரல்கின்ற சந்தனமரச் சோலைகள் நிறைந்துள்ள பொதியமலையம் தரவந்த மந்தமாருதம் எனப்படும் தென்றல் காற்றும், உலகத்தை அளந்த மேன்மை மிகுந்த தெய்வத்தன்மை வாய்ந்த தமிழும் மதுராபுரிக்கு செவ்விய மனத்துடன் கூடிய தண்மையை வழங்குகின்றன" என்று மூர்த்திநாயனார் புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். மதுராபுரியின் சிறப்பைத் தெரிவிக்கும் வகையிலும், சேக்கிழார் தம் தமிழ்ப்பற்றினை வெளிப்படுத்துகின்ற வகையிலும் இச்செய்தியில் ஆளப்படும் தண்மை உருக்காட்சி விளங்குகிறது. தென்றலையும் தமிழையும் இணைத்துக்கூறி இரண்டும் தண்மையைத் தருவன என ஆசிரியர் குறிப்பது நயந்தருவதாக உள்ளது. "தென்றல் காற்று வெப்பத்தின் கொடுமையை நீக்கி மக்கள்தம் உடம்பிற்குத் தண்மையைத் தருகிறது. தெய்வத்தமிழ் உலகப்பற்று என்ற வெப்பத்தை நீக்கி உள்ளத்திற்கும் உயிருக்கும் தண்மையைத் தருகிறது." என்று சேக்கிழார் குறிப்பிட விரும்பும் கருத்தெனக் கொள்ளலாம். ஆழமான உருக்காட்சியாக இது விளங்குகிறது.

"மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்றசந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்தமந்த
மெய்வைத்த காலும் தருஞால மளந்தமேன்மைத்
தெய்வத் தமிழும் தருஞ்செல்வி மணஞ்செயீரம்"

என்பது சேக்கிழார் பாடல்,

## ஈரம் - மதுரப்பதம்:

யாழின் ஒலி செவிக்குக் குளிர்ச்சி தரக்கூடியது என முன்னர்க் கூறப்பட்டது. "நாளும் அடியார்க்கு அமுதுசெய்யும்

திருத்தொண்டினைச் செய்துவந்த இளையான்குடி மாறநாயனார் தம்மிடம் வரும் விருந்தினரைத் தூய அன்புடன் கைகள் குவித்துநின்று வரவேற்பார். விருந்தினர்தம் செவிப்புலத்தின்கண் குளிர்ச்சி உண்டாகுமாறு மெல்லிய இனிய சொற்களைப் பரிவு தோன்றுமாறு முன்னுரையாகக் கூறுவார்" எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[5]

செவிப்புலத்து ,ஈரம் மென்மதுரப்பதம்" என்ற தொடரை ஆசிரியர் ஆள்கின்றார். கேட்பார்தம் செவிப்புலத்தின்கண் தண்மையைப் படைக்கும் மொழிகளை விருந்தோம்பல் எனும் அறம்புரிவார் மேற்கொள்ள வேண்டும் என்ற பண்பாட்டை இதில் ஆளப்பட்டுள்ள தண்மை உருக்காட்சி விளக்குகிறது.

## தண்டுளிவாடை:

கொடும்பாளூர் என்பது கோனாட்டைச் சேர்ந்த பதியாகும். ஆதித்தன் புகழ்மரபினில் வந்த வேளிராகிய இடங்கழியார் தமது பண்டாரத்தைச் சிவனடியார்க்குக் கொடுத்த பெருமையுடையராவர். அவரது ஈகைச்சிறப்பை உணர்த்தும் நோக்கில் குறியீட்டுருக்காட்சி எனக்கருதத்தக்க உத்தியைச் சேக்கிழார் ஆள்கிறார். இக்குறியீட்டு உருக்காட்சி இயற்கை வருணனையாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வியற்கை வருணனை குளிர்ப்பருவத்தைக் குறிப்பதாக உள்ளது. "மணங்கமழும் செந்தாமரை மலரில் துதைந்த வண்டுகள் சூழ்ந்துள்ள வாவியில் நாரை தனது பெடையுடன் இரையை உண்டு, தண்மையான துளிகளை வீசும் வாடை தம்மை நலியா வண்ணம் விலகி மாதவிக் கொடியின் சூழலில் மறைந்து கொள்கிறது. அத்தகைய கோனாட்டில் உள்ளது கொடும்பாளூர் நகரம்" என்பது சேக்கிழார் அமைத்துள்ள இயற்கை வருணனை. மாதவிச்சூழலில் நாரை பெடையுடன் ஒடுங்கிக் கொள்கிறது என்ற செய்தியும், பெடையுடன் இரையருந்தி வாடையினின்றும் விலகிக்கொள்கிறது என்ற செய்தியும் இடங்கழி நாயனார் அடியார்தம் பசியை நீக்கி வேண்டுவன நல்கித் துன்பத்தால் அவர்கள் பாதிக்கப்படாமல் காக்கும் ஈகைப்பண்பினைக் குறிப்பாகத் தெரிவிக்கின்றன எனலாம். "தண் துளி வாடை" என்பது தண்மை உருக்காட்சியாக உள்ளது.[6]

ஊற்றுப்புல உருக்காட்சியுள் இடம்பெறுவதாகிய தண்மை உருக்காட்சி சேக்கிழார்தம் இயற்கையியல் ஈடுபாட்டை உணர்த்துகிறது. விருந்தோம்பல் அறத்தில் அவர் ஆர்வம் உடையவர் என்பதையும் தெரிவிக்கிறது. தெய்வத்தமிழ், தென்றல் காற்று அவரைப் பெரிதும் கவர்ந்துள்ளன என்பதையும் காட்டுகிறது. குளிர்ப்பருவத்தைக் குறிக்கும் வகையில் தக்க செய்திகளை ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிக் கூறித் தண்மை உருக்காட்சியை எழுப்புவது அவரது படைப்பாற்றல் திறனின் ஆளுமைக்குச் சான்றாக அமைகிறது.

## குளிர்சாரல்:

திருவொற்றியூரின்கண் இறையருளால் சங்கிலியாரை மணந்து, அவருடன் அப்பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவரை நாளும் வழிபட்டு வாழ்ந்துவந்த சுந்தரர் தென்றல்காற்று அணைந்தமையை உணர்ந்தார். தென்றல் காற்று அவருக்குத் திருவாரூர் அணிவீதி அழகராகிய இறைவர்தம் மங்கல நாள் வசந்தம் எதிர்கொண்டமையை நினைக்குமாறு செய்தது. வீதிவிடங்கப் பெருமான் தமது திருஓலக்கத்தில் வீற்றிருக்கும் காட்சியும், பரவையார் ஆடலும் அவர் மனக்கண்முன் தோன்றின. பரவையார்தம் இன்னிசைப்பாடல் அவர் செவியில் ஒலிப்பதுபோல் தோன்றியது. சுந்தரர்தம் இந்நிலையைச் சேக்கிழார்,

"பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்றல்
அங்கணையத் திருவாரூர் அணிவீதி அழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார்"[7]

எனவும்

"வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமான்
ஒண்ணுதலார் புடைபரந்த ஓலக்கம் அதனிடையே
பண்ணமரும் மொழிப்பரவை யார்பாடல் ஆடல்தனைக்
கண்ணுறமுன் கண்டுகேட்டார் போலக் கருதினார்"[8]

எனவும் பாடல்களில் அமைக்கின்றார்.

தென்றற் காற்றினைப் பற்றிய அவரது வருணனை தண்மை உருக்காட்சியைப் படைக்கிறது எனலாம். 'பொங்குகின்ற

தமிழின் பிறப்பிடமாகிய பொதியமலையில் பிறந்து, அம் மலையின்கண் பூஞ்சந்தனத்தின் கொங்கணைந்து குளிர்ந்த சாரலின்கண் வளர்ந்தது கொழுந்தென்றல் என அவர் குறிப்பது தென்றலின் தண்மையில் அவருக்குள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கின்றது. தென்றலின் தண்மைக்கு அது தோன்றுமிடமாகிய பொதியமலையின் குளிர்ந்த சாரலும், பூஞ்சந்தனத்தின் கொங்குமே காரணம் என ஆசிரியர் குறிப்பிடுவது பொருத்தமாக உள்ளது. பொங்குதமிழும் தென்றலின் குளிர்ச்சிக்குக் காரணம் என்பதுபோலச் சேக்கிழார் குறிப்பது நயமுடைத்து.

தண்மை உருக்காட்சியை விளைவிக்கின்றவையாக பொதியமலை, பூஞ்சந்தனக் கொங்கு. குளிர்சாரல் என்பன விளங்குகின்றன. சேக்கிழார் தண்மை உருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்வது குறிப்பிடத்தக்கது.

**வெம்மை உருக்காட்சி: (Thermal Image)**

பாலைபாடிய பெருங்கடுங்கோ என்ற அரசப்புலவர் வெப்பம் மிகுந்த வேனிற்பருவம் பற்றியும் வெம்மையான சுரம் பற்றியும் கூறுவது ஊற்றுப்புல உருக்காட்சியினுள் இடம்பெறும் வெம்மை உருக்காட்சியாக அமைகிறது.

"...............ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின்
உறல்ஊறு கமழ்டாஅத்து ஒல்கிய எழில்வேழம்
வறன்உழு நாஞ்சில்போல் மருப்புஊன்றி நிலம்சேர
விறல்மலை வெம்பிய போக்குஅரு வெஞ்சரம்"[9]

என்பது பாலைபாடிய பெருங்கடுங்கோவின் பாடலாகும். "புயல்துளி மாறிய போக்கரு வெஞ்சுரம்" பற்றிக் குறிப்பிடும் இப்புலவர் " வேனிற்பருவத்தில் மரல் சாயும், மலைவெம்பும், மந்தி உயங்கும், யானை உண்கயம் காணாது" எனக்கூறுவது வெம்மை உருக்காட்சியை உண்டாக்குகிறது.[10]

வேனில் பருவத்தில் வெப்பம் மிகுந்த கதிர்களை ஞாயிறு பாய்ச்சுவதால் உயிர்கள் வெப்பத்தைப் பொறுத்துக்கொள்ள முடியாமல் சோர்வடைகின்றன. மரங்கள் வாடுகின்றன. நிலம் வெம்மையடைவதால் மக்களால் அதன்மீது

நடப்பதற்கு இயலாது. இவ்வாறு வேனில் துன்பந்தருவதாக உள்ளது.

சேக்கிழார் வேனிற்பருவத்தை வருணிக்கும் பகுதி வெம்மை உருக்காட்சியை வழங்குகிறது. பனிப்பருவத்தைப் பற்றிய வருணனையில் செய்திகளை அடுத்தடுத்து வைப்பதன் வாயிலாகத் தண்மை உருக்காட்சியைப் படைத்துக் காட்டினமை முன்னர்க் காட்டப்பட்டது. சம்பந்தர் திருவலஞ்சுழி என்ற பதிக்கு வந்து அங்குத்தங்கி இருந்தபொழுது வேனில் முதிர்ந்தது. அந்த வேனிலின் கொடுமையைச் சேக்கிழார் வருணிப்பது வருமாறு.

"வானத்தில் ஞாயிறு தனது துணைபுணர் ஓரையுள் சேர்ந்து இருந்தமை காரணமாக, ஏழுகடல்களின் நீரும் குன்றுமாறு வெகுண்டு தனது வெம்மையான கதிர்களைப் பரப்புவதால் வேனில் முதிர்ச்சியுற்றது. எனவே உலகத்தார் தண்புனற் குளிர்கால் நறுஞ்சந்தனத் தேய்வையும், வாசமென்மலர் பொதி பனிநீரையும், முத்தணிகளையும் விரும்புகின்றனர். மாதுரியச் சுவையுடையன வற்றை உண்கின்றனர். பேய்த்தேரைப் புனலென்று மான் எண்ணி அதனைப் பின்தொடரும். மழைத்துளியை உண்ணும் பறவை தேம்பும். இரைதேடும் பறவைகள் சிறைவிரித் தொடுங்கும். வெப்பத்திலிருந்து விடுபடுதற்காகப் பனிப்புறத்து அவை வதியும். நீணிலை மாளிகைகளின் மேல், நிலா முற்றங்களின் அருகில், நிழற்சோலைகளில், வாவிக்கரையோரத்தில், முத்தணிந்த மாதர் முலைத்தடத்தில் காண்கின்ற மகிழ்ச்சியினால் மலர்ந்த மாந்தர் கலந்து உறைகின்றனர். மயிலொடுங்கவும், வண்டு ஆடவும், மலர்க்கமலத்தின் முகை விரியவும், குயிலொடுங்கிச் சோலையின் மென்தளிர்களைக் கோதிக்கூவி எழவும், துயிலாத உயிர்களெல்லாம் துயில் பயிலவும் ஆன நிலையில் சுடர் வானில் வெயில் ஒடுக்கமுறாத வெம்மை தருகின்ற வேனிற்பருவம் பரவுகின்றது."

சேக்கிழார் படைக்கும் வேனிற்பருவ வருணனை வெம்மை உருக்காட்சியாக உள்ளது.

இத்தகைய வேனில் வெம்மையையும் பொருட் படுத்தாமல் சம்பந்தர் தமது தலயாத்திரையை மேற்கொண்டு சென்றமையைச் சிறப்பித்துக் கூற விரும்பும் ஆர்வம் வெம்மை உருக்காட்சியாக அமைந்துள்ளது எனலாம்.[11]

## வெதுப்புறு வெம்மை - வெந்தழல்:

காட்சிப்புல உருக்காட்சியாகத் தீ ஆளப்பட்டுள்ளமை முன்னர்க் காட்டப்பட்டது. வெப்பத்தை உண்டாக்கும் தன்மை தீயிடம் உள்ளது. தொடுபவரைச் சுடுகின்ற திறனுடையதாக அது விளங்குகிறது. தீயினால் ஏற்பட்ட புண் எரிச்சலை உண்டாக்குகிறது. குளிர்ப்பருவத்திலிருந்து விடுபட விரும்புவோர் தீயை மூட்டி அதன் அருகில் அமர்ந்து தமது உடம்பிற்குச் சூடேற்றிக் கொள்கின்றனர். வயிற்று வலியால் துன்புறுவோர் அந்த வலியினால் உண்டாகும் துன்பத்தைக் கூறும்பொழுது வயிற்றில் தீ புகுந்து கொடுமை செய்வதாகக் குறிப்பிடுகின்றனர். சீற்றத்துடன் இருப்பவர்தம் கண்களைப் பற்றிக் குறிக்கும்பொழுது, அவற்றிலிருந்து தீப்பொறி பறப்பதாகக் குறிப்பர். பிரிவாற்றாமையால் துயருறும் காதலர்கள் தம் மேல்படும் தண்மைப் பொருள்களும் வெப்பம் தருவதாக எண்ணுகின்றனர். தண்மையைப் பொழியும் நிலவு வெம்மையைத் தருவதாகக் குறிப்பிடுவார்கள். காதல் நோயுற்ற சீதைக்குத் தோழியர் செய்த பரிகாரம் பற்றிக் கம்பர்,

"சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின
பொரிந்தன கலவைகள் பொரியின் சிந்தின
எரிந்தவெங் கனல்சுட இழையில் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே"

எனக்குறிப்பிடுவார்.[12] சீதை திங்களைப் பழிப்பதாக வரும்பாடல் வரிகள் வருமாறு.

"ஓங்கா நின்ற இருளாய்வந் துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்க நின்ற கருநெருப்பி னிஷ்டயே எழுந்த வெண்ணெருப்பே".[13]

குளிர்ந்த தென்றல் காற்றும் தழலை அள்ளி வீசுவதாகக் குறிப்பார்கள். மனித உடம்பிற்கு வெப்பம் தருகின்ற தீயின் இத்தன்மையை உரிய இடத்தில் குறிப்பிடுவதன் வாயிலாகச் சேக்கிழார் ஊற்றுப்புல உருக்காட்சியின் ஒரு பகுதியாகிய வெம்மை உருக்காட்சியை எழுப்புகிறார்.

தடுத்தாட்கொண்ட புராணத்தில் சுந்தரர் கூற்றாகவும் பரவையார் கூற்றாகவும் படைக்கப்பட்டுள்ள சில கவிதைகள் வெம்மை உருக்காட்சிகளைப் பெற்றுள்ளமை காணத்தக்கது.

பதியிலார் குலத்துப் பரவையார்மாட்டுக் காதல் கொண்ட சுந்தரர், தனித்திருக்கும்பொழுது பரவையார் நினைவில் தோய்ந்திருந்தார். அந்தத் துயரநிலையில் அவர் கூற்றாக வருவன வருமாறு. "சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணால் எரிக்கப்பட்ட மன்மதன் என்முன் மீண்டும் உருப்பெற்றுவந்து என்மீது அம்பு தொடுப்பதற்குக் காரணம் எம் பெருமான் அருள் இச்செயலைத் தடுக்காததாக இருக்கலாம்." 'இறைவர்தம் சடையில் கங்கையின் அருகில் இருக்கும் திங்களே! எனது துன்பத்தைக் கண்டும் என்மேல் அழற்கதிர்களைத் தூர்ப்பது நன்றா? வெண்மதியே நீ நதண்மதியாக இல்லை'.

"தமிழ்மாருதமே எங்கள் பிரானுடைய மலையில் பிறந்தநீ, தெய்வ நீர்நாட்டினில் சிறப்புடன் அணைந்த நீ, புறப்பணைத்தடம் பொங்கும் அழலைவீசுகின்ற கொடுமையினை எங்குப் பயின்றாய்?"[14] எனச் சுந்தரர், தண்மைக் கதிர்களை இயல்பாக வீசும் நிலவு, நெருப்புக் கதிர்களைத் தம்மேல் வீசுவதாகவும், இயல்பாகத் தண்மையைப் பரப்பும் தென்றல்காற்று நெருப்பை வீசுவதாகவும் குறிப்பிடுகின்றார். காதல் உணர்வுக்கு ஆளாகிய அவருக்குத் தண்மையான நிலவும் தென்றலும் நெருப்பாக இருக்கின்றன என்று சேக்கிழார் குறிப்பிடுவது வெம்மை உருக்காட்சியாக அமைந்து அவருடைய காதல்நோயின் மிகுதிப்பாட்டை உணர்த்துகிறது.

நிலவுக்கும் சிவனாருக்கும் உள்ள தொடர்பைச் சுட்டிக்காட்டும் சுந்தரர் தமக்கும் சிவனாருக்கும் உள்ள தொடர்பையும் குறிப்பிட்டுத் தமக்குக் கொடுமை செய்வது பொருத்தமற்றது எனத் தெரிவிப்பதாகச் சேக்கிழார் அமைந்திருப்பது நயமுடன் விளங்குகிறது.

"சுந்தரரிடம் பெரியமயல் கொண்டு தமது மாளிகைக்குச் சென்ற பரவையார் நிலையைச் சேக்கிழார் வெம்மை உருக்காட்சியால் விளக்குகின்றமை காணத்தக்கது. மலர்ப்படுக்கையில் பரவையாரால் துயில முடியவில்லை. தென்றல் காற்றை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. வானத்திலிருந்து நிலவு உமிழ்கின்ற நெருப்பைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. நிறையாற்றும் பொறையாற்றா நீர்மையோடும் தோகைமயில்போல எழுந்தார்; தமது கருங்கூந்தலின் கனத்தை அவரால் தாங்க

முடியவில்லை."[15] இத்தகைய துயரநிலையில் இருந்த அவர் தமது தோழியரிடம்,

"'சுந்தம்கமழும் மென்மையான கூந்தலையுடைய தோழியரே! இஃது ' என்ன கலைவான்மதியம் என்னைக் கனல்கின்றான். சந்தனத் தளிரைப் பனிநீரில் அளவி என்மேல் தடவுகின்றீர். கொடியீராகிய நீங்கள் இச்செயலைச் செய்யாதீர்கள். நிலவும் தென்றலும் வந்து இங்கு உலவி எரியாய் வரும். அழகிய தண்மையான புனலையுடைய கங்கையையும், அரவையும் சூடிய சடையார்தம் அருளைப்பெற்றவர் எனக்கு அருளவில்லை' என்று குறிப்பிடுகின்றார்" எனச் சேக்கிழார் அமைத்துள்ள பரவையார் மொழியில் வெம்மை உருக்காட்சி இடம்பெற்றுள்ளது. மலரமளி, தென்றல் என்பனவும் ஊற்றுப்புல உருக்காட்சிகளாக உள்ளன. வெம்மையாக இருக்கும் மலரமளி பரவையாருக்கு வன்மையாக இருக்கிறது. தண்மையான தென்றல் வெம்மையாக இருக்கிறது. 'தோழியர் பரவையார் மேனியில் சந்தனச்சேற்றினை இட்டுப், பனிநீர் நறுந்திவலையை அருகிருந்து வீசினர். ஈர இளந்தளிர்களால் குளிர்ப்படுத்தினர். இச்செயல் எல்லாம் எரியும் பெருநெருப்பின் மேல் நெய்சொரிந்தாற்போல் இருந்ததுடன் அதன்மேல் சமிதையையும் இட்டதுபோல் உள்ளது. மன்மதனும் தனது வில்லின் வலியைக்காட்டி மலர்வாளியைப் பரவையார்மீது சொரிந்தான்" என்று சேக்கிழார் குறிக்கின்ற பகுதியில் வெம்மை உருக்காட்சி புதுமைநயத்துடன் ஆளப்பட்டுள்ளது.[16]

"அருகில்நின் றசைக்கின்ற ஆலவட் டக்கால்
எரியினை மிகுத்திட இழையும் மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையும் ஒத்துத் தோன்றினாள்"

என்று கம்பர். சீதை காதல்நோயினால் துன்புற்ற மையைக் குறிப்பது இவண் காண்டற்குரியது.[17]

பக்திச்சுவை சிறப்பிடம் பெற்றுள்ள பெரியபுராணப் படைப்பில் அகத்திணையைச் சார்ந்த காதற்செய்திகளைச் சேக்கிழார் தடுத்தாட்கொண்ட புராணத்தில் அமைத்துள்ளார். தமிழ்மாருதத்தையும் நிலவையும் நோக்கிச் சுந்தரர் கூறுவதாகவும், நிலவைநோக்கிப் பரவையார் கூறுவதாகவும் உள்ள மொழிகளில் ஊற்றுப்புல உருக்காட்சியை அமைத்து அவ்விருவர்தம்

காதல்நோயை நயமுற ஆசிரியர் விளக்குகின்றார். சொல்லா மரபினவாகவும், செய்யா மரபினவாகவும் உள்ளவற்றைச் சொல்லுவனவாகவும் செய்வனவாகவும் குறிப்பிட்டுப் படைத்துமொழியும் இலக்கணை என்ற நெறியின்பாற்படும் "பாற்கிளவி" உத்தியைச் சேக்கிழார் இப்பகுதியில் ஆள்கிறார் எனலாம். காதல் நோயினால் துன்புறும் மக்கட்குத் தண்மைப் பொருள்களும் வெம்மையுடையனவாகத் தோன்றும் என்னும் உளவியலை அடியாகக் கொண்டு வெம்மை உருக்காட்சி அமைக்கப்பட்டுள்ளமை காணத்தக்கது. காதல்நோயினால் துன்புற்றுக் கிடக்கும் நிலையிலும் சுந்தரர் தமது பெருமானையும், அவர்தம் அருளையும், நினைக்கின்ற இயல்பு , நிலவு நெருப்புக் கதிர்களைத் தம்மேல் வீசுவதாகக் குறிப்பிடும் நிலையிலும் தமது சிவனாரின் மலையையும், தெய்வநீர் நாட்டினையும் எண்ணுவதுடன் தமக்கும் இறைவருக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைச் சுட்டிக்காட்டுவதுமாகிய இயல்பு, காதல் பற்றிய செய்திக்கும் கடவுள் உணர்வு என்ற வண்ணத்தை ஊட்டுவதாக உள்ளன. சேக்கிழார் சுந்தரர்தம் உரையைப் பொருத்தமுற இவ்வாறு காதல் உணர்வையும் கடவுள் உணர்வென்னும் வண்ணத்தில் தோய்ந்தெடுத்து வழங்குகிறார் எனலாம்.

## பிணி - தீயின் வெம்மை:

மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் வேண்டுகோட்கிணங்க மறைக்காட்டிலிருந்து சம்பந்தர் தமது தொண்டர்களுடன் மதுரை நகருக்கு வந்தார். ஒரு மடத்தில் தங்கியிருந்தார். சிவநெறி வளர்க்க வந்துள்ளார் சம்பந்தர் என்பதனை அறிந்த சமணநெறியினர் சினம்கொண்டு அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்டனர். இத்தீங்கினை அறிந்த சம்பந்தர் மாதவர் துயிலும் மடத்திற்குப் பழுது செய்தவர்கள் சமணரேயாயினும் "மன்புரக்கும் மெய்முறை வழு" என எண்ணி, மடத்திற்கிட்ட தீத்தழல் போய் "பையவே சென்று பாண்டியற்கு ஆக" எனப் பணித்தார். விரிந்த அவ்வெந்தழல் வெம்மைபோய்த் தென்னனை மேவிப் பெருந்தழற்பொதி வெதுப்பெனப் பெயர் பெற்றது. வெதுப்பு அல்லது வெப்பு எனப்பெறும் பிணி பாண்டியனுக்குக் கொடுத்த துன்பத்தைச் சேக்கிழார் விவரிப்பது வெம்மை உருக்காட்சியாக அமைந்துள்ளமை கண்டுணரத்தக்கது.

வெதுப்புற வெம்மையானது வேந்தனது மெய்யினை விதிர்ப்புறச் செய்தது. அவனது உடம்பெல்லாம் வெந்தழல் கதுமெனக் கவர்ந்தது. மாளிகையின் புறத்தில் நின்றவர்களும் புலர்ந்தனர். உடல் தீந்து போம்படியும் திரங்கும்படியும் அவ்வெதுப்பு எழுந்தது. உணர்வையும் ஆவியையும் காக்கும் விருப்புடன் அருகுதூரத்தில் சிலர் அகன்று போயினர். புணரிளங் கதலிக் குருத்தொடு தளிர் புடையே கொண்டுவந்தாலும் அவை நுண்பொடிகளாகச் சுருக்கொண்டன. உருத்தெழுந்த வெப்பு மன்னவன் உயிரையும் உருக்கியது. கருத்தொழிந்தான். உரையும் மறந்தான். அப்பிணியின் மூலநெறியை அறியாத சமணர்கள் மந்திரங்களை நவின்றனர். தங்கள் மயிற்பீலிகளைக் கொண்டு அவனது உடம்பின்மேல் தடவுதற்கு எடுத்தபொழுது அந்தப் பீலிகளும் அவற்றுடன் இருந்த பிரம்புகளும் தீந்துபோயின. தீப்பொரி சிதறிவிழக்கண்டு வெப்புப் பிணியின் அதிசயத்தை நோக்கிச் சமணர்கள் மிகவும் வெருவினர். "அருகனே காவாய்" எனமொழிந்து வழுதியின்மேல் அவர்கள் தமது குண்டிகை நீரைத்தெளித்தனர். அந்நீர் பொங்கிப், பெருகு மெரிதழல் சொரிந்த நெய்போலாகிப் பேர்த்தொரு தழல் அதன்மேல் பேய்தாற் போன்று இருந்தது. 'எனது இருபக்கத்தில் இராது போங்கள்' எனச் சமணரைப் பார்த்து உரைத்தான் பாண்டியன். இவ்வாறு சேக்கிழார் பாண்டியனுக்குத் துன்பம் செய்த வெப்புநோயைப் பற்றி விவரிக்கும் பகுதியில் பொருத்தமும், கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக வெம்மை உருக்காட்சியை ஆள்கிறார்.[18]

பசி - தீ:

காரைக்காலம்மையார் இல்லத்திற்கு வந்த அடியாரது பசியின் பகுதி "தீப்பசி" எனப்படுகிறது.[19]

அழல்தெறுபாலை:

நாவரசர் திருக்கயிலையாத்திரை மேற்கொண்டு சென்றஞான்று கற்சுரம் ஒன்றினைக் கடக்க நேரிட்டது. அந்தச் சுரத்தின் வெம்மையையும், அதனைக்கடந்து நாவரசர் சென்ற திறத்தினையும் சேக்கிழார்,

"வெங்கதிர்ப் பகலக் கடத்திடை வெய்யவன் கதிர்கைபரந்
தெங்குமிக்க பிளப்பி னாகர்தம் எல்லைபுக் கெரிகின்றன

பொங்கழற் றெறுபாலை வெந்நிழல் புக்கசூழல்புகும்பகல்
செங்கதிர்க் கனல்போலும் அத்திசை திண்மைமெய்த் தவர்நண்ணி,"
"இங்ஙனம் இரவும் பகற்பொழுதும் அருஞ்சுரம் எய்துவார்
பங்கயம் புரைதாள் பரட்டளவும் பசைத்தசை தேயவும்
மங்கைபங் கர்தம் வெள்ளிமால்வ ரைவைத்தசிந்தை மறப்பரோ
தங்கரங் ளிரண்டுமே கொடுதாவி ஏகுதல் மேவினார்" [20]

எனக் குறிப்பிடுகின்றார். பகற்பொழுதில் வெய்யவன் வெம்மையான தனது கதிர்களை எங்கும் பரப்புவதுடன் நாகலோகத்திலும் சென்று புக்கு எரியுமாறு அக்கதிர்களைச் செலுத்தினான். பொங்கும் நெருப்பினால் தெறுகின்ற பாலையில் நாவரசர் சென்ற திசை செங்கதிர்க் கனல்போல் இருந்தது என்று சேக்கிழார் அமைக்கும் வருணனையில் வெம்மை உருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. இத்தகைய கடுமையான வெம்மை நிறைந்த பாலையையும் பொருட்படுத்தாது நாவரசர் திருக்கயிலையில் சிவனார்தம் கோலத்தைக் காணும் நோக்குடனேயே சென்றார் என்ற உறுதிப்பாட்டை உணர்த்துகின்றது சேக்கிழார் ஆளும் வெம்மை உருக்காட்சி.

## மென்மை:

தளிர், மலர், மாலை, கொடி, பஞ்சு என்பன மென்மையான பொருட்கள் ஆகும். இறைவர் திருவடி, நாயனார்தம் கைகள், கால்கள், பெண்களின் முகம், கைகள், கால்கள் ஆகியவற்றின் மென்மைத் தன்மையை உணர்த்தவும் சிறப்பித்துக்காட்டவும் சேக்கிழார் இவற்றை மென்மை உருக்காட்சிகளாகப் படைக்கின்றார்.

செடி, கொடி, மரம் ஆகியவற்றின் கிளைப்பகுதிகளில் குவிந்துள்ள நிலையில் முதன்முதலாகத் தோன்றும் இலையின் தொடக்க நிலையைத் தளிர் (Unopened Leaf Primordium) என்பர். இத்தளிர் தொடுவதற்கு மிகவும் மென்மையாக இருக்கும். முறி எனவும் தளிரைக் குறிப்பதுண்டு.

"செயலையம் தளிர் ஏய்க்கும் எழில் நலம்" எனப் பெண்ணின் மேனி குறிக்கப்படுகிறது. [21]

"முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு"

எனத்தலைவன் தனது தலைவியின் நலம்புனைந் துரைப்பதைத் திருக்குறளில் காணலாம்.[22]

தலைவியின் மேனி தளிர் போன்றிருப்பதாகவும், அவளது தோள் வேய்போன்றிருப்பதாகவும் வள்ளுவர் படைத்துள்ள தலைவன் குறிப்பது மேனி, தோள் ஆகியவற்றின் மென்மைத் தன்மையைக் குறிக்கின்றது. தளிர், வேய் என்பன மென்மை உருக்காட்சிகளாக ஆளப்பட்டுள்ளன.

## திண்ணனார் கால்கள் - தளிர்:

இளம்பருவத்தில் திண்ணனார் செய்த "குறுநடைக் குறும்பு" பற்றிச் சேக்கிழார் வருணிக்கும்பொழுது எயினப் பிள்ளைப் பேதையர் இழைத்த வண்டலைத் தமது மென்மையான கால்களால் சிந்தியமை பற்றிக் குறிப்பிடுகின்றார். திண்ணனார்தம் கால்களை "அடிச்சிறு தளிர்"[23] என்று அவர் குறிப்பது மென்மை உருக்காட்சியாக உள்ளது. சிறியனவாகவும் மென்மைத் தன்மையினவாகவும் உள்ள திண்ணனார்தம் கால்களைச் "சிறுதளிர்" என்ற தொடர் காட்சிப்படுத்துகிறது.

## உமையன்னை கை - தளிர்:

காஞ்சிபுரத்தில் ஏகம்பராய் நின்ற இறைவரைத் தழுவிய உமையன்னையின் கைகள் "தளிர்க்கை", "செந்தளிர்க்கரங்கள்" எனப்படுகின்றன.[24]

## பூம்பாவை - வளரிளந்தளிர்க்கிளை:

பூம்பாவையின் ஏழாண்டுப் பருவ எழிலைச் சேக்கிழார் வருணிப்பது பொருத்தமும் நயமும் உடையதாக உள்ளது.

"தளரும்மின் னின் அங்குர மெனத்தம னியக்கொடியின்
வளரிளந் தளிர்க்கிளை யெனமணி கிளர்ஒளியின்
அளவில்அஞ் சுடர்க்கொழுந் தெனஅணை வுறும்
பருவத்திளவனப் பிணஅனை யவர்க்கேழு யாண்டெய்த"

என்பது சேக்கிழார் பாடல்[25]

மின்னின் அங்குரம், தமனியக் கொடியின் வளரிளந்தளிர்க்கிளை, மணிகிளர் ஒளியின் அளவில் அஞ்சுடர்க் கொழுந்து என மூன்று ஒளிதரும் பொருள்களை உருக்காட்சிகளாக அமைத்துப் பூம்பாவையின் ஏழாண்டுப் பருவ எழிலைச் சேக்கிழார் விவரிக்கின்றார்.

பிள்ளைமைப் பருவம் என்பது நீங்கிப் பேதைப் பருவத்தில் இருந்த பூம்பாவையின் அழகுத்தோற்றத்தைச் சேக்கிழார் வருணிக்கும்பொழுது "தமனியக் கொடியின் வளரிளந் தளிர்க்கிளை எனக்கருதும் வகையில் அவள் விளங்கினாள்" என்கிறார். பொற்கொடியில் வளர்கின்ற இளமையான தளிர்களையுடைய கிளை என்பதில் ஆளப்பட்டுள்ள தளிர் என்ற மென்மை உருக்காட்சி பூம்பாவையின் மேனியின் மென்மைத் தன்மையை உணருமாறு செய்கிறது. மின்னின் அங்குரமாகவும், தமனியக்கொடியில் வளரும் இளந்தளிர்க் கிளையாகவும், மணிகளினின்றும் எழுகின்ற ஒளியினது அளவில்லாத அழகிய சுடரின் கொழுந்தாகவும் ஏழாண்டுப் பருவமாகிய பேதைப்பருவத்தில் பூம்பாவை அழகுடன் விளங்கினாள் என்பது கருத்து. மின், பொன், மணி என்ற ஒளி உருக்காட்சிகளுடனும், அங்குரம், கொடி, கிளை, கொழுந்து என்ற வளர்வனவாகிய உருக் காட்சிகளுடனும், தளிர் என்ற மென்மை உருக்காட்சி இணைந்து வந்து பூம்பாவையின் பேதைப்பருவ எழிலைத் தெள்ளிதின் உணர்த்துகிறது. சேக்கிழார்தம் கூர்த்த புலனுணர்வுத் திறனைக் காட்டுவதாகத் தளிர் உருக்காட்சி அமைந்துள்ளது. "வளரிளந்தளிர்" என்ற தொடர் பூம்பாவையின் மேனியின் தூயதாம் தன்மையையும் இளமையையும் மென்மையையும் உடன் உணர்த்துவதாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. "தளிரிளங்கொம்பு" எனவும் சேக்கிழார் பூம்பாவையைக் குறிப்பிடுவது நினைத்தற்குரியது.[26]

## செந்தாமரை அகவிதழ் - சீறடிகள்:

செந்தாமரை மலரின் அகவிதழ்கள் மிகவும் மென்மைத் தன்மையுடையவை ஆகும். இறைவழிபாட்டிற்குத் தாமரை மலர்களைச் சேக்கிழார் பயன்படுத்தியிருப்பாராகையாலும், அவற்றின் அகவிதழ்களைத் தொட்டுப்பார்த்த உணர்வு அவரிடம் இருந்தமையாலும் குழந்தைப் பருவத்தில் இருந்த சம்பந்தர்தம் சிறிய அடிகளைத் "தாதவிழ்செந் தாமரையின் அகவிதழ்போல்

சீறடிகள்"[27] என்று குறிப்பிடுகிறார். சிவனார்தம் பதிகளைத் தொழும்பொருட்டுச் சம்பந்தர் முதன்முதலாகச் சீகாழியைவிட்டு நனிபள்ளி என்ற பதிக்குப் புறப்பட்டார். அவர் தமது சீறடிகளால் தரைமீது நடந்த காட்சியைச் சேக்கிழார் தமது கற்பனைக்கண்கொண்டு காண்கிறார். சம்பந்தர்தம் கால்களின் மென்மைத் தன்மையை எண்ணிய அவருக்குச் செந்தாமரை மலரின் அகவிதழ்களைப்பற்றிய நினைவு தோன்றியது. செந்தாமரை மலர்கள் இறைவழிபாட்டிற்குரியவை. அவற்றின் அகவிதழ்களைச் சம்பந்தரின் சீறடிகளின் மென்மைத் தன்மையை உணர்த்தும் மென்மை உருக்காட்சியாகச் சேக்கிழார் பொருத்தமுடன் படைத்துள்ளார் எனலாம். செந்தாமரை மலர்களில் அவருக்கு இருந்த ஈடுபாட்டையும் இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. அவரது கூர்த்த புலனறிவைக் காட்டுவதாக இவ்வுருக்காட்சி உள்ளது.

"எல்வளை எம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியல் மேவந்த சீறடித் தாமரை
அல்லிசேர் ஆயிதழ் அரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறின் அவ்வடி கறுக்குந அல்லவோ"

எனப் பாலைபாடிய பெருங்கடுங்கோ குறிப்பிடுவது இவண் நினைத்தற்குரியது.[28] இவ்வாறு ஒரு பெண்ணினது மெல்லிய சீறடிகளைச் சங்கப்புலவர் வருணிக்கிறார். சமயப்புலவர் சேக்கிழார் தமது சமயக் குரவர்தம் இளம்பருவத்தைக் காட்சிப்படுத்த இதே மென்மை உருக்காட்சியை ஆள்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

## செங்கை - பங்கயம்:

சம்பந்தர்தம் சீறடிகள் தாமரையின் அகவிதழ் போல் இருந்தன எனக் குறிப்பிட்ட சேக்கிழார், அவருடைய கைகளைப் பற்றிக் குறிக்கும்பொழுது, அவை பங்கயத்தின் செவ்வியைப் பழித்து வனப்போங்கி விளங்குவனவாகக் குறிக்கின்றார்.

"பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்கும்
செங்கை....................................."

என்பது சேக்கிழார் மொழி.[29] சம்பந்தர்தம் செங்கைகளை நினைத்துப்பார்த்து மகிழ்வதில் சேக்கிழாருக்கு ஆர்வமும் உள்ளது என்பதை வெளிப்படுத்தும் மென்மை

உருக்காட்சியை, மேல் காட்டப்பட்டுள்ள தொடர்களில் காணமுடிகிறது எனலாம். பங்கயத்தின் செல்வி மிக மென்மையானது. சம்பந்தர்தம் செங்கரத்தின் மென்மை அதைவிட மென்மையானது என்பது கருத்து. மென்மைக்கும் மென்மையாகச் சம்பந்தர்தம் செங்கரம் இருந்தது என்பதை ஆசிரியர் மென்மை உருக்காட்சி கொண்டு நயமுற விளக்குகின்றார்.

"செய்யதாமரை அகவிதழினும் மிகச்சிவந்தகை"[30] என ஆசிரியர் அடுத்துக் குறிப்பதும் இவண் எண்ணுவதற்குரியது. மென்மை உருக்காட்சியைப் படைக்கும் தொடராக இஃது அமைந்துள்ளது எனலாம்.

செந்தாமரை மலரையும், அதன் அகவிதழையும் அடுத்தடுத்து மென்மையுருக் காட்சியாகப் படைத்துச் சம்பந்தர்தம் கைகளையும் கால்களையும் ஆசிரியர் முருகியற்சுவை தோன்றுமாறு பொருத்தமுடன் ஆள்வது அவரது படைப்பாற்றல் திறனின் ஆளுமையைக் காட்டுகிறது எனலாம். செந்தாமரை என்பது காட்சிப்புல உருக்காட்சியாகவும் ஊற்றுப்புல உருக்காட்சியினுள் வைத்தற்குரிய மென்மை உருக்காட்சி ஆகவும் அமைந்துள்ளமை சேக்கிழாருக்கு அம்மலர்களின்கண் உள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கிறது.

சம்பந்தர் மாட்டுச் சேக்கிழார் கொண்டுள்ள அன்புணர்ச்சியின் வெளியீடாக மென்மை உருக்காட்சி அமைந்துள்ளது. படிப்பவர் நினைவில் சம்பந்தர்தம் மென்மையான எழில்மிக்க கைகள், கால்கள் ஆகியவை தோன்றுமாறு செய்கின்றது. ஆசிரியர் ஆளும் மென்மை உருக்காட்சி எனலாம்.

## செருப்படி - சேயடி:

குழந்தைகளின் கால்கள் மிகவும் மென்மையாக இருப்பது கண்கூடு. சேக்கிழார் குழந்தைகளை மிகவும் விரும்பி எடுத்து மகிழும் இயல்பினர் என்பதைச் சம்பந்தர்தம் கை, கால், வாய் என்பனவற்றை அவர் ஆளும் மென்மை உருக்காட்சியாலும், காட்சிப்புல உருக்காட்சியாலும் அறியமுடிகிறது. திண்ணனார் நாளும் திருக்காளத்தியப்பர்தம் முடிமிசைத் தாம் தலையின் மேல்வைத்துக் கொணர்ந்த பள்ளித்தாமத்தைச் சாத்திவந்தார். தாம்

அவ்வாறு பள்ளித்தாமத்தைச் சாத்துதற்கு முன்பு இறைவர்தம் தலைமிசை சிவகோசரியார் சாத்தியிருந்த பள்ளித்தாமத்தைத் தமது வளைத்த பொற்செருப்பால் நீக்கிவந்தார். இச்செயலைக்கண்டு வருந்திய சிவகோசரியார், "என்னுடைய நாயகனே! இது செய்தார்தமைக் காணேன். உன்னுடைய திருவருளால் ஒழித்தருள வேண்டும்" என்று இறைவரிடம் வேண்டினார். இறைவர் கனவின்கண் தோன்றி மறையவராகிய சிவகோசரியாரிடம்,

"பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை அவைநீக்கும் ஆதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படிஅவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்"

என மொழிந்தார்.[31]

திண்ணனார்தம் செருப்படி இளம்பருவச் சேயடியினை விடவும் மென்மையாக இருந்தது எனவும், விருப்புறும் அன்பெனும் வெள்ளக்கால் பெருகியது போல் இருந்தது எனவும் இறைவர் கூறுவதாகச் சேக்கிழார் அமைப்பதில் மென்மை உருக்காட்சி இடம்பெற்றுள்ளமை கண்டுணரத்தக்கது.

சேயடியின் மென்மைத் தன்மை தொடுபவர்க்கு மகிழ்ச்சியளிக்கும் தன்மையது என்பது குறிப்பிடத்தக்கது. சேயடியின் மென்மைத் தன்மையைத் தொட்டுணர்ந்த அனுபவமே இவ்வுருக்காட்சிப் படைப்பிற்குக் காரணம் எனலாம்.

திண்ணனார் திருக்காளத்தியப்பரைத் தம் சேயாகக் கொண்டு அன்புடன் வழிபட்டார் என்பதைக் "கன்றகல் புனிற்றாப் போல்வர்" என்பதால் அறியமுடிகிறது. திருக்காளத்தியப்பர் திண்ணனாரைத் தம் சேயாகக் கொண்டு அருள்புரிந்தார் என்பதைச் "சேயடியிற் சிறப்புடைத்தால்" என்பதால் அறியமுடிகிறது. தொண்டர்தம் இறையன்பின் திறத்தின் சிறப்பைக் காட்டுவதாக மென்மை உருக்காட்சி விளங்குகிறது.

<u>வன்மை:</u>

நாயனார்தம் திண்ணிய நெஞ்சம், இறையன்பின் அழுத்தம் ஆகியவையும் வடுகக்கருநாடர் மன்னன் நெஞ்சு,

வல்லமணர் 'மனம் ஆகியவையும் வன்மை உருக்காட்சியால் தெரிவிக்கப்படுகின்றன.

மூர்த்திநாயனார்தம் இறையன்பின் உறுதிப்பாட்டை இவ்வுருக்காட்சியினால் சேக்கிழார் விவரிப்பது குறிப்பிடத்தக்கது.

## சுந்தரர் - வல்லிரும்பு:

தம்மைத் தடுத்தாட்கொள்ள முதியவேதியர் வடிவில்வந்த இறைவரைப் பின்தொடர்ந்து சுந்தரர் சென்ற செய்தியினைச் சேக்கிழார்,

"செல்லுமா மறையோன் தன்பின் திரிமுகக் காந்தஞ் சேர்ந்த
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங் கடிது சென்றார்"

என்கிறார்.[32]

வன்மையான இரும்பு காந்தத்தைச் சார்வதுபோல் சுந்தரர் இறைவரைச் சார்ந்தார் என்பது கருத்து. இரும்பு என்பது வன்மை உருக்காட்சியாக ஆளப்பட்டு உள்ளது. இவ்வுருக்காட்சி சுந்தரர்தம் மனநிலையைக் காட்டுகிறது. புதுமைநலம் சான்ற உருக்காட்சியாக, இரும்பும் காந்தமும் இணைந்து விளங்குகின்றன. உலோக உருக்காட்சி என்ற பகுதியில் இரும்பு உருக்காட்சி என்பது முன்னர்க் குறிப்பிடப்பட்டு உள்ளது. சுந்தரர்தம் வன்மைத் தன்மையயக் காட்டுவதாக "வல்லிரும்பு" என்பது வன்மை உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளமை இவண் குறிப்பிடப்படுகிறது.

## திண்ணனார் - இரும்பு:

உலோகம் உருக்காட்சி என்ற பகுதியில் இரும்பு உருக்காட்சி திண்ணனாரைக் குறிக்கும் வகையில் ஆளப்பட்டுள்ளமை குறிப்பிடப்பட்டது. இறைவரது திருவருள் நோக்குத் தம்மீது படுதற்கு முன்பு திண்ணனார் உடலாலும் உள்ளத்தாலும் உறுதிபடைத்திருந்தார் என்பதைக் குறித்துக்காட்டும் வகையில் இரும்பு உருக்காட்சி வன்மை உருக்காட்சியைப் படைக்கிறது. "இரும்பு பொன்னானாற்போல" என்பது சேக்கிழார் மொழி.[33]

## முழங்கை தேய்தல் - புண் ஊறு:

மூர்த்திநாயனார்தம் பணிக்கு மன்னன் இடையூறு செய்தான். எனினும் நாயனார் மனம் சோரவில்லை. சிறிதும் பிழையாமல் சந்தனக் காப்புப்பணியைச் செய்து வந்தார். இதனைக் கண்ட அந்த மன்னன் சந்தனக்காப்புத் தேடிக்கொள்ளும் துறையையும் அடைத்து விட்டான். நாயனார் தமது தேய்க்குங்கை முட்டாது என்று சந்தனம் அரைக்கும் பாறையில் முழங்கையை வைத்துத் தேய்த்தார். கட்டும்புறந்தோல் நரம்பு என்பு ஆகியவை கரைந்து தேய்ந்தன. குருதி முழங்கையிலிருந்து வெளிவந்தது. அக்குருதி செல்லும் பரப்பெங்கணும் என்பு திறந்து மூளை புல்லும்படி கண்டு இறைவர் பொறுத்திலர். "அன்பின் துணிவால் இச்செயலைச் செய்யற்க. துன்பம் விளைத்தவன் மண்ணரசு வாய்க்கப் பெறுவாய். உன்பணி செய்து நம்மிடம் மீள்க" என்பதாகக் கூறினார். நாயனார்தம் புண் ஊறு நீங்கியது. மூர்த்தியார் விளங்கொளி எய்தினார்.

வன்மையாக இருந்தபொருள் ஒன்று கரைந்து தேய்வதான நிலையை "முழங்கை......... கரைந்து தேய" என்ற தொடரில் வன்மை உருக்காட்சியும் மென்மை உருக்காட்சியும் ஒன்றையொன்று அடுத்து வருவது காணத்தக்கது. "தேய்ந்த புண் ஊறு" என்பது வெம்மை உருக்காட்சியாக அமைந்துள்ளது. முழங்கையின் தேய்க்கப்படாத முதல்நிலை வன்மை உருக்காட்சியாகவும், தேய்ந்து கரைந்து தோன்றும் அதன் அடுத்தநிலை மென்மை உருக்காட்சியாகவும், புண் ஊறு என்பதாகிய நிலை எரிதல் ஆகிய துன்பத்தைத் தருவதால் வெம்மை உருக்காட்சி ஆகவும் உள்ளன எனலாம்.[34]

## வல்லமணர் மனம் - கல்:

சம்பந்தரை எதிர்த்து வாதிட்ட அமணர்தம் மனம் கல்போன்ற திண்மையானது எனச் சேக்கிழார் குறிப்பது வன்மை உருக்காட்சியாக உள்ளது.[35]

## அமணர் நெஞ்சு - இரும்பு:

மதுரைவாழ் மக்கள் சமணர்களை இரும்பு நெஞ்சுடையவர் எனக் குறிப்பிடுவதாகச் சேக்கிழார் தம் பாடலில் அமைக்கிறார். இரக்கமற்றவர்கள் சமணர்கள் எனச் சேக்கிழார் இவ்வுருக்காட்சியால் தெரிவிக்கிறார். சமணர்மாட்டு அவர் கொண்டுள்ள வெறுப்புணர்ச்சியின் வெளியீடாக இரும்பு என்ற வன்மை உருக்காட்சி விளங்குகிறது.[36]

சேக்கிழார் பெரியபுராணத்தில் ஆளும் ஊற்றுப்புல உருக்காட்சி வன்மை, மென்மை, வெம்மை, தண்மை என்பனவற்றின் இயல்புகளைக் காட்டுவதாக அமைந்து உள்ளது. சுந்தரர், பரவையார் காதல் உணர்வை விளக்கும் திறனுடையதாக உள்ளது. வேனிற்பருவம், குளிர்ப்பருவம் ஆகியவை படிப்பவர் மனத்துள் தோன்றுமாறு செய்யும் பொருத்தமான உத்தியாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது. நின்றசீர் நெடுமாறனுக்கு ஏற்பட்ட சூலைநோயின் கொடுமையை ஆசிரியர் வெம்மை உருக்காட்சியால் பொருத்தமுற விளக்குகிறார். படைப்பில் முக்கியமான பகுதிகளில் இடம்பெறும் ஊற்றுப்புல உருக்காட்சி ஆசிரியர்தம் உருக்காட்சித் திறனைக் காட்டவல்லதாக உள்ளது.

## காற்று உருக்காட்சி:

பெரியபுராணத்தில் காற்று உருக்காட்சி இடம்பெற்றுள்ள பகுதிகள் மிகக் குறைவு எனலாம். கடுமையாகவும் வேகமாகவும் வீசும் புயல் காற்றும் மெல்லென வீசும் தென்றல் காற்றும் ஆசிரியரால் உருக்காட்சிகளாக ஆளப்பட்டுள்ளன. மக்களின் சினம், படையின் சீற்றம் என்பன புயல்காற்று உருக்காட்சியாலும், அடியார்தம் பெருமை தென்றல்காற்று உருக்காட்சியாலும் நினைவில் தோற்றுவிக்கப்படுகின்றன.

## சுற்றத்தார் சினம் - காற்று:

இயற்பகை நாயனார் தம்மிடம் தூர்த்தவேடம் தோன்ற வேதியர் வடிவுகொண்டு வந்த இறைவர் வேண்டுகோட்கிணங்கத் தம் மனைவியாரை அவருக்குக் கொடுத்தார். மனைவியார் சுற்றத்தாரும் நாயனார் சுற்றத்தாரும் இச்செயலைப் பெரும்பழி என

எண்ணினார்கள். தம் மனைவியாரைக் கொண்டு செல்லும் இறைவருக்குத் தம் சுற்றத்தாரால் எவ்வித தீங்கும் நேராவண்ணம் காத்தற்குத் துணைபோந்தார் இயற்பகை நாயனார். அப்பொழுது சுற்றத்தார் பெரும்பழியைப் போக்கிக்கொள்ள எழுந்து சூழ்ந்து கொண்டனர். சினத்துடன் அவர்கள் சூழ்ந்துகொண்ட நிகழ்வினை ஆசிரியர்,

"வேலொடு வில்லும் வாளும் சுரிகையும் எடுத்து மிக்கு
காலென விசையிற் சென்று கடிநகர்ப் புறத்துப் போகிப்
பாலிரு மருங்கும் ஈண்டிப் பரந்தஆர்ப் பரவம் பொங்கி
மால்கடல் கிளர்ந்த தென்ன வந்தெதிர் வளைத்துக் கொண்டார்"

என்று குறிப்பிடுகின்றார்.[37]

சுற்றத்தார் படைக்கருவிகளை எடுத்துக்கொண்டு மிகவும் விரைவாகச் சென்றமையைக் காற்று உருக்காட்சி தெரிவிக்கிறது. இறைவர், நாயனார்தம் மனைவியார், நாயனார் ஆகிய மூவரையும் அவர்கள் ஆரவாரம் செய்து சுற்றிவளைத்துக் கொண்டமையைக் கடல் உருக்காட்சி விளக்குகிறது. காற்றும், கடலும் இணைந்து உருக்காட்சிகளாக வந்து நிகழ்ச்சியையும் சுற்றத்தார் சினத்தையும் மான உணர்வையும் நினைவில் எழச் செய்கின்றன.

## புகழ்ச்சோழனின் நாற்படை எழுச்சி - இறுகால்:

பட்டவர்த்தனமும் பாகரும் பட்டனர் என்ற செய்திகேட்டுச் சோழமன்னன் சீற்றத்துடன் எழுந்தான். அவனது நாற்படையும் எழுந்தது. இந்த நிகழ்ச்சியை ஆசிரியர்,

"பண்ணுறு உறுப்பு நான்கில் பரந்தெழு சேனை எல்லாம்
மண்ணிடை இறுகால் மேன்மேல் வந்தெழுந் ததுபோல் தோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன் தானைபின் தொடரத் தானோர்
அண்ணலம் புரவி மேற்கொண்டரசமா வீதி சென்றான்"

என்று மொழிகின்றார்.[38]

இறுகால் என்பது வேகமாக வீசும் புயற்காற்றைக் குறிக்கிறது. பூமியின்மீது புயற்காற்றானது சுழன்று மேலும் மேலும் வந்து வீசும் இயல்பினது. அதைப்போன்று சோழனின் நான்கு

படைகளும் அடுத்தடுத்துச் சிற்றத்துடன் எழுந்து வந்தன என்பது கருத்து. பொருத்தமான ஒன்றாகக் காற்று உருக்காட்சி விளங்குகிறது.

சம்பந்தர் பெருமை - மாருதம் சேவித்தல்:

தொண்டர்களுடன் சம்பந்தர் மதுரையை அணைகின்றபொழுது அந்தணர்கள், மாதவர்கள் அவருக்கு அளித்த வரவேற்பினை ஆசிரியர் வருணிக்கின்றார்.

"துந்துபிகளும் தூரியங்களும் ஒலித்தன. அந்தணரும் மாதவரும் ஆயிரம் மறைகளை ஓதினர். மங்கலநாதம் எல்லாத் திசைக்கும் சென்று நிறைந்தது. செந்தமிழ் மாருதம் அவரை எதிர்கொண்டு எம்மருங்கும் சேவித்தது"[39] என்பது சேக்கிழார் வருணனை. செந்தமிழ் மாருதம் என்பது தமிழுடன் பிறந்ததாகப் போற்றப்படும் தென்றல் காற்றைக் குறிக்கும். மாருதம் சம்பந்தரை வரவேற்றது என்ற கற்பனை ஆசிரியர் அந்நாயனாரிடம் கொண்டுள்ள அன்பினைக் காட்டுகின்றது. சம்பந்தர்தம் பெருமையைக் காட்டும் உருக்காட்சியாக மாருதம் விளங்குகின்றது எனலாம்.

சுந்தரர் பெருமை - தென்றல் எதிர்கொள்ளல்:

இறைவரால் செற்றம் தணிவிக்கப்பெற்ற பரவையார் தமது பரிசனத்துடன் தம் இல்லத்திற்கு வந்த சுந்தரரை வரவேற்றார். அப்பொழுது தென்றலும் அவரை எதிர்கொண்டு சேவித்தது என்கிறார் ஆசிரியர்.

"மன்றல் செய் மதுர சீத சீகரங் கொண்டு மந்தத்
தென்றலும் எதிர்கொண்டெய்துஞ் சேவகம் முன்பு"

என்பது சேக்கிழார் மொழி.[40]

அடியாராகிய சுந்தரர் மாட்டுச் சேக்கிழார் கொண்டுள்ள அன்புணர்வையும் சுந்தரர்தம் பெருமையையும் மந்தத்தென்றல் என்ற உருக்காட்சி தெரிவிக்கிறது.

## புலன்மாற்று உருக்காட்சி

கவிஞர்கள் தம் உள்ளார்ந்த ஒருமை உணர்வினால் ஒரு புலனுக்குரிய ஓர் உருக்காட்சியை மற்றொரு புலனுக்குரியதாக அமைக்கும்பொழுது புலன்மாற்று உருக்காட்சி தோன்றுகிறது. பரந்துபட்டும், வேறாகவும், மாறுபாடு உடையதாகவும் உள்ள உலகத்துப் பொருள்களுக்கிடையில் உள்ள உறவைப் பற்றியும், மனித உலகம் இயற்கை ஆகியவற்றிற்கிடையே நிலவும் உறவைப் பற்றியும் கவிஞர்கள் பெற்றிருந்த உள்ளுணர்வே இவ்வகை உருக்காட்சி தோன்றுதற்குக் காரணம் எனலாம். கவிஞரின் கூர்த்த புலனுணர்வுத் திறனை அவர் தனது படைப்பில் ஆளும் ஐம்புல உருக்காட்சி ஆய்வு வாயிலாக அறியமுடிகிறது. பெரியபுராணத்தில் ஆளப்பட்டுள்ள ஐம்புல உருக்காட்சிகளைப் பற்றிய ஆய்வினை அடுத்துப் புலன்மாற்று உருக்காட்சி பற்றிய ஆய்வு மேற்கொள்வது பொருத்தமுடைத்து.

ஒரு புலனுக்குரிய செயல்பாட்டை மற்றொரு புலனுக்குரிய செயல்பாடாக ஏற்றிக் கூறுவது புலன்மாற்று உருக் காட்சியாக வடிவெடுக்கின்றது. பெரியபுராணத்தில் சேக்கிழார் கேள்விப் புலனுக்குரிய செய்தியையும், காட்சிப்புலனுக்குரிய செய்தியையும், மணவுணர்விற்குரிய செய்தியையும் நுகர்வுப் புலனுக்குரியதாக அமைப்பது புலன்மாற்று உருக் காட்சியாக உள்ளது. மேலும் அவர் காட்சிப்புலனுக்குரிய செய்தியை ஊற்றுப்புலனுக்குரியதாக அமைப்பதும் புலன்மாற்று உருக்காட்சியாக உள்ளது.

### தூயசொல் - மலர்பொதி நலன்:

பெரியபுராணத்தின் பாயிரப்பகுதியில் திருக்கூட்டம் பற்றிக் குறிப்பிடும்பொழுது சேக்கிழார்,

"மதிவளர் சடைமுடி மன்றுளா ரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே"

என இயம்புகிறார்.[1] இறைவரைப் போற்றி வழிபடும் அடியாராகிய நாயன்மார்தம் பதிகங்களைத் தூய சொல்மலர்

என்கிறார் ஆசிரியர். தூய சொல் என்பதைக் காட்சிப்புல உருக்காட்சியாகிய மலரால் சிறப்பிக்கின்றார். அந்தத் தூயசொல் தரும் இன்பத்தை நுகர்வுப்புல உருக்காட்சியாகிய "மலர் பொதிநலன்" எனப்படும் தேனால் சிறப்பிக்கின்றார். தூயசொல் என்பது கேள்விப் புலனுக்குரிய செய்தியாயினும் அதனை "மலர்பொதிநலன் நுகர்தரு பேரவை" என்ற தொடருடன் இணைப்பதால் புலன்மாற்று உருக்காட்சியாக அமைக்கிறார் ஆசிரியர். நாயன்மார்தம் பதிகங்கள் தரும் இன்பத்தில் ஆசிரியருக்குள்ள ஈடுபாட்டை இவ்வுருக்காட்சி தெரிவிக்கின்றது. திருக்கூட்டத்தினர் பதிகங்களை மிகுந்த விருப்புடன் கேட்டு மகிழ்கின்றனர் என்பதும், மிகுந்த இன்பத்தைத் தருவனவாக அவை உள்ளன என்பதும் பாடலின் செய்தியாகும்.

## இசை - அமுது:

ஆனாய நாயனார் புராணத்தில் ஆசிரியர் இசைக்கலையின் திறம்பற்றி விளக்குகின்றார். குழலிசைதரும் இன்பத்தை அமுதாகக் குறிப்பிடுகின்றார்.

"குழற்கருவியில் எழுத்தஞ்சையும் தொடுத்து ஏழிசையின் சுருதிபெற ஆனாயநாயனார் வாசித்தார். அப்பொழுது அந்தக் குழலிலிருந்து வெளிப்பட்ட இசை சராசரங்களிலெல்லாம் தங்கியது. கேட்போர்க்கு அமுதமாக இருந்தது" என ஆசிரியர் இயம்புகின்றார்.[2] இசையமுது அளித்துச் செல்கின்றார் என்பது சேக்கிழார் மொழி. கேள்விப்புலனுக்குரிய இசை என்பது நுகர்வுப்புலனுக்குரிய அமுது என்பதாகக் குறிக்கப்படுவது புலன்மாற்று உருக்காட்சியாக அமைகிறது.

"அன்பூறி மிசைப்பொங்கும் அமுத இசைக் குழலொலி" எனவும், 'வேய்ங்குழலின் உள்ளுறை அஞ்செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி வெள்ளம்" எனவும், "நாயனார்தம் குழலிசை வெள்ளம் அமரர் தருவிளைதேன் தெள்ளமுதினுடன் கலந்து செவிவார்ப்பது" எனவும் "ஏழிசையும் செவிமடுத்துப் பருகினான்" எனவும் சேக்கிழார் குறிக்கும் பகுதிகள் புலன்மாற்று உருக்காட்சியைத் தோற்றுவிப் பனவாக உள்ளன.[3]

## திருப்பாட்டு - அமுதம்:

இறைவரைப் போற்றிப் பாடப்பெறும் திருப்பாடல்கள் அமுதம்போன்று இனிக்கின்றன என்ற கருத்தில் ஆசிரியர்,

"அண்டர்பெருமான் திருப்பாட்டின்
அமுதம் பெருகச் செவிமடுக்கும்
தொண்டர் வதன பங்கயமும்
துளித்த கண்ணீர் அரும்புமால்"

எனப்பாடுவது புலன்மாற்று உருக்காட்சியாக உள்ளது. திருப்பாட்டு அமுதம்போன்று பெருகியது. அதனைத் தம் செவியால் தொண்டர்கள் மடுத்தனர் என்ற மொழியில் மடுத்தல் என்ற நுகர்வுப் புலனுக்குரிய செயலைச் செவிப்புலனுக்குரியதாக ஆசிரியர் அமைத்துள்ளமை புலன்மாற்று உருக்காட்சியைப் படைக்கிறது. திருப்பாட்டின் இனிமை இவ்வாறு சிறப்பிக்கப்படுகிறது.[4]

"பதிகச் செழுந்தேன்" என ஆசிரியர் குறிப்பதும் இவண் நினைக்கத்தக்கது[5]

சம்பந்தர் இறைவரைப்போற்றி மொழிந்த மெய்ப்பதிகம் திருநீலகண்ட பெரும்பாணருக்கு மிகுந்த இன்பத்தை வழங்கியது என்ற செய்தியை ஆசிரியர்

"——மெய்ப்பதிகம்
உள்ளபடி கேட்டலுமே உருகுபெரு மகிழ்ச்சியராய்த்
தெள்ளமிர்தம் அருந்தினர்போல் சிந்தைகளிப் புறத்தொழுதார்"

எனக் குறிப்பிடுகின்றார்.[6]

இவ்வாறு ஆசிரியர் கேள்விப்புலனுக்குரிய பதிகங்களை நுகர்வுப் புலனுக்குரியனவாக மாற்றி உள்ள பகுதிகள் புலன்மாற்று உருக்காட்சிகளாக அமைந்து அவற்றைக் கேட்டு மகிழும் விருப்பம் மிக்குடையவர் ஆசிரியர் என்பதையும், நாயன்மார்கள் பாடிய திருப்பதிகங்கள் சைவ சமய உலகில் சிறப்பிடம் பெற்றிருந்தன என்பதையும் தெரிவிக்கின்றன.

## இறைவர் - கண்ணாரமுது:

திருநாவுக்கரசர் திருவண்ணாமலைப் பதிக்குச்சென்று இறைவரை வணங்கினார். இச்செய்தியினை ஆசிரியர்,

"கண்ணாரமுதை ..........பணிந்துபரவிப் பணி செய்தார்" என்று குறிப்பிடுகின்றார்.

"கண்ணினால் ஆர்தற்குரிய அமுது"[7] என ஆசிரியர் குறிப்பது புலன்மாற்று உருக்காட்சியாக உள்ளது. "ஆர்தல்" என்ற நுர்வுப்புலனுக்குரிய செயலைக் காட்சிப் புலனுக்குரியதாக ஆசிரியர் அமைத்துள்ளமை இவ்வுருக்காட்சியின் தோற்றத்திற்குக் காரணம் எனலாம்.

திருஞானசம்பந்தர் திருவண்ணாமலைக்குச் சென்று இறைவரை வழிபட்ட செய்தியினையும் புலன்மாற்று உருக்காட்சியால் ஆசிரியர் விவரிப்பதும் இவண் உடன்வைத்துக் காணத்தக்கது.

"அண்ணா மலைஅங் கமரர் பிரான் வடிவு போன்று தோன்றுதலும்
கண்ணால் பருகிக் கைதொழுது கலந்து போற்றுங் காதலினால்"

என்பது சேக்கிழார் மொழி.[8]

திருவண்ணாமலையின் தோற்றம் இறைவர்தம் தோற்றம் போல் சம்பந்தருக்குத் தோன்றியது எனவும், அம்மலை தந்த காட்சியினைத் தம் கண்ணால் சம்பந்தர் பருகிக் கைதொழுதார் எனவும் ஆசிரியர் இயம்புகின்ற இச்செய்தியில் "கண்ணால் பருகி" என்ற தொடரில் புலன் மாற்று உருக்காட்சி இடம்பெற்றுள்ளது. பருகுதல் என்பது நுகர்வுப்புலனுக்குரிய செயற்பாடு, காட்சிப் புலனுக்குரியதாகக் கூறப்பட்டுள்ளமை இதற்குக் காரணம் எனலாம். சம்பந்தருக்குத் திருவண்ணாமலையின் தோற்றம் தந்த இன்ப மிகுதிப்பாட்டை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. அவரது பக்தியின் திறத்தைத் தெள்ளிதின் உணர்த்துகிறது.

காஞ்சிப்பதியின்கண் சம்பந்தர் இறைவரைப் பரவிய செய்தியையும் ஆசிரியர் புலன்மாற்று உருக்காட்சி வாயிலாகத் தெரிவிக்கின்றார்.

"உருகியஅன் புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார்"

என்பது சேக்கிழார் மொழி.[9]

உமைதழுவக் குழைந்தவர் என்பது காட்சிப் புலனுக்குரிய இறைவரைக் குறிக்கிறது. சம்பந்தர் அவ்இறைவரைக் கண்டு வழிபட்டார் என்ற செய்தியை ஆசிரியர், "பருகிய மெய்யுணர்வு" என்ற தொடரால் தெரிவிக்கின்றார். "பருகுதல்" என்பது நுகர்வுப்புலனுக்குரிய செயலாகும்.

## இறையருள் - கண்ணால் பருகித் திளைத்தல்:

"திருவாரூர் இறைவர் தமக்குக் கண்பார்வை கொடுத்தருளிய திறத்தினைச் சுந்தரர் எண்ணிப் பரவசமடைந்தார். விழுந்தும் எழுந்தும் பலமுறை பணிந்தார், மிகவும் பரவினார், களிப்பினால் ஆடிப்பாடி இன்புற்றார். இன்பவெள்ளத்தில் அழுந்தியிருந்த நிலையில் தமது இரண்டு கண்ணாலும் இறைவர்தம் திருவருளைப் பருகித் திளைத்தார்." என்று சேக்கிழார் செப்புகின்ற செய்தியில் புலன் மாற்று உருக்காட்சி இடம்பெற்றுள்ளமையைக் காணலாம்.[10]

இறையருள் என்பது மனவுணர்வுக்குரிய ஒன்றாகும். அதனைச் சுந்தரர் தமது கண்களால் பருகித் திளைத்தார் என ஆசிரியர் படைத்து மொழிவது புலன் மாற்று உருக்காட்சியைத் தோற்றுவிக்கிறது. சுந்தரர்தம் பக்தியுணர்வையும், இன்பமிகுதிப்பாட்டையும் இவ்வுருக்காட்சி தெரிவிக்கின்றது. தமது இரண்டு கண்ணாலும் திருவாரூர் இறைவரைக் காணும் பேறுபெற்றமை குறித்துச் சுந்தரர் அடைந்த இன்பநிலையைச் சிறப்பித்துக் காட்டுகிறது இவ்வுருக்காட்சி எனலாம்.

"பருகா இன்னமுதத்தைக் கண்களால் பருகுதற்கு" இறைவரை வணங்கி வேண்டினார் சுந்தரர் என்ற செய்தியும் இவ்வாறு புலன்மாற்று உருக்காட்சியாக உள்ளது எனலாம்.[11]

பருகா இன்னமுதம் என்பது இறைவரைக் குறிக்கிறது. "கண்களால் பருகுதல்" என்ற தொடரில் பருகுதல் என்ற நுகர்வுப்புலனுக்குரிய செயல்பாடு காட்சிப்புலனுக்குரியதாகக் குறிக்கப்படுகிறது.

## இறைவர் - கண்களால் முகத்தல்:

"திருநாவுக்கரசர் கயிலையில் இறைவர் இறைவியுடன் வீற்றிருந்த திருக்காட்சியைக் கண்டு இன்புற்றார். அவர் தாம் பெற்ற ஆனந்தமாகிய கடலினைத் தமது கண்களால் முகந்து கொண்டார். இறைவர் முன்பு நின்றாடினார், பாடினார், அழுதார். அவருக்கு அக்கயிலையில் நிகழ்ந்ததை யாரால் சொல்ல முடியும்" எனச் சேக்கிழார் குறிக்கும் செய்தியில் புலன்மாற்று உருக்காட்சியைக் காணலாம்.[12]

ஊற்றுப் புலனுக்குரிய "முகத்தல்" என்பதைக் காட்சிப் புலனுக்குரியதாக ஆசிரியர் மாற்றியமைத்துள்ளமை காணத்தக்கது. இறைக்காட்சியில் நாயனார் தோய்ந்து திளைத்தமையின் சிறப்பை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## பொற்பு - அள்ளுதல்:

சுந்தரர் திருவாரூர்த் திருக்கோயிலின்கண் பதியிலார் குலத்துத் தோன்றிய பரவையாரைக் கண்டார்.[13]

"மானிளம் பிணையோ தெய்வ
வளர்இளம் முகையோ வாசத்
தேனிளம் பதமோ வேலைத்
திரைஇளம் பவள வல்லிக்
கானிளம் கொடியோ திங்கட்
கதிர்இளம் கொழுந்தோ காமன்
தானிளம் பருவம் கற்கும்
தனிஇளம் தனுவோ என்ன".[14]

அந்தப் பரவையாரைக் கண்டு சுந்தரர் வியப்புற்றார். பிள்ளைமைப் பருவம் மீதாம் பேதைமைப் பருவம் நீங்கி அள்ளுதற் கமைந்த பொற்புடன் அவருக்குப் பரவையார் விளங்கினார்.[15] இவ்வாறு சேக்கிழார் சுந்தரர் கண்ட பரவையார்தம் அழகினைச் சிறப்பித்துக் கூறுகின்றார்.

பொற்பு என்பது காட்சிப்புலனுக்குரிய ஒன்றாகும். அவ்வழகு கைகளால் அள்ளிக் கொள்ளற்கு ஏற்றாற்போல் உள்ளது என ஊற்றுப்புலனுக்குரிய ஒன்றாக மாற்றிக் கூறப் பட்டுள்ளமை

புலன்மாற்று உருக்காட்சியைப் படைக்கிறது. பரவையார்தம் அழகின் சிறப்பை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது.

## பொன், மணி இவற்றின் ஒளி - அமுது:

சங்கிலியாரின் அழகைக்கண்டு சுந்தரர் வியப்புற்ற பாங்கினைச் சேக்கிழார் குறிப்பது புலன்மாற்று உருக்காட்சியாக உள்ளது.

"இன்ன பரிசென் றறிவரிதால்
  ஈங்கோர் மருங்கு திரைக்குள்ளால்
பொன்னும் மணியும் மலர்ந்தஒளி
  அமுதில் அளாவிப் புதியமதி
தன்னும் நீர்மை யாற்குழைத்துச்
  சமைத்த மின்னுக் கொடிபோல்வாள்
என்னை உள்ளந் திரிவித்தாள்
  யார்கொல் என்றங் கியம்புதலும்"

என்பது சுந்தரர் மொழியாகச் சேக்கிழார் அமைத்துக் காட்டலாகும்.[16]

பொன், மணி ஆகியவற்றின் ஒளியாகிய அமுதத்தில் அளாவப்பெற்றும், புதியமதியின் நீர்மையால் குழைக்கப்பெற்றும் சமைக்கப்பட்ட மின்னுக்கொடியைப்போல் சங்கிலியார் தம்முன் தோன்றித் தம் உளத்தைத் திரிவித்தார் என்பது சுந்தரர் கூற்றாக வரும் பாடற்செய்தியாகும். மின்னுக்கொடி என்பது காட்சிப் புலனுக்கு உரியது. பொன், மணி இவற்றின் ஒளி காட்சிப் புலனுக்குரியது. எனினும் அந்த ஒளியை நுகர்வுப்புலனுக்குரிய அமுது என்று குறிப்பிடுகிறார் சுந்தரர். அந்த அமுதில் மின்னுக்கொடி அளாவப் பெற்றது என்று குறிப்பதில் அளாவுதல் என்பது ஊற்றுப்புலனுக்குரியது. புதியமதியின் நீர்மை என்பது காட்சிப்புலனுக்குரியது. அந்த நீர்மையால் மின்னுக்கொடி குழைக்கப்பெற்றுச் சமைக்கப்பட்டது என்பது ஊற்றுப்புலனுக்குரிய செய்தியாக உள்ளது. இவ்வாறு ஒரு புலனுக்குரிய ஒன்றினை மற்றொரு புலனுக்குரிய ஒன்றாகச் சுந்தரர் மொழிவதாக உள்ள செய்தி புலன்மாற்று உருக்காட்சியாக அமைந்துள்ளது. சங்கிலியார் தம் அழகால் திரிவிக்கப்பெற்ற

சுந்தரர்தம் மனநிலையைக் காட்டுவதாக இப்பாடலில் ஆளப்பெற்றுள்ள புலன்மாற்று உருக்காட்சி விளங்குகிறது.

"..............கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே பண்கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி யதனோடே யின்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்"[17]

என்று பாரதியார் குயிற்பாட்டில் பெண்ணொருத்தியின் அழகினைப் புலன்மாற்று உருக்காட்சியால் சிறப்பித்துக் கூறுவது இவண் நினைத்தற்குரியது. கேள்விப்புலனுக்குரிய கவிதையை நுகர்வுப் புலனுக்குரிய கனியாகவும், சாறாகவும் குறிப்பிடுகிறார் பாரதியார். பின்பு கேள்விப்புலனுக்குரிய பண்ணையும், காட்சிப்புலனுக்குரிய கூத்தையும், நுகர்வுப்புலனுக்குரிய சாரம் இன்னமுதம் என்பவற்றுடன் இணைக்கின்றார். மனவுணர்விற்குரிய காதல் என்பது காட்சிப் புலனுக்குரிய வெயில் என்பதாகவும், மேற்குறிப்பிட்ட கவிதைக்கனியின் சாறு, பண் கூத்து என்பனவற்றின் சாரம், இன்னமுது ஆகிய அனைத்தும் அந்தக் காதல் வெயிலில் காயவைக்கப்பட்டமையால் ஊற்றுப்புலனுக்குரிய கட்டியாக உருப்பெற்றன என்பதாகவும், அந்தக் கட்டியினால் பிரம்மன் அந்தப் பெண்ணின் மேனியை வகுத்தான் என்பதாகவும் பாரதியார் குறிப்பிடுகின்றார். இவ்வகையில் புலன்மாற்று உருக்காட்சி வியப்பினைத்தரும் அழகினைச் சிறப்பித்துக் காட்டுதற்கு உதவும் உத்தியாகக் கவிஞர்களால் ஆளப்பெறுகிறது என்பதைச் சேக்கிழார் பாடலும் பாரதியார் பாடல் வரிகளும் உணர்த்துகின்றன.

சேக்கிழார்தம் கவிதையாற்றலின் சான்றாகப் புலன்மாற்று உருக்காட்சி விளங்குகிறது. திருப்பதிகம், இசை ஆகியவற்றில் அவருக்குள்ள ஈடுபாட்டின் வெளிப்பாடாக இது திகழ்கிறது.

## மனவுணர்வு உருக்காட்சி

### (i) கருத்து உருக்காட்சி

ஐம்புபலனுக்குரிய உருக்காட்சிகளைப் படைக்கும் சேக்கிழார் மனவுணர்வுக்குரிய உருக்காட்சிகளைப் படைப்பது காணத்தக்கது. புலனுணர்வுக்கு அப்பாற்பட்ட மனவுணர்வுடன் தொடர்புடைய கருத்துக்கள் உருக்காட்சிகளாகச் சேக்கிழாரால் ஆளப்படுகின்றன. வேதநெறியிலும் சைவத்துறையிலும் காணத்தக்க செய்திகள் உருக்காட்சிகளாக அமைந்துள்ளன. சேக்கிழர்தம் சமயப்பற்றையும் தத்துவ உணர்வையும் வெளிப்படுத்துகின்ற வகையில் மனவுணர்வு உருக்காட்சிகள் விளங்குகின்றன எனலாம். அவர்தம் பக்தி உணர்வைக் காட்டுவதாக இவை விளங்குகின்றமை காணத்தக்கது.

**காவிரியின் போக்கு - உமையின் கருணையொழுக்கு:**

உமையம்மையின் உண்ணெகிழ் கருணையின் ஒழுக்குப் போன்று காவிரியாற்று நீர் அமைதியாகச் செல்வதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். இறைவியின் அருள்திறனை ஆழ்ந்து உணர்ந்த அனுபவம் உடையவராகச் சேக்கிழார் இருந்தார் என்பதை இந்த மனவுணர்வு உருக்காட்சி தெரிவிக்கிறது. அன்னையின் கருணையைப் பற்றி இடையறாது நினைத்துக்கொண்டிருக்கும் உணர்ச்சியியல்பு உடையவராய் அவர் இருந்திருக்கவேண்டும் எனலாம். அவரது பத்தியுணர்வின் எடுத்துக்காட்டாக இது விளங்குகிறது.[1]

"அண்ணல் பாகத்தை ஆளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்குப் போன்றது"

என்பது சேக்கிழார் மொழி.

**பரவையார் - சிவனருள்:**

நல்வினையின் பயனாகத் திருவாரூர்ப் பூங்கோயிலில் பரவையாரைக் கண்டார் சுந்தரர். அவர்தம் அழகைக்கண்டு வியப்புற்றார். சிவனருள்தான் பரவையார் வடிவில் வந்ததோ என எண்ணினார். அந்தத் திருக்கோயிலினின்றும் பரவையார்

சென்றமையை, "ஈசனாரருள் எந்நெறிச் சென்றதே" "எம்பிரானருள் எந்நெறிச் சென்றதே" "எந்தையாரருள் எந்நெறிச் சென்றதே" எனச் சுந்தரர் வினவினார்.[2].

இறையுணர்வில் மூழ்கியிருக்கும் அடியாராகிய சுந்தரர் காதலுணர்வின் வயப்பட்ட நிலையில் தாம் கண்ட பரவையாரைச் சிவனருளாகக் கண்டார் என்பது பொருத்தமான ஒன்று. சிவனருள் என்ற உருக்காட்சி புதுமையும் பொருத்தமும் உடையதாக உள்ளது. இங்குச் சிற்றின்ப உணர்வினைத் தூண்டுவது கவிஞரின் நோக்கமாயினும், இறையின்பத்தையும் இணைத்துப் பெரியபுராணத்தைப் பக்திக் காவியமாக்குவதில் முனைந்து நிற்பது நினைத்தற்குரியது. ".... அவருடைய காவியம் ஒரு பக்திக்காவியம். அவருடைய காப்பியத் தலைவனோ ஒரு பக்தன். எனவே இந்தச் சிற்றின்ப உணர்ச்சியைத் தூண்டும்போதே, இறையின்பத்தையும் தொட்டுக்காட்டிக்கொண்டே போகிறார்" என்பர்.[2அ].

## தண்ணீர் - சிவனருள்:

குருகாவூர் என்னும் சிவத்தலத்தை அடையும்பொழுது சுந்தரர் உண்ணீர் வேட்கையுடன் உறுபசியால் மிகவும் வருந்தினார். மறைவேதியர் வடிவில் இறைவர் அவரை அணுகித் தண்ணீரும் பொதிசோறும் வழங்கினார். மலர்வாவியினைப்போல் பந்தரும் அமைத்திருந்தார். தமக்குத் தரப்பெற்ற தண்ணீரைச் சங்கரனார் திருவருள்போல் எண்ணிச் சுந்தரர் சுவைஆர்ந்து இன்புற்றார் என்கிறார் ஆசிரியர்.

சிவனருள் உருக்காட்சி இங்கு ஆளப்பட்டுள்ளது.[3]

## சம்பந்தர் - தவம், தவப்பயன்:

தவம் என்பது இறையருளைப் பெறும் நோக்குடன் செய்யப்படும் நோன்பினைக் குறிக்கும். தமக்குற்ற துன்பத்தினைப் பொறுத்துக்கொண்டு, பிறவுயிர்க்கு எவ்வித தீங்கும் செய்யாதிருத்தல் என்பது தவத்தினது உருவாகும். தவம் செய்வார் நினைப்பார்களேயானால் பகைவரை அழிக்கவும், தம்மைச் சார்ந்திருப்பவர் சிறியராயினும் அவரை ஆக்கவும் முடியும். சாவையும் அவர்களால் வெல்லமுடியும் என வள்ளுவர் குறிப்பிடுவது காணத்தக்கது.[3அ]. இத்தகைய ஆற்றலைத் தரும்

செயலாகிய தவம் என்பதைச் சேக்கிழார் உருக்காட்சியாகப் படைத்துச் சம்பந்தரைச் சிறப்பிக்கிறார்.

சீகாழி மக்கள் தாம் செய்த தவமாகவும், தவப் பயனாகவும் சம்பந்தரைக் கண்டனர் என்பதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[4]

## திண்ணனார் வளர்ச்சி - புண்ணியத்தின் வளர்ச்சி:

புண்ணியம் என்பது செய்யப்பெற்ற தவத்தின் பயனாக வருவது எனப்படும். நல்வினையில் விளைவாகவும் புண்ணியம் என்பது குறிக்கப்படும். கருத்துப்பொருளாக உள்ள புண்ணியம் என்பதை உருக்காட்சியாகப் படைத்துத் திண்ணனாரைச் சிறப்பிக்கின்றார் ஆசிரியர்.

"நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன்" என்று பட்டினத்துப்பிள்ளையார் என்னும் அருளாளர் திண்ணனார்தம் செயற்கரிய செயலைக் குறிப்பிடுவார்.[5] இத்தகைய செயற்கரிய செயலைச் செய்யவிருக்கும் திண்ணனாரைப் "புண்ணிப் பொருள்" என்று சேக்கிழார் குறிப்பிடுவதுடன், விற்கலையும் பிற கலைகளும் பயின்று பதினாறாண்டு செவ்வி எய்திய அந்த நாயனாரை" எல்லையில்லாத புண்ணியம் என்பது மேலும் மேலும் வளர்வதன் பொலிவு போன்று விளங்கினார்" என்று இயம்புகின்றார்.[6]

திண்ணானார்தம் செயற்கரிய செயலை எண்ணி உருகும் பண்பினராகிய ஆசிரியர் புண்ணியம் என்பதைப் பொருத்தமான உருக்காட்சியாக ஆள்கின்றார். புண்ணியம் என்னும் கோட்பாடு சேக்கிழாரைக் கவர்ந்த ஒன்று என்பது இவ்வுருக்காட்சி ஆய்வில் தெரியவருகிறது.

## சம்பந்தர் - புண்ணியக்கன்று, புண்ணியமுதல், புண்ணியவிளைவு:

இளமை நலத்துடன் விளங்கும் சம்பந்தரைப் புண்ணியக்கன்று என்கிறார் சேக்கிழார்.[7] புண்ணியம் என்ற

கருத்துப்பொருள் கன்று என்பதுடன் இணைந்து காட்சிப் பொருளாகத் தோற்றுகிறது.

பயிரின் தோற்றத்திற்கு அடிப்படை வித்தாகும். வித்து என்பது காட்சிப்பொருள். அதனைப் புண்ணியம் என்பதுடன் ஆசிரியர் இணைத்து ஒரு புதுமையான உருக்காட்சியைப் படைக்கிறார். சைவசமயக் குரவராகப் போற்றப்பெறும் சம்பந்தரைச் சிறப்பித்துக்கூறும் ஆர்வத்துடன் "புண்ணியமுதல்" என்கிறார். சம்பந்தரால் சைவசமயம் சிறப்புற்றமையை எண்ணிய நிலையில் சேக்கிழார் அவரைப் "புண்ணியவிளைவு" எனவும் போற்றுகின்றார்.

சம்பந்தரிடம் சேக்கிழார் கொண்டுள்ள அன்பின் திறத்தை இவ்வுருக்காட்சியால் அறியமுடிகிறது.[8]

## செல்வம் நீங்கியமை - இருவினை மாய்தல்:

சைவசமயத் தத்துவக் கோட்பாட்டில் இருவினை என்பது முக்கியமான ஒன்றாகும். நல்வினை, தீவினை என்பவற்றிற்கேற்பப் பிறவி உண்டாகிறது என்பர். வினைக்கோட்பாட்டில் நம்பிக்கையுடையவராய்,

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"[9]

என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

"மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும் இறைவரது மெய்மைசேர்ந்த புகழை விரும்பினாரிடத்து உளவாக என்று உரைதரும் பரிமேலழகர், இன்னதன்மைத்தென ஒருவராலும் கூறப்படாமையின் அவிச்சையை இருளென்றும், நல்வினையும் பிறத்தற்கேதுவாகலான் இருவினையும் சேராவென்றும் கூறினார்" என்று விளக்குகின்றார்.[10]

எனவே இருவினையின் மாய்வு என்பது பிறவாப்பெருநிலையைத் தர வல்லது என்பது பெறப்படுகிறது.

இத்தகைய இருவினையின் மாய்வினை உருக் காட்சியாகப் படைக்கிறார் சேக்கிழார்.

திருவொற்றியூர்த் திருக்கோயிலில் திருவிளக்கிடும் திருத்தொண்டினை இடையறாமல் செய்துவந்த கலியநாயனார்தம் செல்வம் குறைந்து நீங்கிய நிலையைக் குறிக்கும் ஆசிரியர், "மண்ணிலவர் இருவினைபோல் மாண்டது மாட்சிமைத்தாக" என்கிறார்.[11]

மயக்கத்தைப்பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும் செய்யப்பெறுதற்குக் காரணமாயிருப்பது செல்வம். எனவே அச்செல்வத்தின் மறைவு இருவினையின் மறைவாகும் எனலாம். இருவினையும் மாய்வுபெற்ற நிலை மாட்சிமையாகக் கருதப்பெறும் இருவினையொப்பு என்ற நிலையாகக் கருதப்படுகிறது. இத்தகைய இருவினையொப்பு என்பது மலபரிபாகமாகவும், பின் சத்திநிபாதமாகவும் கருதப்பெறும் வளர்ச்சிப்படி நிலைகளுக்கு ஆதாரமாக உள்ளது என்பது சைவசமயக் கோட்பாடு. சேக்கிழார் இருவினைமாய்வு என்னும் இந்தக் கருத்துப்பொருளை நாயனார்தம் பெருநிலையைக் குறிப்பிடும் உருக்காட்சியாகப் பொருத்தமுற ஆண்டுள்ளார்.

## சேய்ஞலூர் வளம் - எழுத்தஞ்சு:

சைவர்களால் நியமமாகச் செபிக்கற்பாலது சிவமூல மந்திரமாகக் கருதப்பெறும் ஸ்ரீபஞ்சாக்ஷரம் என்னும் அஞ்செழுத்து, தியானிக்கப்படும் பொருளை எதிர்முகமாக்கும் பொருட்டு அதனை உணர்த்தும் மந்திரத்தை உச்சரிப்பர். மந்திரம் என்பது நினைப்பவரைக் காப்பது எனப் பொருள்படும். இது வாச்சிய மந்திரம், வாசகமந்திரம் என இருதிறப்படும். ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின் பொருளையறிந்து சிவபெருமான் ஆண்டவன் தான் அடிமை என்னும் முறைமையை மனத்தகத்தே வழுவாமல் இருத்தி, அதனை விதிப்படி மெய்யன்போடு செபித்துக் கொண்டவரின், விறகினிடத்தே அக்கினி பிரவேசித்தற்போல, ஆன்மாவினிடத்தே சிவபெருமான் பிரகாசித்து, மும்மலங்களும் நீங்கும்படி ஞானானந்தத்தைப் பிரசாதித்தருளுவர். இவ்வாறு அஞ்செழுத்தின் சிறப்பு குறிப்பிடப்படுகிறது.[12]

சேக்கிழார் எழுத்தஞ்சின் சிறப்பினை மனத்துட் கொண்டு அதனைப் பெரியபுராணப் படைப்பில் உருக் காட்சியாகப் படைக்கிறார். படைப்பின் தனிச்சிறப்பிற்குக்

காரணமாகும் வகையில் விளங்குகிறது இவ்வுருக்காட்சி.சண்டீசர் பிறந்தபதியான சேய்ஞலூரின் வளத்தின் மேன்மையை, வேதத்தின் பயனாகிய சைவத்தைப்போல் உள்ளது என்னும் சேக்கிழார், அதனை அடுத்து, அந்த ஊர் கருத்தின் பயனாகிய எழுந்தஞ்சு மந்திரம்போல் உள்ளது எனவும் குறிப்பிடுகின்றார். அஞ்செழுத்து மந்திரத்தில் சேக்கிழாருக்குள்ள ஈடுபாட்டின் வெளியீடாக இவ்வுருக்காட்சி விளங்குகிறது.[13]

மண்டுகாதல் அருச்சனையின் வைத்தார் எனவும், பத்தி முதிர்ந்த பாலகனார் எனவும் சேக்கிழாரால் போற்றப்படும் சண்டீசர்தம் பிறந்தபதி எழுத்தஞ்சு என்னும் மனவுணர்வு உருக்காட்சியால் குறிக்கப்படுவது பொருத்தமுடைத்து. சேக்கிழார் எழுத்தஞ்சினை இடையறாது எண்ணும் இயல்பினர் என்பதையும் இவ்வுருக்காட்சி ஆய்வினால் அறியமுடிகிறது.

## ஆகாசவெளி - புத்தர், சமணர் பொருள்:

கலியநாயனார் புராணத்தில் திருவொற்றியூர் நகரை வருணிக்கும் சேக்கிழார் அந்நகரின் மாளிகைகளின்மேல் வான்வெளியை மறைக்கின்றவாறு கொடிகள் கட்டப்பட்டிருந்தன என்கிறார். வெறுமையாக இருக்கும் ஆகாசவெளி, "புத்தருடன் பீலியமண் வேடமுடையவர்கள் பொருளைப்போல உள்ளது" எனக் குறிப்பிடுகின்றார். புத்தர், சமணர் சமயக்கோட்பாடு வெறுமை யானது என்ற கருத்துடையராய் ஆசிரியர் இவ்வாறு மொழிகின்றார் எனலாம்.

சமயங்களின் கோட்பாடு என்னும் கருத்துப்பொருளை உருக்காட்சியாகப் படைத்து ஆகாசவெளியின் வெறுமையைக் குறிப்பது புதுமையானது. அச்சமயங்களில் இவர் கொண்டுள்ள வெறுப்புணர்வை இது தெரிவிக்கிறது எனலாம்.[14]

## ஏனாதிநாதர், அதிசூரன் ஆகியோர்தம் வீரர்கள் வெம்புணர்வு, ஆர்வமுதற்குற்றம்:

திருவள்ளுவர் குறிக்கும் துறவறவியலைப் பற்றி விளக்கும் பரிமேலழகர், "துறவறமாவது மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற்றின்

பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமும் என இருவகைப்படும்" என்பர்.[15] அடுத்து, "ஞானமாவது வீடுபயக்கும் உணர்வு" என்பர்.[16] மேலும் மெய்யுணர்தல் என்னும் அதிகாரத்திற்கு விளக்கம் கூறுகையில், "அஃதாவது பிறப்புவீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களானன்றி உண்மையாலுணர்தல். இதனை வடநூலார் தத்துவ ஞானமென்ப" என்பர்.[17]

விரதங்களான அந்தக்கரணங்கள் தூயவாயவழி ஞானம் தோன்றுகிறது. அத்தகைய ஞானத்தால் வீடுபேறு வாய்க்கிறது என்பது கருத்து.

"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்"

என வள்ளுவர் மெய்யுணர்வு அதிகாரத்தின் இறுதியில் குறிப்பிடுவர்.[18]

"இடையறாத ஞானபோகங்களின் முன்னர் இக்குற்றங்கள் மூன்றுங் காட்டுத்தீ முன்னர்ப் பஞ்சுத்துய் போலுமாகலின் அம்மிகுதி தோன்ற இவை மூன்றன் நாமங்கெட வென்றார்" எனப் பரிமேலழகர் மேற்குறிப்பிட்ட குறட்பொருளுக்கு விளக்கம் தருகின்றார்.[19] மெய்யுணர்வு, காமம் வெகுளி மயக்கம் என்ற முக்குற்றம் ஆகிய கருத்துப்பொருள்களைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் உருக்காட்சிகளாகப் படைத்துள்ளார். ஏனாதிநாதநாயனார்தம் பெருமை, செல்வம் ஆகிய இவற்றின்மீது அழுக்காறு கொண்ட அதிசூரன் தன் படைவீரர்களுடன் அவரை எதிர்த்தான். அவனது வீரர்களில் பலர் ஏனாதிநாதநாயனாரது வாளால் வெட்டப்பட்டு வீழ்ந்தனர். அந்த வீரருள் ஒருபகுதியினர் அவரை எதிர்த்தும் போரிட முடியாமல் போர்க்களத்தைவிட்டுப் புறங்காட்டி ஓடினர். இந்நிகழ்ச்சியை,

"நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போல் அழிந்தார்"

என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[20]

ஆறுநாட்கள் இவ்வாறு இறைவரை வழிபட்டார். ஆறாம்நாள் திண்ணனாரின் பரிவினைச் சிவகோசரியார் என்னும் மறைய வருக்குக் காட்ட வேண்டும் என்ற நோக்குடன் தமது திருநயனத்தில் ஒன்று துண்ணென உதிரம்பாய இருந்தார் திருக்காளத்தி இறைவர். வழிபாட்டிற்குரியவற்றை எடுத்துக்கொண்டுவந்த திண்ணனார் இறைவர் நயனத்திலிருந்து குருதிவழியக் கண்டார், மயங்கினார். நிலத்தில் பதைத்து வீழ்ந்தார். அவரது திருவடியைப் பற்றிக் கொண்டு கதறினார். கண்ணீர் சொரிந்தார்.

"பாவியேன் கண்டவண்ணம் பரமனார்க்கடுத்த தென்னோ
ஆவியின் இனிய எங்கள் அத்தனார்க் கடுத்த தென்னோ
மேவினார் பிரியமாட்டா விமலனார்க் கடுத்த தென்னோ..."[25]

என்று மனம் வருந்தினார். இறைவரைத் தமது ஆவியின் இனியராய்க் கருதினார் அவர். ஆவி என்னும் மனவுணர்விற்குரிய ஒன்று உருக்காட்சியாக இவண் ஆளப்பட்டுள்ளது. இறையுணர் வாளர் இறைவரை உயிராகக் கருதும் இயல்பினை இங்குக் காணமுடிகிறது.

## பரவையார் - காமன்தன் பெருவாழ்வு:

திருவாரூர்த் திருக்கோயிலுக்கு இறைவரை வழிபடவந்த பரவையாரைக் கண்ட சுந்தரர் அவர்பால் காதல்வயப்பட்டார். பரவையார்தம் அழகிய தோற்றம் அவரைக் கவர்ந்தது.

"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ" என எண்ணி வியப்புற்றார். காமன்தன் பெருவாழ்வு என்பது அழகுமிக்க இரதியைக் குறிக்கும்.[26]

## நீறு - வாழ்வு:

சைவசமயத் தொண்டர்கள் திருநீற்றினை உயிரெனப்போற்றும் பெற்றியினர் என்பதைச் சேக்கிழார்,

"நீறுவாழ்வென நிகழ்திருத் தொண்டர்கள்" என்ற தொடரில் குறிப்பிடுகின்றார்.[27]

**சம்பந்தர் - வாழ்வு:**

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் சம்பந்தரைத் தங்கள் வாழ்வெனப் போற்றினர் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். தம்மால் பெரிதும் போற்றப்படும் தலைமைசான்ற சம்பந்தரை அவ்விருவரும், "நம்முடைய வாழ்வு எழுந்தருளியது" எனக் குறிப்பிட்டதாகச் சேக்கிழார் இயம்புவது காணத்தக்கது.[28]

**ஆரூர்ப்பெருமான் - உயிருக்கின்னுயிர்:**

எழிலாரூர்ப் பெருமானாகிய இறைவரைச் சுந்தரர், "என்னுயிர்க்கின்னுயிராம்" என மொழிவதாக ஆசிரியர் குறிக்கின்றார்.[29] இறைவரை உயிருக்கும் உயிராகக் கருதும் பாங்கினை இவண் காணமுடிகிறது.

**அரும்புதல்வன் - ஆவி:**

தமது மக்களை உயிரெனப் பெற்றோர் எண்ணுவதும் குறிப்பிடுவதும் உலகியல்பு.

"கோச்செங்கட்சோழனை அவன்தந்தை செங்கோற்சோழன் சுபதேவன் ஆவியனைய அரும்புதல்வனாக வளர்த்தான்" என்கிறார் ஆசிரியர்.[30]

இவ்வாறு உயிர், வாழ்வு என்பனவும் உருக்காட்சிகளாக ஆசிரியரால் ஆளப்பட்டுள்ளன.

சேக்கிழார் கருத்துப்பொருள்களை உருக் காட்சிகளாகப் படைத்துள்ளமை பெரியபுராணப் படைப்பிற்குத் தனிச்சிறப்பைத் தருகிறது எனலாம்.

## (ii) பழங்கதை உருக்காட்சி

நீண்ட நெடுங்காலமாக மக்களிடையே வழங்கிவரும் கடவுளர், தேவர், முனிவர் தொடர்பான கதைகள், இதிகாசப் புராணச்செய்திகள் உருக்காட்சிகளாகப் படைப்பிலக்கியங்களில், இடம்பெறுவதுண்டு. அவற்றைப் பழங்கதை உருக்காட்சி என்ற பகுப்பில் அடக்குவர். மக்கள் நெஞ்சத்தைக் கவர்ந்தவையாக

இவ்வுருக்காட்சிகள் உள்ளன. விளக்கப்படும் பொருளுக்குத் தரத்தையும் உயர்வையும் தரும் திறனுடையவையாகப் பழங்கதை உருக்காட்சிகள் விளங்குகின்றன. கருத்துப்பொருள்களைப் பாத்திரங்கள், அவற்றின் செயல்கள், பிற நிகழ்ச்சிகள் முதலியன அடங்கிய கதைப்போக்கில் விளக்கும் திறனுடையதாக விளங்கும் இப்பழங்கதை உருக்காட்சியை மனவுணர்வு உருக்காட்சிப் பிரிவில் அடக்குவது பொருத்தமுடைத்து. பெரியபுராணத்தில் ஆளப்பட்டுள்ள பழங்கதை உருக்காட்சி சேக்கிழார்தம் கல்விப்பயிற்சியையும், படைப்பாற்றலின் ஆளுமையையும் காட்ட வல்லதாக உள்ளது. பெரியபுராணப்படைப்பு சமயதத்துவ மணம்பெற்றுத் தனிச்சிறப்புடன் திகழ்தற்குப் பழங்கதை உருக்காட்சி உதவுகிறது எனலாம்.

நாயனார்தம் தோற்றபொலிவு, இறையுணர்வின் மேம்பட்டநிலை, காதலுணர்வு, மகளிர் அழகு, கற்பின்திறம், நாயனார்தம் சிறப்புநிலை, அடியார் வீரம் முதலியவை பழங்கதை உருக்காட்சியால் விளக்கப்படுவதைப் பெரியபுராணத்தில் காணலாம்.

## வானவர், மூவர் நான்மறைச்சிறுவர் - சுந்தரர்:

சிவனார் பற்றிய புராணக்கதைகள் சேக்கிழார் படைப்பில் உருக்காட்சிகளாக இடம்பெற்றுள்ளன.

"வானவர் உய்ய வேண்டி மறிகடல் நஞ்சை உண்டீர்
தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து நட்டீர்
யான்மிகை உமக்கின் றானால் என்செய்வீர் போதா"

தென்றார்.[31] எனச் சுந்தரர் சிவபெருமானை நோக்கிக் கூறுவதாகச் · சேக்கிழார் அமைத்துள்ளமை பழங்கதை உருக்காட்சியாக விளங்குகிறது.

'சங்கிலித் தொடக்குண்டாருக்கு இங்கு ஒரு சார்வுண்டோ' என்று சுந்தரரின் தூதராகத் தம்பால் வந்த சிவபெருமானிடம் கூறினார் பரவையார்.[32] பரவையாரின் புலவியைக் கேட்ட சுந்தரர் மனம் வருந்தினார். சிவபெருமானிடம், 'நீர் அருளிச் செய்த வண்ணமும் அடியாளான பரவையோ

மறுப்பாள்?' என வினவிய சுந்தரர் மேற்குறிப்பிட்ட சிவனார்தம் மூன்று அருட்செயல்களைக் குறிப்பிட்டார்.

தேவர்களும், அசுரர்களும் இணைந்து அமுதம் பெறுதற்காகத் திருப்பாற்கடலைக் கடையும்பொழுது தோன்றிய கொடிய நஞ்சினைச் சிவனார் உண்ட அருட்செயல், தேவர்களைக் காப்பாற்ற வேண்டித் தானவர்கள் மூவர்தம் கோட்டைகளை அழித்து ஆட்கொண்ட செயல், தம்மைச் சரணெனப் பற்றிக்கொண்ட மார்க்கண்டேயன் என்னும் மறைச்சிறுவனைக் காப்பதற்காகக் கூற்றுவனைச் சீற்றத்துடன் உதைத்தருளிய செயல் ஆகிய மூன்றும் தொன்மைச் செய்திகளாக வழங்கப்படுவன. நஞ்சுண்ட கண்டனாகவும், திரிபுராந்தகனாகவும், காலனுக்கும் காலனாகவும் திகழ்கின்ற சிவனாரின் இவ்வருட் செயல்களைக் குறிப்பிடும் சுந்தரர்,

"'ஆவதே செய்தீர் இன்றென் அடிமைநீர் வேண்டா விட்டால்
பாவியேன் தன்னை அன்று வலியஆட் கொண்ட பற்றென்
நோவுமென் அழிவுங் கண்டீர் நுடங்கிடை அவள்பால் இன்று
மேவுதல் செய்யீ ராகில் விடுமுயிர்' என்று வீழ்ந்தார்"[33]

எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

சிவனாரைக் குறித்த பழங்கதைச் செய்திகள் உருக்காட்சிகளாக அமைந்துள்ளன. தேவர்கட்கு உதவியமை, தானவரை ஆட்கொண்டமை, மறைச்சிறுவனைக் காத்தமை ஆகிய செயல்களைச் செய்தது போன்று தமக்கும் அருள் செய்யவேண்டும் என்ற குறிப்புடன் உள்ள சுந்தரர்தம் வேண்டுகோளுக்கு அழுத்தம் தருவனவாக இவ்வுருக்காட்சிகள் உள்ளன. சிவனார்தம் அருட்செயல்களை இறையுணர்வாளராகிய சுந்தரர் கூற்றில் வைத்து ஆசிரியர் மொழிவது பொருத்தமுடைத்து. சைவசமய முழுமுதற்கடவுளாகிய சிவனார் சார்ந்தவர்தம் அச்சத்தை அகற்ற தம்மையே நல்குவார் எனவும், எதிர்ப்பவர் தம்மை வலிய ஆட்கொள்வார் எனவும், சரணடைந்தவர்க்குத் துணைநிற்பார் எனவும் காட்டுதற்குத் தமது படைப்பில் இப்பகுதியைச் சேக்கிழார் வாய்ப்பாகக் கொள்கிறார். சிவனார்தம் அருட்செயல்களை எண்ணி மகிழும் இயல்பினர் சேக்கிழார் என்பதை இவ்வுருக்காட்சியால் அறியமுடிகிறது.

### காவிரியாறு - நான்முகன்:

திருமாலின் உந்திச் சுழியிலிருந்து தோன்றிய மலரின் மீது நான்முகன் அமர்ந்திருப்பான். பல்லுயிரையும் படைப்பான். அழகிய குண்டிகையைத் தாங்குவான். நான்முகன் என்றதும் இத்தகைய தோற்றம் மனத்தின்கண் எழுவதுண்டு. காவிரியாற்றின் நீர்ப்பரப்பில் சுழிகளும் திருமாலின் உந்திச்சுழிகள் போல் தாமரை மலர்களும் தோன்றுவதுண்டு. பல்லுயிர்களை அது தனது நீர்வளத்தால் படைப்பதும், குண்டிகைகளில் மக்கள் அதன் நீரைக்கொண்டு செல்வதும் ஆகிய செய்திகள் காவிரியாற்றினை நான்முகனாகக் காணுமாறு செய்கின்றன என்கிறார் ஆசிரியர்.[34] நான்முகனின் படைப்பாற்றலைக் காவிரியாற்றிடமும் இருப்பதாகக் காண்கிறது சேக்கிழார் நெஞ்சம்.

### பரவையார் - நான்முகன் மணிவிளக்கு:

பரவையார்தம் அழகைக்கண்டு சுந்தரர் வியப்பில் ஆழ்ந்தமையை ஆசிரியர் வலியுறுத்துகின்றார்.

"உலகில் எத்தனையோ பெண்களை நான்முகன் படைத்துவிட்டான். அவர்கள் எல்லோரையும்விட அதிக அழகுடையவளாகப் படைக்கவேண்டுமானால், தன்னால் படைக்கப்பெற்ற ஒவ்வொரு பெண்ணையும் மனத்திலிருத்தி, அவர்தம் அழகை அளந்தறிந்து, பின்பு அவர்களையும் விடவும் அழகி ஒருத்தி எவ்வாறிருப்பாளென அவன் தன் மனத்தளவில் நினைத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு நினைத்து ஒரு படத்தையே மனத்தில் வரைந்துகொள்ளும் செயலில் அந்த நான்முகன் தோல்வி அடைந்துவிட்டான். ஆனால் பரவையார் என்ற பெண் உலகத்தில் உள்ள எல்லா அழகியரையும்விட அழகியவளாக இருப்பது எவ்வாறு? நினைவின்கண் ஒருபடத்தை வரைந்துகொண்டு அதனை வைத்துக்கொண்டு படைக்கப்பட்ட ஒருபெண் அல்ல பரவையார். எனவே பரவையார் என்ற வடிவில் தோன்றுவது பிரம்மனால் படைக்கப்பட்ட மணிவிளக்கு ஆவாள். பேரழகி ஒருத்தியைப் படைத்தற்கு இயலாத நான்முகன் தனது இயலாமையை எண்ணி வருந்தினான். எனினும் அந்த வருத்தத்தைப் போக்கிக்கொள்ள வேண்டிப் பரவையார் என்ற மணிவிளக்கைப் படைத்தான். மணிவிளக்கு என்பது ஒளிப்பிழம்பைக் குறிக்கும்.

சுந்தரர்தம் எண்ணம், பரவையாரைக் கண்டு வியந்தபொழுது இவ்வாறு ஓடியிருக்க வேண்டும்" என்பர்.[35] நான்முகனின் படைப்புச்செயலை உருக்காட்சியாகப் படைத்துப் பரவையார்தம் அழகினைச் சேக்கிழார் சிறப்பிக்கின்றார்.

"ஓவியநான் முகன்எழுத ஒண்ணாமை உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ?"

என்பது சேக்கிழார் மொழி.[36]

## திருநாளைப்போவார் - செம்மலர்மேல் அந்தணன்:

இறைவர்தம் ஆணைக்கிணங்கத் தில்லையில் தெய்வமறை முனிவர்கள் தீயமைத்தனர். இறைவர் தம்மிடம் கனவில்கண் இட்ட ஆணைக்கேற்பத் திருநாளைப்போவார் இறைவர் திருவடியை நினைந்தபடி எரியை வலங்கொண்டார். கைதொழுது இறைவர்தம் நடமாடும் திருவடியை எண்ணியவராய் அழலில் புகுந்தார். அப்பொழுது அவரது மாயப்பொய்தகையும் உருவொழிந்தது. புண்ணிய மாமுனி வடிவம் பெற்று மெய்யில் வெண்நூல் விளங்கிட வேணிமுடிகொண்டு மேலெழுந்தார். அவ்வாறு அவர் செந்தீயின்மேல் எழும்பொழுது செம்மலரின் மீது வந்தெழுந்த அந்தணனாகிய நான்முகனைப்போலத் தோன்றினார். புலையர்தம் இனத்தில் பிறந்த திருநாளைப்போவார் தமது இறையன்பின் திறத்தால் புனிதமான முனிவராக மாற்றம் பெற்றார் என்ற செய்தியைச் சேக்கிழார் நான்முகன் என்ற பழங்கதை உருக்காட்சியால் சிறப்பிக்கின்றார்.[37] திருநாளைப்போவார்தம் சிறப்பை மிகுத்துக் கூற இப்பழங்கதை உருக்காட்சி ஆசிரியருக்கு நன்கு உதவுகின்றது எனலாம்.

## திலகவதியார் - திருமகள்:

திருமகள் என்னும் பழங்கதை உருக்காட்சி பெரியபுராணப்படைப்பில் பெண்ணடியார்தம் தோற்றப்பொலிவையும் பண்புயர்வையும் காட்டுகின்ற வகையில் ஆசிரியரால் பல இடங்களில் ஆளப்பெற்றுள்ளது. பெண்களின் நலனைக்கூற முற்படும்பொழுது ஆசிரியருக்குத் திருமகள் உருக்காட்சி முன்னின்று உதவுகிறது.

திருநாவுக்கரசு நாயனார்தம் தமக்கையார் திலகவதியாரைப் பற்றிச் சேக்கிழார்,

"புகழனார் தமக்குரிமைப் பொருவில்குலக் குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றில்
நிகழுமலர்ச் செங்கமல நிரையிதழின் அகவயினில்
திகழவருந் திருவனைய திலகவதி யார்பிறந்தார்"[38]

என்று குறிப்பிடுகின்றார். அடுத்து "அணங்கனைய திலகவதியார்," "அணங்கனையாள்"[39] என ஆசிரியர் அவரை அழைக்கின்றார். வினைப்பயன் காரணமாகத் தந்தையார் இறந்தார். கற்புநெறி வழுவாத தாயார் உடன் மறைந்தார். பெருந்துயரில் திலகவதியாரும் நாவுக்கரசும் அழுந்தினர். பெருங்கிளைஞர் ஒருவாறு மனந்தேற்ற துயரொழிந்திருந்த வேளையில் திலகவதியாரை மணக்கவிருந்த கலிப்பகையார் போர்க்களத்தில் உயிர்கொடுத்துப் புகழ்கொண்டார். போர்முனையில் பகைமுருக்கி அமருலகம் ஆள்வதற்குத் தம்முடைய கடன்கழித்த அப்பெருவார்த்தையை ஊரார் வாயிலாக அறிந்தார், திலகவதியார். இவ்வாறு இடருக்குமேல் இடர் வந்தமையைத் தாங்கிநின்ற திலகவதியாரைச் "செம்மலர்மேல் வந்தெழுந்த திருவனைய திலகவதியார்"[40] என்கின்றார் சேக்கிழார்.

ஆசிரியர் திருமகள் உருக்காட்சியைத் தொடர் உருக்காட்சியாக அமைத்துத் திலகவதியாரைச் சிறப்பிக்கின்றார்.

"எந்தையும் எம் அன்னையும் அவருக்கு என்னைக்கொடுக்க இசைந்தனர். அந்த முறையால் அவருக்கு உரியவள் நான். ஆதலால் இந்த உயிர் அவரோடு இசைவிப்பேன்" எனத் திலகவதியார் துணிந்தார். தமது தம்பியின் வற்புறுத்தலின் பேரில் உயிர் தாங்கியிருந்தார்.

அம்மையாரின் தோற்றப்பொலிவும் கற்புமாண்பும் ஆசிரியர் மனத்தை ஈர்த்துள்ளன என்பதை அவர் ஆளும் திருமகள் உருக்காட்சி தெரிவிக்கிறது. சைவசமயத்தின் எழுச்சிக்குப் பெரிதும் துணைநின்ற நாவுக்கரசினைக் காத்தளித்த திலகவதியாரை ஆசிரியர் செல்வமாகப் போற்றுகின்றார் எனக் கருதலாம்.

"நிகழுமலர்ச் செங்கமல நிரையிதழின் அகவயினில் திரு", "செம்மலர்மேல்திரு" எனத் திலகவதியாரை முறையே அவர் பிறந்தபொழுதும், தந்தை, தாய், மணம்கொள்ளவிருந்தவர் மறைந்த நிலையில் அவருக்கு ஏற்பட்ட துன்பக்காலத்தும் சேக்கிழார் குறிப்பது உணரத்தக்கது.

## திருநீலகண்டர் மனைவி - திரு:

பூண்தயங்கும் இளமென்சாயலையுடைய பொற் கொடியைப் போன்ற அம்மையார் திருநீலகண்ட நாயனார்தம் துணைவியார் ஆவர். தமது கணவனார் பரத்தையின்பால் தொடர்புகொண்டிருந்தமையை அறிந்து ஊடல் கொண்டார். ஆனால் மனையறம் ஓம்புவதில் அவர் தவறவில்லை. கணவனாரிடம் உடனுறைவு கொள்ளற்கு இசையாமல் இருந்தார். "தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்" என்று கணவனாரிடம் தெரிவித்தார்.[41] இத்தகைய அம்மையார்தம் கற்புமாண்பைச் சிறப்பிக்கும் வகையில், "தேனலர் கமலப் போதில் திருவினும் உருவம் மிக்கார்" [42] என்று சேக்கிழார் மொழிகின்றார். இளமைப்பொலிவும் பாலுணர்வும் சிறந்திருக்கும் நிலையிலும் புலனடக்கத்துடன் இருந்து மனையறம் ஓம்பிய அருஞ்செயல் ஆசிரியர் நெஞ்சத்தைக் கவர்ந்துள்ளது எனலாம். திருவைவிடவும் அழகுமிகப்பெற்ற அப்பெண்ணடியாரின் கற்பின் பெருமையை ஆசிரியர் இவ்வகையில் போற்றுகின்றார்.

## இயற்பகைநாயனார் மனைவி - திரு:

சீரடியார்கள் வேண்டும் எதையும் இல்லை என்று கூறாது வழங்கி வந்தார். புகார் நகரத்தில் வாழ்ந்த இயற்பகை நாயனார் என்பார்[43] தூயநீறணிந்துகொண்டு தூர்த்தவேடம் தோன்ற வேதியராக இறைவர் நாயனாரிடம் வந்தார்.[44] "மன்னுகாதல் உன் மனைவியை வேண்டிவந்தேன்" என்று கூறினார். இவ்வேண்டுகோளைப் பேறெனப் போற்றித் தம் கற்பு மேம்படு காதலியாரை அழைத்து, "உன்னை இம்மெய்த்தவருக்குக் கொடுத்துவிட்டேன்" என்றார்[45] நாயனார். அப்பெண்ணடியார் கலங்கி மனம்தெளிந்து, "இன்று நீர் எனக்கு அருள்செய்தது இதுவாகில், நீர் உரைத்ததொன்றை நான் செய்யும் அத்தனையல்லால் உரிமைவேறு உளதோ எனக்கு" என்று கூறித்

தமது கணவனாரை வணங்கினார். நாயனாரும் அம்மையாரை எதிர் வணங்கினார். பின்னர் அவ்அம்மையார் மாதவன் சேவடியைப் பணிந்து திகைத்து நின்றார். சுற்றம், சமூகம் தம்மைத் தடுக்க முனையும் என்ற நினைவின் மோதல் தாக்கிய நிலையிலும் தம் கணவனார்தம் சொற்காத்தல் தமது கடன் என்று உறுதியுடன் இருந்த அப்பெண்ணடியாரின் சிறப்பைப் போற்றும் சேக்கிழார் அவரைத் "திருவினும் பெரியாள்" என்கிறார்.[46] திரு என்பது திருமகளைக் குறிக்கும். "செயற்கருஞ் செய்கை செய்த தீரனே"[47] என்று இறைவரால் குறிப்பிடப்பெறும் நாயனார்தம் புகழுக்கு இவ்வம்மையார்தம் மனஉறுதி துணைநின்றது என்ற உணர்வுடன் ஆசிரியர் திருமகள் உருக்காட்சியால் போற்றுகின்றார்.

## பூம்பாவை - பூவினாள்:

திருமயிலையைச் சார்ந்த செல்வர் சிவநேசர் என்னும் அடியார்தம் மகள் திருமகள் உருக்காட்சியால் சிறப்பிக்கப்படுவது காணத்தக்கது. சேக்கிழார் இவ்வுருக்காட்சியைத் தொடர் உருக்காட்சியாக ஆள்வதன் வாயிலாக அப்பெண்ணின் அழகுவடிவை நினைவில் எழுமாறு செய்கிறார். தாமரைமலரில் இருப்பதால் திருமகளைப் பூவினாள் என்பது மரபு. பூம்பாவை பிறந்த நிகழ்வினை ஆசிரியர்,

> "கரிய வாங்குழல் மனைவியார் வயிறெனும் கமலத்
> துரிய பூமகள் எனஒரு பெண்கொடி உதித்தாள்"[48]

என்கிறார். "யாவரும் பெருமகிழ்ச்சியால் இன்புறுமாறு விளங்கிய அந்தப் பாவையின் நல்ல உறுப்புக்களின் அணிகிளர் பண்புகளை நோக்கிப் பூவினாள் என்று கருதும்படி இருப்பதால் பூம்பாவை என்று நாமம் இட்டு அழைத்தனர் மக்கள்" என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[49] பூங்காவில் மலர்பறிக்கும் பொழுது அரவினால் தீண்டப்பெற்று மாண்ட அப்பெண்ணின் என்பினை ஓர் குடத்தில் இட்டுவைத்திருந்தார் சிவநேசர்.[50] சம்பந்தருக்குத் தமது மகளையும் மாநிதியையும் தம்மையும் கொடுத்ததாக மொழிந்த சிவநேசர் திருமயிலைக்குச் சம்பந்தர் வந்தபொழுது அவர் திருமுன் பூம்பாவையின் என்பு நிறைக்கப்பெற்றிருந்த குடத்தை வைத்தார்.[51] சம்பந்தர் பாடிய நற்பதிகம் என்னும் மெய்த் திருவாக்கின்

திறத்தால்அக்குடம் உடைந்து பூம்பாவை உருப் பெற்று எழுந்தாள். இக்காட்சியை ஆசிரியர்,

"கோற்றொடிச் செங்கை தோற்றிடக் குடம்உடைந் தெழுவாள்
போற்று தாமரைப் போதவிழ்ந் தெழுந்தனள் போன்றாள்"[52]

என்கிறார். "பின்பு அணங்கினும் மேம்படும் அன்னமன்னவள் சம்பந்தரை வணங்கி நின்றாள்"[23] எனவும் அவர் குறிப்பிடுகின்றார். பூம்பாவையின் தெய்வநலம் வாய்ந்த அழகை எண்ணி ஆசிரியர் திருமகள் உருக்காட்சியை அடுத்தடுத்து ஆள்கிறார்.

பெண்ணடியார்தம் இளமை, அழகு, மனத்திண்மை என்பனவற்றின் நினைவு ஆசிரியர் மனத்தில் இடம்பெற்றிருந்தது எனலாம். திருமகள் உருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்வதன் வாயிலாகப் பெண்ணடியார் சிறப்பைப் படிப்பவர் மனத்தில் பதியவைக்கிறார் .

## திருநீலகண்டநாயனார் மனைவி -

## அரிவாட்டாயநாயனார் மனைவி சீகாழிமகளிர்

## அருந்ததி, வடமீன்

"......... கற்பும் களவின் முடிவில் ஒளிரும், இந்த ஒளியை வான்மீன் ஒளி என வாழ்த்தினர். கற்பினை அருந்ததியின் சிறப்பாகக் கூறுவது தமிழ்மரபு. கணவனையன்றி வேறொன்றும் அறியாது கணவனை இணைபிரியாது வாழ்கின்ற கற்பின் ஒழுக்கமே இந்த அருந்ததி என்று கூறினர். அருந்ததியை வடமீன் என்பர். வடக்கே தோன்றும் ஏழுமீன்கள் நாற்கோணமும் முக்கோணமுமாகத் தோன்றுவனவற்றில் முக்கோணத்தின் இடையே முடியாய்த் தோன்றுவது உண்மையில் இரண்டு வான்மீன்களாம். அவற்றில் ஒன்று விளக்கம் நிறைந்தது. மற்றொன்று மினுக்மினுக்கென்று தோன்றி மறைவது ; இந்த இரட்டை நட்சத்திரத்தைக் கண்டவர்கள் இணைபிரியாத மணமகனையும் மணமகளையும் மனத்திற்கொண்டார்கள். வசிட்டன் என்றும் அருந்ததி என்றும் பேசினார்கள்" என்பர் அறிஞர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்.[54]

சேக்கிழார் அருந்ததி என்னும் பழங்கதை உருக்காட்சியை ஆள்வதன் வாயிலாகத் திருநீலகண்ட நாயனார், அரிவாட்டாய நாயனார்தம் மனைவியரைச் சிறப்பிக்கின்றார். கற்பின் குறியீடாகக் கருதப்பெறும் அருந்ததி உருக்காட்சியால் கண்ணகியைப் போற்றும் இளங்கோவடிகள், "தீதிலா வடமீனின்திறம் இவள்திறம்" என்பார்.[55] அம்மரபையொட்டிச் சேக்கிழார், "அருந்ததி கற்பில் மிக்கார்" எனவும், "வடநெடுமீனே யனையவர்" எனவும் மேற்குறிப்பிட்ட நாயனார்தம் மனைவியரைக் குறிப்பிடுகின்றார்.

சீகாழித்தலத்துவாழ் மகளிரை,

"கதிர்செய்வடமீன் கற்பின் மனைவாழ்க்கைக் குலமகளிர்" என்று ஆசிரியர் குறிப்பது காணத்தக்கது.[56]

மகளிர்தம் கற்பின் திண்மையைப் போற்றும் இயல்பினர் என்பதை அருந்ததி உருக்காட்சி தெரிவிக்கிறது.

## பூம்பாவை - திலோத்தமை:

விண்ணுலகத்தில் அழகியெனப் போற்றப்பெறும் திலோத்தமையின் அழகைவிடப் பூம்பாவையின் அழகு சிறந்திருந்தது என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். சம்பந்தர் பாடிய நற்பதிகத்தின் ஆற்றலால் உயிர்பெற்று எழுந்த பூம்பாவை தெய்வநலம் பெற்றவளாகத் திகழ்ந்தவளாதலின் ஆசிரியர் அவளைத் திலோத்தமையினும் உயர்ந்தவளாகக் குறிப்பிடுவதில் ஆர்வம் காட்டுகிறார்.[57]

## சுந்தரர், நின்றசீர் நெடுமாற நாயனார் - முருகன்:

திருவாரூர்த் திருக்கோயிலில் சுந்தரரைக் கண்ட பொழுது பதியலார் குடியிற் பிறந்த பரவையார் முதன்முதலில் அவரைத் தம்முன்னே வந்தெதிர் தோன்றும் முருகனோ என்று ஐயுற்றதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.[58] சுந்தரர்தம் இளமைப்பொலிவும் அழகிய தோற்றமும் பற்றிச் சிறப்பிக்க விரும்பும் ஆசிரியர் முருகன் என்னும் பழங்கதை உருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்கிறார். அழகெனினும் முருகெனினும் ஒக்கும்.

உக்கிரகுமாரப் பாண்டியனாக அவதரித்த முருகன் கடலைத் தனது வேலினால் வற்றுமாறு செய்த நிகழ்வாகிய பழங்கதையைப் பாண்டிய மன்னனாகிய நின்றசீர் நெடுமாறனின் வெற்றிச் சிறப்பைக் குறிப்பிடுவதற்கென ஆசிரியர் ஆள்கிறார்.

"எடுத்துடன்ற முனைஞாட்பின் இருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் குரித்துணியும் பாய்மாவி னறுகுறையும்
அடுத்தமர்செய் வயவர்கருந் தலைமலையு மலைசெந்நீர்
மடுத்தகடல் மீளவும்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக"

என்ற பாடலில் ஆசிரியர் பழங்கதை உருக்காட்சியை ஆள்கின்றார்.[59] நெடுமாறனின் வீரம் இவ்வுருக்காட்சியால் சிறப்பிக்கப் பெறுகிறது எனலாம்.

## சுந்தரர் - மன்மதன்:

பக்தி இலக்கியமாகிய பெரியபுராணத்தில் சேக்கிழார் மன்மதன் என்னும் பழங்கதை உருக்காட்சியைப் பொறுப்புடன் ஆள்கிறார். மனிதமனத்துள் எழும் காதல்உணர்வு என்பது மன்மதன் என்ற பழங்கதைப் பாத்திரப்படைப்பால் காட்சிப்படுத்தப்படுகிறது. கருத்துப்பொருளைக் காட்சிப் பொருளாக்கும் கலைப்படைப்பாகப் பழங்கதைகளைக் கருதலாம். தம் மனத்துள் காதல் உணர்வைத் தோற்றுவித்த சுந்தரரை மன்மதனோ என்று பரவையார் ஐயுறுவதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[60] ஆடவருள் அழகுமிக்கவனை மன்மதன் என்பது மரபு.

## பரவையார் - மன்மதனின் இளந்தனு:

இளம்பருவத்தினர்மாட்டுத் தோன்றும் பால்உணர்வு குறித்து விவரிக்கும்பொழுது கவிஞர்கள், மன்மதன் தனது கரும்பாகிய வில்லினால் மலர்அம்புகளை வீசுதலாகிய செயலைக் குறிப்பிடுவர். பரவையாரைச் சுந்தரர் மன்மதனின் இளந்தனுவோ என எண்ணியதாகச் சேக்கிழார் மொழிகின்றார். சுந்தரர் மனத்துள் பரவையார் காதல் உணர்வைத் தோற்றுவித்தமை இவ்வாறு ஆசிரியரால் விளக்கப்படுகிறது.[61]

## பரவையார் - மன்மதன்பெருவாழ்வு:

மன்மதன் பெருவாழ்வு என்பது அவனது மனைவி இரதியைக் குறிக்கும். மகளிருள் மிக்க அழகுடைய பெண்ணை இரதி என்பது மரபு. சுந்தரர் பரவையாரை இரதியோ என எண்ணுவதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.[62]

சுந்தரரும் பரவையாரும் அழகுமிக்கவராய் விளங்கினர் என்பதைச் சேக்கிழார் மன்மதன், இரதி என்னும் பழங்கதைப் பாத்திரங்களால் சிறப்பிக்கின்றார் எனலாம்.

## சுந்தரர், பரவையார் காதல் உணர்வு - மன்மதன் போர்செய்தல்:

சுந்தரர், பரவையார் ஆகியோருக்கிடையே தோன்றிய காதல் உணர்வைக் காட்சிப்படுத்தும் நோக்கில், ஆசிரியர் மன்மதன் போர்செய்வதாகிய நிகழ்ச்சியை உருக்காட்சியாகப் படைப்பது காணத்தக்கது.

"படைகளைப் பெற்றுள்ள மன்மதன் எல்லாத்திசை கட்கும் சென்று தனது வில்லை வளைத்து அம்புகளை எய்கின்றான். அவை பரவையாரை இயக்கமுடியாமற் செய்கின்றன. அந் நிலையிலும் அவர் இறைவர்தம் கோயிலினுட் சென்றார்"[63] என ஆசிரியர் இயம்புவது, காமவயப்பட்ட நிலையிலிருந்த பரவையார்தம் மனப்போராட்டத்தை விளக்குகிறது எனலாம்.

"பரவையார்தம் இயக்கத்தைத் தடுத்ததுபோன்று சுந்தரரின் எதிரேநின்று மன்மதன் தனது அம்புகளை வீசி அவர் இயக்கத்தைத் தடுக்க முயன்றான். இதனை உணர்ந்த சுந்தரர், 'இறைவர்தம் நெற்றிக்கண்ணினால் எரிந்து வெந்த மன்மதன் மீண்டும் உருப்பெற்று வந்து என்முன்னே நின்று அம்பு தொடுக்கின்றான். இதுவா என் தந்தையின் அருள்வண்ணம்' என்று சுந்தரர் வினவுகிறார்"[34] என்பதாகச் சேக்கிழார் மொழிகின்றார். இதுவும் காதல் உணர்வில் இருந்த சுந்தரர்தம் மனப் போராட்டத்தைத் தெரிவிக்கிறது எனலாம்.

காமவுணர்வு மனிதமனத்துள் எழுப்பும் போராட்டம் மன்மதனின் போராட்டமாகக் கவிஞரால் காட்டப்படுகிறது.

"திருவொற்றியூரில் சங்கிலியாரைக் கண்டபொழுது சுந்தரர்தம் சிந்தை தனது நிலையினின்றும் தவறி அம் மங்கையாரிடம் சென்று வீழ்ந்தது. மன்மதன் செலுத்திய மலர் அம்புகளைத் தாங்கமுடியதாவராய் இருந்தார்."[65]

"பரவையார்தம் புலவியைநீக்குதற்குத் தம்மால் தூதுவராக அனுப்பப்பெற்ற இறைவர்தம் வரவை ஆர்வத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த சுந்தரர், வழிஎதிர்கொள முதலில் செல்வார். பின்பு வரவு காணாமல் மீள்வார். அழிவுற மயங்கி நிற்பார். 'இறைவர் தாழ்த்தார்' என்று மீளவும் எழுவார். மன்மதன் பொழியும் மலரம்புகள் தம்மீது விழுவதால் ஒதுங்குவார். துன்புறுவார்"[66] எனவும் ஆசிரியர் படைக்கும் பகுதிகள் பழங்கதை உருக்காட்சிகளாக அமைந்து சுந்தரர்தம் காதல் உணர்வினால் ஏற்பட்ட மனப்போராட்டத்தை விவரித்துக் காட்டுகின்றன,

## வேழம் - மந்தரகிரி:

சமணசமயத்தை விட்டு விலகிச் சைவசமயத்தில் நாவரசர் சேர்ந்தமையை எண்ணிச் சமணர்கள் மருண்டனர். தங்கள் சமயத்தின் பால் பற்றுடைய பல்லவவேந்தனிடம் சென்று நாவரசரை அலைக்கும்படி வேண்டினர். முதலில் நாவரசர் நீற்றறையில் இடப்பெற்றார். இறைய்ருளால் ஊனமின்றி அதனின்றும் மீண்டார் அவர். பின்பு நஞ்சூட்டப்பெற்றார். நஞ்சும் அவருக்கு இறையருளால் அமுதமாயிற்று. கடக்களிற்றைவிட்டு அவரைக்கொல்லவேண்டும் என அரசனிடம் அமணர்கள் தெரிவித்தனர். ஏவப்பட்ட அந்த வேழம் நாவரசர்முன் தாழ்ந்து இறைஞ்சியது. பின்னர் எழுந்து தனது பாகரைக் கொன்றது. அமணர்மேல் ஓடியது. அவர்தம்மை உழறி மிதித்துப் பிளந்து பலரையும் கொன்றது.[67] காஞ்சிநகரம் கலங்கியது. பல்லவ மன்னனுக்கு ஆகுலத்தை உண்டாக்கியது. யானையின் இச்செயலை ஆசிரியர்,

"நீடிய வேலை கலக்கும் நெடுமந் தரகிரிபோல
ஆடியவ் யானையும் மன்னற் காகுல மாக்கிய தன்றே"

என்று குறிக்கின்றார்.[68]

திருப்பாற்கடலைக் கலக்கிய நெடிய மந்தரகிரி என்னும் பழங்கதை உருக்காட்சி பல்லவ மன்னனால் அனுப்பப்பட்ட யானையின் ஆற்றலைச் சிறப்பிக்கிறது எனலாம். நகர்மக்கள் பட்ட அல்லலையும் இவ்வுருக்காட்சி நினைவில் எழச்செய்கிறது.

## வணிகப்பெண் இறைவரிடம் அடைக்கலம் வேண்டியமை - தேவர்கள், இரதி, மார்க்கண்டேயர் இறைவர்தம் அருளைப் பெற்றமை:

திருமருகல் என்ற தலத்தின்கண், மடம் ஒன்றில் தனது தமக்கை மகளுடன் ஒரு வணிகன் தங்கியிருந்தான். அவனை மணக்க இசைந்து தனது பெற்றோரை விட்டுப் பிரிந்து அவனுடன் வந்தவள் அப்பெண். எதிர்பாராத வகையில் அந்த வணிகனை அரவு தீண்டியது. அவன் மாண்டுகிடந்தான். தன்னை அழைத்துவந்த மாமன் மாண்டு கிடப்பதைக் கண்டு அந்தப்பெண் மிகவும் சோர்ந்தாள். இறைவர்தம் கோயில்வாயில் திசைநோக்கித் தொழுதழுதாள். அரவு தீண்டவும் தான் அவனைத் தீண்டாமல் அயர்ந்து புலம்பினாள்.[69]

"அடியாராம் இமையவர்தம் கூட்ட முய்ய
"அலைகடல்வாய் நஞ்சுண்ட அமுதே செங்கண்
"நெடியானும் நான்முகனும் காணாக் கோலம்
நீலவிட அரவணிந்த நிமலா வெந்து
பொடியான காமனுயிர் இரதி வேண்டப்
புரிந்தளிந்த புண்ணியனே பொங்கர்வாசக்
கடியாரும் மலர்ச்சோலை மருங்கு சூழுங்
கவின்மருகற் பெருமானே காவாய்"[70]

என்றும்,

"வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேற் சீறி
வருங்காலன் பெருங்கால வலயம் போலும்
செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரிய கோலம்
சிதைந்துருள உதைத்தருளுஞ் செய்யதாளா
இந்தவிடக் கொடுவேகம் நீங்கு மாறும்
யான்இடுக்கண் குழிநின்றும் ஏறு மாறும்
அந்திமதிக் குழவிவளர் செய்ய வேணி
அணிமருகற் பெருமானே அருளாய் என்றும்"[71]

சிவனருள் பற்றிச் சிந்தித்து அப்பெண் ஏங்கினாள் என்று ஆசிரியர் குறிக்கின்றார். அந்த வணிகப்பெண் இறைவர்தம் அருட்செயல்களை . அழுதுகொண்டே குறிப்பிடுகின்றாள். இமையவர்களைக் காத்திடும் பொருட்டு இறைவர் நஞ்சுண்டமை, இரதியின் வேண்டுகோளை ஏற்றுக் காமனுக்கு உயிர்தந்தமை, மார்க்கண்டேயனைக் காப்பாற்றுவதற்காகக் காலனை உதைத் தருளியமை ஆகிய செயல்களைச் செய்த தாங்கள் எனது மாமனுக்கும் உயிர்தரவேண்டும் என்பது அவள் வேண்டுகோள்.

வணிகப்பெண்ணின் புலம்பலில் குறிப்பிடப்பட்ட இறையருட் செயல்கள் பழங்கதை உருக்காட்சிகளாக உள்ளன. இறைவர்தம் அருட்செயல்களைக்குறிக்கும் பழங்கதைகள் ஆசிரியர்தம் நெஞ்சத்தைக் கவர்ந்துள்ளன எனலாம். நாடியவர்க்கு அருள்செய்பவர் சிவனார் என்ற கருத்தில் அழுத்தமான நம்பிக்கை உடையவர் ஆசிரியர் என்பதையும் இப்பழங்கதை உருக்காட்சிகள் தெரிவிக்கின்றன.

## சம்பந்தர் - கற்பகக்கன்று:

கற்பகம் என்பது வானுலகத்தில் உள்ள மரம் என்றும், பாற்கடலைக் கடைந்தபொழுது அதிலிருந்து வந்தது எனவும் குறிப்பிடுவர். வேண்டியதைக் கொடுக்கும் ஆற்றலுடைய இம்மரம் என்பர். பொதுவாக வரையாது கொடுக்கும் கொடைத்தன்மை, பெண்ணின் அழகு ஆகியனபற்றிச் சிறப்பித்துக்கூற இம்மரம் உருக்காட்சியாகப் படைக்கப்பெறும். சம்பந்தர்தம் தொண்டின் சிறப்பினைக் குறிப்பிடும் ஆர்வத்தினராய சேக்கிழார், "கழுமலப்பதிக் கவுணியர் கற்பக் கன்று" எனப்போற்றுகின்றார். "வேண்டுவார்க்கு வேண்டுவன நல்குவதாகிய கற்பகமரம் தற்பொழுது ஒருகன்று வடிவில் மண்ணுலகுக்கு வருகைபுரிந்து நடமாடுகிறது. இருந்த இடத்தில் இருந்துகொண்டு தன்னை நாடிவருபவர்க்கு உதவும் வானுலகக் கற்பகமரம் போல் அல்லாமல் தனது உதவியை நாடும் மக்களைத் தான் நாடிச்சென்று அவர்கட்கு உதவுகிறது சம்பந்தர் என்னும் கற்பகக்கன்று என்ற குறிப்பினைக் கொண்டுள்ளது சேக்கிழார்தம் இப்போற்றுரை எனலாம். சம்பந்தர் தம் இளமைப் பொலிவினைச் சிறப்பிப்பதாகவும் உள்ளது கற்பகக்கன்று என்னும் பழங்கதை உருக்காட்சி.

மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோர்தம் வேண்டுகோளை ஏற்று மதுரைக்கு வந்த சம்பந்தர், பாண்டிநாட்டில் சைவ சமயம் எழுச்சிபெற உதவினார். அவர் ஆற்றிய தொண்டின் நினைவில் ஆசிரியர் தோய்ந்திருந்தார் எனலாம். இவ்வகையில் கற்பகக்கன்று என்னும் பழங்கதை உருக்காட்சி புதுமையும் கிளர்ச்சி யூட்டும் ஆற்றலும் உடையதாக உள்ளது எனலாம்.

## கழற்சிங்கநாயனார் மனைவியார் - கற்பகப் பூங்கொம்பு:

கழற்சிங்கநாயனார் பல்லவர் குலத்து மன்னர் சிவப்பற்று மிக்கவர். சிவன் கோயில்கள் பலவற்றிற்கும் சென்று வணங்கிக்கொண்டு வந்த அவர் திருவாரூர்ப் பூங்கோயிலுக்கு வந்தார். அவரது பட்டத்தரசியும் உடன்வந்திருந்தார். அந்தப் பூங்கோயிலின் அழகையெல்லாம் ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டு வந்த அவ்வரசியார் தாமம் தொடுக்கும் மண்டபத்தின் அருகில் வந்தபொழுது விழுந்துகிடந்த புதுப்பூ ஒன்றை எடுத்து முகர்ந்தார். "இதுமலர் திருமுற்றத்துள் எடுத்து மோந்தனளாம்" என்று சினந்து செருத்துணை என்ற தொண்டர் அவ்வரசியார்தம் மூக்கினைக் கருவியால் பிடித்து வார்ந்தார். தோகைமயில் போல் அரசியார் மண்ணில் சோர்ந்து அயர்ந்து வீழ்ந்து புலம்பினார். அரசரும் அவண்வந்து அரசியின் அவலநிலையைக் கண்டார்.[72]

அரசியார் வீழ்ந்து கிடந்தமையைச் சேக்கிழார்,

"..... மலர்ந்த கற்பகத்தின் வாசப்
பைந்தளிர்ப்பூங் கொம்பொன்று பார்மிசை வீழ்ந்ததென்ன
நொந்தழிந் தரற்றுவாள்...."[73]

என விவரிக்கின்றார். இனிய சாயலைக்கொண்ட தோகைமயில் என்பதும், கற்பகத்தின் வாசப்பைந்தளிர்ப் பூங்கொம்பு என்பதும் உருக்காட்சிகளாக அமைந்து அரசியாரின் அழகை உணர்த்துகின்றன. இத்துணை அழகுமிக்க அரசியாருக்கு இத்தகைய அவலநிலை ஏற்படலாமா என்ற இரக்க உணர்வை எழுப்புகின்றவையாக இவ்வுருக்காட்சிகள் விளங்குகின்றன. மணம்மிக்கதாகிய கற்பகப் பூங்கொம்பு ஒன்று புதுமலரை எடுத்து மோந்தது என்று ஆசிரியர் குறிப்பது புதுமைநயம் சான்றதாக உள்ளது. அவலச்சுவையை மிகுவிப்பதாகவும் உள்ளது.

சிவனார்தம் அருட்செயல்களைக் குறிக்கும் புராணங்களை ஆர்வத்துடன் பயின்று அவற்றில் தோய்ந்தவர் சேக்கிழார் எனலாம். சுந்தரர் மொழியாகவும், வணிகப்பெண்ணின் புலம்பல் மொழியாகவும் வரும் பகுதிகள் இக்கருத்திற்குச் சான்றா கின்றன. காவிரியாற்றின் செலவு அவரது கருத்தைக் கவர்ந்துள்ளது என்பதை நான்முகன் உருக்காட்சி தெரிவிக்கிறது. பரவையார் அழகை நான்முகன் விதித்ததொரு மணிவிளக்கு என்பது தெய்வ உணர்வுடன் விளங்கும் பழங்கதை உருக்காட்சியாக உள்ளது. பெண்ணடியார் தம் கற்பு மாண்பு அவரைப் பெரிதும் கவர்ந்துள்ளது என்பதைத் திருமகள் உருக்காட்சியும் அருந்ததி உருக்காட்சியும் உணர்த்துகின்றன. சுந்தரர், பரவையார் ஆகியோரிடையே தோன்றும் காதல் உணர்வை மன்மதன், இரதி ஆகிய பழங்கதை உருக்காட்சிகளால் சேக்கிழார் குறிப்பது பொருத்தமுடன் உள்ளது. படைப்பின் தலைமைச்சுவையாக உள்ள பக்திச்சுவையுடன் இசைந்து செல்வதாகக் காதல் உணர்வுச் செய்திகளைப் படைப்பதில் கண்ணும் கருத்துமாக ஆசிரியர் இருக்கிறார் என்பதை ஆய்வினால் அறியமுடிகிறது. பெரிய புராணப் படைப்பின் தனிச்சிறப்புக்கு உதவும் வகையில் பழங்கதை உருக்காட்சிகள் அமைந்துள்ளமை காணப்பட்டது.

## அடைமொழிகள்

பொருள்களின் இயல்பு, நிலை, உருவஅமைப்பு முதலியவற்றைத் தெற்றெனப் புலப்படுத்தும் சொல் அல்லது தொடர் அடைமொழியாகும் எனச் சுருக்கமாகக் குறிப்பிடலாம். எல்லா மொழிகட்கும் இவ்அடைமொழி ஆட்சி உண்டு. ஒட்டு நிலையில் சொல்லாக்கம் தொடராக்கம் நிகழ்த்தும் தமிழ்மொழியில் இவ்வியல்பினைச் சிறப்பாகக் காணலாம். தமிழ்மொழியின் இந்த இயல்பினை நன்குணர்ந்து சேக்கிழார் உருக்காட்சியைப் பயன் படுத்தியுள்ளார். அவர் ஆளும் அடைமொழிகள் சொல்லோ வியங்களாக அமைந்துள்ளன. ஆற்றல் மிக்க ஓவியன் சில கோ-டுகளை வரைந்து பொருள்களின் வடிவைப் பார்ப்பவர் நினைவில் தோன்றுமாறு செய்துவிடுவது போன்று அடை மொழிகளை அமைப்பதன் வாயிலாகப் பொருள்களைப் படிப்பவர் மனத்தில் தோன்றுமாறு செய்யும் திறனுடையவராகச் சேக்கிழார் விளங்குகிறார். பெரியபுராணப் படைப்பின் வளர்ச்சிக் கூறுகளுள்

ஒன்றாக அடைமொழி உத்தி விளங்குகிறது. சிறிய, பெரிய தொடர்களாக அடை மொழிகள் ஆளப்படுகின்றன.

**இறைவர்:**

"மின்னெறித் தனைய வேணி விகிர்தன்" என்ற தொடரில் விகிர்தன் என்ற பெயருக்கு "மின்னெறித்தனைய" என்ற தொடரும், வேணி என்ற பெயர்ச்சொல்லும் அடையாக வருகின்றன. மின்னல்களை நெறித்துப் பின்னிவைத்தாற்போல் இறைவர்தம் சடைமுடி உள்ளது எனச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். காட்சிப்புலனுக்குரிய மின்னலைக் கைகளினால் நெறித்துக் கட்டுவதற்கேற்றாற்போல் விளங்கும் பருப்பொருளாகக் குறிப்பிடுவது புதுமைநயம் ஊட்டுகிறது. அடைமொழி இறைவர்தம் ஒளிமிக்க சடைமுடியை நினைக்கச் செய்கிறது.

**வேடர்:**

"பயில் வடுப்பொலிந்த யாக்கைவேடர்" என்ற தொடராட்சி கொண்டு பொத்தப்பி நாட்டு வேடுவர்தம் வீரத் தோற்றத்தைப் படிப்பவர் மனக்கண்முன் தோன்றச் செய்கிறார் ஆசிரியர். "பயில்வடுப் பொலிந்த யாக்கை" என்ற அடையொழியில் யாக்கை என்ற பெயர் முன் வினையடை, பெயரடை, வினையடை என்பன இடம்பெற்றுள்ளன. "கருங்கதிர் விரிக்கும் மேனி" என்ற அடைமொழியுடன் விளங்கும் தொடரில் திண்ணனார்தம் கரிய திருமேனியிலிருந்து ஒளிக்கதிர்கள் விரிவதைப் புதுமைநயத்துடன் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**நாயனார்:**

நாயனார்தம் தோற்றப்பொலிவை நினைந்து போற்றுவதில் சேக்கிழார் கொண்டுள்ள ஆர்வத்தின் சான்றாக இதனைக் கருதலாம்.

எப்பொழுதும் இடையறாது இறையுணர்வுடனிருக்கும் முருகநாயனார் "சுருதி மலரும் திருவாயினை"[1] உடையவராய் விளங்கினார் எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். சேரமான்பெருமாள் நாயனார்தம் கொடை திறத்தைப் "பருவமழைச் செங்கை" என்ற தொடர் சிறப்பிக்கின்றது.[2]

"சிலைத்தடக்கைக் கண்ணப்பர்" என்ற தொடர் கண்ணப்பநாயனாரை மனக்கண்முன் நிறுத்துகிறது.[3] "ஞான வட்டில் வண்கையான்"[4] என்பது ஞானசம்பந்தரையும் "உழவாரப்படையாளி"[5] என்பது நாவுக்கரசையும் நினைக்குமாறு செய்கின்றன. கண்ணப்பநாயனார், ஞானசம்பந்தர், நாவரசர் ஆகிய நாயனார்தம் தோற்றம் சிலைகளிலும், ஓவியங்களிலும் சேக்கிழார் குறிக்கும் இச்சொல்லோவியப் பாங்கில் உள்ளமை நினைத்தற்குரியது. நாயனார்களிடம் ஆசிரியர் கொண்டுள்ள அன்பினை இத்தொடர்கள் காட்டுகின்றன.

## அமணர்:

சமணசமயத்தை வெறுக்கும் இயல்பினராகச் சேக்கிழார் விளங்குவதை, "கலகஞ்செய் அமண்" "மாபாவிக் கடையமணர்", "ஊத்தைவாய்ப் பறிதலையர்", "மாசுமேனி நீசர்", "சில்லிவாயர்", "கலதிவாய் அமணர்" என்ற தொடர்களால் அறியமுடிகிறது.[6] இத்தொடர்களில் ஆளப்பட்டுள்ள அடைமொழிகள் சமணர்பால் ஆசிரியர் கொண்டுள்ள வெறுப்புணர்வைக் காட்டுவனவாக உள்ளன. சேக்கிழார்தம் பார்வையில் காணப்பெறும் அமணரின் தோற்றத்தை இவ்வடை மொழிகள் காட்சிப்படுத்துகின்றன.

## மகளிர் சிறார்:

புலைமகளிர்தம் கூந்தலைக் காட்சிப்படுத்தும் வகையில், "நெறிகுழல் புன்புலைமகளிர்" என்ற தொடரும்,[7] பரத்தியர்தம் விழியைக் காட்சிப்படுத்துவதாக, "சேயநீள் விழிப் பரத்தியர்" "வடுவகிர்க்கண் மங்கையர்" என்ற தொடர்களும் ஆளப்பட்டுள்ளன.[8] வேட்டுவச் சிறாரைச் சேக்கிழார், "காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார்"[9] என்று நீண்ட அடை மொழியுடன் குறிப்பது சொல்லோவியமாக உள்ளது. கரியநிறத்துடன் காட்சியளிக்கும் வேட்டுவச் சிறுவர்கள் இரும்பினால் செய்யப்பெற்ற காப்புகளைத் தம் கைகளில் அணிந்து கொண்டிருப்பதைக் காட்சிப்படுத்துகிறது நீண்ட அடை மொழியுடன் கூடிய இத்தொடர் எனலாம்.

## விலங்கு, பறவை:

சிலவாகிய சொற்களை அடுத்தடுத்து வைத்து, அடைமொழியாகப் படைத்து உருக்காட்சியைப் படைக்கும் திறனைச் சேக்கிழாரிடம் காணமுடிகிறது. விலங்கு பறவை ஆகியவற்றைச் சிறப்பிக்கும் வகையில் இத்தகைய அடைமொழிகள் ஆளப்பட்டுள்ளன. விலங்கு, பறவை ஆகியவற்றின் வடிவத்தை இவ்வடைமொழிகள் ஓவியப்படுத்திக் காட்டுகின்றன.

படித்து முடித்த அளவில் யானைக் கன்றுகளின் தோற்றம் மனத்தில் உருவாகுமாறு "துடிதுடியன மடி செவியன துறுகயமுனி" என்ற தொடர் ஆளப்பட்டுள்ளது. "எரிகொடுவிழி இடிகுரல் நீள்பன்றி", "துங்கநீள் மருப்பின் மேதி", "கூருகிர் மெல்லடியளகின் குறும்பார்ப்பு", "வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்", "செங்குடுமி வாரணம்", "கொடுங்செவி ஞமலி", "வைவாளெயிற்று முதலை", "பெருவாய் முதலை" என்ற தொடர்களிலுள்ள அடைமொழிகள் முறையே காட்டுப்பன்றி, மேதி, காட்டுக்கோழி, சேவல், நாய்க்குட்டி, நாய், முதலை ஆகியவற்றைக் காட்சிப்படுத்துகின்றன.[10] விலங்குகள், பறவைகள் ஆகியவற்றைச் சேக்கிழார் கூர்ந்து நோக்கியுள்ள திறனை இவை தெரிவிக்கின்றன. நாய்க்குட்டி துள்ளிக் குதிப்பதைத் "துள்ளுபறழ்" என்ற தொடர் மனக்கண்முன் கொணர்கிறது. நாய்க்குட்டி துள்ளி ஓடும் காட்சியைக் கண்டு சுவைத்தவர் ஆசிரியர் எனலாம்.

## மலர், மரம்:

சிவப்பு நிறத்துடன் விளங்கும் காந்தள் மலரை "எரிஅவிழ் காந்தள்மென்பூ" [11] என்கிறார் சேக்கிழார். நெருப்பு நிறத்தின் காந்தள்மலர் விளங்குவதைப் புதுமையுடன் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். நிறைந்த பாளைகளுடனும், அவற்றிலிருந்து பரவும் மணத்துடனும், அதிக எண்ணிக்கையில் பசுமையான காய்களைப் பெற்றுள்ள, பெரிய குலைகளுடனும், காட்சியளிக்கும் தென்னைமரங்களை, "பாளைவிரி மணங்கமழும் பைங்காய் வன்குலைத் தெங்கு"[12] எனச் சேக்கிழார் ஓவியமாகக் காட்டுகின்றார். "முள்ளுடைப் புறவெள்ளிதழ் கேதகைமுகிழ்" எனச் சேக்கிழார் தாழையின் முகையை அடைமொழி கொண்டு ஓவியமாகக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

### தோணி இரும்பு:

குளிர்ப்பருவத்தில் தீக்காய்வதற்காகப் பயன் படுத்தப்படும் இரும்பினால் செய்யப்பட்ட கலத்தை, "எரிஉமிழ் பேழ்வாய்த் தோணி இரும்பு" [13] எனச் சேக்கிழார் காட்சிப் படுத்துகின்றார். இக்கலத்தின் 'அகன்ற பரப்பினையுடைய வாயினின்றும் நெருப்பு அதிக அளவில் வெளிப்பட்டுவரும் காட்சியை, "எரிஉமிழ் பேழ்வாய்" என்ற அடைமொழி பொருத்த முறக் கண்முன் கொணர்கிறது.

பெரியபுராணப் படைப்பில் ஆளப்பட்டுள்ள உருக் காட்சிகளில் அடைமொழிகள் தக்கதொரு பங்கு பெற்றுள்ளமை காணத்தக்கது. அடைமொழிகளால் படைக்கப்பெறும் உருக் காட்சிகள் படைப்பிற்கு முருகியற்சுவையைத் தருகின்றன.

## முரணணி

பெரியபுராணத்தில் முரணணியைப் பயன் படுத்துவதன் வாயிலாகச் சேக்கிழார் உருக்காட்சியைப் படைக்கின்றார். உடன்பாடு, எதிர்மறை என்ற பொருள்களில் வரும் வினைச்சொற்களை அடுத்தடுத்துக் குறிப்பிடுதல், வண்ண வேறுபாட்டுடன் விளங்கும் உடல் உறுப்புக்களையும் பொருள்களையும் குறித்தல், வேறுபட்டு விளங்கும் கோள்களைக் குறித்தல், தோற்றம் இயல்பு ஆகியவற்றால் வேறுபட்டுள்ள விலங்குகளைச் சுட்டுதல், வேறுபட்ட உலோகங்களையும் அணிதற்குரிய பொருள்களையும் குறிப்பிடுதல் என்ற முறைகளைக் கொண்டு முரணணியைப் படைத்து அதன் வாயிலாக உருக்காட்சியைத் தோற்றுவிக்கும் திறனைச் சேக்கிழாரிடம் காணமுடிகிறது. நயத்துடன் கருத்து விளக்கம் செய்தற்கு இவ்வுருக்காட்சி உத்தியைச் சேக்கிழார் ஆள்கிறார்.

### வினைச்சொற்கள்:

"மூப்பு வந்து தளர்வொடு சாய்ந்தும் அன்பு தம்பிரான் திறத்துச் சாயார்" [1] என்ற தொடரில் திருநீலகண்ட நாயனார்தம் இறையுணர்வின் மாண்பைச் சிறப்பிக்கின்றார் சேக்கிழார்.

இளையான்குடிமாற நாயனார் சிவனடியார்கட்கு நாள்தோறும் அமுதளிக்கும் திருத்தொண்டினை ஆற்றிவந்தார். செல்வம் நிறைந்திருந்த காலத்தில் மட்டுமன்றி வறுமை வந்துற்ற காலத்திலும் இத்திருப்பணியில் முழுமனத்துடன் ஈடுபாடு கொண்டிருந்தார். அவரது இத்தகைய தொண்டின் சிறப்பைச் சேக்கிழார், "வளங்சுருக்கவும் மனஞ்சுருங்குதலின்றி.... திருப் பணிக்கண் முதிர்ந்த கொள்கையினார்" எனக் குறிப்பிடுகின்றார்.[2] இயக்கவினைச் சொற்கள் (Verbs of movement) சாய்தல், சாய்தலின்மை, சுருங்குதல், சுருங்குதலின்மை என்பன ஆளப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

## வண்ண வேறுபாடுகள்:

பரவையாரின் வாய், பற்கள் ஆகியவற்றைச் சிறப்பிக்கும் சேக்கிழார், "செவ்வாய் வெண்நகைக் கொடி" என்கிறார்.[3] கரிய நிறமுள்ள தத்தை திண்ணனாரைப் பெற்றெடுத்த செய்தியை, "பான்மதி உவரி ஈன்றாலென" எனக் குறிப்பிடுகின்றார்.[4] "திருநாவுக்கரசு நாயனார்நம் கனவில் இறைவர் 'பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப்பொலிவுடன்' காட்சி தந்தார்" என்று குறிப்பிடப்படுகின்றது.[5] கயிலை வெற்பின் மேல் சிவபெருமான் உமையம்மையுடன் இருக்கும் காட்சியைச் சிறப்பிக்கும் வகையில், "பொன்மலைக் கொடியுடன் விளங்கும் தெள்ளுபேரொளிப் பவளவெற்பு" என்று சேக்கிழார் குறிப்பது நயம்சான்ற உருக்காட்சியாக உள்ளது.[6] புல்லின்மேல் பனித்துளி படிந்திருக்கும் காட்சி, "பளிக்குமணி மரகத வல்லியிற் கோத்த பான்மையில் உள்ளது" என்கிறார் ஆசிரியர்.[7] "காஞ்சிநகரத்து வளமனைகளின் நாசிகையின் மருங்குகளில் தங்கும் கருமுகில்கள் செம்முகில்களாகத் தோன்றுகின்றன" என்று சேக்கிழார் வருணிக்கிறார். "செங்குங்கும நீர்த்துவலைகளினால் அந்நாசிகைகள் தோய்ந்திருப்பது இந்த வண்ண வேறுபாட்டிற்குக் காரணம்". எனவும்[8] அவர் குறிப்பிடுகின்றார்.

ஆசிரியத்தன்மை வளம் மேன்மேலும் ஏனாதிநாத நாயனாருக்குப் பெருகுவதைக் கண்டு பொறாமை கொண்ட அதிசூரன் என்பான் அவர்மாட்டுப் பொருத்தமில்லாத இகல் புரிந்தான். இச்செய்தியைக் குறிப்பிடும் சேக்கிழார், "கதிரோன் எழ மழுங்கிக்கால்சாயும் காலைமதிபோல் அழிந்து, பொறாத அவன்

போர் விளைப்பதற்கு எண்ணினான்" என்கிறார்.[9] கதிரோன் எழுவதால் இரவெல்லாம் ஒளிசெய்து கொண்டிருந்த மதியின் ஒளி மழுங்குவது இயல்பு. காலைநேரத்து மதியினைப்போல் அதிசூரன் காணப்பட்டான் என்பது கருத்து. ஏனாதிநாதரின் புகழ் மேலோங்கியது எனவும் அதிசூரன் புகழ் தாழ்நிலையுற்றது எனவும் ஆசிரியர் கோள்களின் இயல்பு முரணைச் சுட்டுவதன் வாயிலாக விளக்குகின்றார். கதிரவன், மதி என்ற கோள்களின் முரண் உருக்காட்சியாக ஆளப்பட்டுள்ளது.

## விலங்குகள்:

ஏனாதிநாத நாயனாரைக் குறிக்க வெங்கண்புலியையும் அதிசூரனைக் குறிக்க பைங்கண் குறுநரியையும் சேக்கிழார் உருக்காட்சிகளாக ஆள்கின்றார். ஆற்றல்மிக்க ஏனாதிநாதநாயனார் புலி உருக்காட்சியாலும், வஞ்சனைமிக்க அதிசூரன் நரி உருக்காட்சியாலும், குறிக்கப்படுவது பொருத்தமுற அமைந்துள்ளது. முரண்பட்ட தன்மையுள்ள இவ்விலங்குகளைச் சுட்டுவதன் வாயிலாக நாயனார் அதிசூரன் ஆகியோர்தம் பண்புகள் வெளிப்படுத்தப்படுகின்றன. "வெங்கட்புலி கிடந்த வெம்முழையில் சென்றழைக்கும் பைங்கட் குறுநரி போல் வான்" என்பது சேக்கிழார் பாடல் வரிகள்.[10]

## நன்மை, தீமை:

அரவு அருமையான ஒளிதரும் மணியைத் தருகிறது. அதுவே நஞ்சையும் அளிக்கிறது. நன்மை, தீமை இரண்டும் தரவல்லதாக அது விளங்குகிறது. சண்டேசுரர் என்ற சிறந்த நாயனாரைப் பெற்றளித்த எச்சதத்தன் என்பான், அந்த நாயனாரின் சிவபூசைக்கு ஊறும் விளைத்தான். "அருமை மணியும் அளித்து அதுவே நஞ்சும் அளிக்கும் அரவுபோல் எச்சதத்தன் விளங்கினான் என்று சேக்கிழார் அரவினிடத்தில் காணப்படும் முரண்பட்ட தன்மையைச் சுட்டிக்காட்டி முரணணியினைப் படைக்கின்றார்.[11]

## காலஅளவு:

காலஅளவின் பேரெல்லை ஊழியாகவும் சிற்றெல்லை கணமாகவும் குறிக்கப்படும். சுந்தரமூர்த்திநாயனாரும் சங்கிலியாரும்

இறையருளால் மணம்புரிந்து வாழ்ந்தனர். அவர்க்கிடையே தோன்றி மிகும் புலவியின் கண்ணும் புணர்ச்சியின் கண்ணும் முறையே ஒருகணம் ஊழிபோலவும் ஊழி ஒரு கணம் போலவும் இருந்ததாக ஆசிரியர் இயம்புகின்றார்.[12] இக்கால அளவுகளில் காணப்படும் நீட்சி குறுக்கம் என்ற முரண் மணம்புணர்ந்து கொண்டோர்தம் மனநிலையைத் தெரிவிக்கும் உருக்காட்சியாக உள்ளது.

## உலோகம்:

இறைவர்தம் திருநோக்கின் விளைவாகத் திண்ணனார்தம் யாக்கைதன் பரிசும், இருவினையும், மும்மலமும் அற்றுப்போயின. அவருடைய இந்த நிலையைச் சேக்கிழார், வேதகத்தினால் இரும்பு பொன்னாதல் மாறியது போன்று திண்ணனார் மாறுபாடுற்றார் எனக் குறிப்பிடுகின்றார்.[13] இரும்பு, பொன் என்ற உலோகங்களின் தன்மை முரண் உருக்காட்சியாக ஆளப்படுகின்றது.

## நஞ்சுண்ட அமுது:

திருவஞ்சைக் களத்து இறைவரைச் சேக்கிழார், "நஞ்சுண்ட அமுது" எனக் குறிப்பிடுகிறார். நஞ்சும், அமுதும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை. நஞ்சுண்டவர் மாய்வார். அமுதுண்டவர் வாழ்வார். தமக்குள் முரண்பட்டு விளங்கும் இவ்விரண்டையும் ஒரு தொடரில் அமைத்து, இவற்றிற்கிடையே "உண்ட" எனும் ஒரு வினைச்சொல்லை இணைத்துப் புதுமை நயம்சான்ற உருக்காட்சியை எழுப்புகிறார் சேக்கிழார். "நஞ்சுண்ட அமுது" என்ற தொடரில் இரண்டு பெயர்ச்சொற்களும், ஒரு பெயரெச்சச் சொல்லும் ஆளப்பட்டுள்ளன. இம்மூன்று சொற்களாலான இத்தொடர் சிவபெருமானின் பேரருள் திறத்தினைக் காட்டும் ஒரு பழங்கதையைத் தன்மாட்டுக் கொண்டுள்ளது. நூறு சொற்களிலாவது கூறப்படவேண்டிய அப்பழங்கதையைச் சேக்கிழார் ஒரு சிறு தொடரில் சுருக்கமாகக் குறிப்பது முருகியற்சுவை பயக்கிறது.

'மேருமந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்ற அரவினை நாணாகவும் கொண்டு, ஒருபக்கத்தில் தேவர்களும், மற்றொரு பக்கத்தில் அசுரர்களும் நின்று திருப்பாற் கடலைக்

கடைந்தபொழுது பல்வேறு உயர்ந்த பொருள்கள் தோன்றின. அனைவருக்கும் வாழ்வைத்தரும் அமுதம் வந்தது. பின்னர் அனை-வரையும் மாய்க்கும் நஞ்சு வந்தது. தேவர்களும் அசுரர்களும் அதனைக்கண்டு அச்சமுற்று ஓடினர். அப்பொழுது சிவனார் அக்கொடிய நஞ்சினைத் தாம் உண்டு தேவர்கள், அசுரர்கள் ஆகியோரைக் காத்தருளினார்" என்பது பழங்கதை. சைவநெறியினர் சிவனாரின் இவ்வருட்செயலைப் பெரிதும் போற்றுவர். சேக்கிழார் இப்பழங்கதை குறிக்கும் சிவனார் அருட்பண்பை நினைத்தவண்ணம் இருந்திருக்கவேண்டும். நஞ்சினை உண்ட சிவனாரை அமுது என்று குறிப்பிடுகிறார். அமுதாகிய சிவனார் நஞ்சினை உண்டார் எனக்குறிப்பிடும் வகையில் "நஞ்சுண்ட அமுது" என்ற தொடரை வியப்புச்சுவையுடன் கூடியதாக அமைக்கிறார். பெரியபுராணப் படைப்பில் பெருமிழலைக் குறும்பநாயனார் புராணத்தில் கவிக்கூற்றாக உள்ளது இத்தொடர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணத்தில் வணிகப்பெண்ணின் கூற்றாக இத்தொடரைச் சேக்கிழார் குறிப்புப்பொருளுடன் ஆள்கிறார்.

"அடியாராம் இமையவர்தம் கூட்டமுய்ய
அலைகடல்வாய் நஞ்சுண்ட அமுதே!"

என்பது வணிகப்பெண்ணின் அவலச்சுவை கலந்த விளித்தொடராகும். தனது மாமன், அரவு தீண்டி மாண்டு கிடந்தமையைக் கண்டு மனம் வருந்திய வணிகப்பெண் திருமகள் இறைவரை இவ்வாறு விளிக்கிறாள். அரவினது நஞ்சினை உண்டு தேவர்களைக் காப்பாற்ற வரவேண்டும் என்பது, "நஞ்சுண்ட அமுதே" என்ற விளியில் பொதிந்துள்ள குறிப்பாகும்.

நஞ்சு, அமுது என்ற இருசொற்களையும் அடுத்தடுத்து அமைத்து முரணணியைத் தோற்றுவிப்பதன் வாயிலாக உருக்காட்சியை ஆள்கிறார் சேக்கிழார்.[14] சிவனார்தம் பேரருள் திறத்தில் ஆசிரியருக்குள்ள ஈடுபாட்டை இவ்அடைமொழி விளைவிக்கும் உருக்காட்சி தெரிவிக்கிறது.

## சுருள் நீக்கி மலர்வித்தல்:

திருநாவுக்கரசர் கலை பயிலத்தொடங்கிய செய்தியைக் குறிப்பிடும் சேக்கிழார் கலைக்கோட்பாடு குறித்து ஒரு விளக்கம்

தருகிறார். அரும்பு, மலர் என்பனவற்றை உருக்காட்சியாகப் படைத்துக் கலைக்கு விளக்கம் தருகிறார்.

இளமைப்பருவத்தில் மனிதமனம் அரும்பினைப்போல் முகிழ்த்த சுருள் உடையதாக ஒடுக்கமுற்று இருக்கிறது. தொடர்ந்து மேற்கொள்ளப்பெறும் கலைப்பயிற்சியானது ஒடுங்கி இருக்கும் மனித மனத்திற்கு அறிவுத்தெளிவை ஊட்டுகிறது. சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம், வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் என்றமொழி கலைப்பயிற்சியில் இன்றியமை யாமையைக் குறிப்பது காணத்தக்கது. தெளிவையும் விளக்கத்தையும் தரும் கலைப்பயிற்சி மனத்தின் இருள்நிலையை நீக்கிவிடுகிறது. அரும்பு மலர்வது போன்று மனிதமனம் மலர்ச்சி பெறுகிறது.

பயிற்சி பெறுவதற்குமுன் அரும்பு நிலையில் மாணவர்களின் அறிவுநிலை உள்ளது. தொடர்ந்து பெற்ற பயிற்சி அறிவின் அவ் அரும்பு நிலையின் ஒடுக்கத்தை நீக்கி மலர்நிலையான அறிவு விளக்கத்தைக் கொடுக்கிறது."கலைபயில் தெளிவு" என்பது இவண் நினைக்கத்தக்கது.

இதழ்கள் அனைத்தும் குவிந்தும், மணம் பரப்பாமலும், இருட்செறிவுற்றும் இருக்கும் அரும்பு நிலையையும், அவ்விதழ்கள் விரிந்தும், மணம் பரப்பியும், ஒளிக்கூட்டியும் திகழும் மலர்நிலையையும் அடுத்தடுத்து அமைப்பதன் வாயிலாக ஒரு முரணை எழுப்பிப் படிப்பவர் மனத்தை ஈர்த்து, கலைபற்றியதொரு விளக்கத்தைப் படைத்தளிக்கும் சேக்கிழார் புலமைத்திறம் உணர்தற்குரியது.

> "பொருள்நீத்தம் கொளவீசிப் புலன்கொளுவ மனம் முகிழ்த்த
> சுருள்நீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்குவித்தார்"

என்பது சேக்கிழார் மொழி.[15]

## சிவனார் திருவடி - கறுத்தல், சிவத்தல்:

திருக்கடவூரில் வாழ்ந்த மார்க்கண்டேயர் என்னும் அந்தணச் சிறுவர் சிவனார்பால் பேரன்பு கொண்டிருந்தார். பதினாறாண்டுதான் அவருக்கு உலகில் வாழ்வு என்பது சிவனார் அவரது தந்தைக்குக் குறிப்பிட்ட ஒன்று. பதினாறாண்டு எய்திய மார்க்கண்டேயரின் உயிரை எடுத்துச் செல்ல காலன் வந்தான்.

மார்க்கண்டேயர் இறைவரை விட்டுப் பிரிய அஞ்சித் தாம் வழிபடும் இலிங்கத் திருமேனியைக் கட்டிப் பிடித்துக்கொண்டார். கடமையு ணர்வுடன் காலன் தனது பாசக்கயிற்றை அவர்மீது வீசுகிறான். அந்தப் பாசக்கயிறு அவரையும் அவர் தழுவிக்கொண்டிருந்த இலிங்கத் திருமேனியையும் சுற்றிக்கொள்கிறது. சிவனார் சீற்றத்துடன் இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டுக் காலனைத் தமது திருவடியால் உதைத்தருளினார். மார்க்கண்டேயரைக் காத்தருளினார். இச்செயலால் சிவனார் திருவடி கறுத்துவிட்டது. இவ்வரலாற்றைச் சுந்தரர், "காலனாருயிர் மாளக் கறுத்தன" எனவும், "இவ்வாறு கறுத்துவிட் சிவனார் திருவடி உமையம்மை தனது செங்கையால் வருடியதன் காரணமாகச் சிவந்துவிட்டது" எனவும், மொழிவதாகச் சேக்கிழார் குறிப்பது முரண் அணியாக அமைந்து, படிப்பவர் மனத்துள் சிவனாரின் திருவடித்தோற்றத்தைப் படைக்கும் உருக்காட்சியாகவும் உள்ளது.[16]

புதுமை நயம் தரும் பாங்கில், முரணணியினைத் தமது படைப்பில் உருக்காட்சியாகச் சேக்கிழார் ஆள்வது அவரது படைப்பாற்றலின் ஆளுமையைக் குறிக்கின்றது.

## முடிவுரை

சேக்கிழார்தம் படைப்பாற்றலின் ஆளுமை, ஆட்பண்பு ஆகியவற்றைக் கண்டறியும் நோக்குடன், பெரியபுராணத்தில் உருக்காட்சி என்னும் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. பகுப்பாய்வு முறையை அணுகுமுறையாகக்கொண்டு இவ் ஆய்வு செய்யப்பெற்றது. இலக்கியப் படைப்பின்கண் உயிர் எனக் கருதப்பெறும் உணர்த்துமுறை உத்தியாகிய உருக்காட்சி சேக்கிழாரால் திறம்பட ஆளப்பெற்றுள்ளமையைக் கண்டறிதற்கு இவ்ஆய்வு துணைபுரிந்தது. பெரியபுராணத்தில் ஆளப்பெற்றுள்ள உருக்காட்சியின் அடிப்படைத்தன்மை, அதன் பிழிவின் ஒருங்கிணைந்ததும் ஒருமித்ததுமான கருத்து, அதன் குறிப்பிடத்தக்க பண்பு ஆகியவற்றை உணர்ந்து கொள்ளுவதற்கும் இவ்ஆய்வு முயற்சி உதவியது. உருக்காட்சிக் கோட்பாட்டினைக் குறித்துச் செய்யப்பெற்ற இவ்ஆய்வு சேக்கிழார்தம் கூர்த்த புலனுணர்வுத் திறன், இயற்கையியல் ஈடுபாடு, உணர்ச்சியியல்பு, விருப்பு, வெறுப்பு, நம்பிக்கை, கற்பனையின் மனவியல் ஆகியவற்றைக் கண்டுணர்தற்கு வாயிலாக அமைந்தது.

பெரியபுராணத்தில் காணப்பெறும் உருக்காட்சியியல்பு வாய்ந்த உவமைகள், உருவகங்கள், விவரிப்புகள், வருணனைகள். உள்ளுறை உவமங்கள், அடைமொழிகள், முரணணி என்பன ஆய்வின்கண் எடுத்துக்கொள்ளப்பட்டன. இயற்கை, அன்றாடவாழ்க்கை என்ற இருபெரும் பிரிவுகளில் உருக்காட்சிகள் விளங்கியமை கண்டுணரப்பட்டது. இவ்வுருக்காட்சிகள் ஐம்புலனுக்கும் மனவுணர்வுக்கும் உரியவனாக இருந்தமை கண்டறியப்பெற்று, உருக்காட்சி பற்றிய ஆய்வு முயற்சி இவ்வகைகளின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டது.

காட்சிப்புல உருக்காட்சி சேக்கிழார்தம் கூர்த்த புலனுணர்வுத் திறனையும், இயற்கையியல் ஈடுபாட்டையும் காட்டுகிறது. அனைத்தையும் தழுவியதாக உள்ள இவ்வுருக்காட்சி ஆசிரியர்தம் பல்துறையறிவைத் தெரிவிக்கிறது. வாழ்க்கையின் பெரும்பகுதி காட்சிப்புலன் என்ற வாயிலின் வழியாக அவரிடம் வந்து சேர்ந்துள்ளமையை ஆய்வின்கண் அறியமுடிந்தது. ஞாயிறு, நிலவு உருக்காட்சிகள் சம்பந்தர், நாவரசர், சுந்தரர் ஆகிய நாயன்மார்களைப் போற்றுவதில் சேக்கிழார் ஆர்வம் உடையராயிருப்பதைத் தெரிவிக்கின்றன. தொண்டர்சீர் பரவுதல் என்ற நோக்கின்னை மையக்கருத்தாகக் கொண்டு பெரியபுராணத்தை ஆசிரியர் படைத்துள்ளமையை இவ்வுருக்காட்சி ஆய்வு புலப்படுத்தியது. தற்குறிப்பேற்றமாக ஞாயிறு உருக்காட்சி ஆளப்பட்டுள்ளமைதொண்டர்தம் பெருமையைச் சிறப்பித்துக் கூறும் ஆர்வம் மிக்கவர் ஆசிரியர் என்பதைக் காட்டுகிறது. இவ்வகையில் அவரது கற்பனையின் மனவியலை அறியமுடிந்தது. சம்பந்தரைச் சேம உதயப்பரிதி, பரிதிஆயிரகோடி என்று ஞாயிறு உருக்காட்சியினால் சேக்கிழார் சிறப்பிக்கும் பகுதிகளும், திண்ணனார் திருத் தொண்டிற்குக் கதிரவன் துணைநிற்கிறான் என்று தற்குறிப் பேற்றமாக வரும் பகுதியும் குறிப்பிடத்தக்கவை. மகளிர்தம் முகம், சிரிப்பு ஆகியவற்றை மரபுநிலையில் சிறப்பிக்கும் உருக்காட்சியாகச் சேக்கிழார் நிலவு உருக்காட்சியை ஆள்கின்றார். எனினும் சைவசமயத்தின் காவலர் எனத் தம்மால்கருதப்பெறும் சம்பந்தரை மண்ணில் வளர்மதிக்கொழுந்து, கலைவளர்மதி என்று சிறப்பித்துக்கூறும் பகுதிகள் சம்பந்தர்தம் தலைமைச் சிறப்பைப் போற்றும் ஆர்வத்தினராய் ஆசிரியர் உள்ளமையைத் தெரிவிக்கின்றன. இவ்வகையில் நிலவு உருக்காட்சி புதுமையும்,

முருகியற்சுவையும் கிளர்ச்சியூட்டும் ஆற்றலும் உடையதாக விளங்குவது காணப்பட்டது. நாயனார்தம் பத்தியின் திறனை மழை, வெள்ளம், ஆறு, கடல் உருக்காட்சிகள் உணர்த்துகின்றமையை ஆய்வினால் அறியமுடிந்தது. வெள்ளத்தின் போக்கு, அதன்கண் மூழ்கித் திளைப்பவர்தம் செயல் ஆகியவற்றை உருக்காட்சிகளாகப் படைப்பது ஆசிரியர் கற்பனையின் மனவியல் பத்தியுணர்வின் பாற்பட்டுள்ளமையைக் காட்டுகிறது. பள்ளமடை அன்பு என்ற தொடரில் உள்ள பள்ளமடை என்ற உருக்காட்சி உழவுத்துறையின் கூறுகளை நன்கறிந்தவர் சேக்கிழார் என்பதைக் காட்டுகிறது. இவ்வகையில் அவரது வாழ்வுக்களத்தின் தாக்கத்தை உருக்காட்சியில் காணமுடிந்தது. 'கருச்சுற்று' என்பது ... ஆளப்பட்டுள்ள சுழற்சி என்ற உருக்காட்சி பிறவிபற்றி ஆசிரியர் கொண்டுள்ள கருத்தைக் காட்டுகிறது. வித்து, பயிர், ஆகியவற்றை உருக்காட்சிகளாகப் படைத்து நாயனார்தம் பக்தி, ஆன்மவியல் வளர்ச்சி ஆகியவற்றை விளக்கும் ஆசிரியர் திறன் அவரது வாழ்வுக்களமாகிய உழவுத்துறையை நினைக்கச் செய்கின்றது. மலர்களின் வண்ணமும், மணமும் ஆசிரியர் மனத்தைக் கவர்ந்துள்ளமை கண்டறியப்பட்டது. தாமரைமலரை மிகவும் விரும்புபவர் சேக்கிழார் என்பதை மலர் உருக்காட்சி தெரிவிக்கின்றது. தொண்டர்தம் தோற்றப்பொலிவை எண்ணிப்போற்றும் பண்பினர் சேக்கிழார் என்பதை அவர் சம்பந்தர்தம் குழந்தைப் பருவத்தை மலர் உருக்காட்சியால் காட்சிப்படுத்தும் பகுதிகளிலிருந்து அறியமுடிந்தது. கல்வி, கலை, நிலையாமை என்பன பற்றி மலர் உருக்காட்சி வாயிலாக விளக்குவது சேக்கிழார் நெஞ்சத்தில் மலர்கள் சிறப்பிடம் பெற்றிருந்தன என்பதைக் காட்டுகிறது. மனையறம் ஓம்பும் மகளிரைப் போற்றும் ஆர்வத்தினர் ஆசிரியர் என்பதை வேர் உருக்காட்சி உணர்த்துகிறது. இயங்குதிணையின்பாற்படும் ஐயறிவினவாகிய அரி, கரி, புலி, ஏறு என்பன உருக்காட்சிகளாக ஆளப்பட்டுள்ளன. பசு-கன்று இணைஉருக்காட்சி சுந்தரர்தம் இறையன்பின் திறத்தைச் சிறப்பித்துக் காட்டுகிறது. கன்றகல்புனிற்றாப் போல்வர் எனத் திண்ணனாரின் அன்பின் திறத்தை அவ் இணைஉருக்காட்சியால் சிறப்பிக்கின்றார். ஆசிரியர். இந்த நாயனாரின் அன்பினைச் சிறப்பிக்க உடும்பு உருக்காட்சியை ஆள்கிறார். பத்தியுணர்வை மிகுவித்துக் காட்டும் வகையில்

இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளமை கண்டுணரப்பட்டது. நெற்பயிர்கள், சந்திரகாந்தக்கல், வண்டுகள் என்பன பற்றிய பகுதிகளில் தொண்டர் உருக்காட்சியை ஆள்வது ஆசிரியர் தொண்டர்கள் மீது கொண்டுள்ள பேரன்பினையும் பெருமதிப்பினையும் தெரிவிக்கிறது. சம்பந்தரை முத்து உருக்காட்சியால் சிறப்பிப்பது குறிப்பிடத்தக்கது. மணி உருக்காட்சியால் நாயன்மார்களையும் பெண்ணடியார்களையும் சிறப்பிக்கின்றமை காணப்பட்டது. வினைச்சொற்களை உருக் காட்சிகளாகப் படைத்து ஆள்வது அவரது படைப்பாற்றலுக்குச் சான்றாக உள்ளது. நுட்பமான கருத்துக்களைக் காட்சிப்படுத்தும் உத்தியாக வினைச்சொல் உருக்காட்சியை ஆசிரியர் ஆள்கின்றமை கண்டுணரப்பட்டது. சமயத்தொடர்பான திருநீறு உருக்காட்சி சேக்கிழார்தம் சைவசமயப் பற்றினைத் தெள்ளிதின் உணர்த்தும் சான்றாக விளங்குகின்றது. அவரது உருக்காட்சிக் கோட்பாட்டின் தனிச்சிறப்பிற்குக் காரணமாக உள்ளது. பிற கவிஞர்களினின்றும் அவரை வேறு பிரித்துக் காட்டுகிறது. அவரது கற்பனையின் மனவியலுக்குச் சான்றாக உள்ளது. திருநீற்று நெறியின்கண் அவர் கொண்டுள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கின்றது. பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள், எனத்தொண்டர்தம் மனத்தூய்மையை விளக்க ஆசிரியர் திருநீறு உருக்காட்சியைப் பொருத்தமுற ஆளும் திறம் கண்டுணரப்பட்டது. வெண்ணீற்றின் பேரொளியின் வட்டம்போல் சம்பந்தருக்கு அளிக்கப்பட்ட முத்துவெண்குடை தோன்றுவதாக ஆசிரியர் குறிப்பது காணப்பட்டது. விளக்கு உருக்காட்சி அவரது சமயவுணர்வின் சான்றாக உள்ளது. பெண்ணடியார்களை இவ்வுருக்காட்சியால் சிறப்பிப்பதில் ஆர்வம் காட்டுகிறார் ஆசிரியர். வேள்விச் சடங்கினை உருக்காட்சியாகப் படைத்துள்ளமை ஆசிரியர்தம் சமயப்பற்றை விளக்கிக் காட்டுகிறது. சைவசமயத்தை நிறுவுவதாகிய திருத்தொண்டினைச் செய்த சம்பந்தர் பிறந்த பதியாகிய சீகாழித்தலத்தைச் சிறப்பித்துக் காட்டுதற்கு வேள்விச்சடங்கு உருக்காட்சியைப் பொருத்தமுற ஆள்கிறார். தொனி அமைப்பு என்று கருதப்பெறுதற்கேற்ற வகையில் இவ்வுருக்காட்சி ஆளப்பட்டுள்ளது. பக்தியுணர்வை மிகுவிக்கும் திறனுடையனவாகக் காட்சிப்புல உருக்காட்சிகள் விளங்குகின்றமை கண்டுணரப்பட்டது.

பெரியபுராணத்தில் உள்ள கேள்விப்புல உருக்காட்சி இசைக்கலைத் தொடர்புடையன, மக்கள் ஓசை, சந்தப்பாடல்கள் என்ற பிரிவுகளாக அமைந்துள்ளமை கண்டுணரப்பட்டது. ஆசிரியர்தம் இசைக்கலை ஆர்வத்தையும் இயற்கையியல் ஈடுபாட்டையும் யாப்புவன்மையையும் இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. வேத ஓசையைக் கேட்பதில் ஆர்வம் உடையவர் ஆசிரியர் என்பதையும் மகளிர்தம் வாய்மொழிப்பாடல்களைக் கேட்டறிந்தவர் என்பதையும் ஆய்வினால் அறியமுடிந்தது. 'ஆர்' என்னும் ஓசை அவரது மனத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது என அறியமுடிந்தது. திருமணவினை, வேட்டைவினை, போர்வினை ஆகியவற்றை நினைக்குமாறு செய்யுள் திறன் உடையனவாகச் சந்தப்பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. அவை கேள்விப்புல உருக்காட்சியாக அமைந்து ஆசிரியர்தம் படைப்பாற்றலைத் தெரிவிக்கின்றன.

நுகர்வுப்புல உருக்காட்சி திருப்பதிகங்களில் ஆசிரியருக்குள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கின்றது. மங்கலப்பொருள்களின் மணத்தைச் சிவமணம் என்பதாகச் சேக்கிழார் குறிப்பது அவரது உருக்காட்சியின் தனிச்சிறப்பை உணர்த்துகிறது. குளிர், வேனில் ஆகிய பருவங்கள் பற்றியும், வெப்புநோய் பற்றியும் வருணித்துக் கூறும் பகுதிகள் ஊற்றுப்புல உருக்காட்சியாக உள்ளன. நாயனார்தம் தொண்டின் சிறப்பை விளக்குவதாக இவ்வுருக்காட்சி உள்ளது. நாயனார்தம் இறையன்பின் திறத்தைப் புலன்மாற்று உருக்காட்சியால் அறியமுடிந்தது.

மனவுணர்வு உருக்காட்சியின்கண் இடம்பெறும் கருத்து, பழங்கதை ஆகிய உருக்காட்சிகள் ஆசிரியர்தம் உருக்காட்சியின் தனிச்சிறப்பைப் புலப்படுத்துகின்றன. இறைவியின் கருணையொழுக்கு, புண்ணியம், மெய்யுணர்வு, இருவினை ஆகிய கருத்துப் பொருட்களை உருக்காட்சிகளாகப் படைக்கின்றார் ஆசிரியர். முதல்வனாரை அமுதுசெய்விக்க மூளும் அன்புபோல் தூயசெந்நெல் அரிசி மாவடு மென்கீரை என்பன விளங்குவதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்ற பகுதியும், மிக்கெழும் அன்பர்கள் அன்பு இறைவர் திருமேனியாக விளைந்தது என்று குறிக்கும் பகுதியும் மனவுணர்வு உருக்காட்சியைக் கொண்டு விளங்குகின்றன. தொண்டர்தம் இறையன்பின் தூய்மைசேக்கிழார் நெஞ்சத்தைக்

கவர்ந்துள்ளமையை ஆய்வினால் காணமுடிகிறது. சேக்கிழார்தம் கற்பனையின் மனவியலை இவ்வுருக்காட்சி தெரிவிக்கிறது. பழங்கதை உருக்காட்சியும் கருத்து உருக்காட்சியும் பெரிய புராணப்படைப்பிற்குச் சைவசமய மணத்தை ஊட்டுவனவாக விளங்குவது காணப்பட்டது. அவரது படைப் பாற்றலைக் காட்டுவனவாக அடைமொழிகள், முரணணிகள் ஆகியவற்றின்கண் உள்ள உரக்காட்சிகள் விளங்குகின்றமை கண்டுணரப்பட்டது.

பெரியபுராணத்தில் ஆளப்பட்டுள்ள உருக்காட்சி உத்தி படைப்பின் முழுக்கூறுகளுள் ஒன்றாக இணைந்து முருகியற்சுவையைப் பயப்பதாக உள்ளது. படிப்பவர்தம் உணர்ச்சியைத் தூண்டும் திறனுடையதாகவும், கற்பனையைக் கிளர்ச்சியுறச் செய்வதாகவும் உருக்காட்சி பெரியபுராணத்தில் ஆளப்பட்டுள்ளமை கண்டுணரப்பட்டது. படைப்பின் பாடுபொ-ருளை அழகுபடுத்துவதாகவும், உயர்த்துவதாகவும், விளக்கிக் காட்டுவதாகவும் உருக்காட்சி உத்தி விளங்குகின்றமையை அறியமுடிந்தது. பெரியபுராணத்தின் தலைமை உணர்வாகப் பக்தி உணர்வு சிறந்து விளங்குதற்கு உதவும் வகையில் உருக்காட்சிகளைத் திறம்பட ஆள்கின்றார் ஆசிரியர் என்பதை ஆய்வினால் கண்டுணர முடிந்தது. பக்தியுணர்வை மையமாகக் கொண்டு செயல்படும் வகையில் உருக்காட்சிகளை ஆசிரியர் படைத்துள்ளமை காணப்பட்டது. சேக்கிழார்தம் ஆட்பண்பினையும், படைப்பாற்றல் திறனையும் காட்டும் உருக்காட்சிகள், அவரது கற்பனையின் மனவியல் பக்தியுணர்வுடன் தோய்ந்திருக்கும் பாங்கினைக் காட்டுவனவாக உள்ளமை கண்டுணரப்பட்டது. பெரியபுராணத்தின் கலைத்தன்மைக்குக் காரணமாக உருக்காட்சி உத்தி விளங்குகின்றமையை இவ்ஆய்வினால் காணமுடிந்தது. தமிழ் இலக்கியத்தின் தொன்மைப்படைப்புக்களாகிய சங்கஇலக்கிய நூல்கள், காப்பியங்கள், தற்காலக் கவிஞர்தம் படைப்புக்கள் ஆகியவற்றின்கண் உள்ள உருக்காட்சிகளையும் சேக்கிழார் ஆண்டுள்ள உருக்காட்சிகளையும் ஒப்பிட்டு ஆய்வு செய்யும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுதற்கு வாய்ப்புக்கள் உண்டு. இந்தகைய உருக்காட்சி ஒப்பீட்டு ஆய்வுகள் பயன்தரக்கூடியனவாக விளங்கும் எனலாம்.

# குறிப்புகள்

வரிசை எண்ணையடுத்துள்ள எண் பெரியபுராணப் பாடலைக் காட்டும்

## ஐம்புல உருக்காட்சி

(1). பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார், மலைபடுகடாம், வரி. 85, (2).மாங்குடி மருதனார், மதுரைக்காஞ்சி, வரி.768-769, (3). மணிவாசகர், திருவாசகம், கோயில் திருப்பதிகம், பா. எ. 7. (4).10, (5).26, (6).ஆலாலசுந்தரம்பிள்ளை. (7).1288, (8).1289, (9). 1588, (10).1944, (11). திரு. வி. கல்யாணசுந்தரனார் பருஎ0,333 (12).2168, (13).2659, (14).159, (15).303, (16).775, (17).783, (18).998, (19).2095, (20).2112, (21).3093, (22).615, (23).1,4,27,33, 86,131 147,226,245,252 253,278,322,323, ;62,371, 373,495, 498,507, 519,567,598,720,753, 789,878, 902,968, 1028,1057, 1101,1138, 1157,1184,1195,1230, 1266,1363,1369,1417,1482,1485, 1552, 1597, 1599, 1600, 1704, 1864,1881,1902,1956,1967, 2005, 2015,2027, 2041,2128,2139,2152,2182, 2187,2194, 2237,2262, 2318, 2334,2378,2430,2849.3166.3169.3177,3211,3221,3225, 3227, 3255, 3266, 3304, 3308, 3308,3332,3358, 3362,3378,3379, 3390, 3392,3393, 3416, 3416,3428, 3430,3436, 3441,3475,3481, 3498,3569,3572,3591, 3579, 3572,3591, 3679,3679,3736,3749,3763, 3791,3840,3842, 3859, 3880,3892,3898,3912,3921,3943,3956,4070,4081,4147, 4156, 4237, 4272, 4278, (24).662, (25).691, (26).1291, (27).சி. சே. சுப்பிரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம் பகுதி 2,(28).1503, (29).1996, (30).2091, (31).2631, (32).2654, (33).2282, (34).திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், பெரியபுராணம், (35).615, (35அ).நல்லந்துவனார், கலித்தொகை, பா.எ.4, (36).286, (37).553, (38).3001, (39).4087, (40).175, (41).2104, (42).2135, (43).2185, (44).2551, (45).3122, (46).சி.சே. சுப்பிரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம் பகுதி -5, ப. கரு0அ. (47).C.M. Bowra, The Heritage of Symbolism, P. 69.(48).2122, (49).2631, (50).1279, (51).3692, (52).162, (53).1108, (54).280, (55).1991, (56).1213, (57).4030, (58).F.E. Caroline Spurgeon, Shakespeare's Imagery and What it tells us. P.50 (59).3691, (60).1913, (61).1213, (61அ).664, (62).716, (63).815, (64).1995, (65).2011, (66).1234, (67).3140, (68).3098, (69).1163, (70).2282, (71).2659, (72).1199, (73).873, (74).899, (75).1913, (76).3690, (77).3950, (78).1003, (79).1492, (80).1495, (81).1579, (82).75. (83).74. (84).4078, (85).1602, (86).864,

(87).3951, (88).622, (89).3098, (90).246, (91).2894, (92).3562, (93).புறநானூறு பா.எ. 104. (94).திருக்குறள், பா. எ. 211, (95).3762, (96).3808, (97).3777, (98).3819, (99).77, (100).246, (101).315, (102).130, (103),362, 365, 366, 367,(104).369,375, 378, (105).380,382,383, (106).387, (107).388, (108).393,394,396,397,398, (109).438,546, (110).663,833, (111).896,899,900,901, (112).969,970,971, (113).1208, 1267,1698,1772, (114).1933, (115).2008,2120,2491,2524, (116).3294, 3360,3425, 3548,3562,3563,3564, (117).3616, (118).3978,3979, 3980,3984, 3985,3986, (119).1492,1495,1579,2173,2244,2900,3341, (120).864, (121).1234, (122).3662,3819, (123).69, (124).330, (125).2999, (126).659, (127).3384,3385, (128).1999, (129).2628, 3287,3415,3501,3528,1960,1501,3335,246, (130).996, (131).2949, (132).3140, (133).3387,1689,3535, (134).731, (135).778, (136).779, (137).780, (138).1023, (139).3948, (140).சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், ஏழாந்திருமுறை, தலமுறை, 18, திருமழபாடி, பா.எ.1, (141).கருவூர்த்தேவர், ஒன்பதாந்திருமுறை, 9 கோயில், பா.எ.95. (142).கருவூர்த்தேவர், ஒன்பதாந்திருமுறை, 10 திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம், பா.எ.110. (143).திருமாளிகைத்தேவர், ஒன்பதாந்திரு முறை, கோயில் பா.எ.42. (144).நாவரசர், தேவாராம், நாலந்திருமுறை, பா.எ.155, (145).சேக்கிழார், பெரிய புராணம், பா.எ.3689,3695,

## தீ உருக்காட்சி

(1ஆ). 1835, (1இ).மாணிக்கவாசகர், திருவாசகம், குயில்பத்து, பா.எ.10, (2). 1910, (3).2202,1040, (3அ).3648, (4).2293, (5).803, (6).3005, (7).369, (8).527, (9).892, (10).893,894, (11).895,

## நீர் உருக்காட்சி

(1).272, (2).807, (3).951, (4).952, (5),2626, (7).2926, (8).3019, (8அ).3234, (9).3234, (10).3668, (11).956, (12).3509, (13).3817,3819, (14).1366, (15).1368, (16).1371, (17).1317, (18).1342, (19).1307,1316,1317,1333,1334,1343,1347, (20).3011, (21).3012, (21அ).3540, (21ஆ).3540, (22).3131, (23).3152, (24).2294, (25).245, (26).253,3341, (26). 2324, 2359, 2372,2336,2373,2382, 2389,2393,2487,2569, 2632,2784, 2897,2927,3054, (29).சம்பந்தர், தேவாரம், நமச்சிவாயத் திருப்பதிகம். பா.எ.1. (30).509, (31).4079, (32).671, (33).871,879, 092, (34).900, (35).091, (36).902, (37).2271,

(38).235, (39).2554, (40).1016, (41).1973, (42).1996, (43).2749, (44).3885, (45).சி.கே. சுப்பிரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம் ப.க.கூ, (46).James K.Feilman, Quoted by Maurice Beebe, Literacy Symbolised, P.10., (47).Fdmund Wilson, Quoted by Maurice Beebe, Literary . Symbolism,P-10., (48).6., (49).28, (50).1435,(51).2633, (52).2638, (53).3478, (54).3393, (55).திருவள்ளுவர், திருக்குறள்,பா.எ.10., (56). சுந்தரர், தேவாரம், திருப்பாண்டிக் கொடுமு- டிப்பதிகம், பா.எ.1, (57).1399, (57).1399, (58).1986,3752, (59).2763, (60).163, (61).1503, (62).3361,(63).781, (64).சி.கே.சுப்ரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம், (65).அம்மூவனார், ஐங்குறுநூறு, நெய்தல்திணை, தொண்டிப்பத்து, 172, (66).664, (67).716, (68).807, (69).781, (70).815, (71).1455, (72).பண்டித மு.கதிரேசச்செட்டியார் உரைநடைக்கோவை, 29-32, (73).662, (74).1722, (75).3801 (76).3951.

நிலம்

(1).255, (2).2046, (3).2076, (4).73, (5).74, (6).75,(7).1280, (8)434, (9) 701, (10).731, (11).776, (12).3398, (13).1316, 1317,1333,1334,1342,1347, (14) 2380, (15).4153.

**நிலைத்திணை வளர்வன.**

(1).1056, (2).1956 (3) 1996, (3).1996, (4) 3128, (5). 460, (6).2949,(7).4235, (8).2845,(9) 280,286,291,293,418, .450,850, 881, 897,882,885,899,900,906,974,998,1138,1967,1969,1143,1184,1168,1146,1592,2897,2949,2053,2921,1176,1767,3277,2943,2964,3010,3140,3369,3387,3382,3409,3446, (10).3997, (11).286,3125,4108, 1169,3400, 1769, 2952,2367,3417,3515,3531, (12).1915, (13).754, 1615,3332,3470,3862,1135,2226,3060,3140,280,1725,2214,885,3070,4194,2653,2949,3133. (14).1123, (15).902,598,2015, (16).2631, (17).885, (18).949, (19).1690,2960, (20).884, (21).3386, (22).திருவள்ளுவர், திருக்குறள், கல்வி, 398, (23).1223, (24).1290, (25).13, (26).சி.கே.சுப்ரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம், முதல் பகுதி, பா. எ. 16, (27).1150, (28).1025, (29).1588, (30).108, (31).112, (32).113. (33),114, (34).117, (35).118, (36).119, (37).120, (38).121, (39).124, (40). 2504, (41).2506, (42).2509, (43).80,(44).1965,1971,2164,2927,3209,3466,3493,3841,4234,3980,3616, 302,3285,3475,3493,3420, 2575,2594,3770, 2370, 936, 1646,

*1669,872, (45). 64,885,936,1099,3213,3489,2957,949, (46).286, 320, 3972, (47).2943,43,(48).1223, (49).*சி.கே.சுப்ரமணிய முதலியார் திருத்தொண்டர் புராணம், *(50).1290, (51).*திரு.வி.கல்யாணசுந்தர முதலியார், பெரியபுராணம், *(52).3391, (53).3389, (54).1452, 1949,1965, 2075,2688, 3041,3138, 3145, (55).3005, (56).64, (57).328, (58). 509, (59)895, (60).*திருவள்ளுவர், திருக்குறள், பா.எ.*595, (61).1627, 1699,2016,2574,2632,2533,2767, (62).97, (63).3997, (64).1078, (65).2993, (66).13,(66*அ*).3385, (67).4, (68).1506,1580, 2247,2285,2320, (69). 286, (70). 3125, (70*அ*).2377, (71).3382, (72). 2961, (73).3020, (74).3011, (75).4,1406,1461,1596, 2083,2084, 2085, 2153,2455,2827,2571,2928,2930,3031,3234,3233,3449,3453,3845, 3859,3861,3863,4055, (76). 1067, (77).1117, (78).*மணிவாசகர் திருவாசகம், அடைக் கலப்பத்து, பா. எ. *8, (79).1140, 963, 1965,3174,3285, (80).4120, 3403,3640, (81).*திருவள்ளுவர், திருக்குறள், பா. எ. *630, (82).*இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், வரி.*57, (83).*ஆண்டாள், திருப்பாவை, பா. எ. *5, (84)* அருணகிரிநாதர், கந்தரனுபூதி, பா. எ. *40, (85) .4100, (86).3681.*

## இயங்குதிணை.

*(1).934, (2).951, (3).959, (4).960,961,962,963, (5).965, (6).967, (7).908, (8).1047, (9).1049, (10).*சுப. அண்ணாமலை, தெய்வத்தமிழ், *268, (11).1067, (12).629, (13).2959, (14).2960, (15).2961, (16).*மாணிக்கவாசகர், திருவாசகம், திருப்புலம்பல், பா. எ. *3, (17).214, (18). 4275, (19).*சி.கே. சுப்ரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம்-VII *(20).761, (21).4152, (22).171, (23).275, (24).644,645,646,647, (25). 689, (26).713, (27). 757, (28).825, (29).1276, (30).300, (31).1766, (32).6, (33). 274, (34).765, (35).617, (36).620, (37).635, (38).665, (39).1791, (40).332, (41).584, (42).2383, (43).1276, (44).1987, (45).2043, (46).2051, (47).2424, (48).2816, (49).690,705,737, (50).657,(51).658, (52).578, (53).102, (54).180, (55).2013, (56).2397, (57).2556, (58).*இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தனார் சிறுபாணாற்றுப்படை, வரி.*14-16, (59).873,876, (60).1093,1127, (61).4029, (62).4003, (63).1939,3132, (64).4088, (65).293,320, (66). 4105,4107, (67).1721,1732.*

## <u>உடம்பு</u>:-

*(1).57, (2).71, (3).*சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம், *(4).72, (5).1428, (6).242, (7).1174, (8).1912, (9).996, (10).997,*

*(11).2669, (12).323, (13).1205, (14).998, (15). 4028, (16).1466, (17).1805, (18).2384, . (19).1716,1719, (20).306, (21).53, (22).220,4227,2385,2487, (23).1104, (24).2052, (25).2051, (26).2552, (27).2053, (28).2054, (29).2055, (30).3650, (31).2553, (32).3007, (33).827,828, (34).3092, (34அ).3696,921,(35).1392, 1393,1394, 1395,1396,1397,1398,1400. (36).1455, (37).1712,1714, 1716, 1717,1718,1719, (38).2762, (39). 3943, (40).282,3 (41).290, (42).1303, (43).494, (44).1361, (45).*மாணிக்கவாசகர், திருவாசகம், சிவபுராணம், வரி, *(46).4014, (47).*திருவள்ளுவர், திருக்குறள், பா.எ. *(48).4059, (49).3668, (50).*திருநாவுக்கரசர், தேவார நலாந்திருமறை, *11,* பொது. பா.எ.*150, (50அ). 835* *(51).892,934,978, (52). 3386, (53). 52, (54).651, (55).3113* முதல் முடிய, *(56).3131, (57).1502,1524,1592,1616, 1877,2280, 2313,2337, 1476,3861, (58).597,2221, (59).1995,2093, 2250,2362, 2450,2776, 2923,4195, (60).3682, 372,3745, (61).2949, (62).1649, (63).1412, 1649,3237,3470,3862, (64).1511,264,3242.3390,3692, (65).407,1524, 1546,3245,329, (66).1715,2129,2267,2767, (67).2935, 3047, 3181,3301, (68).3353, (69).2027,3389, (70).3483, (71).11, (72).1118, 1090, (73).803, (74).1649, (75).196, (75அ).*மணிவாசகர், திருவாசகம், சிவபுராணம் வரி *18, (76).*திருவள்ளுவர், திருக்குறள் பா.எ.*1086, (77).285,286,854,1176,1688,3371, (78).3000,(79).280, (80).2813, (81).3010, (82).1100, (83).4243, (84).285,3367,3486, (85).285.*

## சமயம்

### திருநீறு உருக்காட்சி.

*(1).1017, (2).1336,1337, (3). 1018, (4).1835,1875, (5).2165, (6).3692, (7).544, (8).2759,2760, (9).3119,3120, (10).610,614, 636-647, (10அ).473,481,482,483,488, (11).4168-4173, (12).11, (13).141, (13அ).1023, (14).242, (15).3097, (16).306, (17).308, (18).*பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், பக்.*20-21, (19).1909, (20).1023, (21).2646, (22).1493, (23).2553, (24).2105, (25).886, (26).1316, (27).1758, (28).2950, (29).3126, (30).3396,3401, (31).3824, (32).1154, (33).4091, (34).473, (35).*சி.கே. சுப்ரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம்

### பிற உருக்காட்சிகள்

*(1).808, (2).4000 (3).1399, (4).3091, (5).3152, (6).1901, (7).2722, (8).3010, (9).4074, (10).2612.*

### கேள்விப்புல உருக்காட்சி

(1).1278, (2).655, (3).4078, (4).173, (5).268, (6).712, (7). 2408, (8).736, (9).601, (10). 1382, (11).3660, (12). 4255, (13). 2522, (14). 94, 68, 3999, (15). 3965, (16). 3987, (16அ). 4076, (17). 575, (18). 4255, (19).582,603, (20).1007, (21).1346, (22).1984, (23).4267, (24) 3754, (25).4004, (26).1402, (27).1906, (28). 3095, (29). 417, (30).242, 337, (31). 931, (32).962,963, (33). 967, (34). 936, (35). 937, (36). 953, (36அ). சி.கே.சுப்பிரமணிய முதலியார், திருத்தொண்டர் புராணம் - II, ப.கஉகச, (36அ). 1912, (37).3886, (37அ).3887, (38). சி.கே. சுப்பிரமணிய முதலியார் திருத்தொண்டர் புராணம்-VII, (39).1429,30, (40).1721, (41). 2950, (42).2534,2535.

### அன்றாட வாழ்க்கை

(1).974, (2).1024, (3).1219, (4).1996, (5).2631, (6).2181, (7).2465, (8).3315,3377,3430, (9).சுந்தரமூர்த்தி சுவாமிகள், தேவாரம், VII, திருமுறை, தலமுறை, 6 திருக்கோலக்கா, பா. எ. 8, (10).9, (11).சுந்தமூர்த்தி சுவாமிகள், தேவார்ம், VII, திருமுறை, தலமுறை, 25 திருமறைக்காடு, பா.எ: 1, (12).பா. எ. 9, (13).2576, (14).3943, (15).4229, (16).திருவள்ளுவர், திருக்குறள், பா.எ, (17).687, (18).3100,3103, (19).3754, (20).237, (21).60, (22).1103,1104, (23).68,933, (24).1284, (25).1054, (26)1393-1397;1401,1402, (27).1969,1971,1983,1984, (28).2991,2993,2995, (29).837, (30).2136, (30அ).727, (30ஆ).728, (31).625.

### நுகர்வுப்புல உருக்காட்சி

(1).மருதன் இளநாகனார், கலித்தொகை, மருதக்கலி, பா. எ. 16, (2).திருவள்ளுவர், திருக்குறள், காமத்துப்பால், பா. எ, (3)திருநாவுக்கரசர், தேவாரம், நாலாந்திருமுறை, பா. எ. 408, (4).திருநாவுக்கரசர், தேவாரம், பொது, பா. எ. 106, (5).சுந்தரர், தேவாரம், 20, திருவாரூர், பண், தக்கேசி, பா. எ. 10, (6).மாணிக்கவாசகர், திருவாசகம், திருப்பொற்சுண்ணம், பா.எ.15, (6அ).சேந்தனார், பதினோராந்திருமுறை, திருவிசைப்பா, பா.எ.47, (7).சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், கண்ணம்மா என் குழந்தை பா. எ. 2, (7அ)., (7ஆ).1024, (8).2041, (9).2991, (10).1509,2928,3189, (11).784,3026,3355,3335,3353,2362, (12).வடலூர் இராமலிங்க சுவாமிகள், திருவருட்பா திருஆயிரம், நாமாவளி, பா. எ. 1, (13).சுந்தரர், தேவாரம், 5. திருவாடுதுறை, பா.எ. 8, (14).1369,1414,1548,1638,2323,2367,2981,3333, (15).816, (16).2093, (17).2305, (18).1718,2379,(19).1651, (20).மாணிக்க வாசகர், திருவாசகம், சிவபுராணம், வரி. 18, (21).2173, (22).1439,

(23).1436, (24).மயிலை.சீனி. வேங்கடசாமி, அழகுக் கலைகள், ப. 3. (25). ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை, சிற்பமும் கலைவாழ்வும், பக்.115-116. (26).436, (27).3807; (28).திருநாவுக்கரசர், தேவாரம் IV திருமுறை பா. எ. 3, (30).2063, (31).2064, (32).3941, (33).4009,4010,4011,4012, (34).337, (35).1999, (36).280, (37).303, (38).883,884, (39).அருணகிரிநாதர், கந்தரநுபூதி, பா. எ. 5, (40).792-797,799-810.

## முகர்வுப்புல உருக்காட்சி

(1).பரிபாடல், வையை, பா.எ.12,வரிகள்: 13-14,19-22,25. (2).இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், இந்... விழவூரெடுத்தகாதை, வரி.190-198, (3).இளங்கோவ... சிலப்பதிகாரம், மனையறம்படுத்தகாதை, வரி.74, (4).சு... தேவாரம், 19. திருநாகைக் காரோணம், பா. எ. 1, (5).5, (6).77, (7).78,79, (8).161-164, (9).165, (10).283, (11).839, (12).871. (13).1534, (14).1932, (15).1942, (16).2060, (17).4094, (18).3083,3087. (19).2623,2660, (20).4030.

## ஊற்றுப்புல உருக்காட்சி

(1).நக்கீரன், நெடுநல்வாடை, வரி.1-12,19-20, 45-56, 64-66, 71-72, (2).163, (3).2231-2235,2239, (4).975, (5).442, (6).4115, (7).3429, (8).3430, (9).பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலைக்கலி, பா. எ. 7, (10).12, (11).2287 - 2291, (12).கம்பர், கம்பராமாயணம், பாலகாண்டம், மிதிலைக் காட்சிப்படலம், பா. எ. 50, (13).77, (14).310,311,313, (15).320, (16).321, (17).கம்பர், கம்பராமாயணம், பாலகாண்டம், மிதிலைக்காட்சிப்படலம், பா.எ. 52, (18).2600,2603,-2609,2614-2619, (19).1742, (20).1626, (21).பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலைக்கலி, பா. எ. 14, (22).திருவள்ளுவர், திருக்குறள், பா. எ. 1113, (23).673, (24).1032,1146, (25).2949, (26).2952, (27).2016, (28).பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலைக்கலி, பா.எ.12, (29).2075, (30).2688, (31).772,804,807, (32).196, (33).803, (34).992,993, (35).1661, (36).2709, (37).417, (38).583, (39).2552, (40).3535.

## புலன்மாற்று உருக்காட்சி

(1).4, (2).944, (3).952,959, (4).1025, (5).1024, (6).2041, (7).1583, (8).2873, (9).2900, (10).3469,3470, (11).3467, (12).1649,1650, (13).278, (14).280, (15).282, (16).3387, (17).சுப்பிரமணிய பாரதியார், கவிதைகள், பா. 306.

## பழங்கதை உருக்காட்சி

(1).56, (2).298,299,300, (2அ).மு.மு. இஸ்மாயில் இலக்கியமலர்கள், ப. 388, (3).3321, (3அ).திருவள்ளுவர், திருக்குறள் பா. எ. 271,274,279, (4).1994,2042, (5).பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், பா. 157, (6).666,691, (7).1965, (8).1965, 1996, 2063, (9).திருவள்ளுவர், திருக்குறள், பா. எ. 5, (10).பரிமேலழகர், திருக்குறள், மணி.திருந ாவுக்கரசு பதிப்பு, ப. 6. (11).4034, (12).சைவவினாவிடை, ஸ்ரீபஞ்சாட்சரவியல், பக்.65-78, (13).1219, (14).4028, (15).பரிமேலகர், திருக்குறள். பக். 124-125, (16).176, (17).188, (18).திருவள்ளுவர், திருக்குறள், பா. எ. 370, (19).பரிமேலழகர், திருக்குறள், பக்.195-196, (20).634, (21).610, (22).ஔவையார், புறநானூறு, பா. எ. 187, (23).திருவள்ளுவர், திருக்குறள், பா.எ.1131, (24).297, ((25).823, (26).286, (27).2419, (28).2563, (29).3912, (30).4212, (31).3513, (32).3502, (33).3514, (34).54, (35).மு.மு.இஸ்மாயில், இலக்கிய மலர்கள், பக்.386-388, (36).290, (37).1078, (38).1287, (39).1294,1297, (40).1301, (41).365, (42).364, (43).404,405, (44).407, (45).411, (46).412, (47).432, (48).2943, (49).2947, (50).2986, (51).2956, (52).2993, (53).3014, (54).தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், கானல்வரி, ப. 16, (55).இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்துப்பாடல், வரி.27, (56).363,920,1913, (57).3012, (58).290, (59).4077, (60).290, (61).280, (62).286, (63).292, (64).310, (65).3386, (66).3508, (67).1349,1350,1359,1365,1371,1374,1375,1379,1387,1388,(68).138 9, (69).2376,2377,2378, (70).2379, (71).2380, (72).4101-4107, (43).4108.

## அடைமொழிகள்

(1).1029, (2).3819, (3).1616, (4).2713, (5).229, (6).1017,1379,2660,2676,2679,2723, (7).1054, (8).1116,1117, (9).1052, (10).735,739,839,1052,1054,652,4243,4245, (11).3005, (12).1049,2048, (13).2235.

## முரணணி

(1).368, (2).446, (3).297, (4).662, (5).1546, (6).1644,1649, (7).2232, (8).1177, (9).617, (10).615, (11).1220, (12).3427, (13).803, (14).1718,2379, (15).1290, (16).338.

❋ ❋ ❋